# அண்ணன்மார் சுவாமி கதை

**பொன்னர் - சங்கர் முழு வரலாறு!**
**கொங்கு நாட்டு வேளாளர் காவியம்!**




கவிஞர்
சக்திக்கனல்

நர்மதா பதிப்பகம்

பொன்னர் சங்கர் ஆட்சி நடத்திய பகுதியும், அவர்கள் மூதாதையர் வாழ்ந்த இடங்களும்



அண்ணன்மார் சுவாமி துணை

# அண்ணன்மார் சுவாமி கதை

ஹரி ஓம்
நன்றாக
குரு வாழ்க
குருவே துணை!



## விநாயகர் தோத்திரம்

நல்ல கணபதியை நான் காலமே தொழுதால்
அல்லல் வினைகள் அகலுமே - சொல்லரிய
தும்பிக்கையானைத் தொழுதால் வினை தீரும்
நம்பிக்கையுண்டே நமக்கு!
வாக்குண்டாம் நல்லமன முண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு.

## விநாயகர் காப்பு

சீரான சதுரகிரி வீரமலை தெய்வக்கன்னி
பெரியக் காண்டி செயலினாலே
பேராருங் குன்றுடையான் பெருந்தவத்தால்
வந்துதித்த பெருமையாளன்
தாராருந் தங்கை நல்லாளுடன் பிறந்த
பொன்னர் சங்கர் கதையைப்பாடக்



காராருந்தந்திமுகன் கணபதிதன்
இணையிருதாள் காப்புத்தானே!

## பெரியக் காண்டி பிறப்பு

முந்தி முந்தி விநாயகனே முக்கண் கணபதியே
சக்திக் கணபதியே தையல் நல்லாள் புத்திரனே
வித்தைக் கணபதியே வெண்முடி விநாயகனே
காராவினை மேனியனே கணபதியே முன்னடவாய்
ஓலையமர்ந்த வனே உமையாள் திருமகனே

ஆனைமுகத்தோனே அரனார் திருமகனே
வேலவர்க்கு முன் பிறந்த விக்னேஸ்வரனே முன்னடவாய்
கரிமாரிப் பிள்ளையாரே கற்பகமே முன்னடவாய்
வெள்ளை நிறத்தாளே வேதனிட தேவியரே
கள்ள மன தொழிக்கும் காரணியே முன்னடவாய்

தெள்ளு தமிழ் வாணர் சிறப்புற்றிருக்க வென்று
உள்ளமதில் மேவி உயர்ச்சிதரு மாதாவே
பாவு வழுவாமல் பாலன் குரல் மங்காமல்
நாவு தவறாமல் நடத்துமம்மா இக்கதையை
வெண்முடியை நான் தொழுது வீரமலைக் கவி பாடுகிறேன்

ஏட்டில் எழுத்துமல்ல (சுவாமி) இனியொருவர்
சொன்னதல்ல
நாட்டில் பெரியவர்கள் நாவலர்கள் சொன்னதல்ல
உலகில் பெரியவர்கள் உபதேசங் கற்றவர்கள்
பஞ்சாங்க வேதியர்கள் பார்த்துரைத்துச் சொன்னதல்ல
ஆயி பெரியக்காண்டி அருளால் பொருள் தெரிந்து

பாலன் சிறு குழந்தை (பிச்சன்) பாடுகிறேனிக்கதையை
ஏதுமறியேனான் பாட்டில் ஏதுவகை நானறியேன்
இந்தப் பாட்டின் துகை அறியேன் வீர மலை பாரதத்தை
நானறியேன்

தெய்வ பூட்டைத் திறந்தெடுத்து தன் பிறப்பைச் சொன்னகவி
கைலாசம் பெரியக்காண்டி பிறந்த கவியெடுத்துப்
பாடுகிறேன்

பாருலகில் பெரியக்காண்டி பாலன் பிறந்த கதை
பக்தியுடன் கேட்பவர்க்கு பரமகதி கிடைக்கும்
பாக்குடனே வெற்றிலையும் பக்தியுடன் முன்னே வைத்து

இனிய பொருளும் வைத்து இன்பமுடன் கேட்பவர்க்கு
சாம்பிராணித் தூபம் சம்பிரமாய் முன்னே வைத்து
பக்தியுடன் கேட்பவர்கள் பரமபதம் சேர்வார்கள்
உலகில் பிறப்புமில்லை எமனாரும் வந்தணுகார்
நரகம் தொலைத்திடுவார் நல்லபதம் சேர்த்திடுவார்

பரமனருள் பாதம் பக்தியுடன் வாழ்ந்திடுவார்
நாகத்தின் தன் தவத்தால் நற்கவலை தீர்க்கவென்று
பூவுலகில் பெரியக்காண்டி பிறந்த கதை பாடுகிறேன்
பாடுகிறேனிக் கதையை பரமர் செயலாலே
பாடுகிற பிச்சனுக்கு பரமகதி கொடுத்து

தொல்லைப் பிறப்பதனைத் தொலைத்து செகந்தனிலே
நல்ல பதவிக்கு நமக்கே இடங்கொடுத்து
என்றும் கதிபெறவே எனக்கு இடம் தாருமம்மா
தாயே பெரியக்காண்டி தந்தருளும் எந்தனுக்கு
பெரியக் காண்டி கதை படிக்க பிழைகள் வந்துநேராமல்

காராளர் கதை படிக்க கால் தலைகள் நோகாமல்
வேளாளர் கதை படிக்க வினைகள் வந்து சேராமல்
குன்றுடையார் கதை படிக்க குறைவொன்றும் நேராமல்
தாமரையாள் கதை படிக்க தப்பிதங்கள் வாராமல்
அண்ணன்மார் கதை படிக்க அனர்த்தம் வந்து சேராமல்

ஈஸ்வரியே தாயே எனக்கு வரந்தாருமம்மா
பத்துப் பிறப்புக்கும் மாயன் பாற்கடலில் பள்ளிகொண்டார்



பச்சை நிறமான பாரளந்த எம்பெருமாள்
அலைகடலின் பள்ளிகொண்ட ஆதி நாராயணரே
ஆமை வடிவெடுத்த அச்சுதா கோவிந்தா
நடு த்திட்டுக் கைலைக்கும் நலமாக வடபுறத்தே
வாழும் வடதேசம் வாலியுடதன் தேசம்

இருளிய தேசமது எங்குந் தெரியாது
மைந்தன் தெரியாது மைந்தன் முகம் காணாது
அதிலே சூரியனார் காணாத செந்தாமரைப் பொய்கையது
சந்திரனார் தெரியாத தாமரைப்பூம் பொய்கையிலே

## நாகம் தவசு

(அதிலே) ஐந்துதலை நாகம் அரவம் குடியிருப்பு
நாகந் தவசு அதில் நற்பாம்பு செய்கிறது
மைந்தனார் இல்லையென்று - நாகம் - மனக்
கவலையுண்டாகி

புத்திரனார் இல்லையென்று - நாகம் பிள்ளைக் கவலை
கொண்டு

சிவனைத் தொழுது - நாகம் - சிரேச படம் விரித்து

அரனைத்தொழுது - நாகம் - அனித்திய காலமெல்லாம்
ஐந்து படம்விரித்து - நாகம் - அருந்தவசு செய்கிறது
அதைப் பார்க்கமுடியாமல் உமையாள் பார்க்க மனம்
கூடாமல்

சித்தம் திரும்பி பரமேஸ்வரியாள் சிவனார் முகம் பார்த்து
ஆதி கர்த்தாவாம் சுவாமி அய்யர் முகம் பார்த்து

ஈஸ்வரர் முகம்பார்த்து ஈஸ்வரியாள் சொல்லுகிறாள்
பூலோக மண்டலத்தில் நாகம் பிள்ளைக் கவலைகொண்டு
அல்லும் பகலும் அனுத்திய காலமெல்லாம்
சிவனைத் தொழுது நாகம் சிரசே படம் விரித்து
அரனைத் தொழுது நாகம் அருந்தவம் செய்கிறது
அதைப் பார்க்க முடியலையே பார்க்க மனங் கூடலையே

சித்தம் திரும்பலையே சுவாமி சிந்தை இரங்கலையே
மைந்தன் வரங்கொடுத்து சுவாமி (நாகம்) மனக்கவலை
தீர்க்கவேணும்

சித்தம் திரும்பி உமையாள் திருவாக்கு கேட்கையிலே
அந்த மொழிகள் சொல்ல பரமேஸ்வரனார் அப்போது ஏது
சொல்வார்

வாராய் உமையவளே ஒரு வார்த்தை சொல்லக் கேளுமினி

யாரை அனுப்பினாலும் (நாகம்) அருங்கவலை தீராது
மைந்தன் கவலை மனக்கவலை தீராது
மைந்தனாய் நான் பிறந்தால் (நாகம்) மனக்கவலை
தீர்ந்துவிடும்

அந்த மொழிகள் சொல்ல (உமையாள்) அப்போது ஏது
சொல்வாள்

என்ன இருக்க சுவாமி என்ன மொழி சொன்னீரிப்போ

உம்மை நினைத்து உலகத்தில் மானிடர்கள்
ஐஸ்வரியம் வேணுமென்று அருந்தவசு செய்கிறார்கள்
மைந்தனார் வேணுமென்று (மகாகோடி) மாதவசு
செய்கிறார்கள்

ஆருக்கெல்லாம் (மைந்தனாக) பிறந்து அருங்கவலை
தீர்க்கிறது

உலகு வகுத்தீரே உயிர் ஆத்மா செய்தீரே!

எறும்புமுதல் யானைகடை எண்பத்துநான்கு லட்சம்
(சீவனுக்கும்)

படியளக்கும் கர்த்தாவே நீங்கள் பாலகனாய்த்தான் பிறந்தால்
பூலோக மண்டலத்தில் நீங்கள் புத்திரனாய்த்தான் பிறந்தால்
பூமி பொறுக்குமா சுவாமி பூலோகம் தாங்கிடுமா
என்ன யிருக்க சுவாமி என்ன மொழி நீர் நினைத்தீர்

அந்த மொழி கேட்டு பரமேஸ்வரனார் அப்போது ஏது
சொல்வார்

வாராய் உமையவளே ஒரு வார்த்தை சொல்ல நீ கேளும்
நான் பூலோக மண்டலத்தில் புத்திரனாய் நான் பிறந்தால்



ஐந்து தலை நாகம் (அதனுடைய) அருந்தவசு தீருமப்போ
பூலோக மண்டலத்தில் புத்திரனாய்த் தான் பிறந்து
மைந்தனாய்த் தான் பிறந்து நாகம் மனக்கவலை தீர்க்கவே
தான்

நீயேதான் போராயோ? உமையவளே நானேதான்
போகட்டுமா?

இந்த விதம் சொல்லையிலே ஈஸ்வரியு மேது சொல்வாள்

எங்கும் பராசக்தியாய் உலகெங்குமாய் நானிருக்க
பூலோக மண்டலத்தில் புத்திரனாய் நான் பிறந்தால்
பூமி பொறுக்குமா? (சுவாமி) பூலோகம் ஏற்குமா?
மைந்தனாய் நான் பிறந்தால் அந்த மண்டலங்கள்
கொள்ளுமா?

புத்திரனாய் நான் பிறந்து நாகம் பெருங்கவலை தீர்க்கிறேன்
நான்

மைந்தனாய் நான் பிறக்க சுவாமி வாக்கு மனுச்
செய்யெனக்கு

ஈஸ்வரியாள் சொல்லையிலே ஈஸ்வரர் மனங் குளிர்ந்து
புத்திரனாய் நீ பிறக்க உத்தரவு செய்தேனினி
மைந்தனாய் நீ பிறக்க வாக்குமனுச் செய்தேனினி
அந்த மொழிகள் சொல்ல ஈஸ்வரி அப்போ மனங்குளிர்ந்து

வாராயுமையவளே ஒரு வார்த்தை நான் சொல்லுகிறேன்
என்னுடன் பாகம் பிரியாமல் பக்கமிருந்து போகையிலே
ஆருமறியாமல் நீ அவதரித்துப் போகையிலே
என்னைப்போல் ஆண்டியென்று வடிவெடுத்துப்
பாலனுமாய்

புத்திரனாய் நீ பிறந்து நாகம் பிள்ளைக் கவலை தீரும்

இந்தவிதம் சொல்ல ஈஸ்வரி மனங்குளிர்ந்து
சித்தம் மனங்குளிர்ந்து சுவாமி சீர்பாதம் தான் வணங்கி
பாகம் பிரியாமல் ஈஸ்வரி பரமனிடம் பேசையிலே

யாருமறியாமல் அவதரித்துப் போகையிலே
சித்தமுடையவளாம் பெரியக் காண்டி சிவத்யானம்
உள்ளவளாம்

சடையு முடியுமாய் சுவாமி சதாசிவனைப்போல் வடிவாய்
ஏகவேஷ்டி பூநூலும் சுவாமி ஈஸ்வரரைப்போல் வடிவாய்
பஞ்சு படர்ந்த சடை ஈஸ்வரி பாலன் உருவாக

குஞ்சுசடை முடியும் அம்மாள் குழந்தையாய்ப் பிறந்தழுதாள்
குழந்தை அழுத சத்தம் நாகம் குளிர்ந்த செவி கேட்டு
மதலையுட சத்தம் கேட்டு நாகம் வாகுடனே ஓடிவந்து
பாலனுட சத்தம் கேட்டு நாகம் பாங்குடனே ஓடிவந்து
ஏந்தி எடுத்து நாகம் தாயாரை இணைமார்பில்
சேர்த்தணைத்து

என் மைந்தன் கவலை தீர்க்க வந்த புத்திரனே வாரு மம்மா!
ஏந்தி எடுத்து நாகம் தாயாரை இணைமார்பில்
சேர்த்தணைத்து
வாரி எடுத்து நாகம் ஈஸ்வரியை மடியிலெடுத்து வைத்து
உச்சி முகந்து நாகம் உள்ளங்கால் முத்தமிட்டு
வண்ண மடிமேலே மருவி விளையாடி

பொன்னுந் திருமேனியிலே புரண்டு விளையாடி
நாகம் விளையாடி தாயார்க்கு நற்பாம்பு மாலையிட்டு
ஐந்து படம் விரித்து நாகம் அரவங்குடை பிடிக்க
நாகம் குடைபிடிக்க அம்மாளுக்கு நற்சங்கு தாலாட்ட
நாளொருவண்ணம் பொழுதொரு மேனியுமாய்

சங்கு நாதம் தாலாட்ட தாயார் தானே வளருகிறாள்
அரகரா வென்ற சத்தம் அரனே என்ற சொல் மறவாமல்
சிவசிவா யென்று சொல்லி சிவ கருத்தை நெஞ்சிலெண்ணி
அரகரா வென்று தாயார் அணிந்தாளே வெண்ணீரு
பூசினால் வெண்ணீற்றை அம்மாள் பொன்னுந் திருமேனி
யெல்லாம்



சாற்றினாள் வெண்ணீற்றைத் தன்னுடைய தங்கத்
திருமேனியெல்லாம்
வேங்கைப் புலித்தோலை அம்மாள் வேம்புலித் தோல்மேல்
ஆசனத்தை யுடையுங் கட்டி அரனைப்போல்
கொலுவிருந்து
சிவனைப் போல் கொலுவிருந்து தாயார் சிவபூசை
செய்கிறாளே
தீபதூப மொருகையிலே பூசைமணி யொருகையிலே

திருச் சங்கு மொருகையிலே ஜெயகண்டி யொருகையிலே
அப்போது தெய்வ பூஜை ஆயி அரனைப்போல் செய்கிறாளே
தீபதூபப் பெரும் புகையும் அம்மாள் திருக்கைமணி சுழல
பூமாரிமணி முழக்கி தாயார் பூஜை மிகச் செய்கிறாளே
ஜெயக்கண்டி முழங்குறதும் அப்போ திருச்சின்ன
மோசையிடும்

சங்கு முழங்குறதும் கைலாச பூஜையிலே சமுத்திரங்கள்
ஓலமிட
அப்படி கடலு முழக்கமாய் கைலாச பூஜை செய்கிறாளே
அப்போ சித்தம் தெளிந்து சுவாமி சிவனார் மனந்தெரிந்து

## தெய்வ கன்னிகளை அழைத்தல்

அப்போ தெய்வ கன்னிகளை சுவாமி அழைத்தார்
வரிசையுடன்
பூவுக்கினியாளே பொற்பாவை கன்னிகளே
மதலைச் சிறியவளே அம்மா வாய்பேசாக் கன்னிகளே
வண்டார் குழலியரே வாய்பேசாக் கன்னிகளே
சொல்லுக் கடங்காத சொற்கேளாத் தெய்வ கன்னி

ஏலக் கருங்குழலாளே அம்மா எழுவக் கரியாளே
ஏழுபேர் கன்னிகளும் நீங்கள் எல்லாரும் வாங்களென்றார்
ஈஸ்வரனார் சொல்லையிலே தேவகன்னி ஏழுபேரும்
ஓடிவந்து

சுவாமி பாதம் சரணமென்றார் சாய்த்துத் திருமுடியை
அட்டம் பணிந்து கன்னிகள் அடிவணங்கித் தெண்டனிட்டு
வணங்கிப் பணிகள் செய்து மகாதேவர் முன்னே வந்தார்
கன்னிகளைத் தான் பார்த்து கைலாச நாதருந்தான்
பூலோக மண்டலத்தில் உங்கள் தாயார் புத்திரனாய்த் தான் பிறந்து

மைந்தனாய் தான் பிறந்து நாகம் மனக்கவலை தான் தீர்ந்து
அரனைப்போல் கொலுவிருந்து சிவனைப்போல் பூசிக்கிறாள்
சிவனைப் போல் பூஜை செய்தால் கன்னிகளே சிஷ்யர்களாய் போகணுமே
பூஜை முடியுமுன்னே சுவாமி போங்களென்று வாக்குரைத்தார்
அந்த மொழிகள் சொல்ல தெய்வக்கன்னி அப்போ மனங்குளிர்ந்து

சிந்தை மனங்குளிர்ந்து சுவாமி சீர்பாதம் தான் வணங்கி
வாக்கு மனுப்படிக்கு தெய்வ கன்னியர்கள் வாரார்கள் பூலோகம்
பொன்னேணி வழியாகக் கன்னியர்கள் நூலேணி வந்திறங்கி
நூலேணி வழியாக கன்னியர்கள் பூலோகம் வாரபோது
வேங்கை புலித்தோலில் தாயார் வெம்புலித்தோல் மேலிருந்து

அரி பூஜை குரு பூஜை தாயார் தெய்வ பூஜை செய்கையிலே
கண்டார்கள் கன்னியர்கள் ஏழு பேரும் கண் குளிரத்தான் பார்த்து
தெய்வ பூஜை வேளையிலே தாயார் பாதம் தரிசினைகள் காணலாமா
பூஜை முடியு மட்டும் அம்மாள் பொன்மேனி மறைவிருப்போம்



ஏழு பேர் கன்னிகளும் இணைசேர்ந்து ஓடிவந்து
பூஜை முடியு மட்டும் அம்மாள் பொன்மேனி மறைவிருந்தார்
தெய்வபூஜை முடிந்த பின்பு ஆயி திருமேனி வேர்வை கொண்டு
பூஜை முடிந்த பின்பு ஆயிக்கு பொலிந்திடுதே வியர்வையுந்தான்
தங்கம் போல் மேனியெல்லாம் தாயாருக்கு தக தகென்று வேர்க்குதப்போ

பொன்னுந்திரு மேனியிலே பொலிந்திடுதே வேர்வையுந்தான்
முகத்தில் துலங்குகிற முன்னெற்றி வேர்வையைத்தான்
வேர்வையைத்தான் வழித்து தாயார் விட்டெறிந்தாளப் புறமாய்
விட்டெறிந்த வேர்வையுமே ஏழு பொட்டாகத்தான் தெறித்து
ஏழு பொட்டாய் தெறித்ததுதான் ஏழு தெய்வ கன்னியாச்சு

ஏழுபேர் தெய்வகன்னியர்கள் அப்போ இணைசேர்ந்து ஓடி வந்து
வலமாக சுற்றி வந்து தாயாரை வணங்கி பணிகள் செய்து
அட்டம் பணிகள் செய்து கன்னியர்கள் அடிவணங்கி நிற்கையிலே
வாருமினிக் கன்னிகளா என்று வரவழைத்துக் கன்னிகளை
தெய்வலோக கன்னியர்கள் நீங்கள் பூலோகம் வந்ததென்ன

என்ன குறைச்சலங்கே? எதனாலே தாழ்வு இப்போ?
என்ன இடுக்கண் கண்டு ஏழுபேர் வந்ததென்ன?
அந்த மொழி கேட்க அக்கன்னிமா ரேதுசொல்வார்
எந்தாயே ஈஸ்வரியே ஒரு வார்த்தை சொல்லக் கேளுமம்மா
பூலோக மண்டலத்தில் புத்திரனாய் நீ பிறந்து
மைந்தனாய் நீ பிறந்து நாகம் மனக்கவலை தான் தீர்த்து

சிவனைப் போல் கொலுவிருந்து நீ தெய்வ பூஜை செய்தது
தான்
சித்தம் திரும்பி சுவாமி சிவனார்மன மிரங்கி
சிவனைப் போல் பூஜை செய்தால் கன்னியர்கள் சீடர்கள்
வேணுமே
பூஜைமுடியுமுன்னே எங்களைப் போங்களென்று
வாக்குரைத்தார்
வாக்கு மனுப்படிக்கு அம்மா வந்தோமினி உம்மிடத்தில்

அந்த மொழிகள் சொல்லத் தாயார் அப்போ மனங்குளிர்ந்து
சீடர்களாய் வந்தவர்க்கு சுவாமி சேதியொன்றும்
சொல்லவில்லை
அந்த மொழி சொல்ல தாயார் அப்படியோ என்று எண்ணி
பூலோக மண்டலத்தில் புத்திரனாய்த் தான்பிறக்க
மைந்தனாய் நீ பிறந்து நாகம் மனக் கவலை தீருமென்று

புத்திரனாய் நீ பிறந்து நாகம் பெருங்கவலை தீருமென்று
திருவாக்குச் செய்ததல்லால் சுவாமி சேதியொன்றும்
சொல்லவில்லை
அப்போ தெய்வ கன்னிகளும் தாயாரும் சொல்லவில்லை
இப்படியே நாமிருந்தால் சுவாமி ஈடேற்றம்
தோணுவதில்லை

எப்படியும் தவசிருந்து சுவாமி ஈடேற்றம் வாங்கவேணும்
என்று மனதிலெண்ணி ஈஸ்வரனைத் தான் தொழுது
சிவசிவா வென்று சொல்லி ஆயி சிவனாரை நமஸ்கரித்து
பூலோக மண்டலத்தில் புத்திரனாய் நான் பிறந்து
மைந்தனாய் நான் பிறந்து நாகம் மனக்கவலை தீர்த்தேனான்
இனி என் கவலை நீர் தீரும் சாமி எனை வகுத்த கர்த்தாவே

மண்டலங்கள் பூஜை கொள்ள சுவாமி வாக்கு மனுச்செய்
எனக்கு

சித்தம் திரும்பி சுவாமி திருவாக்கு செய்யட்டும்
இத்தவசு நானிருப்பேன் இந்த புலியாசனத்தில்



தவசு மிகக் கூறி தாயார் சன்னியாசம் தானிருக்க
வேங்கை புலித்தோலை தாயார் விரித்தாளே ஆசனமாய்
ஆசனத்தைத் தான் விரித்து தாயார் அதன்மேல் தவசிருந்தாள்
வாக்கெடுத்து இளஞ்சடையை ஆயி வகுத்து
பிரித்துவிட்டாள்
கோந்தை இளஞ்சடையை ஆயி கோர்த்து விரித்துவிட்டாள்

விரித்துவிட்டாள் திருச்சடைதான் வேங்கை புலி ஆசனமேல்
பக்கம் விழுந்த சடை ஆயிக்குப் படருதே பூமியெல்லாம்
விழுந்த சடை வேரூன்ற ஆயிக்குப் படந்த சடை பந்தலிட
சுற்றிவிழுந்த சடை சிவலிங்கம் பூஜைசெய்ய
ஒற்றைச் சடை விழுந்து அது உருளுதே பூமியெல்லாம்

இப்படித் தவசிலே தான் சடை இருபுறமும் வேரூன்ற
மண்டலங்கள் பூஜை கொள்ள சுவாமி வாக்கு
மனுவேணுமென்று
இருந்தால் தவசிலே தான் ஆயி தனக்கு ஈடேற்றம்
வேணுமென்று
சித்தம் திரும்பியே தான் சுவாமி திருவாக்குச் செய்யாமல்
பக்தனைச் சோதிக்கவே தான் சுவாமி பரமன்
நினைத்துமப்போ

இருந்த தவசு விட்டு ஈஸ்வரியை எழுந்தருளச்
செய்வோமென்று
காற்றோடு பேய்மழையை சுவாமி கர்த்தாவும் ஏவி விட்டார்
பேய்க் காற்றும் பேய் மழையும் சுவாமி பிரபலமா
யேவிவிட்டார்
மாதவரால் மழை பொழிய வருகுதே மழை மேகம்
மேகம் சுமந்து மின்னல் மின்னி காலூன்றி

ஊசிபோல் மின்னல் மின்னி உறியதுபோல் காலூன்றி
பாசிபோல் படர்ந்த மேகம் பருத்த துளி கொள்ளுதப்போ
மாசியதோர் மழைமேகம் மாசியிறை புகை சூழ்ந்து

பொங்கிக் குமிறியப்போ பொழிந்திடுதே மழை மேகம்
கடல் குமுற மதிவிரைய கதலி வெள்ளம் தடுமாற
அப்படி அடியாத காற்று அருங்காற்றடிக்கிறது
கருங்காற்றுக் கூந்தல் அதிலே கலந்தே அடிக்கையிலே
பேய்க் காற்றும் பேய் மழையும் கன்னியர்கள் பொறுக்க
முடியாமல்

கருங்காற்றுக் கூதல் கன்னியர்க்கு கலங்குதே
திரேகமெல்லாம்

அந்த நல்ல வேளையிலே ஆயிபக்கம் அருகாக வந்து நின்று
என் தாயே ஈஸ்வரியே இது என்ன மழை பெய்யுதம்மா
இந்தப் பேய்காற்றும் மேய்மழைதான் பொறுக்க
முடியலையே

உன் தவசு குலையுமம்மா உன் சன்யாசம் மாத்துமம்மா

அந்த மொழி சொல்ல தாயார் அப்போது ஏது சொல்வாள்
என்னயிருக்க கன்னிகளே என்ன மொழி சொன்னீரம்மா
மண்டலங்கள் பூஜைகொள்ள சுவாமி வாக்கு
மனுவேணுமென்று

உலகங்கள் பூஜைகொள்ள சுவாமி உத்தரவு வேணுமென்று
இருந்தேன் தவசிலேதான் எனக்குயீடேற்றம் வேணுமென்று

சித்தம் திரும்பி சுவாமி திருவாக்கு செய்யாமல்
என்னுடைய பக்தியைச் சோதிப்போமென்று பரமன்
நினைத்தாரம்மா

இந்தக்காற்று மழையைத்தான் சுவாமி கர்த்தாவும்
ஏவிவிட்டார்

எந்தவிதம் பொழிந்தாலும் கன்னிகளே இருந்த இடம்
பெயரேன்

இருந்த இடம் பெயரேன் கன்னிகளே இத்தவசு நான்
குலைக்கேன்

நட்ட கண்ணும் விட்ட செவி நாலு கையுமாயிருந்தாள்
இப்படிக்கு இருந்தாளே தவசிலேதான் தனக்கு ஈடேற்றும்
வேணுமென்று



சித்தம் திரும்பி சுவாமி சேர்த்தெடுத்தார் வெள்ளேடு
வண்ணச்சுருளெடுத்து சுவாமி எழுதுகிறார் விண்ணப்பம்
மண்டலங்கள் பூஜை கொள்ள தாயார் மாதவசு செய்கின்றாள்
உலகங்கள் பூஜை கொள்ள தாயார் உற்றதவம் செய்கின்றாள்
மண்டலங்கள் பூஜை கொள்ள வடதேசம் ஏற்காது

துஞ்சுவ தேசமது துலிக்கான ராச்சியமாம்
துடுக்குப் பெருத்து அதிலே துர்ச்சனங்கள் மெத்த மெத்த
துடுக்குப் பொருக்காதே உங்களுக்கு துர்ச்சனங்கள் ஏற்காதே
வடதேசம் பூஜை கொள்ள மண்டலங்கள் ஏற்காது
இந்த வடதேசம் ஏற்காது இத்தவசை

தெற்கேதான் தோணுமலை தென்னாட்டில் வீரமலை
நாலுபக்கம் சதுரகிரி நடுவிருக்கும் வீரமலை
சுத்தி வளைந்தமலை தொடர் விழுந்த வீரமலை
வீரமலைமேலே (ஆயிரத்தெட்டு முடியில்) ஒரு
வெண்முடியுந்தானு முண்டு
அந்த வெண்முடிமேல் தவசிருந்தால் வீரசொர்க்கம்
தானுமுண்டு

அம்மலையில் தவசிருந்தால் உங்கள் அருந்தவசு தீருமங்கே
அந்த நல்ல ராச்சியத்தில் அதிலே வட்டாரம் பதியாளும்
வட்டாரம் பதியாளும் வளநாட்டில் காராளன்
குன்றுடையானென்று சொல்லி கோனாட்டில் காராளன்
மைந்தனாரில்லையென்று மனக்கவலையுண்டாகி

புத்திரனா ரில்லையென்று பெருங்கவலையுண்டாகி
பொன்னம் பலத்திலே போய்தான் வரம் வாங்கி
சன்னாசி கோவிலிலே தவமிருந்து வரம் வாங்கி
அப்படி வரத்தினால் பிறப்பார்கள் வாள்வீரர் தானிருவர்
பொன்னர் சங்கர் என்று சொல்லி புகழ் பெரியகாராளர்

வார்த்தைக்கோ வேளாளர் மந்திரவாளுக்கோ வாள்சமர்த்தர்
பேச்சுக்கோ வேளாளர் படைப்போருக்கோ வாள்சமர்த்தர்

அப்படி பொன்னர் சங்கர் தான்பிறந்து படைப்போரும்
செய்திடுவார்
வாங்காப் படைபொருதி நீங்கள் இருக்கும் மலையில்
மாண்டகளமாகிவிடுவார்
ஏற்காப் படைபொருதி இறந்தகள மாகிடுவார்
அந்த இருவருடன் பிறந்த ஏந்திழையாள் நல்லதங்காள்
பொன்னர் சங்கருடன் பிறந்த பொற்கொடியாள்
நல்லதங்காள்

அண்ணன்மாரைத் தேடி அம்மலைக்குத்தான் வருவாள்
அண்ணர் சென்ற களந்தேடி அந்த தேவமலைக்குத்தான்
வருவாள்
அண்ணர் மாண்டகளந்தேடி அந்த வீரமலைதான் வருவாள்
வீரமலைதேடி வெண்முடிக்குத்தான் வருவாள்
அவள் வெண்முடிக்கு வந்தபோது உங்கள் முடிதீருது

அந்த பொன்மயிலாள் தன்னாலே பூலோகம்
பூசைக்கிடமாகிறது
நீங்கள் எத்தவசு செய்தாலும் ஈடேற்றம் இல்லையிங்கே
என்று சேமக்குருத்தோலை ஈஸ்வரனார் சேர எழுதிவிட்டார்
மாயச்சுருளெழுதி வரவிட்டார் உத்திரந்தான்
மாயச்சுருளோலை ஈஸ்வரியாள் மடியில் விழுந்ததப்போ

மடியில் விழுந்ததைத்தான் தாயார் வாரியெடுத்துமப்போ
சிவனுடைய ஓலைச்சுருள் வாங்கி உத்திரத்தைத்தான் பார்த்து
வண்ணச்சுருள் வாங்கி தாயார் வாசித்து பார்த்தாளப்போ
ஓலைச்சுருள் வாங்கி சிவனுடைய உள்கருத்தை பார்த்தபின்பு
தெய்வலோக கன்னிகளை தாயார் தேடி அழைத்தாளப்போ

தாயார் வருந்தி அழைக்கிறது மாதாக்கள் தானறிந்து
தாயார் தேடியழைக்கிறது தெய்வகன்னி மார் அறிந்து
ஆலாப்போலே பறந்து அதிதுரிதாய் ஓடிவந்து



தாயார் பாதஞ்சரணமென்று பாதாரம் போற்றிசெய்து
அட்டம்பணிகள் செய்து கன்னியர்கள் அடிவணங்கி
தெண்டனிட்டு
வணங்கிப் பணிகள் செய்து கன்னியர்கள் வணக்கமுடன்
சொல்லுகிறார்
மாதவசு செய்தவள் நீ முத்தானவாய்திறக்க காரியமேன்
என்ன அதிசயங்கள் ஏதேது கண்டாயம்மா

அந்த மொழிகள் சொல்ல தாயார் அப்போது ஏதுசொல்வாள்
மண்டலங்கள் பூஜை கொள்ள தெய்வகன்னி மாதவசுசெய்
தோமே
சித்தந்திரும்பியேதான் சுவாமி திருவாக்கு வந்ததிப்போ
இந்த வடதேசம் யேற்காது நல்லதல்ல
துளுவமெனும் தேசமிது துலுக்கானம் பெருத்ததிது

தெற்கேதான் தோணுமலை தென்னாட்டில் வீரமலை
நாலுசதுரமலை சதுரகிரி வீரமலை
சுத்தி வளர்ந்த மலை தொடர்விழுந்த வீரமலை
அந்த வீரமலைமேலே ஒரு வெண்முடியுந்தானுமுண்டு
அந்த வெண்முடிமேல் தவசிருந்தால் வீரசொர்க்கம்
ஆகுமிங்கே

அம்மலையில் தவசிருந்தால் அருந்தவசு தீருமம்மா
எத்தவசு செய்தாலும் நமக்கு யீடேற்றம் இல்லையிங்கே
இந்த ஓலைகண்ட நாழிகைக்கு நானுமிருக்க முடியாதிங்கே
என்று தவசு கலைத்தாளே தாயார் சன்யாசம் மாற்றினாளே
இருந்த தவசுவிட்டு தாயார் எழுந்தருள வேணுமென்று

ஆசனத்தை தான்விரித்து தாயார் அதின்மேல்
கொலுவிருந்தாளே
வாகெடுத்துயிளஞ்சடையை கூட்டி முடித்தாளப்போ
கூந்தல் இளஞ்சடையை ஒரு கூந்தற்பனை நீளம்
வாரிமுடித்தசடை ஒரு மலையின் குமிடதுபோல்

அப்படி சடையை முடித்துவைத்து தாயார் சன்யாசம் மாத்தி
வைத்து
இருந்த தவசுவிட்டு தாயார் எழுந்தருள வேணுமென்று
வாராயினித் தெய்வகன்னியென்று வரவழைத்து கன்னிகளை
இருந்த தவசுவிட்டு நான் எழுந்தருள வேணுமே
வெகு நாள் தவசிருந்து எனக்கு வலிமைகளும் போதாது

வெகுநாள் தவசிருந்து எனக்கு வீரியங்கள் பத்தாது
தாண்டியெழுந்திருக்க எனக்கு சவுகரியங்கள்
கொஞ்சமிப்போ
வீசியெழுந்திருப்போமென்றால் வீரியங்கள்
கொஞ்சமிப்போ
அந்தமொழி கேட்டு தெய்வகன்னி அக்காமார் ஓடிவந்து
ஏழுபேர் கன்னிகளும் தாயார்க்கு இருபுறமும் வந்துநின்று

இந்தா நீ தாயே என்று இருபுறமும் கை கொடுத்து
கைலாகை மெய்லாகை தாயார் கடுகியெழுந்தாளே
தாண்டிகுதித் தாளப்போ தன் தவசு நிலையைவிட்டு
வீசிக்குதித்தெழுந்தாள் தன்னுடைய வீரதண்டை சத்தமிட
கச்சைமணி கலகலங்க கால்சிலம்பு ஓசையிட

பிரம்புமொருகையிலே பிரப்பம்பொந்தி
கோலோருகையிலே
தெண்டு ஒருகையிலே திருநீற்றுப்பை ஒருகையிலே
பிரப்பங்கோல் தனையூன்றி புறப்பட்டார் ராச்சியத்தே
இருந்த பதியைவிட்டு அந்த இருள்படர்ந்த தேசம்விட்டு
நாகலோகம் கடந்து இந்த நரலோகம் வாரார்களே

ஊசிமலை கடந்து அந்த உத்ராட்ச மலைகடந்து
பாசிமலை கடந்து அந்த பாற்கடலும் தான்கடந்து
காசிநதி கடந்து ஆரண்யமான கானகமெல்லாம் கடந்து
துளுவதேசமது அந்த துலுக்கானந்தான் கடந்து
தென்தேசம் திசைபார்த்து இந்த தெய்வகன்னிமாரும்
அப்போ



கொல்லிமலைக் கோம்பை புண்ணத்தூர் சரிவிலேதான்
வண்ணாரக்கோம்பை வழி வாரார்கள் கன்னியர்கள்
தாழை நிழலுங்கண்டு தாயார் தாழ்ந்த நிழலுங்கண்டு
மூங்கில் நிழலுங்கண்டு தாயார் முழுகச்சுனையுங்கண்டு
இருக்க நிழலும் கண்டு இருந்தாட தீர்த்தம் கண்டு
அந்த தாழை நிழலும் கண்டு தாயார் தானிறங்கிக்
கொண்டாளே

## கன்னிகள் பச்சை மலையாளன் தினை அழித்தல்

ஏழுபேர் கன்னிகளும் தாயார்க்கு இன்பக் கனிதேடி
தேங்கனியும் மாங்கனியும் சேர்ந்த பலாக்கனியும்
இன்பக் கனிதேடி கொல்லைமலைக்கோட்டை இருபுறமும்
சுத்தி வந்து
பச்சைமலைக் கானகத்தே தெய்வகன்னி பார்த்து
வருகையிலே
அதிலே பச்சை மலையாளன் காடுவெட்டி புனல்பரப்பி

காடுவெட்டி புனல்பரப்பி கல்லுருட்டி வேலிகட்டி
மேடு திருத்தி விதைத்தான் தினைவிதையை
காடு மேடும் தெளித்து கடுகித்தினை விதைத்தான்
நாளொரு வண்ணமுமாய் தினையும் நன்கு பயிராகி
செய்ய தினைப்புனந்தான் அது கொய்யப்பருவமுமாய்

அதைக் கண்டார்கள் கண்ணாலே கண்குளிரத்தான்பார்த்து
ஏழுபேர் கன்னிகளும் இணைசேர்ந்து கூட்டமிட்டு
தேங்கனிதான் தேடிவர அம்மா தினைக்கனியும்
சேர்ந்ததிப்போ
நுழையக் கடவுமில்லை இதிலே நுழைந்தால்
கொய்யத்தினையுமுண்டு
ஏழுபேர் கன்னியர்கள் இணைசேர்ந்து மடிகோதி

கொஞ்சுங்கிளிபோல கன்னியர்கள் குதித்துப் பறந்தாரே
பச்சைக்கிளி போல கன்னியர்கள் பறந்தார்கள்
தினைப்புனத்தில்

பார்ப்பாரர் குழந்தைபோல் கன்னியர் பறந்து தினை
கொய்துவாரார்
குச்சிளைய குழந்தைபோல் கன்னியர்கள் கூடி தினை
கொய்துவாரார்
ஒருநேரம் இருந்ததினை ஒருநேரம் இருக்காதாம்
காலையில் எழுந்திருந்து மலையாளன் காடுசுத்தி
வரும்போது
இந்த செய்ய தினைப்புனத்தை கொய்தழித்தாருமென்று
அந்ததாரை அடியெடுத்து (பச்சைமலையாளன்)
தான்பார்க்கும் வேளையிலே
குழந்தைப்பிள்ளை தாரைபோல் தினைகொய்து
இருக்கிறதை
கண்டானே கண்ணாலே மலையாளன் கண்குளிரத்தான்
பார்த்து
தாரை அடியெடுத்து மலையாளன் தான்தொடர்ந்து
பின்வாரான்
மூங்கில் நிழலிலேதான் தாயார் முடியை விரித்துவிட்டு
சடையை அவிழ்த்துவிட்டு தலைமுடியை விரித்துவிட்டு
ஏழுபேர் கன்னியர்கள் தாயாரை இருபுறம் சூழ்ந்திருக்க
கண்டானே கண்ணாலே (பச்சைமலையாளன்)
கண்குளிரத்தான் பார்த்து
பாதம் சரணமென்று தாயார் பாதாரம் போற்றி செய்து
அட்டம் பணிகள் செய்து மலையாளன் அடிவணங்கி
தெண்டனிட்டு
வணங்கிப் பணிகள் செய்து அவன் வணக்கமுடன்
சொல்லுகிறான்
எந்தவூரெவிடம்மா தாயே நீங்கள் இருக்கும் தலமெவிடம்
என்செய்ய தினைப்புனத்தை தாயாரே கொய்தழித்து
போட்டீரே
என்று கண்ணீர் சொரிந்து மப்போ கடைக்கண்ணில்
முத்துதிர்த்து



ஏங்கி அழுகிறானே ஈஸ்வரிக்கு முன்னே நின்று
தாயார் சித்தமிரங்கியே தான் திருமனது தான் திரும்பி
அஞ்சிக் கலங்க வேண்டாம் மலையாளா அழவேண்டாம்
சும்மாயிரு
எண்ணங்கலங்க வேண்டாம் யோசனைகள்
செய்யவேண்டாம்
கட்டைதழையுமது மலையாளா கனுவாய் ஒரு
கிளைகிளைக்கும்
ஒருகதிரு வாங்கிறது பலகதிரு வாங்குமினி
எப்போதும் காண்கிறது இரட்டிப்பாய் காணுமது
செய்யதினைப்புனத்தில் தெய்வகன்னியர்க்கு பொங்கல்
வைத்து
காதோலை கருகுமணி கருவளையல் வாங்கிவைத்து
பானையோட இளங்கரகம் பாலிக்கவேணுமினி
உன் ஆணடிமை பெண்ணடிமை அடங்கலும் என்னடிமை
அடிமை படைத்தேனான் பச்சை மலையாளா
ஆயிபெரியக்காண்டி
வெள்ளி ஒருகிழமை உன்வாசல் விளையாடிப் போறனடா
திங்களொரு கிழமை உன்வாசல் சென்றிறங்கிப் போறனடா
வருஷமொரு கிழமை வந்திறங்கிப் போறனடா
இருந்தகொலுவு விட்டு எழுந்திருந்தாள் ஈஸ்வரிதான்
பிரப்பம்கோல் தனையூன்றி தாயார் புறப்பட்டாள்
ராச்சியத்தே
ஏழுபேர் கன்னியர்கள் இருபுறமும் சூழ்ந்துவர
கன்னியர்கள் சூழ்ந்துவர தாயார் கடுகி வழிநடந்தாள்

## மண்ணுடையானுக்கு வரம் கொடுத்தல்

அப்போ தொட்டியத்துறை வழியாய் வாரார்கள்
கன்னியர்கள்
ஏழுபேர் கன்னிகளும் ஈஸ்வரியும் தானும்வந்து

ஆற்றோரத்தே பெரிய ஆலமரத்தடியில்
தாயாரும் கன்னிகளும் தானிருந்தார் ஆசனத்தில்
வேங்கை புலித்தோலை விரித்தாளே ஆசனமாய்
ஆசனத்தைத்தான் விரித்து தாயார் அதன்மேல்
கொலுவிருந்தாள்

கன்னிகளைத்தான் பார்த்து தாயாருமேது சொல்வாள்

வாருமினிக் கன்னிகளே வார்த்தைசொல்லக் கேளுமம்மா
இவ்விடத்தில் பூஜை நாம் ஈஸ்வரர்க்கு செய்யவேணும்
பூஜைகளும் செய்ய பொன்கரகம் வேணுமம்மா
கரகமும் வேணுமம்மா காரிழையே உத்தமியே
தொட்டியத்து சின்னான் துரைமகனும் மண்ணுடையான்

மண்ணுடையானிடம் போயி மண் கரகம் வாங்கிவாரும்
அந்தமொழிசொல்ல கன்னியர்கள் அப்போ மனங்குளிர்ந்து
தொட்டியம் சென்று துரைமகனும் மண்ணுடையான்
மண்ணுடையானிடத்திலே மண் கரகம் கேட்கையிலே
கரகமும் இல்லையென்று கன்னிகளை அனுப்பிவிட்டான்

வந்ததுமே கன்னியர்கள் வார்த்தையது சொல்லுகிறார்
தாயாரிடத்திலே தானுமங்கே ஏதுசொல்வார்
என்தாயே மாதாவே ஈஸ்வரியே கேளுமம்மா
கரகமும் கேட்டோமம்மா காரிழையே நாங்களும்தான்
கரகமும் இல்லையென்று கடுகி அனுப்பிவிட்டான்

என்றுமே கன்னி சொல்ல ஏது சொல்வாள் தாயாரும்
நாகம் வயிற்றிலே நாககன்னி நான் பிறந்தேன்
எனக்கு கரகமும் இல்லையென்று காரிழையே
சொல்லிவிட்டான்

ஆகையால் எந்தாயே அவன் வீட்டில் நீயும்வந்து
கரகத்துக்கொரு பாம்பாய் காண வேணுமென்று சொல்லி

தாயார் நினைக்கையிலே சர்ப்பமது தானும்வந்து
மண்ணுடையான் வீட்டு மண் கரகம் தன்னிலேதான்



கரகத்துக்கொரு பாம்பாய் காணுதே அப்போது
கரகம் எடுக்கையிலே பெண்கள் கண்டார்கள் பாம்புகளை
கண்டுமே பெண்களெல்லாம் கால்கள் நடுநடுங்கி
ஓடிவந்து ஆண்களிடம் உரைத்தார்கள் அப்போது
ஆண்களெல்லாம் ஓடிவந்து அப்பாம்பை கண்டார்கள்

கரகத்துக்கொரு பாம்பைக் கண்டார்கள் அப்போது
இதுஎன்ன மாயமென்று எல்லோரும்தான் கூடி
ஈஸ்வரரைத்தானும் எண்ணி நினைக்கையிலே
அப்போது ஈஸ்வரனார் ஆண்டி வடிவெடுத்தார்
குடுகுடுப்பை கையிலெடுத்து கோடங்கிபோலாக

குறிசொல்வோம் என்று கோடங்கி சொல்லுகிறார்
அப்போது மண்ணுடையார் அவர்களுமே ஓடிவந்து
கோடங்கிக்காரனிடம் குறி கேட்டாரப்போது
கோடங்கிக்காரன் சொல்லுகிறான் குறியுமது
தெய்வகன்னி குற்றமாய் காணுது எந்தனுக்கு

கரகத்தால் வந்தது கன்னியர்கள் குற்றமுந்தான்
என்றுமே சொல்ல எல்லோரும்தான் கூடி
இதற்கு வகை விபரம் இயல்பாகச் சொல்லுமென்றார்
கோடங்கி சொல்லுகிறான் குணமுடனே அப்போது
கன்னியர்க்கு பூஜை காணிக்கை வைத்தால்தான்

இந்த இடையூறு எல்லாமும் தீருமென்றார்
காவேரி ஆற்றுக் கரை ஓரம் கன்னியர்கள்
தங்கி இருக்கிறார்கள் தாயாரும் கன்னிகளும்
அவர்களிடத்தில் நீங்கள் ஆன மனுக்கேட்டால்
அவர்கள் மனமிரங்கி அதற்கு வகை சொல்வார்கள்

என்றுமே கோடங்கி எடுத்துரைத்தான் அப்போது
கோடங்கிக்காரனுக்கு குணமுடனே நல்வரிசை
கொடுத்து அனுப்பியேதான் கொற்றவர்களெல்லோரும்
ஆற்றங்கரை தேடி அவர்கள் வருகையிலே

ஆற்றங்கரை வந்து அம்மனையும் கண்டார்கள்
கண்டு பணிந்துமே கை கட்டி நின்றார்கள்
அட்டம் பணிந்து அடிவணங்கி தெண்டனிட்டு
மண் கரகம் இல்லையென்று மாதாவே சொல்லிவிட்டோம்
தெரியாமல் செய்த பிழை தேவி மனம் பொறுத்து

எங்களை ஆட்கொள்ளும் ஈஸ்வரியே என்று சொன்னார்
அப்போது ஈஸ்வரியும் அன்பாய் மனம் மகிழ்ந்து
கன்னியர்கள் பூஜையென்று கனபூஜை செய்ய வேணும்
தேவியர்கள் பூஜையென்று தெய்வபூஜை செய்யவேணும்
பிறக்கும் குழந்தைகட்கு என்பேரு வைக்கவேணுமினி

வருஷமொரு கிழமை உங்கள் வாசலிலே பொங்கல் வைத்து
கன்னிமார் பொங்கலென்று நீங்கள் கடுகியே வைத்து நீங்கள்
கும்பிட்டு வந்தாலே உங்கள் குடிகாப்போம் என்று
சொன்னாள்

அந்தப்படி மண்ணுடையார் அனைவோரும்
செய்வோமென்று

கும்பிட்டு நின்றார்கள் கூடி அனைவருமே

அப்படியே செய்வோமென்று அனைவரும் தான்நடந்தார்
மண்ணுடையானை வகையாய் அனுப்பிவிட்டு
இப்படியாக இவர்கள் இருக்கையிலே

### ஓடக்காரனை ஈஸ்வரி எரித்தல்

கொங்கு மழை பொழிய குடவனாறு தண்ணீர் வர
ஆனை மழை பொழிய அந்த ஆம்ராந்து தண்ணீர் வர
வெண்மலை மேல் மழை பொழிய வெண்ணிலையாறு
தண்ணீர் வர
தன்மலை மேல்மலை பொழிய அங்கே நங்காஞ்சி தண்ணீர்
வர
பொன்மலைமேல் மழை பொழிய பொன்னி நதி தண்ணீர்
வர



ஆனி அரையாறு தலையாடி முழுப்பெருக்கு
(அப்படி) இருகரையும் ஒருகரையாய் ஒன்றாய் வரும்போது
காகம் பறவாது காவேரியம்மா கரிக்குருவிநாடாது
சிட்டுப் பறவாது காவேரி அம்மா சிறு குருவிநாடாது
இந்தப் பெருக்கிலேதான் எப்படியும் நாம் கடப்போம்

ஓடக்காரனை அழைத்து அவனுட
வளப்பமினிப்பார்ப்போம்
ஓடக்கார நல்லண்ணா ஓடமண்ணா நல்லதம்பி
ஓடம் விடுகிறாயா ஓடமண்ணா நல்ல தம்பி
அந்த மொழி சொல்ல ஓடக்காரன் அப்போது ஏது
சொல்வான்
எந்தவூர் எந்ததேசம் நீங்கள் இருக்குந்தலமெவ்விடம்

தெற்கத்திப் பெண்கள் நீங்கள் திசைதப்பி வந்தீர்களோ
வடக்கத்திப் பெண்கள் நீங்கள் வகைதப்பி வந்தீர்களோ
அந்த மொழி கேட்டுத் தாயார் அப்போது ஏதுசொல்வாள்
பெண்கள் என்று எண்ணியே பேசாதே வாய்திறந்து
கூத்தாடிப் பெண்கள் என்று உன்குறை மனதிலெண்ணாதே

தேவதாசிப் பெண்களென்று, உன் சிந்தையிலே எண்ணாதே
ஓடம் விடுகுமினி ஓடமண்ணா நல்லதம்பி
நாட்டிலே உள்ளபடி நடைகூலி நான் தருவேன்
உன் தேசத்தில் உள்ளபடி சுமைகூலி நான்தருவேன்
ஓடம்விடுகுமினி ஓடத்துக்குள்ள கூலி நான் தருவேன்

ஓடத்துக்குள்ள கூலி இந்தாவென்று முன்னே வைத்தார்
கைக்கூலிக் காசைப்பட்டு கடத்தினான் ஓடமதை
ஏழுபேர் பெண்களையும் என்னோடம் கொள்ளதென்றான்
ஒருத்தொருத்தராக வேதான் அக்கரையே
சேர்ப்பேனென்றான்
அந்த மொழி சொல்ல தாயார் அப்போது ஏது சொல்வாள்

நாங்கள் இருந்தால் ஒரு முகமாய் அக்கரைபோனால் ஒரு
முகமாய்

என்று ஏழு பேர் கன்னிகளும் ஏறிக்கொண்டார் ஓடத்திலே
ஓடிவரும் தண்ணியிலே ஓடத்தை உள்ளாகத் தள்ளிவிட்டார்
சாய்ந்துவரும் தண்ணியிலே தள்ளிவிட்டார் ஓடமதை
தள்ளாடித் தள்ளாடி ஓடம் நடுத்தண்ணியிலே தான்வருமாம்
ஓடுகிற ஓடத்தை அவன் ஊனி நிறுத்துகிறான்

ஓடுகிற ஓடத்தை அந்த ஓடக்கோல் ஊன்றுகிறான்
ஓடத்தை நிறுத்தியே தான் ஓடக்கோல் பாய்ச்சுகிறான்
கண்டாளே கண்ணாலே தாயார் கண்கள் மிகச் சிவந்து
ஓடுகிற தண்ணியிலே ஓடக்காரா ஒட்டாரம் செய்யாதே
வெள்ளமானால் மேல் வெள்ளம் வெகுவெள்ளம் வருகுதடா

ஓடம் நடத்துமினி ஓடமண்ணா நல்லதம்பி
அந்தமொழி கேட்டு ஓடக்காரன் அப்போது நல்லதென்று
நல்லது நல்லதென்று ஓடக்காரன் நையாண்டி பேசுகிறான்
வம்புகளும் தும்புகளும் அவன் வாய்க் குறும்பு பேசுகிறான்
பொறுக்க முடியாமல் தாயார் பொறுக்க மனம் கூடாமல்

சித்தம் உடையாள் ஆயி சிவக்யானம் உடையவளாய்
திருஷ்டிப்பினாலே தான் தன்னுடைய திருமனதில் தானுதிக்க
நட்டாற்று தண்ணியிலே ஆயி நாணல் திட்டு உண்டாக்கி
நாணல்திட்டு மேலேதான் நாணல் தர்ப்பை உண்டாக்கி
ஓடத்தை விட்டுமப்போ கன்னியர்கள் ஒரு முகமாய் தான் குதித்தார்

தெர்ப்பை புல்லைத்தான் பிடித்து கன்னியர்கள் திட்டாங்கரை சேர்ந்தார்
கண்கள் சிவந்துமே தாயார்க்கு கடுங் கோபம் தான் ஆகி
ஆக்கரித்து பல் கடித்து அதட்டுகிறாள் ஈஸ்வரி தான்
அப்போ ஓடம் பிளந்தெரிய ஓடக்காரன் நின்றெரிய
அக்கினியாய்ப் பத்தி ஓடக்காரன் அனலாக மூழ்கையிலே

தெய்வக் கன்னியர்கள் பார்க்க முடியாமல் பார்க்க மனம்கூடாமல்



என் தாயே ஈஸ்வரியே என்ன மொழி நீ நினைத்தாய்
மண்ணுள்ள காலத்துக்கும் வளரும் அபகீர்த்தி
புல்லுள்ள காலத்துக்கும் இது புதுமை நடக்குமினி
அபகீர்த்தி வைக்காதே தாயே தெய்வ கீர்த்தி தேடுமம்மா
அவன் ஆணாய்ப் பிறந்ததினால் அதிக வினை தானினைத்தான்

நாம் பெண்ணாய்ப் பிறந்ததினால் தாயே பொறுக்கயினி வேணுமம்மா
சித்தம் திரும்பியே தான் தாயார் திருமனது தான் திரும்பி
அனலை தணிக்க வேண்டும் ஆராட்டம் நீங்க வேணும்
என்று பாதம் பணிகள் செய்து தாயார் பாதாரம் தெண்டனிட்டு
வணங்கிப் பணிகள் செய்து கன்னியர்கள் வாக்கு மனு கேட்கையிலே

சித்தம் திரும்பியே தான் தாயார் திருவாக்குதான் கொடுத்தாள்

## ஓடக்காரனை கன்னியர்கள் எழுப்புதல்

தீர்த்தத்தை வாரியேதான் ஓடக்காரன் திருமுகத்தில் விட்டெறியும்
அனலும் தணியுமினி அவனுடைய ஆராட்டம் நீங்குமினி
வேட்கை தணியுமினி அவனுடைய வெந்தணலும் நீங்குமினி
சித்தம் உடையவளாய் தாயார் திருவாக்கு செய்த பின்பு
ஏழுபேர் கன்னிகளும் இணை சேர்ந்து ஓடிவந்து

தீர்த்தத்தை வாரியே தான் ஓடக்காரன் திருமுகத்தில் விட்டெறிந்தார்
அனலும் தணிந்து மப்போ ஓடக்காரன் நின்று சில நேரம்
தன்னினைவு தான் தெரிந்து ஓடக்காரன் தானு மப்போ ஏது சொல்வான்
மாதாக்கள் என்கிறதும் என் மனதிலறியேன் நான்

தேவாக்கள் என்கிறதும் என் சித்தம் அறியேன் நான்
தெரியா மதியாலே தாயே செய்தேனதி பிழைகள்
செய்த பிழை பொறுத்து தற்காக்க வேணுமினி
அட்டம் பணிந்து ஓடக்காரன் அடிவணங்கி தெண்டனிட்டு
வணங்கிப் பணிகள் செய்து வணக்கமுடன் சொல்லுகிறான்.

ஓடத்து மேல் செல்லுங்கள் தாயே ஒரு முகமாய்
சேர்க்கிறேனான்

அந்த மொழிகள் சொல்ல தாயார் அப்போது சொல்லுகிறாள்
உன்னோடம் செல்லாது இனி நடடா உன்னூரே
முத்தான வாய் திறந்து தாயார் உத்தரவு செய்தனுப்பி
சித்தம் உடையவள் தான் தாயார் சிவக்யானம் உள்ளாகி

திருஷ்டியாலே தாயார் திரு மனதில் தானுதிக்க
மந்திரத்தினாலே மகா தேவரை தியானிக்கவே
அப்போது ஈஸ்வரருக்கு அடைவுடனே தான் தெரிந்து
என்ன காரணத்தால் உமையாள் இன்னம் தியானிக்கிறாள்
ஆரை அழைத்து இனி ஈஸ்வரனார் ஆலோசனை
செய்வோமென்று

வைகுந்தம் பதியிருக்கும் மாயவரைத் தானழைத்தார்
அந்த மொழி கேட்டு அரி ராமர் ஓடிவந்து
என்னை அழைத்ததென்ன சுவாமி எனக்கறியச் சொல்ல
வேணும்

அந்த மொழி கேட்க பரமேஸ்வரனார் அப்போது
சொல்லுகிறார்

வாருங்கள் மைத்துனரே ஒரு வார்த்தை சொல்லக் கேளுமினி

ஐந்து தலை நாகத்துக்கு உமையவளை அனுப்பினோம்
குழந்தையாக

பூலோக மண்டலத்தில் புத்திரனாய்ப் போய்ப் பிறக்க
ஏவல் பணிகள் செய்ய கன்னிகளை அனுப்பினோமே
கன்னியர்க்குக் காவலாக மைந்துனரே நீர் கருதி அனுப்ப
வேணும்



ஈஸ்வரனார் சொல்கையிலே ஏது சொல்வார் ரகுராமர்
அப்படியே நல்லதென்று அரி ராமர் தானினைத்து
சமுத்திரத்தை தானும் ஆயன் தயிர்ப் பானையாக வைத்தார்
சமுத்திரத்து நீரையெல்லாம் ஆயன் தயிராக்கி வைத்தாரே
கருமலையை தானுமொரு மத்தாக வைத்தாரே

நாக பாசக் கயிறு ஆயன் நன்றாகத் தானும் வைத்து
சமுத்திரத்து நீரையெல்லாம் ஆயன் தயிராக கலக்கினாரே
தயிரு கலக்கையிலே ஆயன் தினையளவு தருப்பு கண்டு
பெருவிரலால் தான்வழித்து ஆயன் விட்டெறிந்தார்
பூமியிலே

## வாது கருப்பண்ணன் பிறப்பு

விட்டெறிந்த அக்கருப்பு வாது கருப்பண்ணனாய்
பூமியிலேதான் விழுந்து புரண்டு மிகத்தான் பார்த்து
மண்ணுக்கும் விண்ணுக்கும் அவன் ஒண்ணாய் வளர்ந்தானே
காங்கு கச்சை கையருவாள் கனத்ததுண்டு தடியெடுத்து
அட்டம் பணிகள் செய்து மாயவரை அடிவணங்கி
தெண்டனிட்டு

முக்கால் வலம் வந்து மாயன் முன்னே வந்து நின்று
கொண்டு

என்னை அழைத்த தென்ன சுவாமி எந்தனுக்கு புத்தி என்ன
அந்த மொழி கேட்டு அரிராமர் என்ன சொல்வார்
உன்னை அழைத்தது தான் வாது (கருப்பண்ணா) ஒரு
வார்த்தை நீ கேளும்

ஐந்து தலை நாகத்துக்கு ஈஸ்வரியை அனுப்பினோம்
குழந்தையாக

ஈஸ்வரிக்கு ஏவல் செய்ய இதமுடனே கன்னிகளை
அனுப்புகிறோம் அப்பா அவர்களிடம் நீ போயி
கன்னியர்க்கு காவலாக கருத்தாக நீ இருந்து

பெண் துணைக்கு பின் துணையாய் போய் அவர்களுடன்
இருக்க வேணுமென்று சொல்லி இதமாக மாயவரும்
வாச்சி உளி நாடாத வைரமணி தேருண்டு பண்ணி
தச்சனுளி நாடாத தங்கத் தேருண்டு பண்ணி
கொல்லனுளி நாடாத குறிஞ்சித் தேருண்டு பண்ணி

அச்சிலாத் தேரு ஆகாசத்தேருண்டு பண்ணி
மல்லிகை முல்லை மலரும் இருவாட்சி
கொத்தரளி கொடியரளி கொடி படர்ந்த செண்பகப்பூ
புஷ்பம் அலங்கரித்து பூத்தேரு உண்டு பண்ணி
தேருக்கு சாரதியாய் கருப்பணனை திறமாக முன்னே வைத்து

அனுப்பினாரப் போது அன்பாக மாய வரும்
வாது கருப்பண்ணனும் வகையுடனே தானுமப்போ
ஈஸ்வரியும் கன்னிகளும் இருக்குமிடந்தான் தேடி
தேரை நடத்தி வந்தான் கருப்பண்ணன் திறமாக அப்போது
நட்டாற்றில் தேருடனே கருப்பண்ணன் நலமாக வந்தாராம்

ஈஸ்வரியும் கன்னிகளும் இதமுடனே தானுங்கண்டு
ஆரப்பா நீ யென்று ஈஸ்வரி அன்புடனே கேட்கையிலே
வணங்கி பணிகள் செய்து கருப்பண்ணன் வணக்கமுடன் சொல்லுகிறான்

வாது கருப்பண்ணன் என் பேரு வகையுடனே மாயவரும்
உங்களிடம் போயிருக்க எனக்கு உத்தரவு ஆனதினால்

வந்தேன் நான் உங்களிடம் தாயே வகையுடனே இப்போது
என்று சொல்லி கருப்பண்ணனும் ஈஸ்வரிக்கு முன்னே நின்று

வாக்கு மனு கேட்க வகையுடனே ஈஸ்வரியும்
முத்தான வாய் திறந்து ஈஸ்வரி உத்தாரம் சொல்லுகிறாள்
கன்னியர்க்கு காவலாக கருத்துடனே நீயிருந்து

பதிவாயிரு மென்று ஈஸ்வரி பாங்குடனே வாக்குரைத்தார்
நல்லதென்று ஈஸ்வரியை நலமாகத் தெண்டனிட்டு



தேருக்கு சாரதியாய் கருப்பண்ணன் திறமாக முன்னிருந்தான்
வலமாக சுத்தி தாயார் வாட்சித்தேர் மேலே கொண்டாள்
ஏழு பேர் கன்னிகளும் இதமாக தேரேறி
தேரை நடத்தியே தான் தாயார் தென் கரைக்கு போறாளே
அச்சிலாத் தேரைத்தான் தாயார் அசைந்து நடத்துகிறாள்

ஆகாசப்பூந்தேரு அது அசைந்து குலுங்கியே தான்
தேரு குலுங்கியே தான் தாயாரோடதிருத்தேரு போகுது பார்
தேரை நடத்தியேதான் தாயார் தென் கரைக்கு வருகையிலே

## மாவலையனுக்கு விஷமிறக்குதல்

வார வழியிலே தான் மாவலையன் மணி வலையுந் தான் போட்டு

வெள்ளமும் வெகு வெள்ளம் மேல் வெள்ளம் வருகுதென்று
ஆனை மச்சம் குதிரை மச்சம் அதிக வெள்ளம் வருகுதென்று
வாரி வலையெடுத்து மாவலையன் வீசி வலை போட்டான்
வீசி வலை போட்டு மாவலையன் மீன் வேட்டை யாடையிலே

கண்டாளே கண்ணாலே தான் தாயார் கண்கள் பொறி பறக்க
வச்சிரத் தேர் வார வழியை மறித்து முன்னே
தடத்தை மறித்து முன்னே மாவலையன் தானும் வலைபோட்டான்

கண்கள் சிவந்து தாயார்க்கு கடுங் கோபமாகி யிப்போ
வாது கருப்பண்ணனை தாயார் வகையுடனே தான் பார்த்து

ஏவி விட்டாளப்போது தாயார் இதமாக நாகமதை
சொல்லுக் கடங்காத சொல் கேளா நாகமதை
கடித்தால் விஷ மீளாத கருப்பணன் கருந்தலை நாகத்தை
ஐந்து தலை நாகத்தை தாயார் அரவத்தை ஏவி விட்டாள்
ஓடுகிற தண்ணியிலே தாயார் ஏவி விட்டாள் நாகத்தை

வாளை குதி பாய்ந்தாற்போல் கருப்பணன் நாகம் குதி பாய்ந்ததுவே

மாவி விழுந்து கருப்பணன் மணி வலையில் பாய்ந்ததுவே
அதை வாரியெடுத்தே தான் மாவலையன் மார்போடே
சேர்த்தணைத்து
ஏந்தி எடுத்து மாவலையன் இணைமார்பில்
சேர்த்தணைத்தாள்
சீறிச்சினந்து நாகம் சினத்துடனே தீண்டிடுதே
சர்ப்பம் கடித்தபோதே மாவலையன் மெத்த மனங்கலங்கி

வேர்த்து விறு விறுத்து அவன் மெய் மறந்து சிந்தை கெட்டு
நினைவு தடுமாறி மாவலையன் நிற்குமந்த வேளையிலே
பார்க்க முடியாமல் தெய்வ கன்னி பார்க்க மனங்கூடாமல்
என் தாயே ஈஸ்வரியே என்ன மொழி நீ நினைத்தாய்
மண்ணுள்ள காலத்துக்கும் தாயே வைக்காதே அப கீர்த்தி

அப கீர்த்தி வைக்காதே தாயே தெய்வ கீர்த்தி நேருமம்மா
நாகம் விஷமிறங்கி நன்றாய் மனந்தெளிய
சித்தமிரங்கியே தான் தாயே திரு வாக்கு செய்யுமம்மா
அந்த மொழி கேட்டு தாயார் அப்போ மனதிரங்கி
வாரும் நீ கன்னியென்று வரவழைத்து கன்னிகளை

வேப்பிலையைத் தானெடுத்து மாவலையன் விஷத்தை
யிறக்குமம்மா
முக்காலு மூணு தரம் மாவலையன் முகத்தோடிறங்கிவர
அப்போ நாகம் விஷமிறங்கும் நன்றாய் மனந்தெளியும்
சித்தம் திரும்பியே தான் ஆயி திரு வாக்கு செய்த பின்பு
ஏழு பேர் கன்னிகளும் அப்போ இணை சேர்ந்து ஓடி வந்து

வேப்பிலையைத் தானெடுத்து மாவலையன்
விஷத்தையிறக்கி விட்டார்
நாகம் விஷமிறங்கி வலையனுக்கு நன்றாய் மனந்தெளிய
நினைவு தடுமாறி மாவலையன் நின்று சில நேரம்
தன் நினைவு தான் தெரிந்து தானு மந்த நாழிக்கக்கு
மாதாக்கள் வாரது தான் வழி யென்று நானறியேன்



தேவாக்கள் வாரதொரு தெருவென்று நானறியேன்
அறியா மதியாலே நான் அதிக பிழை செய்தேனிப்போ
செய்த பிழை பொறுத்து ஆயி தற்காக்க வேணுமம்மா
என்று பாதம் பணிகள் செய்து ஆயி பாதாரம் தான் வணங்கி
அட்டம் பணிந்து தாயாரை அடி வணங்கி தெண்டனிட்டு

வணங்கிப் பணிகள் செய்து அவன் வணக்கமுடன்
நிற்கையிலே
சித்தம் திரும்பியே தான் ஆயி திருமனது தான் திரும்பி
தீர்த்தமது தான் தெளித்து ஆயி திருநீறு தான் கொடுத்தாள்
வெண்ணீறு தான் கொடுத்து வழியனுப்பிக் கொண்டேதான்
தேரைத் திருப்பியே தான் ஆயி தென் கரைக்கு வாராளே

ஆறு கடந்து ஆயி அணை கடந்து வாராள்
இப்படியாக இவர்கள் வருகையிலே,

## பெரியக்காண்டி அம்மனுக்கும் செல்லாண்டி அம்மனுக்கும் கரகப்போட்டி

கண்டாளே கண்ணிலே தான் செல்லாயி கண்கள் சிவந்து
மப்போ
பொன் கரகம் தலையில் வைத்து நான் பூமிபதி ஆண்டிருக்க
இவள் மண் கரகம் தலையில்வைத்து வாரவள்தான்
ஆருமினி
இவள் நம்மில் பெரியவளா நலம் மிகுந்த வல்லவளா?
என்னில் பெரியவளா இவளை இனிப் பார்ப்போ மென்று
சொல்லி

இருந்த பதியை விட்டு செல்லாயி எழுந்திருந்து வாராளே
வந்து வழியை முன்னே மறித்து நின்றாள் செல்லாயி
ஆறு அணை கடந்து வாரவள் தான் ஆருமினி
என்னுடைய காவலிலே நீ இங்கு வந்த காரிய மேன்?
வழியை மறித்துமேதான் செல்லாயி வழக்குரைத்து
நின்றாளே

வாதாடி வழக்குரைத்து வழிமறித்து நிற்கையிலே
வாருமினி செல்லாயி வார்த்தை சொல்லக் கேளுமினி
வன்னம் பதியிருந்து வெகு காலம் வாழ்ந்திருந்தாய்
வன்னமும் பத்தாமே வாங்கரை மேல் வந்து குடி
கொண்டாய் நீ
சேரனுக்கும் சோழனுக்கும் சேர்ந்தமுடி மன்னருக்கும்

எல்லைப் பிரித்து நீ எல்லை மேல் நின்றவளே
காவேரி யம்மனையே காவல் கொண்ட செல்லாயி
பொன்கரகம் தலையில் வைத்து நீ பூமிபதி ஆளுகிறாய்
மண் கரகம் தலையில் வைத்து வனந்தேடிப் போகிறேன்
நான்
வழியை மறிக்காதே என்னை வாதாட்டங் கொள்ளாதே

தடத்தை மறித்து நீ தர்க்கமிட வேண்டாமம்மா
அந்தி தானாகுதம்மா நான் அனேக தூரம் போற வழி
நேரந்தானாகுதம்மா நான் நெடுந்தூரம் போகும் வழி
என்னை மறியாதே என்னோடு எதிராட வேண்டாமம்மா
அந்த மொழிகள் சொல்ல செல்லாயி அப்போது
சொல்லுகிறாள்

என்னுடைய காவலிலே நீ எண்ணாமல் வந்ததற்கு
உன் சமர்த்தும் என் சமர்த்தும் இனிக்கண்டு நான் விடுவேன்
வழியை மறுத்து வருத்தமாய்ச் சண்டையிட
ஆக்கரித்து குலவையிட்டு அக்கினிப் பந்தெடுத்தாள்
அக்கினிப் பந்தெடுத்து அனல் பந்தை விட்டெறிந்தாள்

அக்கினிப் பந்துமது அகோரமாய்த் தான் வருதே
சித்தமுடையாயி சிவக்யானம் உள்ளவள்தான்
தன்னுடைய திருஷ்டியினால் ஆயிதிருமனதுதானுதித்து
நீர்ப்பந்து தான் பொழிந்து நிறுத்தினாள் அக்கினியை
அக்கினிப் பந்தவிந்து அனலுந்தணிந்த தப்போ

வாராயினிச் செல்லாயி ஒரு வார்த்தை சொல்லக்
கேளுமம்மா



இன்றையெல்லாம் சண்டையிட்டால் நம்மை விலக்க
இங்கே ஆளுமில்லை
என் சமர்த்தும் உன் சமர்த்தும் இனிக்காண வேணுமென்றாள்
என்கரகம் மண்கரகம் உன்கரகம் பொன்கரகம்
இருவருடைய கரகமுந்தான் இணைச்சரியாய்த்தான்
விடுவோம்
நீயே பெரியவளானால் விட்டதொரு பொன்கரகம்

திருப்பாற்கடல் மோதியதை சுற்றி வந்து மூணுதரம்
முக்காலும் மூணுதரம் கரகம் முழுகி எழுந்திருந்து
மகா தீர்த்தமாடியே தான் வரவேணுமுன் கரகம்
நானே பெரியவளென்றால் என் கரகம் வந்துவிடும்
அந்த மொழி சொல்ல செல்லாயி அப்போ மனங்குளிந்து

என்கரகம் சோடிக்கிறேன் உன்கரகம் சோடி என்றாள்
பொன்கரகம் தானெடுத்து செல்லாயி புஷ்பம் அலங்கரித்து
வெள்ளரளிப்பூ வெடுத்து செல்லாயி விதவிதமாய்ச்
சோடித்தாள்
செவ்வரளிப்பூவெடுத்து ஆயி திருக்கரகம் சோடித்தாள்
இவ்வாறிரண்டு பேரும் இணைசரியாய்த்தானிருந்து

ஓடுகிற தண்ணியிலே ஆயி இறக்கிவிட்டாள் பூங்கரகம்
பாய்ந்து வரும் தண்ணியிலே ஆயி பழகவிட்டாள் பூங்கரகம்
இருவர் கரமுமே இணைச்சபதம் கூறியேதான்
வாதாடி வழக்குரைத்து வழிதோறும் சண்டையிட்டு
தர்க்கமிட்டு வழக்குரைத்து சமத்துமேல் போகிறது

திருப்பாற்கடல் மூழ்கி அது சுத்திவந்து மூணுதரம்
மகாதீர்த்த மாடையிலே செல்லாயி கரகம் மண்ணில்
புதைந்ததுவே
முழுகி எழுந்திருந்து ஆயி கரகம் வருகுதப்போ
என் கரகம் வருகுதடி செல்லாயி உன் கரகம் வரலையடி
வருகுது வருகுதென்று ஆயி வழி பார்த்திருக்கையிலே

வந்து குதித்திட்டுதே ஆயி கரகம் வண்ண மடிமேலே
ஏந்தி எடுத்தாள் கரகத்தை ஆயி எடுத்து மடியில் வைத்து
என்கரகம் வந்திட்டுதே செல்லாயி உன் கரகம் வரலையடி
அந்த மொழி கேட்டு செல்லாயி அப்போது சொல்லுகிறாள்
வடக்கிருந்து வந்தவர்கள் நீங்கள் மருந்தால் மிகுந்தவர்கள்

மந்திரத்தில் வல்லவர்கள் மாயவித்தைக்காரர்களே
வரத்தில் மிகுந்தவர்கள் வல்லவர்கள் நீங்களுந்தான்
ஒருதரம் சத்தியந்தான் உலகத்துக்கு ஏற்காது
இன்னும் ஒருதரம்தான் இணைக்கரகம் நான் விடுவேன்
புதுக்கரகம் தானெடுத்து செல்லாயி புஷ்பம் அலங்கரித்து

வெள்ளரளிப் பூவெடுத்து செல்லாயி விதமாகச் சோடித்து
இருவரெண்டு பேரும் இணைசரியாய்த் தானிருந்து
ஓடுகிற தண்ணியிலே இரண்டுபேரும் இறக்கிவிட்டார் கரகத்தை
இருவர் கரகமுந்தான் இணைச்சபதம் கூறியேதான்
வாதாடி வழக்குரைத்து வழக்குமேல் போகுது

நீயே பெரியவளென்றும் நானே பெரியவளென்றும்
தர்க்க மிட்டு வழக்குரைத்துக் கரகம் சமர்த்து மேல் அப்போது
திருப்பாற் கடல்மோதி இது சுற்றி வந்து மூன்று தரம்
முக்காலு மூணுதரம் கரகம் முழுகி எழுந்திருந்து
மகா தீர்த்தமாடையிலே செல்லாயி கரகம் மண்ணில் புதைந்ததுவே

முழுகி எழுந்திருந்து ஆயி கரகம் முழுக்கு நீராடியேதான்
மார்மூண்டு தான் திரும்பி வருகுது அந்நேரம்
என் கரகம் வருகுதடி செல்லாயி உன் கரகம் வரலையடி
வருகுது வருகுதென்று ஆயி வழிபார்த்திருந்தாளே
வந்து குதித்திட்டுதே ஆயி வண்ண மடிமேலே



ஏந்தி எடுத்தேதான் ஆயி எடுத்து மடிமேலே வைத்து
என் கரகம் வந்ததென்ன செல்லாயி உன் கரகம் போனதென்ன
நீயே பெரியவளோ தாயே நானே பெரியவளோ
அந்த மொழிகள் சொல்ல செல்லாயி அப்போது சொல்லுகிறாள்
நீயே பெரியவள்தான் தாயே உனக் கடிமையானேனம்மா

முழுகின பொன் கரகம் தாயே மூண்டழைக்க வேணுமம்மா
என்று சொல்ல செல்லாயி ஈஸ்வரி மனந்திரும்பி
தன்னுடைய திருஷ்டியினாலே தாயார் திருமனதில் தியானிக்க
முன்னே பொன் கரகம் அது முழுக்கு நீராடியேதான்
மகா தீர்த்தமாடி வந்துதே பொன் கரகம்

உன் கரகம் வருகுதடி செல்லாயி ஏந்தி எடுத்திடடி!
வருகுது வருகுதென்று செல்லாயி வழிபார்த்திருக்கையிலே
மண்டியிட்டுக் கொண்டாளே மதுக்கரை செல்லாயி
வந்து குதித்திட்டுதே செல்லாயி வண்ண மடிமேலே
ஏந்தி எடுத்து இறக்கிவைத்து பூங்கரகம்

நீயே பெரியவள்தான் தாயே உனக்கடிமை யானேனம்மா
உன்னில் பெரியவள்தான் தாயே உலகத்தில் யாருமில்லை
சரணமம்மா தாயே வென்று சாஷ்டாங்கம் பணிகள் செய்து
வணங்கி பணிகள் செய்து செல்லாயி வணக்கமுடன் சொல்லுகிறாள்
இருந்த பதியைவிட்டு தாயே உன்பிறகே வாரேனம்மா

வனந்தேடி போரவர்க்கு வழிக்குத்துணை நான்வருவேன்
இருந்த பதியைவிட்டு எழுந்திருந்தாள் செல்லாயி
வாருமினி செல்லாயி நான் ஒரு வார்த்தை சொல்லக் கேளுமிதை
பொன் கரகம் தலையில் வைத்து பூமிபதி ஆள்கிறவள்
நான் வீரமலை சேர்ந்து வெண்முடி மேல் தவமிருந்து

என் தவசு தீர இனி எக்காலம் செல்லுவதோ
மாதவமும் தீர்ந்து மண்டலங்கள் பூஜையானால்
உன்னை மறவாமல் தாயே ஒக்கவைத்து நானுமுண்பேன்
இருந்தபதியை விட்டு என்பிறகே வராதே
சித்தம் திரும்பியேதான் ஆயி திருவாக்கு செய்துமப்போ
அருங்கரைச் செல்லாயியை அனுப்பிவைத்துக்
கொண்டேதான்

## பெரியக்காண்டி அம்மன் வீரமலை தேடிப் போகுதல்

இரத்னாசல மூர்த்தி ராஜலிங்க அய்யாவை
வெள்ளிமலை ஆரியன் சுவாமியை வெட்டினது
பார்க்கவேணும்

தெய்வமலை திசைநோக்கி தெய்வக்கன்னி வாரார்கள்
தெய்வக் கன்னி வாராதுதான் சுவாமி திருக்கண்ணால்
தான்பார்த்து

தேரை நிறுத்திவைத்து சுவாமியுட தெய்வமலை ஏறியேதான்

பன்னீரு கொண்டுவந்து கன்னியர்கள் பண்பாக சுவாமியுட
பொன்முடிமேல்தான் சொரிந்து கன்னியர்கள் புகழுடனே
அப்போது

புஷ்பத்தைக் கொண்டுவந்து கன்னியர்கள் புதுமையாய்
சுவாமியுடன்

புதுமையுடன் கொண்டுவந்து பொற்பாதமதில் குவித்து
வலமாகச் சுத்திவந்து மாதாவும் கன்னியர்கள் வாக்குமனு
கேட்கையிலே

சித்தம் திரும்பியேதான் சுவாமி திருவாக்கு ஏது சொல்வார்
என்மலைக்கு இணைமலையாய் பெரியக்காண்டி
இணையாக வாழ்ந்திருப்பாய்
எனக்குச் சரிக்குச் சரியாயிருப்பாய் சரிமலைமேல்
வாழ்ந்திருப்பாய்



வாக்கு மனுக்கொடுத்து சுவாமி வகையாக அப்போது
இருந்த கொலுவுவிட்டு சுவாமி எழுந்திருந்து அந்நேரம்
மந்திர வாளெடுத்து சுவாமி வகையாக தும்புவிட்டு
கல்லைப் பிளந்து தெய்வ கன்னியர்க்கு வேணுமென்று
கன்னியர்க்கு இடங்கோரி சுவாமி கைலாச நாதர் வந்தார்

இரத்னாசல மூர்த்தி அந்த இராஜலிங்க ஐயாவை
வலமாக சுத்திவந்து கன்னியர்கள் வணங்கிப் பணிகள்
செய்தார்

ஆயி பெரியக்காண்டி ஆண்மாரும் பெண் ரூபம்
சடையுமுடியிலைதான் சதாசிவனார் தன்வடிவாய்
ஏகவேஷ்டி நாகமலை ஈஸ்வரனைப் போல நிற்க

கண்டு மனமகிழ்ந்து சுவாமி கைலாச நாதருக்குத்தான்
பூலோக மண்டலத்தில் நீ பிறந்தையே சிவனாக
சிவ சொரூபம் மாற்றிவைத்து தெய்வகன்னி வடிவெடுத்து
ஏழுபேர்கன்னி யென்று வெண்முடியில் இருந்துமே
யாமுமங்கே
கன்னியென்று வடிவெடுத்து நீ காரணமாய் விளங்குமினி

என்னைப் போல் சரியாயிருந்து நீ சதிருடனே
வாழ்ந்திருப்பாய்
மாதவசு முடிதீர்ந்து வெண்முடியில் மகாபூசை செய்ததினால்
வையகத்தில் தேவரெல்லாம் வந்து கண்டு போவார்கள்
அப்போ சிவசொரூபம் அல்லவரும் தானறிய
சிவ சொரூபமாகவேதான் திருக்கொலுவு நீயிருப்பாய்

முத்தான வாய்திறந்து இரத்னாசல மூர்த்தி உத்தரவு
செய்தாரப்போ
தேவமலை விட்டிறங்கி தெய்வ கன்னி வரும்போது
கல் லையுமேதான் பிளந்து சுவாமி கைலாசநாதர் தந்த
அந்த இடத்திலே தெய்வ கன்னி அக்காமார் வந்திருந்து
வீரமலைக்கு நாம் வெண்முடிக்கு போவோமென்று

தேவமலை விட்டிறங்கி தெய்வகன்னி வாரார்கள்
வந்தார்கள் இருங்கூரு வளமான நங்கபுரம்
தங்கினார் நங்கபுரம் கன்னியர்கள் தாமறிந்தார் பறந்தாடி
பறந்தார்கள் பறந்தாடி கன்னியர்கள் பாதம் வைத்தார்
வீரமலை
வீர மலைக்குவந்து ஈஸ்வரியும் கன்னிகளும்
வெண்முடியைத் தான்பார்த்து

நாலுபுறம் சதுரகிரி நம்மளுட காணியிது
வீரமலைக் காணியென்று வெண்முடியை மேடையென்று
வெண்முடி மேலேதான் ஆயி விரித்தாள் புலிஆசனத்தை
ஆசனத்தைத்தான் விரித்து ஆயி அதன்மேல் கொலுவிருந்து
ஓலைச் சுருளெடுத்து சிவனுட உத்திரத்தைத்தான் பார்த்து

சிவசிவா இந்த தவசுதீர இன்னும் எக்காலம் செல்லுவதோ
பொன்னர் சங்கர்தான் பிறந்து படைப்போரு
செய்வதெப்போ
வாங்காப் படைபொருதி மன்னவர்கள் மாள்வதெப்போ?
இருவருடன் பிறந்த அந்த ஏந்திழையாள் நல்லதங்கம்
வீரமலை தேடியிந்த வெண்முடிக்கு வாரதெப்போ?

என்று விடியுமோ இனி இந்த தவசுதான் தீர
தவசை மிகக்கூறி தாயார் சன்னியாசந்தானிருக்க
வேங்கை புலித்தோலை விரித்தாளே ஆசனத்தை
ஆசனத்தைத் தான் விரித்துத் தாயார் அதன்மேல் தவசிருக்க
வாகெடுத்து யிளஞ்சடையை தாயார் வகுத்து
பிரித்துவிட்டாள்

விரித்துவிட்ட இளஞ்சடைதான் வெண்முடியுங்
கொள்ளாமல்
பக்கம் விழுந்த சடையது படருதே பாறையெல்லாம்
விழுந்தசடை வேரூன்ற அங்கே படர்ந்தசடை பந்தலிட



சுத்தி விழுந்தசடை அங்கே சிவலிங்கம் பூஜை செய்ய
ஒத்தைச் சடை விழுந்து அது உருளுதே பூமியிலே
நட்டகண்ணும் விட்டசெவி நாலுகையு மிருதோளும்
ஏந்திய கபாலகுண்டம் ஓங்கிய சூலாயுதமும்
தீப தூபம் ஒரு கையிலே பூசைமணி யொருகையிலே

இருந்தாள் தவசிலேதான் தனக்கு ஈடேற்றம் வேணுமென்று
மண்டலங்கள் பூசை கொள்ள வெண்முடியில் மாதவசு
செய்கிறாளே
சிவனைத் தொழுதுமப்போ தாயார் சிவனாரைத் தோத்தரித்து
ஜெயகண்டி தான்முழங்கி தாயார் திருச்சின்னம்தான்
பிடித்தாள்
ஜெயகண்டி சத்தமது வீரமகாமுனி திருச்செவியில் கேட்கு
தப்போ

மகா சுனையில் தவசிருந்த வீர மகாமுனிதான் அந்நேரம்
வீரமலையோட நாம் வெகுநாள் பதிவிருந்து
சிவனார் பிறந்து இந்த தெய்வமலைக்குத் தான் வருவார்
வார கெடுவாச்சுதென்று மகாசுனையில் நானிருந்தேன்
தன்னாச மாகவேதான் தவசிருந்தேன் இக்காலம்

இருந்த தவசுவிட்டு இனி எழுந்திருக்க வேணுமென்று
மந்திரத்தை உச்சரித்து வீரமகாமுனி மாயமாய்த் தான்
வளர்ந்தார்
மண்ணுக்கும் விண்ணுக்கும் மகாமுனி வகையாகத் தான்
வளர்ந்தார்
ஆயி பெரியக்காண்டி முன்னேயடி வணங்கி தெண்டனிட்டு
வணங்கிப் பணிகள் செய்து வணக்கமுடன் சொல்லுகிறான்

சிவனார் பிறந்து இந்தத் தெய்வ மலைக்கு வரவேணும்
வெகுநாள் தவசிருந்தேன் இந்த வீரமலை மேலே
சிவனாக நீர் பிறந்து இந்தத் தெய்வலைக்கு வந்தீரே
என் தவசு தீர்ந்ததம்மா உனக்கடிமை நானாவேன்

மாதாக்கள் வாசலுக்கு நான் வாளெடுத்து நிற்பேனம்மா
(என்று) வணங்கிப் பணிகள் செய்து வணக்கமுடன்
நிற்கையிலே
ஆயி சித்தம் திரும்பியே தான் திருவாக்கு என்ன
சொல்வாள்
மாதவசு முடிதீர்ந்து மண்டலங்கள் பூசையானால்
முந்தினகாவல் முதல்பூசை உன்னதென்றாள்

அந்த மொழிகள் சொல்லி அனுப்பித்துக் கொண்டேதான்
இப்படியாகவேதான் இவரிருக்கும் வேளையிலே
குன்றுடையான் காராளன் குலக்கொழுந்து பொன்னர் சங்கர்
பாரதமும் தோன்றுதம்மா! பாட்டில் இனிச்சொல்லுகிறேன்.





# பொன்னர் சங்கர் பிறந்த கதையின் வரலாறு

## விருத்தம்

சீரான சதுரகிரி வீரமலை மேல்வாழும் தெய்வகன்னி
பெரியக்காண்டி தவசுதீர
பேராருங் குன்றுடையான் பெரும் தவத்தால் வந்துதித்த
பெருமை வாய்ந்த
கூரான குலம்பெரிய நாச்சியர்க்குப் புத்திரருமாயுதித்த
பொன்னர் சங்கர் கவியைப் பாடும்
பாரான பிச்சனுக்கு பரமனருள் தந்து பாருலகில்
எக்காலும் நல்விருந்தாய் இரட்சிப்பாயே.

## விநாயகர் துதி

முந்தி முந்தி வினாயகனே முக்கண் கணபதியே
சக்திக் கணபதியே தையல் நல்லாள் புத்திரனே
வித்தைக் கணபதியே வெண்முடி வினாயகனே
வெண்முடியை நான் தொழுது வீரமலைக் கவி பாடுகிறேன்
ஏட்டிலெழுத்துமல்ல இனியொருவர் சொன்னதல்ல

ஆயி பெரியக்காண்டி அருளால் பொருள் தெரிந்து
பாலன் சிறுகுழந்தை பிச்சன் பாடுகிறேன் இக்கதையை
எல்லார்க்கும் பாலன் எளியேன் நான் பாடினது
பாடினேனிக் கதையை பரமனருட் செயலால்
பாடுகிற பிச்சனுக்கு பரமகதிதான் கொடுத்து
தொல்லைப் பிறப்பை தொலைத்துச் செகந்தனிலே

நல்ல பதவிதந்து நமக்கு இடங் கொடுத்து
என்றுங் கதிபெறவே எனக்குவரந் தாருமம்மா
பரிவாரஞ் சேனையிலே பந்தியிலே நானிருக்க
நல்லவரங்கொடுத்து எமைக் காரும் என் தாயே
ஏழு அரணார் சூரியனார் உலகமெங்கும் நின்றவர்போல்

தருமரினம் ஒருகுடையில் தரணிபதி ஆண்டிருந்து
கலிகள் பிறந்ததினால் கைலாசம் சேர்வோமென்று
பக்தியுடன் ஐவர் பரமகதி வேணுமென்று
புத்தியுடன் வைகுந்தம் போய்ச் சேர்ந்தார் பஞ்சவர்கள்
மாயனுட பதவி வைகுந்தஞ் சேர்ந்தார்கள்

பாருலகில் பொன்னர் சங்கர் பாலன் பிறந்தகதை
பாடுகிறேனிக்கதையைப் பரமருடதன் செயலால்
நாடு செழித்திடுமே நல்ல மழை பெய்திடுமே
பூமி செழித்திடுமே பொன்மாரி பெய்திடுமே
அகங்கள் செழித்திடுமே அனைவருமே வாழ்ந்திருப்பார்

ஈரேழு லோகம் எங்கும் செழித்திருக்க
சிவனும் பெருமாளும் சிந்தை மகிழ்ந்திருக்க
பூலோக மண்டலத்தில் பொன்னர் சங்கர் பிறந்த கதை
பாடுகிறேன்
மண்பறக்கும் மறவர்நெறி வளர்ந்திருக்கும் ஆனபதி
நெல்லி வளநாடு நெற்சூழ்ந்த கோனாடு

சித்தளந்தூரு சிறந்த நெல்லி வளநாடு
வட்டாரம் பதியாளும் வளநாட்டுக் காராளன்
சீராருங்கங்கை குலம் சிவகோத்திரங்குன் றுடையான்
கங்கை குலகோத்திரமாம் காராளவங்கிசத்தில்
வடக்கே வடதேசம் வாளவந்திப் பட்டணத்தில்

துலுக்கான தேசத்திலே அது துடுக்கு பெருத்ததிலே
அந்த நல்ல சீமையிலே ஆண்டுவந்தார் காராளர்
காராளர் பெற்றெடுத்த கண்மணிகள் பன்னிருவர்



ஆலாத்தாக் கவுண்டர் மக்கள் அண்ணன் தம்பி பன்னிருவர்
தோளாத்தாக் கவுண்டர் தம்பி கோடையிடிக் கவுண்டர்
அப்பளாக் கவுண்டர் தொப்புளாக் கவுண்டர்
பச்சத்தாக் கவுண்டர் பவளத்தாக் கவுண்டர்
நாச்சிமுத்துக் கவுண்டர் நல்லதம்பி கவுண்டர்

ஆலாத்தாக் கவுண்டர் தோலாத்தாக் கவுண்டர்
சப்பாணிக் கவுண்டர் ராமசாமி கவுண்டர்
இப்படியாய்ப் பன்னிருவர் இருக்குமந்தநாளையிலே
தோளாத்தாக் கவுண்டருக்கு கல்யாணம் செய்துவைத்து
பவளாத்தா கவுண்டச்சியைப் பார்த்து மணமுடித்து

மற்ற பதினோரு பேருக்கும் பாங்காய் மணமுடித்து
குடும்பம் நடத்தி குணமாய் இருக்கையிலே
இப்படியாக இவர்கள் இருக்குமந்த நாளையிலே
தம்பிமார் அண்ணனுக்கு சதி – சூது செய்தார்கள்
எந்தவிதத்திலும் நாம் அண்ணனுக்கு இடர்செய்ய
வேணுமென்று

சூது நினைத்ததை அண்ணன் சூதகமாய்த் தானறிந்து
நாமிங்கே இருந்தோமானால் எவ்விதமும் சூது செய்வார்
வேறு தேசம் போவோமென்று புறப்பட்டாரிவர்களும்
மன்னனும் மனைவியரும் வந்தார்கள் ஊரைவிட்டு
அவர்கள் வருகையிலே ஆனதொரு தோட்டியுமே

கூடப் புறப்பட்டானே குணமான தோட்டியுமே
வடதேசம் விட்டு அவர்கள் தென்தேசம் வந்தார்கள்
தொட்டியத்துறை வழியாய் வந்தார்களப்போது
காவேரியாறு கரைகடந்து வருகையிலே
மதுக்கரையில் செல்லியம்மன் மண்டபத்தைக் கண்டார்கள்

மண்ணைப் பகிர்ந்தெடுத்த மதுக்கரை அம்மனையும்
தெரிசிக்க வேணுமென்று சென்றார்கள் கோவிலிலே
கோவிலிலே சென்று அம்மனைக் கும்பிட்டு வருகையிலே

இப்படியாகத்தான் இவர்கள் இருக்கையிலே
சோழனுக்கும் சேரனுக்கும் சொர்ணமுடிப் பாண்டியர்க்கும்
பாகத் தகராறு பங்கு பிரிப்பதிலே
மூவர் ராஜாக்களுக்கும் மூண்டதுவே சண்டையது
அப்போது ராஜாக்கள் அன்புடனே ஏது செய்தார்

மதுக்கரை செல்லாயி மாகாளி கோவிலிலே
மூன்று மாதகாலமும் தொண்ணூறு நாளாக
அன்னமொடு தண்ணீரும் ஆகாரம் இல்லாமல்
ஒருவர்க்கொருவர் முகம்வாடி இருக்கையிலே
அந்த நல்லவேளையிலே அங்கே வந்தார் கவுண்டருமே

வந்ததுமே கண்டாரே வரிசையுடன் ராஜர்களை
எந்தவூர் ராஜாவோ எனக்கறியச் சொல்லுமென்றார்
முகவாட்டமாயிருக்கும் மூவர்களும் சொல்லுகின்றார்
இந்த நல்ல தேசத்தையாளுகின்ற ராஜாக்கள்
மூவரும் அண்ணன் தம்பி முடிமன்னர் ராஜாக்கள்

பாகத்தகராறு பங்கு பிரிவதிலே
ஒருவருக் கொருவர் ஒற்றுமையு மில்லாமல்
இருக்கிறோ மென்று சொன்னார் இயல் பெரிய ராஜாக்கள்
என்று சொல்லி ராஜாக்கள் இருக்குமந்த வேளையிலே
கோலாத்தாக் கவுண்டர் குணமாக ஏது செய்தார்

நம் காராள வமிசத்தில் கபடு தெரியாது
வேளாள வமிசத்தில் விபரம் தெரியாது
இந்த ராஜருட பசியை நாம் தீர்க்க வேணுமென்று
பக்கத்திலே இருக்கும் மாயனூர் தானுஞ்சென்று
பெரியதொரு பண்ணையிலே போய்க் கேட்டார் பாலுமது

அந்த நல்ல பண்ணையிலே அநேகமாடு பால்கறக்கும்
அதிலேயொருமாடு பால்கறக்க நிற்பதில்லை
அந்த மாட்டைப் பிடித்துப் பால்கறக்கச் சொன்னாரே
அப்படியே நல்லதென்று ஆனதொரு கவுண்டருமே
பாற்கலயம் கையிலெடுத்து பால்கறக்கப் போகையிலே



கவுண்டரைக் கண்டவுடன் மாடு கால்தூக்கி நின்றிடுதே
பால்கறந்து கவுண்டர் பணிவோடு கொண்டுவந்தார்
மதுக்கரை அம்மன் மாகாளி கோவிலிலே
ராஜாக்கள் மூவருக்கும் பால்கொடுத்தாரப்போது
பாலை மிக அருந்தி ராஜா பசியாறி அப்போது

களை தெளிந்துமே ராஜா கவுண்டரையும் தான்பார்த்து
நீர் எந்த ஊர் எந்த தேசம் இங்கேவந்த காரியமேன்
ஊம் ஊரேது பேரேது உள்ளபடி சொல்லுமென்றார்
அந்த மொழிகேட்டு கவுண்டர் அவர்களுக்குச்
சொல்லுகின்றார்

நான் வடக்கே வடதேசம் வளமான தேசமையா

என்கூடப் பிறந்தார்கள் கொடியதொரு தம்பியர்கள்
பதினொரு பேர்களுமே பாதகமும் செய்தார்கள்
அவர்களுக்கு என் பங்கை விட்டுவிட்டு
நான் மன்னனும் மனைவியுமாய் வந்தோமே இத்தேசம்
இங்கேயும் வந்து ஈஸ்வரியை நமஸ்கரித்தோம்

இந்த நல்ல வேளையிலே உங்களையும் கண்டேனான்
உங்கள் முகக்குறிப்பு என்னை முகமலரச் செய்யுதையா
என்று கவுண்டர் சொல்ல ஏதுசொல்வார் ராஜாக்கள்
நாங்கள் பாகம் பிரிப்பதிலே தகராறுதானும் வந்து
இப்படி நாங்கள் இருக்கிறோம் இவ்விடத்தில்
நீங்கள் பசியைத் தணித்தீர் பாகம்பிரித்து வையும்

## கோலாத்தாக் கவுண்டர் சோழ ராஜனுக்கு பாகம் பிரித்தல்

என்றுமே ராஜர் சொல்ல ஏதுசொல்வார் கவுண்டருமே
மூவர் ராஜாக்களுட பேர்களையும் சொல்லுமென்றார்
மேற் குமுகமாய் இருக்கும் ராஜாவும் சொல்லுகிறார்
என்பேரு சேரன் என்றுமே சொன்னாரே
சேரனுக்கு மேல்தேசம் சொந்தமென்றார் கவுண்டருமே

கிழக்குமுகமாய் இருக்கும் ராஜாவும் சொல்லுகிறார்
என்பேரு சோழராஜன் என்றுமே சொன்னாரே
அப்போது கவுண்டருமே அன்புடனே சொல்லுகிறார்
கீழ் தேசம் உங்களுக்கு கீர்த்தியுள்ள மன்னவரே
என்றுமே சொன்னாரே இயல்பெரிய கவுண்டருமே

நடுமுகமாய்த்தான் இருக்கும் ராஜாவைத் தான்பார்த்து
உங்களுடபேரு உத்தமரே சொல்லுமென்றார்
அப்போது ராஜர் அன்புடனே சொல்லலுற்றார்
என்பேரு பாண்டி ராஜன் என்றாரே அப்போது
பார்த்தார் கவுண்டருமே பாண்டிய ராஜனுக்கு

நடுத்தேசம் பூராவும் நலமுடனே கொடுத்திடுவோம்
என்று பாகம் பிரித்தாரே பாங்கான கவுண்டருமே
அப்போது ராஜா அன்புடனே ஏதுசொல்வார்
வாருமையா கவுண்டரே வகையுடனே எங்களுக்கு
பாகம் பிரித்துமேதான் பாங்காய் கொடுத்ததற்கு

என்ன வெகுமதிகள் ஈந்திடுவோம் உங்களுக்கு
தீராத ஞாயம் எங்களுக்கு தீர்த்துக்கொடுத்ததற்கு
எங்களுட தேசத்திலே நீர் இருந்து அரசாளவேண்டும்
என்றுமே ராஜாக்கள் இன்பமுடன் தானுமப்போ
கல்லாண்டாங்காடு கரு நொச்சித் தோட்டமது

எழுபது வள்ளம் பூமி இனாமாய்க் கொடுத்தார்கள்
வடக்கிருந்து வந்ததினால் வளநாட்டார் என்று சொல்லி
கங்கை குலகோத்திரமும் காராள வங்கிசமாய்
வட்டாரம் பதியாளும் வளநாடு கோட்டையென்று
கோட்டைக்குப் பேருவைத்து குணமுடனே இருக்கையிலே

மணியம் கணக்குகளும் மன்னவரும் தான்கொடுத்தார்
மூவர் ராஜாக்களும் முடிவேந்தர் மன்னர்களும்
அவரவர் தேசத்தை ஆண்டே இருக்கையிலே
இப்படியாக இருக்குமந்த நாளையிலே
கோலாத்தாக் கவுண்டர் மனைவி பவளாத்தாக் கவுண்டச்சியும்



சோளந்தோட்டியும் அவனுடைய மனைவியுமாய்
காடு பயிர்செய்து காரியமுந் தான் பார்த்து
இப்படியாய் இவர்கள் இருக்குமந்த நாளையிலே

## மதுக்கரை செல்லியம்மனுக்கு அபிஷேகம் செய்தல்

மதுக்கரை செல்லி அம்மன் வளர் பெரிய தாயார்க்கு
தேனிலபிஷேகம் செய்து முடித்துவைத்து
பாலிலபிஷேகம் பார்த்து முடித்து வைத்தார்
கோலாத்தாக் கவுண்டருக்கு குழந்தையுமே இல்லாமல்
அநேக தருமங்கள் அவர்களுமே செய்தார்கள்

பூசையில்லாக் கோவிலெல்லாம் பூசை நடத்திவைத்தார்
நந்தவனம் வைத்து நல் அரளித் தோட்டம் வைத்தார்
பூங்காவனம் வைத்தார் புதுக்கிணறு வெட்டிவைத்தார்
என்ன தருமம் செய்தும் இவர்களுக்குப் பிள்ளையில்லை
வீரமலைத் தென்கிழக்கில் வெள்ளாங்குளமுமது

வெள்ளாங்குளமுங்கட்டி வினாயகரும் வைப்பமென்று
ஊரிலுள்ள சனங்களையும் உடனே அழையுமென்றார்
சோளந்தோட்டி அப்போது துரிதமாய் ஓடிவந்து
ஊரிலுள்ள சனங்களையும் ஒரு நொடியில் தானழைத்தான்
வாருமையா நாட்டுமக்காள் நம்மவள நாட்டுக்
கவுண்டருமே

வெள்ளாங்குளமுங் கட்டி அதில் வெண்கல மதகுகட்டி
வினாயகருக்கு கோவில்கட்ட வெகுசனங்கள்
வேண்டுமிப்போ
என்று வளநாட்டுக் கவுண்டர் வரவழைத்தார் உங்களையும்
என்றுமே தோட்டி சொல்ல ஏது சொல்வார் நாட்டுமக்கள்
அப்படியானால் நாங்கள் அனைவருமே வாரோமென்று

கொட்டுக்கூடை கையிலெடுத்து தான்வந்தார் மக்களெல்லாம்
ஓட்டுக்கூடை கையிலெடுத்து ஓடிவந்தார் சனங்களெல்லாம்
வரிசையாய் வந்துமப்போ வணங்கி நின்றார் கவுண்டரையே

நல்ல நாள்பார்த்து நாள்முகூர்த்தம் செய்வோமென்று
வெள்ளிக்கிழமை விடிய ஐந்து நாழிகைக்கு
முகூர்த்தக் கால்போட்டு கவுண்டச்சி மூணுகூடை
மண்போட்டாள்
ஊருச் சனங்களெல்லாம் உடனே மண்போட்டார்கள்
ஏரி நிரப்பியே எடுத்துமே போட்டார்கள்

வெள்ளாங் குளத்தேரி விதமாகத் தானுங்கட்டி
வெண்கல மதகு விதமாகத் தானும்வைத்து
உள்குமிழி புற குமிழி எல்லாம் முடித்துவைத்தார்
வினாயகர் கோவிலுமே விதமாகக் கட்டவென்று
சோளந்தோட்டி தன்னையுமே துரிதாகத் தானழைத்து

உறையூருப் பட்டணத்தில் ஓடியே நீ போயி
சிற்பிகளைத்தானழைத்து சீக்கிரமாய் வாருமென்றார்
சிற்பிகளைக்கூட்டி தோட்டி சீக்கிரமாய்த் தானும்வந்தான்
வந்ததொரு சிற்பியுமே கவுண்டரை வணங்கிப்
பணிந்துநின்று
எங்களை அழைத்ததுதான் ஏதுவகை சொல்லுமையா

என்றுமே கேட்க ஏது சொல்வார் கவுண்டருமே
வினாயகர் கோவில்கட்ட விதமுடனே நானழைத்தேன்
அப்படியேயானால் அடியேங்கள் செய்கின்றோம்
என்று வேலை துவங்கினார்கள் விதமாக சிற்பிகளும்
வினாயகர் மண்டபமும் வேணதெல்லாம் தான்முடித்து

வைத்தார்கள் சிற்பிகளும் வகையாக அப்போது
சிற்பிமார் தங்களுக்கு செலவுக்கும் பொன்கொடுத்து
அனுப்பிவிட்டே கவுண்டர் அப்போது ஏது செய்தார்
வினாயகர் பூசை செய்ய விதமுடனே ஐயரையும்
அழைத்துவரச் சொல்லி அனுப்பிவைத்தார் தோட்டியையும்

தோட்டியும் சென்று துரிதாயழைத்து வந்தான்
ஐயரும் வந்து கவுண்டரை அன்புடனேதான் கேட்க



என்னை அழைத்ததென்ன என்றாரே ஐயருமே
வினாயகர் பூசைசெய்ய விதமுடனே நானழைத்தேன்
வெள்ளாங் குளத்து வினாயகர் பூசை செய்ய
மானியமும் தான் கொடுத்து வைக்கிறேன் உங்களுக்கு
நித்தியம் பூசை நீங்கள் செய்துவாருமென்று

ஐயருக்குச் சொல்லி அனுப்பிவிட்டு கவுண்டருமே
சோளந் தோட்டியுடன் துரிதமாக ஊருவந்தார்
இந்தப்படியாக இவர்களிருக்கையிலே

## அண்ணனைத் தேடி தம்பிமார் வருதல்

தம்பி பதினொருபேர் தானுமங்கே ஏதுசெய்தார்
அண்ணன்சென்ற நாள்முதலாய் ஆனமழையுமில்லை
பஞ்சம்மிகவாகி பரதேசி போலானார்
மழைமாரி இல்லாமல் மக்கள் முகம் தான்வாடி
குடிக்கக் கஞ்சி இல்லாமல் குழந்தைமுகம் தான்வாடி

வாடி வதங்கி வாழ வழியில்லாமல்
எத்தனை நாளைக்குத்தான் இந்தப்பிழைப்பு என்று
இந்த தேசம் விட்டுவிட்டு நாம் வேறுதேசம்
போவோமென்று
குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு கூடைச்சுமை தான் தூக்கி
ஊரைவிட்டுக் காதம் ஓடிவருகிறார்கள்

காடுமலை கடந்து கடுகி வழிவாரார்கள்
நாடு கடந்து நல்லபதி தான்கடந்து
தொட்டியத்துறை வழியாய் துரிதமாய் வந்தார்கள்
காவேரி ஆற்றுக்கரை ஓரம் வந்துநின்று
இந்தநல்ல ஆற்றை எப்படிக் கடப்போமென்று

எண்ணி நினைத்தேதான் இருக்குமந்த வேளையிலே
வளநாடு கோட்டையிலே வாழுகின்ற கவுண்டருமே
மணியம் கணக்கு வகையாகத் தான்பார்த்து

ஆறிலொரு கடமை குடிகளிடம் அன்பாகத் தான்வாங்கி
நீதி தவறாமல் நெல்லி வளநாட்டில்
ஆண்டு வருகையிலே அவர்களுக்குப் பிள்ளையில்லை
ஆகையினாலே அவர் ஏது செய்வாராம்
சோளந் தோட்டிதன்னையுமே துரிதாகத் தானழைத்து

வாருமப்பா தோட்டி ஒருவார்த்தை சொல்ல நீ கேளு
நாம் என்னதான் செய்தாலும் நமக்கு ஈடேற்றம் இல்லையிங்கே

நம் நாட்டு மக்களையே நலமாகத் தானழைத்து
மதுக்கரை செல்லாயி மாகாளியம்மனுக்கு
முன் மண்டபம் கட்டி முறையாகப் பூஜைசெய்து

நம் அரண்மனையில் எல்லோர்க்கும் ஆன விருந்துசெய்து
வைக்கவே வேண்டுமென்று கவுண்டர் வார்த்தையது சொல்லையிலே

அந்த மொழிகேட்டு அவனுமங்கே ஓடிவந்து
வளநாட்டுச் சனங்களையும் வரவழைத்தானப்போது
நாட்டுமக்களெல்லாம் நலமாகக் கூட்டமிட்டு

கோலாத்தாக் கவுண்டர் நம்மை கூட்டிவரச் சொன்னாராம்
ஆகையினாலே நாம் அனைவருமே போகவேண்டும்
நாட்டு மக்களெல்லாம் நலமுடனே வந்தார்கள்
கோலாத்தாக் கவுண்டர் குணமுடனே அப்போது
வாருங்களென்று வரவழைத்துக் கொண்டேதான்

மதுக்கரை அம்மனுட வாசலுக்கு வந்தார்கள்
வந்து அனைவருமே மண்டபமும் கட்டவென்று
வெள்ளிக்கிழமையிலே வேலை துவங்கினார்கள்
மண்டபத்து வேலை வெகுதுரிதாய்த் தானாச்சு
ஊருச் சனங்களெல்லாம் உத்தமர் முன்னாலே

வேலை முடிந்துவந்து விபரத்தைச் சொன்னார்கள்
அப்போது கவுண்டர் அன்புடனே தானும்வந்து



கும்பாபிஷேகமும் குணமுடனே தானுஞ்செய்து
ஊருச் சனங்களையும் உத்தமர்தான் கூட்டிவந்து
அரண்மனையில் விருந்து செய்தே அன்னதானம் கொடுக்க
மையாரு பூசை வகையாகத் தான் கொடுக்க
சாதம் சமைக்க ஆள் தானனுப்பி வைத்தாரே

இப்படியாக இருக்குமந்த வேளையிலே
பதினோரு வீட்டுப் பங்காளி எல்லோரும்
காவேரி ஆற்றின் கரையோரம் வந்திறங்கி
ஆலமரத்தடியில் ஆலோசனைகள் செய்து
இந்த நல்ல ஆற்றை எப்படிக் கடப்போமென்று

யோசனைகள் செய்து இருக்குமந்த வேளையிலே
பரிசல் நல்லதம்பி பரிசிலை ஓட்டியேதான்
பரிசலைத் தள்ளிப் பாங்காய் வருகையிலே
பரிசலைக் கண்டார்கள் பங்காளி பதினோருபேர்
வாருமப்பா பரிசல்காரா வகையாக எங்களையும்

பரிசலில் ஏற்றியே பாங்குடனே அக்கரையில்
அக்கரை சேர்த்துமென்று அனைவருமே சொல்லையிலே
பரிசல்கார நல்லதம்பி பரிசல் கூலி கேட்டானே
குடியைக் கெடுத்த கூழைநாச்சிக் கவுண்டருமே
அக்கரையேவந்து நாங்கள் அதிகக்கூலி தாரோமென்றார்

நல்லதென்று பரிசல்காரன் நடத்தினான் பரிசலதை
அக்கரைசேர்த்து அனைவரும் என்ன செய்தார்
சாமான்களையிறக்கும் சடுதியில் வாரனென்று
கூழைநாச்சிக் கவுண்டர் கோளாறாய்த்தான் முன்நடக்க
ஒருவர்பின் ஒருவராக ஒன்றாய் நழுவிவிட்டார்

பிள்ளைகளை விட்டுவிட்டு போனபிறகாக
பிள்ளைகளெல்லாம் பெரியசத்தம் போட்டனவே
பரிசல்காரன் பார்த்து பாங்குடனே ஏதுசொல்வான்
நீங்கள் எந்தவூர் எந்ததேசம் எங்கிருந்து வந்தவர்கள்

உங்கள் ஊருகளும் பேருகளும் உள்ளபடி
சொல்லுமென்றான்

அப்போது பிள்ளைகளும் அன்புடனே சொல்லுகிறார்
வடக்கே வடதேசம் வாளவந்திபட்டணமாம்
எங்கள் தகப்பன்மார்கள் ஈராறு பேர்களென்றார்
எங்கள் பெரியப்பன் எல்லார்க்கும் மூத்தவர்தான்

மணியம் கணக்கு அவர் வகையாகப் பார்த்துவந்தார்
எங்கள் தகப்பன் பதினோருபேர் எல்லாருந்தான் சேர்ந்து
சூது நினைத்து அவருக்கு தொல்லை கொடுத்தார்கள்
மண்குழி தோண்டி அதிலேதான் மடித்துவிட வேணுமென்று
எண்ணி நினைத்தார்கள் எங்களுட தகப்பன்மார்

இந்த விஷயம் எப்படியோ அவருக்குத் தான்தெரிந்து
இரவோடு இரவாக எங்கேயோ போய்விட்டார்
அவர்போன பிறகு அங்கே ஆனமழையுமில்லை
குடிக்கக் கஞ்சியில்லாமல் நாங்கள் கூப்பாடுதான் போட்டு
வாழவழி யில்லாமல் வந்தோம் வெகுதூரம்

பஞ்சம் பிழைக்கவேதான் பரதேசிபோல வந்தோம்
கையிலே காசு இல்லை கரைவந்து சேர்ந்துவிட்டோம்!
ஒருவர்க்கொருவர் ஒன்றும் சொல்லாமல் சென்றுவிட்டார்
என்று பசங்கள் சொல்ல ஏது சொல்வான் பரிசல்காரன்
உங்கள் பெரியப்பன் ஊரைவிட்டு போனாரென்று

சொன்னீரே இப்போது அவர் சொந்தப்பேர்
சொல்லுமென்றான்
என்றுமே கேட்க ஏதுசொல்வார் பிள்ளைகளும்
பெரியப்பன் கோலாத்தாக் கவுண்டர் மனைவி பவளாத்தா
கவுண்டச்சி
அந்த மொழி கேட்டு பரிசல்காரன் அப்போ மனங்குளிர்ந்து
அவர் கோவிலில் மண்டபங்கட்டி கும்பாபிஷேகம் செய்து
மையாரு பூசை வகையாகத் தான்கொடுக்க



ஊருச் சனங்களுக்கும் உண்டான பேர்களுக்கும்
சாப்பாடு போசனமும் தானேபடைக்கிறார்கள்
நாங்களும் போகிறோம் நலமாக இப்போது
அந்த மொழிகள் சொல்ல அப்போது பையன்கள்
சந்தோசமாகவுமே தானே புறப்பட்டார்கள்

பதினோருபேரும் பாங்குடனே இப்போது
நாணல்குட்டு மேட்டினிலே நலமாய் ஒளிந்திருக்க
அந்த சத்தம்கேட்டு அங்கே வந்தாரப்போது
வளநாடு கோட்டைக்கு வழிகூட்டிப் போங்களென்றார்
அப்போது பரிசல்காரன் நாங்கள் அங்கே தான்
போகின்றோம்

வாங்களென்று சொல்லி வழிகூட்டி வந்தானே
வளநாட்டு கோட்டையிலே வாரசனத்துக்கெல்லாம்
சாப்பாடு போஜனமும் தானடக்கும் வேளையிலே
பதினோரு பங்காளிகள் பாங்குடனே வந்தார்கள்
வந்துமே கண்டார்கள் வரிசையுடனப்போது

கூழை நாச்சிக் கவுண்டர் கோளாறு சொல்லுகிறார்
நாம் ஒரு பக்கமாக உட்காரக் கூடாது
அப்படியே நல்லதென்று ஆளுக்கொரு பந்தியிலே
முக்காடுபோட்டு முகத்தை மறைத்துக் கொண்டு
உட்கார்ந்தார் எல்லோரும் ஒவ்வொருவராய்த்தானே

இலையில் பரிமாறி இருக்கின்ற வேளையிலே
மடிச்சாதம் தானெடுத்து வாரார் கவுண்டச்சியும்
முக்காடிட்ட கூழைநாச்சி கவுண்டர் முன்னாக வந்தார்கள்
இத்தனை கூட்டத்தில் ஏன் போட்டாய் முக்காடு
என்றுமே கேட்டாரே இயல்பெரிய கவுண்டருமே

முக்காடு தானெடுத்து முகத்தையும் பார்க்கையிலே
தம்பியைக் கண்டாரே தார்வேந்தர் அண்ணனுமே
ஏனப்பா இக்கோலம் என்றுமே தான்கேட்டார்

அப்போது தம்பி அவருக்கெடுத்துரைப்பார்
நீங்கள் ஊரைவிட்டு வந்துவிட எங்களுக்கு உறக்கம்
வரவில்லை

பிள்ளைகளெல்லாம் பெரியப்பனென்று சொல்லி
கூப்பாடு போட்டுக் கூவி அழுததினால்
தேடியலைந்து திரிந்துவந்தோம் அண்ணாவே

பசியா யிருந்ததினால் பந்தியிலே உட்கார்ந்தோம்
என்றுமே தம்பி சொல்ல ஏது சொல்வார் அண்ணனுமே
மற்ற நல்ல தம்பிகளும் மனைவிகளும் எங்கேயப்பா
என்றுமே கேட்க ஏது சொல்வார் நாச்சிமுத்து
பந்திக்கொருவராக பசித்துள்ளார் என்று சொன்னார்

சாப்பிட்டு வாருமென்று சந்தோசமாய்ச் சொல்லியேதான்
சாப்பிட்ட சனங்களுக்கு தாம்பூலந் தான்கொடுத்து
அவரவர் ஊருக்கு அனுப்பிவிட்டார் கவுண்டருமே
எல்லாரும் போனபின்பு ஏது சொல்வாரப்போது
வாருமப்பா தம்பிகளே வரிசையுடனே நீங்களுந்தான்

பண்ணையத்து வேலைகளைப் பார்த்து இருங்களென்றார்
இப்படிச் சிலகாலம் இருந்தார்கள் தம்பியர்கள்
கோலாத்தாக் கவுண்டர் யோசனைகள் தானுஞ்செய்து
வாருமப்பா சோளந்தோட்டி வார்த்தை சொல்ல நீ கேளு
நம்முடைய தம்பியர்கள் நலமாக இங்கே வந்து

அனேக நாளாச்சுது அவர்களையும் தானுமிப்போ
பாய்ச்சலூர் ஏரியிலே பதினோரு பேருக்கும்தான்
ஆளுக்கொரு ஏர் பண்ணையம் அவர்களுக்குத்
தான்கொடுத்து

ஆளுக்கொரு வீடு அங்கே கட்டி நாம்கொடுத்து
தனியாய்க் குடித்தனமும் தான்வைக்க வேண்டுமென்று

சோளந் தோட்டியிடம் சொன்னாரே அப்போது
அப்போது சோளந் தோட்டி அப்படியே நல்லதென்று



பாய்ச்சலூர் கிராமத்தில் பதினோரு வீடுகட்டி
பாய்ச்சலூர் ஏரியிலே பதினோரு ஏக்கருந்தான்
பிரித்துக் கொடுத்தார்கள் பிரியமுடன் அப்போது
தம்பியர்கள் தானும் தம் மனைவி பிள்ளையுடன்
குடித்தனம் செய்து கூடியிருந்தார்கள்
இப்படியாக இவர்களிருக்கையிலே

## குன்றுடையார் பிறப்பு

வளநாட்டுக் கோட்டையிலே வாழுகின்ற நாளையிலே
ஆதி சிவனருளால் அம்மன் கிருபையினால்
பவளாத்தாக் கவுண்டச்சிக்கு பாலன் வரம் கொடுக்க
மனதிலே தானினைத்தாள் மதுக்கரைச் செல்லாயி
மூன்றுமாதம் கவுண்டச்சி முழுகாமல் தானிருந்தாள்

கோலாத்தாக் கவுண்டருக்கு குளிர்ந்த முகம் தானாகி
சந்தோசமாகித் தானுமங்கே ஏது சொல்வார்
வாருமப்பா சோளந்தோட்டி வார்த்தைசொல்ல கேளுமினி
நம்முடைய மனைவிக்கு நலமாக இப்போது
சுவாமி கிருபையினால் கர்ப்பமது தானாச்சு

நாளும் பொழுதும் நன்றாகத்தானாச்சு
பத்துமாதம் சென்று பாவை புலம்புகிறாள்
கருப்பத்தூர் சென்று கவுண்டச்சிமார்களையும்
அழைத்துமே வாருமென்று அனுப்பிவைத்தார்
தோட்டியையே

சோளந் தோட்டி அப்போது துரிதமுடன் ஓடியேதான்

கருப்பத்தூர் தேடி கடுகி வழிநடந்து
பங்காளி கவுண்டச்சியை பார்த்தே அழைத்தானே
அழைத்த சத்தம் கேட்டு அனைவரும் கூடியேதான்
என்ன சமாச்சாரம் என்றுமே கேட்டார்கள்
அப்போது தோட்டி அன்புடனே சொல்லுகிறான்

வளநாடு கோட்டையிலே வாழ்கின்ற கவுண்டச்சிக்கு
பிரசவ வேதனையாம் அழைத்து வரச்சொன்னார்கள்
என்றுமே தோட்டி சொல்ல ஏதுசொல்வார் கவுண்டச்சிகள்
வாருமடி அக்காமாரே நாம் வளநாடு போவோமென்று
எல்லோரும் கூடி எழுந்து நடந்தார்கள்

வளநாடு தான்தேடி வந்தார்களப்போது
பத்துமாதம் சென்று பவளாயி பரிதவிக்கும் வேளையிலே
அப்போது கவுண்டச்சிகள் அனைவருமே தானும் வந்து
சுக்கு நுணுக்கியேதான் சூரணம் செய்தார்கள்
மிளகு அரைத்தார்கள் வென்னீரும் வைத்தார்கள்

சுக்குப்பொடி கொடுக்க சுகப்பிரசவம் ஆனதுமே
பூமியைப் பார்த்துப் பிறந்ததுவே குழந்தை
குழந்தையை எடுத்து குளித்து அவள் கையில் கொடுத்து
கவுண்டச்சிமார்களெல்லாம் கடுகி நடந்தார்கள்
ஆண் குழந்தை பிறந்ததினால் அதிக சந்தோசமாகி

வந்த சனங்களுக்கு வாரிச் செலவழித்தார்
பாக்கோடு வெற்றிலையும் பழவகையும் தான்கொடுத்து
அனுப்பியேவைத்தார்கள் ஆனதொரு கவுண்டருமே
இப்படியாக இருக்குமந்த வேளையிலே
குழந்தைக்குப் பேருவைக்க குணமுடனே அப்போது

சோளந் தோட்டியை துரிதமாய்த் தானழைத்து
சோமாசி ஐயரையும் துரிதமாயழையுமென்றார்
என்றுமே கவுண்டர் சொல்ல ஏகி வழி நடந்து
சோமாசி ஐயரையும் துரிதமாய்க் கூட்டிவந்தான்
ஐயரும் வந்து அருகில்வந்து தான்பார்த்து

நாள் நட்சத்திரம் பார்த்து நல்ல முகூர்த்தத்திலே
புண்ணிய அர்ச்சனையும் புகழுடனே தானும் செய்து
குன்றுடையானென்று குறிப்பாகப் பேரு வைத்தார்
இப்படியாக இருக்குமந்த நாளையிலே



மூன்று வயதும் முடிந்ததாம் அப்போது
அம்மா அப்பா என்று குழந்தைக்கு அழைக்கத் தெரியாது
ஐந்து வயதுமே ஆச்சுது குழந்தைக்குமே
குழந்தையைப் பார்த்தார் கோலாத்தாக் கவுண்டருமே
ஊமை செவிடு இது ஊத சங்குமென்று

மனது மிகநொந்து வருத்தமுடன் தானிருக்க
மணியம் கணக்குகளை வகையுடனே அப்போது
சோழ மகாராஜரிடம் சேர்த்திடுவோம் என்றெண்ணி
உறையூரு சென்று ராஜரிடம் உள்ளபடி சொல்லுகிறார்
வாருமையா ராஜாவே எனக்கு வயதுகளுமானதினால்

மணியம் கணக்குப் பார்க்க மாளாது என்னாலே
எனக்குப் பிறகு என்னுடைய பிள்ளையுந்தான்
மணியம் கணக்குப் பார்க்க மைந்தன் பிறக்கவில்லை
ஊமை செவிடுமது ஊதாத சங்குமது
என் வமிசத்தார் வந்தால் மணியம் கொடுங்களென்று

சொல்லியே ராஜரிடம் துரிதமாய் நடந்தாரே
வளநாடு கோட்டைக்கேவந்து கவுண்டருமே
இருக்குமந்த நாளையிலே எமனுமே தூதனுப்பி
கோலாத்தாக் கவுண்டனுயிர் கொண்டுமே சென்றாரே
ஊருசனங்கள் உத்தமர்கள் தாம்கூடி

செய்யும் சடங்குகளும் செய்தார்களப்போது
பவளாத்தா கவுண்டச்சி பார்த்து மிக அழுது
அழுது புலம்பி அவளிருக்கும் வேளையிலே
சோளந் தோட்டியை துரிதமாகத் தானழைத்து
வாருமப்பா தோட்டி வார்த்தை சொல்ல நீ கேளு

என் பிறந்தான் வீட்டில் இருக்கிற பெண்ணையுந்தான்
என்னுடைய மகனுக்கு நீ இருந்து கல்யாணம்
செய்து முடித்து சிறப்பாய் நடத்திவையும்

என்னுடைய பிள்ளையிவன் இனி உன்னுடைய
பிள்ளையென்று
தாயாரும் சொல்லித்தானும் உயிர் பிரிந்தாள்
கவுண்டச்சி மடிந்தவுடன் சனங்களெல்லாம் தான்கூட்டி
எடுத்து அடக்கம் செய்து இருக்குமந்த வேளையிலே
தாயார் இறந்துவிட குன்றுடையான் தானுமங்கே
ஏதுசெய்வான்

சாப்பாடு இல்லாமல் தவித்திருக்கும் வேளையிலே
பாய்ச்சலூர் சென்று பங்காளி வீட்டிலேதான்
ஆட்டுக்குட்டி மேய்த்தால் அரைவயிறு கஞ்சியது
வீட்டுக்கொருநாள் முறை வைத்து ஊற்றினார்கள்
இறுங்கு சோளம் எடுத்து இடிக்கச் சொல்லி வைப்பார்கள்

அதையும் இடித்தாலே அரைவயிறு கஞ்சியுந்தான்
இப்படியாகவேதான் இருந்தான் சிலகாலம்
குடியைக் கெடுத்த கூழை நாச்சிக் கவுண்டருமே
குன்றுடையான் தன்னைக் குழியிலே போட்டுவிட்டால்
அவனுடைய பங்கையெல்லாம் அபகரித்துக்
கொள்வமென்று

யோசனைகள் சொன்னாரே சொந்த நல்ல தம்பியிடம்
தம்பிமார்களெல்லாம் தானுமங்கே ஏதுசொல்வார்
அப்படியே செய்வோமென்று அனைவரும் கூடியேதான்
எண்ணி நினைத்து இருக்குமந்த வேளையிலே
பங்காளிப் பிள்ளைகள் பார்த்தார்களப்போது

பெரியப்பன் மகனையுமே பிழை மோசம் செய்வார்கள்
நாம் அவனிடத்தில் சொல்லி அனுப்புவோம் வேறு இடம்
என்று நினைத்து பிள்ளைகள் இருந்தார்கள் அப்போது
காலையில் சோளம்குத்தி கஞ்சி குடித்துவிட்டு
ஆட்டுக்குட்டி மேய்க்க அவன்வரும் வேளையிலே



பங்காளிப் பிள்ளைகள் பாங்குடனே பக்கம்வந்து
வாருமடா அண்ணாவே வகைமோசம் செய்ய எண்ணி
குழியுமது வெட்டி குழியிலே தள்ளி உன்னை
கொன்றுவிட நினைத்தார் குன்றுடையான் உன்னையுந்தான்
ஆகையினாலே அதுசேதி உந்தனுக்கு

சொல்லுகிறோம் அண்ணா நீ ஓடிப் பிழையுமென்றார்கள்
அந்த மொழிகேட்டு குன்றுடையான் அப்போ மனங்கலங்கி
கொப்பி கட்டும்கவை எடுத்து கோளாறாய்த் தானடந்து
நாடுகடந்து நல்ல பதிகடந்து
காடுகடந்து கடுகிவழி வாரானே

மணியம் குறிச்சி மலைக்கொழுந்தார் வீட்டுக்கு
மாமனுடைய வீட்டுக்கு வந்தானே குன்றுடையான்
அத்தையும் தான்பார்த்து அவளுமங்கே ஏதுசொல்வாள்
சாப்பிடவே வாருமென்று சந்தோஷமாயழைக்க
சாப்பாடு என்று சொல்ல குன்றுடையான்
சந்தோஷமாகியேதான்

வந்துமே உட்கார்ந்தான் மசச்சாமி காராளன்
வாழையிலை போட்டு வட்டித்தார் சாதம் கறி
சாப்பிட்டு இளைப்பாறி சந்தோஷமாகியேதான்
இருக்கின்றவேளையிலே இவனுடைய மாமனுந்தான்
ஆட்டுக்கார கருஞ்சியன் அவனையழைத்துமேதான்

நம்முடைய அக்காள் மகன் நல்லதொரு குன்றுடையான்
குட்டிகளும் மேய்க்க கூட்டிப்போ என்று சொன்னார்
நல்லதென்று கருஞ்சியன் நலமாயழைத்துவந்து
குட்டிகளைத்தான் பிரித்து ஓட்டிக் கொடுத்தானே
குட்டியை ஓட்டியேதான் குன்றுடையாக் கவுண்டனுமே

காட்டிலே விட்டுவிட்டு கண்ணயர்ந்து தூங்கிவிட்டான்
அஸ்தமனம் ஆகியுமே அவன் தூக்கம் தெளியவில்லை

அப்போது மாயவரும் அன்புடனே தான்பார்த்து
இன்னமும் தூங்குகிறான் இவனை எழுப்பவென்று
ஆலிலைமேல் பள்ளிகொண்ட அரிராமர் தானுமங்கே
வட்டமாங்கருடனேறி வாராரே மாயவரும்
செந்தலைக் கருடனேறி (மாயவரும்) சீக்கிரமே தானும்வந்து

ஆட்டுக்கார கிழவனைப்போல் அவரும் வடிவெடுத்து
மங்கு மசயாநீ மதிகெட்ட காராளா
பொழுதுகளுமானதடா பொய்யுறக்கம் நீங்கலையோ
எழுந்துமே குட்டிகளை எல்லாமாய்த் தான் சேர்த்து
ஓட்டிக்கொண்டு போடாவென்றுரைத்தெழுப்பி விட்டனரே

தூங்கி எழுந்திருந்து துரிதமாய்க் குட்டிகளை
ஓட்டியே வாரானே ஒரு நொடியில் குட்டிகளை
ஆட்டுக்காரக் கருஞ்சி அவனை இன்னமும் காணோமென்று
பார்க்குமந்த வேளையிலே (குட்டிகளை) பார்த்துமே ஓட்டி வந்தான்
குட்டிகளை எண்ணி குணமாகப் பார்க்கையிலே

ஒருகுட்டி அதிகம் உயர்ந்து இருந்ததப்போ
அப்போது கருஞ்சியனும் அதிக மகிழ்ச்சியுடன்
வாருமப்பாவென்று வகையாய் அழைத்துவந்தான்
இப்படியாகவே இவனும் இருக்கையிலே
தினமும் ஒருகுட்டி சேர்த்து அனுப்பிவைத்தார்

அனேக நாளாக அவனுமிருக்கையிலே
பார்த்தாரே மாயவரும் இவன்படுத்து நித்தம் தூங்குகிறான்
இன்றைக்கொரு குட்டி குறைத்தே அனுப்பவேண்டும்
என்றுமே மனதிலெண்ணி எழுந்தாரே மாயவரும்
வந்துமே ஒருகுட்டி மாயமாய் மறைத்துவிட்டார்

குட்டிகளைப் பட்டி கொண்டுவந்து பார்க்கையிலே
ஆட்டுக்கார கருஞ்சி குட்டியை அடையாளம் தான்பார்த்து
ஒருகுட்டி இல்லையென்று ஓடியே தானும்வந்து
சவுக்காலடித்தானே சாமி குன்றுடையானை



அடிபொறுக்கமாட்டாமல் அலறியே கீழ்விழுந்து
ஐயோ சிவனே என்றழுது புலம்புகிறான்

## குன்றுடையான் வளநாடு வருதல்

நம்முடைய ஊருக்கு நாம்போக வேண்டுமென்று
மணியம் குறிச்சிவிட்டு வாரானே குன்றுடையான்
காடு மலை தாண்டி கடுகி வழிநடந்து
வளநாடு தான் தேடி வந்தானே குன்றுடையான்
தன்னுடைய வீட்டையுமேதான் பார்த்தானப்போது

வீடிடிந்து போய்த்தான் வெகு சேதமாயிருக்க
இடிந்தவோர் வீட்டில் நின்று ஏங்கிப் புலம்புகிறான்
இடிந்த அந்த வீட்டிலே தேடி வருகையிலே
தாயாரும் வைத்திருந்த தங்கப்பிடி கத்தியது
கத்தியைத் தானெடுத்து கையில் பிடித்துக்கொண்டு

பங்காளிகளிடத்திலேதான் பாகமது கேட்கவென்று
பாய்ச்சலூர் தேடிவந்தான் பாங்கான குன்றுடையான்
பங்காளியிடத்திலே தான் பாகமது கேட்கவென்று
பாய்ச்சலூர் தேடியே வந்தானே குன்றுடையான்
பதினோருபேர் ஆங்கே பண்ணையிலே ஏர்பூட்டி

உழவுசெய்யும் வேளையிலே உத்தமனும் வந்தானே
என்னுடைய பாகத்தை எனக்குக் கொடுங்களென்றான்
அப்போது கூழைநாச்சி அவனுமங்கே ஏதுசொல்வான்
ஊரைவிட்டுப்போன ஓடுகாலி உந்தனுக்கு
பாகங் கொடுக்கிறேன் பாருமடா என்று சொல்லி

கருவேலா மாரெடுத்து கால்மேலே வீசுகிறான்
அடிபொறுக்க மாட்டாமல் அலறியே கீழ்விழுந்து
அழுது புலம்பியே அய்யோ சிவனே என்று
விழுந்து புரண்டானே விபரமில்லாக் குன்றுடையான்
அப்போது கூழைநாச்சி அவனுமங்கே ஏது சொல்வான்

இன்னுங் கொஞ்சநேரம் இங்கே இருந்தாயானால்
உன்னைக்கொன்று மடித்திடுவேன் என்றுமே சொன்னாலே
அப்போது குன்றுடையான் அதி விருசா யோடியே தான்
கால் போனபக்கம் கடுகி நடந்தானே
பங்காளி கவுண்டர் பாதகர்கள் என்ன செய்தார்

இந்த நல்ல தேசத்திலே எவருமே குன்றுடையானை
அனுச்சி செய்யக்கூடாது என்று அடித்தான் தவில் முரசு
அந்த சத்தம் கேட்டு அவனை ஆதரிக்க யாருமில்லை
மூன்று நாளாகவே அன்னம் தண்ணீர் இல்லாமல்
பட்டினி கிடந்தானே பாதகர்கள் தன்னாலே

எந்த வீடுபோய்க் கஞ்சி கேட்பினும் இல்லையென
சொல்லி முடுக்கிவிட்டார் சொந்த நல்ல ஊரிலேதான்
சாப்பாடு இல்லாமல் தவித்திருக்கும் வேளையிலே
ஆலிலைமேல் பள்ளிகொண்ட அரிராமர் தானறிந்தார்
வட்டமாங் கருடனேறி வாராரே எம்பெருமான்

செந்தலைக் கருடனேறி சீக்கிரமே தானும்வந்து
ஆட்டிடையன்போலே அவரும் வடிவெடுத்து
ஆடுகளைத்தான் ஓட்டி அவ்வழியே வருகையிலே
குன்றுடையானைக்கண்டு மாயன் குறிப்பாக ஏதுசொல்வார்
வாருமடா தம்பி நானொரு வார்த்தை சொல்லக் கேளுமினி

சாப்பாடு இல்லாமல் தவித்துப்போய் காணுதுன்னை
விறகு வெட்டிவந்தேநீ விற்றுப் பிழையுமென்று
காட்டிலே சென்று கடுகி விறகு வெட்டி
சுமையாகத் தானுங்கட்டி தூக்கியே வந்தாரே
உறையூருப் பட்டணத்தில் ஒரு வூடு தவறாமல்

விறகு விறகு என விலை கூறி வாராரே
உன்பேரு என்னவென்று உள்ளபடி சொல்லுமென்றார்
கோலாத்தாக் கவுண்டர் மகன் குன்றுடையான் என்பெயராம்



என்றுமே சொன்னாலே வேண்டாம் விறகு என்றே
துரத்தியேவிட்டார்கள் எல்லோருமாகவேதான்
வீடுவீடாக விலைகூறி வருகிறதை
கண்டாரே மாயவரும் காரணத்தைத் தான்பார்த்து
காளியண்ண கவுண்டர் மகன் கருப்பண்ணனென்று சொல்லு

என்று சொல்லிக்கொடுத்தாரே எப்பெருமான் மாயவரும்
கருப்பண்ணனென்று கடுகி வழிவருகையிலே
உறையூருப் பட்டணத்தில் பூ விற்கும் ஒரு ஆண்டிப்பெண்
கருப்பண்ணன் என்ற சொல்லை காதாலே கேட்டாளே
விறகுகொண்டு வாருமென்று விலை கேட்டாளப்போது

சோறு போட்டால் போடுகிறேன் என்றுமே சொன்னானே
அப்படியே நல்லதென்று அவள் வீட்டில் தானிருக்க
சாப்பாடுபோட்டுத் தானிருக்கும் வேளையிலே
எடுபிடி வேலை பூவாண்டிச்சிக்கு எல்லாமாய்ச்
செய்துகொண்டு

இப்படியாகவேதான் இருந்தான் சிலகாலம்

உறையூருப் பட்டணத்தில் ஒரு வீட்டில் கல்யாணம்
கல்யாணம் நடக்கிறதைக் கண்டானே குன்றுடையான்
குன்றுடையான் தானும் கல்யாணம் செய்வோமென்று
பூவாண்டிச்சியை பெண் கேட்கச் சொன்னானே
அப்படியே நல்லதென்று ஆண்டிச்சியும் சொன்னாளே

உடன் பிறந்தான் வீட்டிலேதான் கேட்டாளே பெண்ணுமது
பெண்ணுமது கேட்டு பிரியமுடன் தானும் வந்தாள்
வந்ததொரு ஆண்டிச்சியை வகையாக அப்போது
பெண்கேட்டு வந்தாயென்று பிரியமுடன் கேட்டானே
என் பிறந்தான் வீட்டிலே முறைப்பெண்ணைக்
கேட்டுவந்தேன்

என்றுமே தான்சொல்ல ஏதுசொல்வான் குன்றுடையான்
ஆண்டியுட வீட்டில் எனக்குப் பெண்கேட்டு வந்தாயென்று
பொங்கிய கோபத்துடன் புறப்பட்டான் வீட்டைவிட்டு

## குன்றுடையான் ஆதிசெட்டிபாளையம் போகுதல்

வீட்டை விட்டுப் புறப்பட்டு வெகுதூரம் தானடைந்து
கரூருப்பட்டணத்தைக் கண்டுமே குன்றுடையான்
பட்டணத்து வீதியிலே பசித்து வருகையிலே
ஆதிசெட்டிபாளையம் காசிசெட்டி மைந்தனுமே
தவிடு விற்று சீவனமும் தான்செய்து வாராரங்கே

செட்டியார் தானும் சேர்ந்து வந்து பார்த்தானே
அப்போது குன்றுடையான் அவரிடத்தில் ஏது சொல்வான்
வாருமையா செட்டியாரே வார்த்தை சொல்ல நீர்கேளும்
உன் மூட்டை நான் தூக்கி உதவி செய்ய வாரேனய்யா
எந்தனுக்குச் சோறிட்டால் இது போதுமென்றானே

அப்படியே வாருமென்று அழைத்தானே செட்டியவன்
செட்டியவன் கடையிலே சிறு தவிடுவிற்கிறானே
அன்றைக்குத் தவிடு அதிக கிராக்கியுடன்
லாபம் கொழித்திடுமாம்! ராசியுள்ள குன்றுடையான்
ஆதிசெட்டிபாளையமும் அலங்காரச் செட்டிமகன்

அழைத்துவந்து செட்டியவன் அவனுடைய மனைவியிடம்
கூலிக்கழைத்து வந்தேன் குன்றுடையான் தன்னையுந்தான்
அவர்வந்து தொட்டதினால் இன்று அதிகவிலை கிட்டியது
விருந்துவைத்து சாப்பாடு விமரிசையாப் போடுமென்றார்
சாப்பாடுதான் போட்டு சந்தோஷமாயிருக்க

மாடுமேய்க்கச் சொல்லி மாட்டையுமே ஓட்டிவிட்டான்
ஒருமாடு இருமாடாய் உயர்ந்து வருகுதப்போ
தவிடு விற்கும் செட்டியவன் தனக்கோடியாகி விட்டான்
மாட்டுப் பெருமை (செட்டியாருக்கு) மதிக்க முடியாது
குன்றுடையான் காலுவைக்க கோடி தனமாயிடுதே
இப்படியாகவே தான் இருக்கும் வேளையிலே



## பங்காளிகள் மணியங்குறிச்சிக்கு பெண் கேட்கப் போகுதல்

பாய்ச்சலூர் பங்காளிகள் பதினோரு பேர்களுமே
கூடியொரு ஞாயம் கூட்டமிட்டுப் பேசுகிறார்
குடியைக் கெடுத்தவனாம் கூழைநாச்சிக் கவுண்டனுமே
நம்மளுட பங்காளி நல்லதொரு குன்றுடையான்
உரிமைப்பெண் கட்டாமல் ஓட்டியே அடித்திடுவோம்

கூட்டமிட்டுப் பேசுகிறான்! குடிகெடுத்த பாவிமகன்
மணியம் குறிச்சியிலே அவன் மாமனவன் வீட்டினிலே
தாமரையாளென்ற பெண்ணை நம் தம்பியர்க்குக்
கட்டவேண்டும்

என்றுமே யோசனைகள் எடுத்துச் சொன்னார் நாச்சிமுத்து
நல்லதென்று தம்பியர்கள் நலமுடனே பெண்கேட்க

மணியங் குறிச்சிமலைக் கொழுந்தார் வீட்டுக்கு
பெண் கேட்க வாரார்கள் பிரியமுடனப்போது
வார வழிதனிலே வந்தானே சோளந்தோட்டி
வாருமையா சுவாமியென்று வணக்கஞ் செய்து நின்றானே
(சுவாமி) எங்கே பயணமாய் எல்லோரும் வந்தீர்கள்

என்றுமே சோழந்தோட்டி கேட்டானே அப்போது
குன்றுடையான் கட்டுகிற குணமான உரிமைப்பெண்
நல்லதொரு தாமரையை நம்முடைய தம்பியர்க்கு
கடைசி நல்ல தம்பியர்க்கு கல்யாணம் செய்வோமென்று
பெண் கேட்கப் போறோமென்று பிரியமுடன் சொன்னார்கள்

அந்த மொழி கேட்டு தோட்டி அழுது புலம்புகிறான்
அழுது புலம்புகையில் அவர்களுமே ஏது சொல்வார்
கல்யாணமென்று சொல்ல நீ கடுகி அழுவதென்ன
என்றுமே கேட்க ஏது சொல்வான் தோட்டியவன்
வாருமே ராஜாக்களே வார்த்தைசொல்ல நீர்கேளும்

குன்றுடையாக் கவுண்டரையும் கோட்டைவிட்டு
ஓட்டுகையில்
என்னையும் துரத்திவிட்டீர் என்றானே தோட்டியவன்
கல்யாணகாலத்திலே என்னைக் கடுகி அழைப்பீரென்று
எண்ணி நினைத்திருந்தேன் ஏமாற்றிவிட்டீரே
ஆகையினாலே சுவாமி அழுது புலம்பிவிட்டேன்

என்றுமே தோட்டி சொல்ல ஏது சொல்வார் கவுண்டர்களும்
இந்தநல்ல கல்யாணத்தில் எடுத்துக் கொள்வோம்
உந்தனையும்
என்றுசொல்லி கவுண்டர்களும் ஏகி வழிநடந்தார்
அப்போது சோளந்தோட்டி அவனுடைய மனைவியிடம்
வாருமடி பெண்ணே நானொரு வார்த்தை சொல்லக் கேளு
மினி

நம்முடைய குன்றுடையார் நலமாகக் கட்டும்பெண்ணை
பங்காளிக் கவுண்டர்கள் பாதகம் செய்கிறார்கள்
அவருடைய மைந்தருக்குப் பெண்கேட்க போறார்கள்
கட்டுச்சோறு கட்டும் பெண்ணே நான் கடுகியே தேடித்தான்
எங்கே இருந்தாலும் அவரை இழுத்துக்கொண்டு
நான்வாரேன்
என்று மனைவியிடம் எடுத்துரைத்தான் தோட்டியவன்

## சோளந்தோட்டி குன்றுடையானைத் தேடுதல்

அவனுடைய தேவியவள் அப்படியே நல்லதென்று
கட்டுச்சோறு கட்டி அவனைக் கடுகி வழியனுப்பி
எங்கேயிருந்தாலும் அவரை இட்டுக்கொண்டு
வாருமென்றாள்
கட்டுச்சோறு வாங்கியே தோட்டி கடுகிப் பயணமானான்
நாடு கடந்து நல்லபதிதான் கடந்து

காடு மலை கடந்து காட்டாற்றுச் சுழல் கடந்து
ஓடும் புனல் கடந்து உலவுகிறான் தோட்டியவன்



சுற்றாத ஊருமில்லை சுழன்று வராத் தேசமில்லை
எட்டி அடிவைத்து அவன் எங்கெங்கோ தேடியுமே
தேடியலைந்து திசைகெட்டு வாரானே
கருநுப் பக்கம் கடுகி வழி தானும் வந்து
கை சோர்ந்து கால் சோர்ந்து கனத்த விழிசோர்ந்து

எங்கேயும் காணவில்லை என்னுடைய எசமானை
எண்ணி நினைத்து அவன் ஏங்கி மனது நொந்து
அமராவதி ஆறு அந்தப்பக்கம் வந்துநின்று
ஆற்றோரம் வந்து அவனுமங்கே ஏதுசெய்தான்
பல்விளக்கி வாயலம்பி பகவானை தெரிசித்து

கட்டுச்சாதம் தானெடுத்து கனப்பசியைத் தான்போக்கி
சாப்பிட்டிளைப்பாறி தண்ணீர் சுவை பருகி
இந்தப்படியாக இவனிருக்கும் வேளையிலே
ஆயிரம் மாடுகளை அங்கு ஓட்டிவந்தார் சிலர்
செட்டியார் செவலை மாடும் சேர்ந்து வருகுதங்கே

மாடுகளை மேயவிட்டு (மாட்டிடையர்) மகிழ்ந்து
விளையாடையிலே
இந்த நல்ல கூட்டத்திலே நம் எசமானிருப்பாரென்று
எண்ணியே தோட்டியவன் இருக்கிறானப்போது
ஆயிரம்பேர் சிறுவர்களில் தோட்டிக்கு அடையாளம்
தெரியவில்லை
எப்படி அடையாளம் இனிக்காண்போமென்று சொல்லி

எண்ணி நினைத்து அவன் யோசனைகள் செய்கையிலே
மாடுகளைத் தானோட்டி மசைச்சாமி குன்றுடையான்
ஓடுகிற தண்ணீரில் ஓடிவந்துதான் குதித்தான்
தண்ணீரில் குதிக்கறதை தான்கண்டு தோட்டியவன்
குன்றுடையான் இவரென்று குறித்து மனமகிழ்ந்து

நம்முடைய ஏஜமானனென்று நன்றாகத்தான் தெரிந்து
வாருமையா ராஜாவே வளநாட்டு என்சுவாமி
உந்தனுக்குக் கல்யாணம் உரிமையுள்ள தாமரையை

கல்யாணம் செய்துவைத்து நான் கண்குளிரப் பார்க்கவேணும்
வாருமையா போவோமென்று வரவழைத்தானப்போது
அப்போது குன்றுடையான் அவனுமங்கே ஏதுசொல்வான்
எந்தனுக்குச் சாப்பாடு இன்பமாய் கிடைக்குதிங்கே
நான் வரமாட்டேண்டா நடடா பறப்பயலே

என்று சொல்லி குன்றுடையான் ஏறுமாறாய்ப் பேசையிலே
அப்போது தோட்டி அவனுமங்கே ஏதுசெய்தான்
செட்டியாரிடம் சென்று சேதிகளைச் சொல்லுகிறான்
தாயாருந் தான்சொன்ன சபதத்தைச் சொல்லியேதான்
இவரை அனுப்புங்கள் என்றுமே கேட்டானே

அப்போது செட்டியார் அன்புடனே ஏதுசொல்வார்
வாருமப்பா குன்றுடையான் வார்த்தை சொல்லக் கேளுமினி
கல்யாணம் செய்துகொண்டு கடுகியிங்கே வாருமப்பா
தோட்டியுடன் நீ போயி சுகமாக வாருமென்று
என்றுமே செட்டியாரும் இதமான வார்த்தை சொல்லி
அனுப்பியே தான்கொடுத்தார் அன்பான செட்டியாரும்

## குன்றுடையானுக்குக் கல்யாணம் செய்ய தோட்டி அழைத்து வருதல்

ஊரைவிட்டு புறப்பட்டு ஓடிவருகையிலே
வார வழியிலே தான்தோட்டி வார்த்தையது சொல்லுகிறான்
உன் மாமன் வீட்டுக்கு உத்தமரே நீர்போயி
கம்பு கம்பு என்று சொல்லி கடுகியே போனாயானால்
பிச்சைக்காரனென்று உன்னைப் பேசாமல் விட்டிடுவார்

என்று சொல்லி கூட்டிவந்தான் இதமான தோட்டியவன்
இப்படியாகவேதான் இவர்கள் வரும் வேளையிலே

## தாமரையைக் கல்யாணம் செய்ய பங்காளிகள் மணியங்குறிச்சி வருதல்

பாய்ச்சலூர் பங்காளி பதினோருபேர்களுமே
கடைசி நல்ல தம்பிக்கு கல்யாணமென்று சொல்லி



ஊர்முழுதும் பறைசாற்றி உடனே அழைத்துவந்து
மாப்பிள்ளைக் கோலத்துடன் வாரார்களப்போது
மணியங்குறிச்சி மணிமுகப்பு வந்திறங்கி
விநாயகர் கோவிலிலே விடுதிவிட்டுத் தானிருந்தார்
மணியங்குறிச்சி மலைக்கொழுந்தாக் கவுண்டருமே

உரிமைக்காரன் தானும் ஒளிந்திருந்து வந்திடுவான்
நாலுதலை வாசலுக்கும் நலமான காவல்வைத்து
காவலும் வைத்து கட்டுதிட்டம் செய்துமேதான்
இந்தவிதமாக இவரிருக்கும் வேளையிலே
ஆலிலைமேல் பள்ளிகொள்ளும் அரிராமர் தானறிந்தார்

பஞ்சாங்க வேதியன்போல் பார்ப்பான் வடிவெடுத்து
பஞ்சாங்கம் கையிலெடுத்து பந்தலிலே வந்து நின்று
திங்கள்கிழமை இன்று தெய்வம் பிறந்தநாள்
இராகுகாலம் வந்ததினால் நல்ல முகூர்த்தமில்லை
விநாயகர் கோவிலிலே மாப்பிள்ளை விடுதி
விடுங்களென்றார்

அந்த நல்லவேளையிலே ஆனதொரு குன்றுடையான்
ஐயருட சொற்படியே அப்படியே ஆகுதென்று
விநாயகர் கோவிலிலே மாப்பிள்ளை விடுதி
விட்டுத்தானிருந்தார்
பிச்சைக்கு வந்தானே! பிடிகம்பு கேட்டானே!

கம்பு கம்பு என்று சொல்லி கதறி வருகையிலே
காவலிலே நின்றவர்கள் இவனைக் கண்டுமே
விட்டுவிட்டார்
பெண்ணிருக்கும் வீட்டுக்கு வந்தானே குன்றுடையான்
வாசல்படி மறித்து வந்து படுத்தானே
மலைக்கொழுந்தாக் கவுண்டச்சியும் வந்துமே கண்டாளே
சாதிகளைத் தானழைத்து தான்சொல்வாளப்போது
ஒருபடி கம்பெடுத்து உத்தமியே போடுமென்றாள்

தாதிகள் கொண்டுவந்து தானியத்தைத் தான்போட்டார்
வாங்கியே குன்றுடையான் வாசலிலே விட்டெறிந்தான்
மலைக்கொழுந்தாக் கவுண்டச்சியும் வந்துமே கண்டாளே
அப்போது குன்றுடையான் அத்தைக்கெடுத்துரைப்பான்
கம்புக்கு வரலை அத்தை உன் மகளுக்கு கணவனாக
வந்தேனத்தை

பிச்சைக்கு வரலை உன் மகளுக்கு பிணை பரிசம்
போடவந்தேன்
என்று சொல்லிக் குன்றுடையான் இருக்கின்ற வேளையிலே
மலைக்கொழுந்தாக் கவுண்டச்சி மன்னனிடம் தானும்
சொல்வாள்
உரிமைக்காரன் குன்றுடையான் உள்ளேயே வந்துவிட்டான்!
அப்போது மலைக்கொழுந்தார் அதிதுரிதாய் ஓடிவந்து

செல்லரிக்கும் கொட்டைகையில் இவனைச் சேர
அடையுமென் றார்
அந்தப்படி காவலர்கள் அடைத்தார்கள் கொட்டகையில்
அப்போது குன்றுடையான் அலறிப் புலம்புகின்றான்
சோளந்தோட்டி பேச்சைக்கேட்டு பிழைமோசம் போனேனே
என்று புலம்பியுமே இருக்குமந்த வேளையிலே

அப்போது மாயவரும் அன்புடனே ஏதுசெய்தார்
செல்லுகளை வாயைக் கட்டி சீராகத் தானும்வைத்தார்
மாயச் சுருளோளை வாரியே தானெடுத்து
தாமரையாள் பெண்கொடிக்குத் தானேயெழுதுகிறார்!
உன் அத்தை மகனிருக்க அயல்நாட்டான் வந்ததென்ன?

உன் மாமன் மகனிருக்க மறு நாட்டான் வந்ததென்ன?
மாயச்சுருளெழுதி தாமரை மடியிலே விட்டெறிந்தார்
மாயச் சுருளெடுத்தே தாமரை வாசித்துப்பார்க்கையிலே
ஓலைச் சுருளெடுத்தே தாமரை அதன் உள்கருத்தை
ஆராய்ந்தாள்
அப்போ ஆடைதனை மாற்றி ஆபரணம் தான்துறந்தாள்



புடவைதனை மாற்றி தாமரையாள் போட்ட நகை நீக்கி
பழந்துணி கந்தைகளை தாமரை பார்த்து அணிந்துகொண்டு
வீசி நகையெறிந்துவிட்டு தாமரை வெளியிலே தானும் வந்து
ஆசாரவாசலிலே அழகுமயில் வந்துநின்று
கூசாமல் கேட்கலுற்றாள் குன்றுடையான் தன்னுரிமை

ஏன் அத்தைமகனிருக்க எனக்கு அயல்நாட்டான்
வந்ததென்ன!
ஏன் மாமன் மகனிருக்க எனக்கு மறுநாட்டான் வந்ததென்ன?
ஆனைமேல் வந்தவனை அடிப்பேன்நான் மாற்றாலே!
குதிரைமேல் வந்தவனைக் கொண்டை பிடித்தடிப்பேன்!
பெண்கொள்ள வந்தவனைப் பிரம்பாலடிப்பேன்நான்

என்றுமே தாமரையாள் இந்தவிதம் சொல்லையிலே
பங்காளிக் கவுண்டர்கள் பறந்தோடிவிட்டார்கள்

## குன்றுடையான் திருமணம்

அப்போ மலைக்கொழுந்தார் அவருமங்கே ஏது செய்தார்
குன்றுடையான் தன்னையுமே கூட்டிவரச் சொன்னாரே
தாமரையாள் பொற்கொடியை தானுமங்கே கூட்டிவந்து
மணவறையில்வைத்து மாங்கல்யம் சூட்டச்சொல்ல
குன்றுடையானும் குணமுடனே மாங்கல்யம்

தாமரையாள் கழுத்தினிலே தானுமே கட்டினானே
மலைக்கொழுந்தாக் கவுண்டர் மன்னவரும் ஏது செய்தார்
பாதிக்கல்யாணமது பாங்காய் முடிந்த பின்பு
என்னுடபேச்சை என்மகள் நீகேட்கவில்லை
ஆகையால் நீயும் அரைக்கணமும் என்வீட்டில்

இருக்கஇனி முடியாது எழுந்து நடங்களென்றார்
கட்டும் கடன் எல்லாம் கட்டுகிறேன் என்றாரே
எண்ணெய்க்கடன் தண்ணிக்கடன் எடுத்து வளர்த்தகடன்
பெண் பெற்ற பாவத்துக்குப் பிராயச்சித்தம் என்று சொல்லி
ஒருகொம்பு மாடுஒன்றும் ஒரு சொம்புத் தான்கொடுத்து

மடக்கலப் பானையிலே மரக்காலரிசியிட்டு
கொடுக்க முன்வந்தாரே குன்றுடையான் தாமரைக்கே
அப்போது தாமரையாள் அவளுமங்கே ஏதுசொல்வாள்
வாருமப்பா என்தகப்பா வார்த்தைசொல்லக் கேளுமினி
என்னை அவமதித்தாய் ஏளனமும் செய்துவிட்டாய்!

உன்னைப் பழிவாங்க உத்தமி நான் திட்டமிட்டேன்
என் வயிற்றில் சிங்கம்போல் இருமகன்கள்தான் பிறப்பார்
உன்வீட்டில் உன்பேத்தி இருவருமே தான்பிறப்பார்
பேத்தியார் இருவரையும் பெருங்குடியான் மக்களுமே
கண்டுசிறை போடாமல் கொண்டுசிறை போடுவார்கள்

சபதமப்பா என்சபதம் இது தாமரையாள் ஆணையென்றாள்
சபதம் நிறைவேறலையேல் (என்பேரு) தாமரையும் அல்ல
வென்றாள்

## குன்றுடையான் தாமரை வளநாடு வருதல்

மணியங்குறிச்சி விட்டு வாராரிருவருமாய்
நாடு கடந்து நல்லபதி தான் கடந்து
ஊர்கள் கடந்து உற்றபதிதான் கடந்து
காடுவனங் கடந்து கடுகிவழி வாரபோது
பார்த்தாரே மாயவரும் பாரளந்த எம்பெருமாள்

இவள முகைப் பார்த்தாலோ லட்சுமியைத் தோற்கடிக்கும்
அவனையே பார்த்தாலோ ஆடுமேய்க்கும் பேய்க்கருப்பன்
எப்படித்தான் ஒன்றாக இணங்கி இருப்பாரோ?
பார்ப்போமென்றே அந்தப் பாரளந்த எம்பெருமாள்
வாலிப வடிவெடுத்து வாராரே மாயவரும்

தாமரையாள் குன்றுடையான் தன்பிறகே தான் வாராள்
கால் தரையைப் பார்த்து கடுகி வழிநடந்தாள்
மாயவரும் தானும் மறைந்துவிட்டாரப்போது
இன்னும் கொஞ்சதூரம் இவர்கள் நடந்ததுமே
பசியாய் இருக்குதென்று பரிதவித்தான் குன்றுடையான்
அப்போது தாமரையாள் அவளுமங்கே ஏதுசொல்வாள்



குச்சிகளைக்கொண்டு குடிசையொன்று கட்டுமையா
சாதம் சமைத்துமே நாம் சாப்பிடுவோம் என்று சொன்னாள்
அந்தமொழிகேட்டு மசைச்சாமி அப்படியே
தானுஞ்செய்தான்

அப்போது தாமரையாள் அதிக விரைவாக
சாதம் சமைத்துவைத்தாள் தாமரையுமப் போது

காட்டிலே முளைத்திருக்கும் கனியபதங் கீரையுடன்
மரக்கால் அரிசியினை வடித்துத்தான் படைத்தாள்
இந்த நல்ல வேளையிலே எம்பெருமான் மாயவரும்
தாதனைப்போல் வடிவெடுத்து சுவாமியவர் வந்தாரே
ஆயிரம் தாதரைப்போல் அரிராமர் வடிவெடுத்தார்

சங்கு ஜெயகண்டியும் தானெடுத்து வந்தாரே
அப்போது குன்றுடையான் அவனுமங்கே ஏதுசொல்வான்
மரக்கால் அரிசிச் சோறு உன் வயிற்றுக்கே பத்தாது
இத்தனைபேருக்கும் எப்படித்தான் சோறிடுவாள்
என்றுமே தாதரையும் எழுந்து துரத்துகிறான்

அப்போது தாமரையும் அவரைவந்து கைப்பிடித்து
வாருமையா சுவாமி ஒருவார்த்தை சொல்லக் கேளுமினி
வயிறு குளிர்ந்திடவே சுவாமி வளமாக உண்டிடுவீர்
போடுகிறேனென்று சொல்லி பொறுமையுடன் கூட்டிவந்து
இலைகள் பரிமாறி எல்லார்க்கும் அன்னமிட்டாள்

எடுக்கெடுக்கக் குறையவில்லை இவள்சமைத்த அன்னமது
மடிச்சாதம் தானெடுத்தாள் மாயவர்க்கு முன்னாலே
சாதம் எடுத்துமவள் சாப்பிடும் வேளையிலே
அப்போது அரிராமர் அவரும் மறைந்து விட்டார்
சாப்பிட்டு இளைப்பாறி சந்தோஷமாகவேதான்

வளநாடு தானோக்கி வாராரிருவருமாய்
கோட்டைத் தலைவாசல் குன்றுடையான் வந்துநின்றார்
ஊருச் சனங்களெல்லாம் உத்தமனைக் கண்டார்கள்

வினாயகரைத் தெண்டனிட்டு வீட்டுக்கு வந்தார்கள்
பழையதொரு வீட்டிலே பாங்காய்க் குடியிருந்தார்
உரையூருப் பட்டணத்தில் ஒரு சைவமுதலியவர்
குன்றுடையான் தாமரையாள் குடித்தனமே செய்வதற்குச்
சாப்பாட்டுக்குக் கொடுத்துத் தானிருக்கும் வேளையிலே
இப்படியாகவேதான் இருக்குமந்த வேளையிலே

## குன்றுடையாக் கவுண்டர் பங்காளிகளிடத்தில் பாகம் கேட்கப் போதல்

குன்றுடையாக் கவுண்டரவர் குலம்பெரிய நாச்சியிடம்
வாருமடி பெண்ணே ஒருவார்த்தைசொல்லக் கேளுமம்மா
பங்காளிதம்மிடத்தில் என்பாகமது கேட்டுவாரேன்
என்றுசொல்லிக் குன்றுடையான் எழுந்தே வழிநடந்தான்
வளநாடு தான்விட்டு வாரானே குன்றுடையான்

பாய்ச்சலூர் தேடியே பங்காளி வீட்டுக்கு
வந்துமே பார்த்தானே வரிசையுடனப்போது
வீட்டிலே யாருமில்லை வெறிச்சோடித் தான்கிடக்கும்
காட்டுக்குப் போனானே கண்டானே அவர்களையும்
பங்காளிதங்களையும் பாகமது கேட்டானே

அப்போது பங்காளிகள் அதிக கோபமாகியேதான்
குடியைக்கெடுத்த கூழைநாச்சிக் கவுண்டனுமே
ஓடுகாலி பயலுக்கு உனக்கேது பாகமென்று
ஊரைவிட்டுப்போனாய் உறவைவிட்டு நீ தொலைந்தாய்
பேரைவிட்டுப்போனாய் பெரும்பங்கு தானுமுண்டோ?

நாடோடி மக்களுக்கு ராச்சியத்தில் சொந்தமுண்டோ?
நாடுவிட்டுப் போனவர்க்கு நல்லுரிமை தானுமுண்டோ?
ஊரை விட்டுப் போனவர்க்கே உறவுமுறைகள் உண்டோ?
எங்கோ திரிந்துவிட்டு இங்குவந்து பாகமென்றாய்!
மங்கு மசையா உன்னை வசமாய் அடிப்போமென்றார்



சவுக்காலடித்தார்கள் சாமி மசையனையும்
அடிபொறுக்க மாட்டாமல் அலறியே கீழ்விழுந்து
அழுது புலம்புகிறான் அவனுமங்கே அப்போது
மற்ற பங்காளிகளும் மாரெடுத்துத் தான்வந்து
கருவேலா மரத்திலே இவனைக் கட்டியடியுமென்று

கட்டி அடித்தார்கள் கருணையில்லாப் பாவிமக்கள்
தலைகீழாய்த் தொங்கக் கட்டி சவுக்காலடித்தார்கள்
அலறியே குன்றுடையான் அழுது புலம்புகையில்
கால்கட்டை தானவிழ்த்து கடுகியே போட்டார்கள்
மயங்கிக் கிடந்தான் மசச்சாமி குன்றுடையான்
இப்படியாக இங்கே இருக்கும் வேளையிலே

## தாமரையாள் கணவனைத் தேடி வருதல்

தாமரையாள் பத்தினியும் தானுமங்கே என்னசெய்தாள்
பங்காளி தன்னிடத்தில் பாகமது கேட்கப்போன
மன்னர்தான் இன்னும் வரக்காணோம் என்று சொல்லி
தாமரையாள் பெண்மயிலும் தான் ஓடிவந்தாளே!
கல்லாண்டாங் காட்டிலே கருவேலா மரத்திலே

தலைகீழாய்த் தொங்கக்கட்டி சவுக்காலடிப்பதையும்
கண்டாளே பத்தினியும் கண்சிவந்து மெய்சிலிர்த்து
கட்டுகளைத் தானவிழ்த்து கடுகியவள் முள்பிடுங்கி
வாங்களடா பாதகரே வகையாக உங்களையும்
பழிக்குப் பழியெடுப்பேன்! பத்தினியாள் சபதமிது

முன்பழியும் பின்பழியும் முப்பழியும் தீர்ப்பேனென்று
சபத மதுபோட்டுத் தான் கூட்டிவந்தாளே
மன்னவனைக் கூட்டி வளநாடு தானும்வந்தாள்
வளநாடு வந்திவரும் வாழுகின்ற நாளையிலே

## குன்றுடையான் சோழராஜரிடம் போய் பூமி கேட்டல்

குன்றுடையான் தானும் குலம்பெரிய நாச்சியிடம்
சோழமகா ராஜனிடம் சொந்தபூமி வாங்கிவாரேன்
என்று புறப்பட்டான் இயல்பெரிய குன்றுடையான்
சோழர் சபைதனிலே சோர்ந்துபோய்ச் சேர்ந்தானே
ராஜாவைத்தான் பார்த்து நமஸ்கரித்து நின்றானே

அப்போது ராஜாவும் அன்புடனேதான் பார்த்து
எந்தவூர் எத்தேசம் எங்கிருந்து இங்குவந்தாய்
உன் ஊருகளும் பேருகளும் உள்ளபடி சொல்லுமென்றார்
வளநாடு தேசமையா வாகான குன்றுடையான்
கோலாத்தாக் கவுண்டர் மகன் குன்றுடையான் என்பெயராம்

என்னுட பங்காளிகள் என்பங்கைத்தான் பிடுங்கி
பங்கைப் பிடுங்கிவிட்டார் எனக்குப் பாதகமும்
செய்துவிட்டார்

காடுகளும் இல்லையென்று கடுகி முடுக்கிவிட்டார்
ஆகையினால் ராஜாவே அண்டிவந்தேன் உங்களிடம்
பூமிகளும் தாருமையா புகழ்பெரிய ராஜாவே

என்றுசொல்லி குன்றுடையான் இனிமையுடன் தான்கேட்க
நல்லதென்று ராஜாவும் நலமில்லா பூமிதனை
சீத்தமுள் வனத்தை கொடுத்தாரே ராஜாவும்
பாங்கட்டைத் *தான் கொடுத்துப் பயிர்செய்வாய்
என்றுரைத்தார்

காடுகளும் தான்வாங்கி கடுகி வழி நடந்தான்

வளநாடு தான்தேடி வாரானே குன்றுடையான்
வந்து வளநாட்டில் மலர்க்கொடியாள் தனையழைத்து
தாமரையாள் தன்னிடத்தே தானுமே சொல்லுகிறான்

* பாழுங்கடை



சோழநல்ல ராஜாவும் சொந்தமாக பூமிதனை
உழுது பயிர்செய்ய உத்தரவும் இட்டாரே
காடுவெட்டி செடிகளைந்து கடுகியே வாரேனென்று
கொப்பி கட்டும் கவையெடுத்து கோளாறாய் தானடந்து
சீத்த முள்ளு வனமதனைச் சிறையெடுத்தானப்போது

காடுவெட்டி செடிகளைந்து களைப்பாகத் தான்படுக்க
நித்திரையும் தான்வந்து நெடுநேரம் தூங்கிவிட்டான்
அப்போது மாயவரும் அரிராமர் தான் பார்த்து
எம்பெருமான் மாயவரும் என்ன செய்தாரப்போது
பூதகணங்களை ஏவினார் களைபிடுங்க

பூதங்கள் தாமும்வந்து பிடுங்கிக் களைந்ததுவே
சீத்தமுள்ள ஐவனத்துச் செடியைப் பிடுங்கியேதான்
மலைபோல தான்குவித்து மறைந்தனவே பூதமெல்லாம்
கண்விழித்துத் தான்பார்த்தான் கருமலைபோல் முள்ளுகளை
கண்டானே கண்ணாலே கண்குளிரத் தான் பார்த்து

இது மாயனுட செயலென்று மனதிலே தானினைத்து
நெருப்பை வைத்து முள்ளுகளை நீராகத்தானெரித்தான்
வருண பகவானும் மழையாய்ப் பொழிந்தாரே
காடு உழவு செய்திடவே மாடுகளும் வேண்டுமென்று
உறையூருப் பட்டணத்தில் முதலியார் வீடுசென்று

மாடுமே வாங்கிவந்து உழவு செய்ய கொண்டுவந்தான்
விதைச்சோளம் இல்லாமல் விபரமில்லாக் குன்றுடையான்

## குன்றுடையான் விதைச்சோளம் கேட்க பங்காளி வீடு வருதல்

பங்காளி வீட்டுக்கு பாங்குடனே தான்போயி
பங்காளி வீடுசென்று வி.தைச் சோளம் கேட்டானே!
அப்போது குப்பாயி பங்காளி பெண்டாட்டி
அக்காமாரே தங்கைமாரே அடுத்த வீட்டு மாராயி
முத்தாயி பவளாயி மூக்காத்தா செல்லாயி

நாச்சாயி நல்லாயி நடுவீட்டு ராமாயி
நம்ம குன்றுடையான் தானும் நம்முடைய வீட்டிலேதான்
விதைச்சோளம் கேட்கிறானே விபரமில்லாக்
குன்றுடையான்
சோளம் கொடுப்போமென்று சொன்னாளே குப்பாயி
அப்படியே நல்லதென்று அனைவருமே கூடியேதான்

குப்பாயி வீட்டினிலே கொண்டுவந்து சோளமதை
இளவறுப்பாய் தான்வறுத்து எடுத்துக் கொடுத்தாளே
வறுத்த சோளம்வாங்கி வந்தானே குன்றுடையான்
ஏர் கலப்பைத் தானெடுத்து ஏகி வழிநடந்து
காட்டிலே ஏர்பூட்டி கடுகி உழவு செய்ய

சோளம் விதைத்தானே சொர்ணமுடிக் காராளன்
சோளம்தனை விதைத்து சொந்த ஏர்தான் பூட்டி
உழவுகளும் செய்கையிலே உலகளந்த எம்பெருமான்
மாயவரும் அப்போது மனமகிழ்ந்து ஏதுசெய்தார்
மாயமாய் ஏருகளை வரவழைத்து விட்டாரே

மாயவனார் விட்ட ஏர் வந்தே உழவு செய்ய
காடும் உழுதாச்சு கடைசிவிழா தானிருக்க
அப்போது தாமரையாள் அன்னம் எடுத்துக்கொண்டு
மன்னவர்க்குச் சாதம்கொண்டு மலர்க்கிளியாள் வரும்போது
மாயமாய்த்தானும் மறைந்து விட்டார் எம்பெருமான்!

அப்போது தாமரையாள் அருகில்வந்து பார்க்கையிலே
காடுகளும் தான் உழுது (குன்றுடையான்) களைப்பாய்
இருப்பதையும்
வாருங்கள் சுவாமியென்று வரவழைத்துத் தாமரையும்
சாப்பிட்டு இளைப்பாறி சந்தோஷமாகவேதான்
வீட்டுக்கு வந்து இதமாய் இருக்கையிலே

ஆயன் கிருபையினால் அவர்கள் குடியீடேற
பசுக்கள் மிகப்பெருகி பாக்கியங்களுண்டாச்சு



ஆடுகளும் மாடுகளும் அழகாகத்தான் பெருகி
வீடு நிறைய வெண்ணெய் தயிர் மோர் பாலும்
பொங்கிப் பெருகிடவே பூரித்தாள் தாமரையாள்
இப்படியாக இவர்களிருக்கையிலே
தோட்டம்பார்த்து வாரேனென்று துரிதாகக் குன்றுடையான்

வந்துமே பார்க்கையிலே பயிரு வளர்ந்து இருந்ததுவே
சந்தோசமாக குன்றுடையான் தானுமங்கே ஓடிவந்து
தாமரையாள் தன்னிடத்தில்தான் சொல்லி இருக்கையிலே

## பங்காளிகள் குன்றுடையான் தோட்டத்தை புழுதி உழவு செய்தல்

பாய்ச்சலூரார் பங்காளி பதினொரு பேர்களுமே
குன்றுடையான் தோட்டத்தைக் குப்பைக்காடாக்கிடவே
பதினொரு பேர்களுமே பார்த்து வரச்சொன்னார்கள்
வந்துமே பார்க்கையிலே பயிரு வளர்ந்தே இருந்ததையும்
கண்ணாலே பார்த்தார்கள் கபடு கொண்ட பாவி மக்கள்

குடியைக் கெடுத்த அந்தக் கூழை நாச்சி ஏது சொல்வாள்
வறுத்த சோளம் கொடுத்தோமே மங்கு மசையனுக்கு
வறுத்ததொரு சோளப் பயிரு வளர்ந்து வந்து நிற்குது பார்
இதை உழுது பயிரு பண்ணி உதவாமல் செய்திடுவோம்
பதினொரு பேருமேதான் பதினோரு ஏர் பூட்டி

பயிரை உழுதேதான் பாதகர்கள் போட்டார்கள்
அப்போது மாயவரும் அரிராமர் தான் பார்த்து
வருண பகவானை மழை பொழியச் சொன்னாரே
மேகம் சுமந்து மின்னல் மின்னிக் காலிறங்கி
பெய்ததுவே அப்போது பெருமழையாய்தானு மங்கே

உழுத பயிர்களெல்லாம் கிளை கிளைத்துத் தான் வளரும்
தழைத்த பயிர்களெல்லாம் ஓங்கி வளர்ந்திடுமாம்
பயிரும் பொடை கட்டிப் பாங்காய் வளர்ந்து நிற்க
பறவைகள் வந்தேதான் கதிரைப் பார்த்துமே தின்று விடும்

என்றுமே குன்றுடையான் எடுத்தானே பரண்மரமும்
பரண்போட்டு மேலிருந்து பட்சிகளைத் தான் விரட்டி
இருக்குமந்த வேளையிலே இங்கே வந்தாள் தாமரையும்
பார்த்தாளே தாமரையும் பவள மணிக்கதிரை
ஒரு தட்டைத் தான் பிடுங்கி உரித்துமே பார்க்கையிலே

முத்து விளைந்திருக்க மொய் குழலாள் தான் பார்த்து
அந்த நல்ல முத்தெடுத்து அருங்கிளியும் தானுமப்போ
உறையூருப் பட்டணத்தில் ஒரு செட்டி கடையில் தான்
கொண்டு வந்துதான் கொடுத்தாள் குன்றுடையான்
தேவியும்

செட்டியார் தான் பார்த்து சேதியது ஏது சொல்வான்

விலை மதியா மாணிக்கம் விளைந்ததே உங்களுக்கு
செட்டியார் தான் சொல்லி திருப்பிக்கொடுத்தாரே
வாங்கியே தாமரையாள் வளநாடு தானும் வந்து
வளநாட்டுச் சனங்களையும் வரவழைத்துக் கூட்டி வந்து
கதிரை அறுத்து வந்து களத்திலே போட்டார்கள்

ஆளுக்குக்கூலி அளந்து கொடுக்கையிலே
கூலிசனங்களெல்லாம் கூடியே தான் பேசி
எங்களுக்கு இந்தக்கதிர் வேண்டாமென்று சொல்லி விட்டு
அவர்களுக்குத் தானியத்தை அளந்து கொடுத்தாளே
அப்போது தாமரையாள் அவளுமங்கே ஏது சொல்வாள்

வாருமையா மன்னவரே வார்த்தை சொல்லக் கேளுமின்
மாடு கட்டித் தாம்படித்தால் மசியாதாம் இக்கதிர்கள்
சோழமகாராஜரிடம் நீங்கள் சீக்கிரமாய் தான் போயி
தாம்படிக்க யானைகளும்தான் கொண்டு வந்திடுவீர்
கேட்டுமே வாருமையா கீர்த்தி உள்ள மன்னவரே

என்று அனுப்பி விட்டாள் இயல் பெரிய மன்னவரை
அப்போது குன்றுடையான் அதிதுரிதாய் ஓடி வந்து
சோழராசன் அரண்மனைக்கு சீக்கிரமே தானும் வந்து



அட்டம் பணிந்து அடி வணங்கித் தெண்டனிட்டான்
தெண்டனிட ராஜாவும் திரும்பி மிகப்பார்த்து
நீ வந்த காரணத்தை நிமிசத்தில் சொல்லு மென்றார்
அப்போது குன்றுடையான் அவருக்கெடுத்துரைப்பான்
தாமரையாள் உங்களிடம் தாம்படிக்க யானையது

வாங்கி வரச்சொன்னாள் வ்ளம் பெரிய ராஜாவே
என்றுமே சொல்ல ஏது சொல்வார் ராஜாவும்
பாகனையும் தான் அழைத்து பக்குவமாய் ஏது சொல்வார்
வளநாட்டு கோட்டைக்கு நீ யானை ஓட்டிப்போய்
தாமரையாள் பத்தினிக்கு (கதிரை) தாம்படித்து
வாருமென்றார்

அந்தப்படி பாகன் (யானையை) அதட்டியே ஓட்டிவந்தான்
வளநாடு தேடியுமே வத்துதுவே யானையது
களத்து மேட்டில் கதிரைக் கண்டானே பாகனவன்
ஆனை கட்டி தாம்படித்தான் அழகு பொன்னி வளநாட்டில்
தாம்படித்து குவித்து விட்டுத்தான் போனான் பாகனவன்

பாகனவன் போனபின்பு பார்த்தாளே தாமரையும்
மரக்கால் பொதியளந்தால் மாளாது என்று சொல்லி
எட்டால் பொதி அளந்தாள் தர்மமுள்ள பத்தினியாள்
பொதியளந்து தாமரையும் பொற்களஞ்சியம் போட்டாள்
இப்படியாகவே தான் இருக்குமந்த நாளையிலே

## தாமரையாள் பிள்ளையில்லையென்று தான தர்மம் செய்வது

மக்களும் இல்லை என்று மனது மிக வாடி
(நாம்) தேடும் திரவியத்தைச் செலவழிக்கப் பிள்ளையில்லை
வாரியெடுத்தணைக்க மைந்தனும் இல்லையென்று
தான தருமங்கள் செய்தாள் வெகு கோடி தான்
என்ன தர்மம் செய்தாலும் எடுத்தணைக்க மைந்தன் இல்லை

மலடி மலடியென்று வையகத்தில் பேராச்சு
பிள்ளை யில்லா மலடி யென்று பூவுலகம் ஏசிடுமாம்
என்று மனம் கலங்கி ஏது சொல்வாள் தாமரையும்
அத்தை மகனாரே ஆசையுள்ள என் கணவா!
மாமன் மகனாரே என்னை மாலையிட்ட மன்னவரே

பிள்ளையில்லாச் சோறு எனக்கு புழு வோட ஒண்ணாச்சு
மைந்தனில்லாச் சோறு எனக்கு மருந்தோட ஒண்ணாச்சு
உறையூரு சென்று நீங்கள் ஒருபன்றி வாங்கி வந்தால்
பன்றியை வளர்த்தினாலே நமக்கு பாலன் பிறக்குமென்றாள்
சொன்னாளே பத்தினியும் தோகை மயிலியரும்

அந்தப்படியே குன்றுடையான் அவனுமங்கே தானும்
சென்று
பன்றிக் குட்டி இரண்டு பார்த்ததுமே வாங்கி வந்தான்
கடுவன் குட்டி விரிசடையன் பெண் குட்டி மீனாட்சி
பேருகளும் வைத்து பிரியமுடன் தான் வளர்த்தாள்
தாமரை மலடுபோல பன்றி தானும் மலடாச்சு

இவள் வளர்த்த சீவ ஜந்து எல்லாம் மலடாச்சு
செய்யாத தர்மமில்லை இவர்கள் சுத்தாத கோவிலில்லை
என்ன தர்மம் செய்தாலும் எடுத்தணைக்க மைந்தன் இல்லை
மைந்தன் முகம் பார்க்க மனது மிகத்துடித்து
பங்காளி வீட்டு பாலகர்களைப் பார்க்கவென்று

பட்சணம் பலகாரம் பாங்குடனே தான் செய்து
சிற்றாடை சட்டைகளும் சீராகத் தானும் தைத்து
வரிசையது தானெடுத்து உத்தமி வந்தாளே பாய்ச்சலூர்
பாய்ச்சலூர் தானும் வர பாதகத்தி கண்டார்கள்
அடி அக்கா மாரே தங்கை மாரே அடுத்த வீட்டு மாராயி

மூத்தாயி பவளாயி மூக்காத்தா செல்லாயி
நாச்சாயி நல்லாயி நடுவீட்டு ராமாயி
நம் மைந்தர்களைப் பார்க்க மலடி வருகின்றாள்



அந்த தோசி வருகிறாள் தொட்டாலும் ஆகாது
மலடி நிழல் பட்டால் மைந்தர்களுக் காகாது
என்றுமே எல்லவரும் ஏகமாய்த் தான் பேசி
வெண்கல குதிர் மூடி மேல் மூடி தான் திறந்து
குதிருக்குள்ளே குழந்தைகளை மூடி மறைத்தார்கள்

அப்போது தாமரையாள் அங்கே வந்து நின்றாளே
கூடையிறக்கி வைத்து கொம்பனையாள் நின்றுமே தான்
குழந்தைகளை எங்கே என்று கொடி மயிலி கேட்டாளே
மைந்தர்களை எங்கே என்று மாதரசி கேட்டாளே
அப்போ கவுண்டச்சிகள் அனைவருமே ஏது சொல்வார்

அப்பன் மார் கூட அவர் ஆடு மேய்க்கப் போனார்கள்
தகப்பன் மார் கூட தானுமங்கே போனார்கள்
என்றுமே தானும் சொல்ல உத்தமி ஏங்கி மனந்தளர்ந்து
குழந்தைகளைப் பார்க்க நான் கொள்ளை ஆசையோடு
வந்தேன்
மைந்தர்களைப் பார்க்க நான் வெகு ஆசைப்பட்டு வந்தேன்

என்று மனது நொந்து ஏந்திழையாள் உத்தமிதான்
கொண்டு வந்த வரிசைகளைக் கூடையிலே வைத்து விட்டு
எழுந்து நடந்தாளே எல்லர்க்கு முன்பாக
தாமரையாள் சென்றவுடன் குதிரைத் தான் திறந்து
பார்த்தார்கள்
புழுக்கம் பொறுக்காமல் குழந்தைகள் புழுங்கி மடிந்திடவே

செத்து மடிந்தனவாம் குழந்தைகள் சிவலோகம்
சேர்ந்தனவாம்
அழுது புலம்பி பெண்கள் அலறி அங்கே ஓடி வர
தாமரையாள் பத்தினியும் தான் வந்து பார்க்கையிலே
செத்த குழந்தைகளைக் கண்டாளே உத்தமியும்
அப்போது கவுண்டச்சிகள் அனைவோரும் ஏது சொல்வார்

மலடி வந்து காலுவைக்க மைந்தர் மடிந்தாரென்று
தோசி வந்து காலு வைக்க குழந்தை மடிந்ததென்றார்

தலை மயிரை தான் பிடித்து தாமரையை சவுக்காலடித்தார்
கட்டிப்பிடித்துமே தான் கடுகி அடித்தார்கள்
அடி பொறுக்க மாட்டாமல் அலறிப் புலம்புகிறாள்
அப்போது தாமரையாள் அவர்களுக்கு ஏது சொல்வாள்
வாருமடி சக்களத்தி எனக்கு இரு வாள் வீரர் தான் பிறந்

பழிக்குப் பழி தீர்ப்பார் பாதகத்தி உங்களையும்
முன்பழியும் பின்பழியும் முப்பழியும் தீர்ப்பாரென்று
என்று சபதமிட்டே ஏகி வழிநடந்தாள்
தன்னூர் திசை நாடி தான் வந்தாள் உத்தமியும்
வீட்டுக்கு வந்து விபரத்தை தானுஞ்சொல்லி
இப்படியாக இருக்குமந்த வேளையிலே

## பன்றிக்குட்டி கோபித்து மேனாடு போதல்

தாமரையாள் வீட்டினிலே தான் வளர்த்த பன்றியது
பங்காளி வீட்டுக்கு தாமரை பார்க்கவே போன பின்னர்
குன்றுடையான் தானும் பன்றிக்கு கஞ்சியது ஊத்தாமல்
பட்டினியாய்ப் போட்டு விட்டான் பன்றி இரண்டையு
தாமரையாள் வந்தவுடன் பன்றிதானுமே சொல்லிடுமா

வாருமடி தாமரையே எங்களுக்கு வயிற்றுக்குக் கஞ்சியில்லை

உன்னுடைய கணவன் எங்களை உதைத்துத் துரத்தி விட்டா
ஆகையினாலே நீ அவனை விசாரியென்று
பன்றியது சொல்லையிலே பார்த்தாளே தாமரையும்
மங்கு மசயனையும் ஒரு வார்த்தையதும் கேட்கவில்லை

ஆகையானால் பன்றியது அவள் பேரில் கோபித்து
மேனாடு தானோக்கி பன்றி விரைந்து நடந்ததுவே
தலையூரு தானோக்கி பன்றி தானே நடந்ததுவே
மேனாட்டு பத்தினியாள் வீரதங்காளிடத்தில்
அடைக்கலமாக அவளிடத்தில் தானிருக்கும்
இப்படியாக பன்றி இருக்குமந்த வேளையிலே



தாமரை பத்தினியாள் தானும் மலடாயிருக்க
உறக்கிணற்றுக்குள்ளிருக்கும் ஊர்க் குருவி தான் மலடு
அட்டாலி மேலிருக்கும் சட்டப் பூனைதான் மலடு
வாசலிலே வாழுமந்த மர நாயும் தான் மலடு
முறக்கடையில் நிற்குமந்த பேய்முருங்கை தான் மலடு

தாமரை மலடு போல தான் வளர்க்கும் பட்சியெல்லாம்
எல்லாம் மலடாக இருக்கின்ற வேளையிலே
அப்போது தாமரையாள் அருங்கிளியுமே துரைப்பாள்

## தாமரை மதுக்கரை செல்லியம்மனுக்கு தேரோட்டல்

மதுக்கரை செல்லியவள் மாகாளி அம்மனுக்கு
பிள்ளை தேரோட்டினால் பிள்ளை வரம் கிட்டு மென்றார்
தாமரையாள் பத்தினியும் தன் மனதில் தானினைத்து
அத்தை மகனாரே ஆசையுள்ள என் கணவா
மாமன் மகனாரே என்னை மாலையிட்ட மன்னவரே

நாம் மதுக்கரை செல்லாயி மாகாளி அம்மனுக்கு
தேரும் திருவிழாவும் சிறப்பாய் நடத்திவைத்தால்
நமக்கு புத்திரவரம் கொடுப்பாள் புண்ணியரே என்று சொல்லி

மைந்தன் வரங் கொடுப்பாள் மதுக்கரைச் செல்லாயி
தேருமது செய்ய சிற்பிகளும் வேணுமய்யா

நீங்கள் உறையூரு சென்று ஆசாரி உடனே அழைத்து வாரும்
என்றுமே தாமரையாள் இன்பமுடன் சொல்லையிலே
அப்போது குன்றுடையான் அப்படியே நல்லதென்று

கொப்பி கட்டும் கவை எடுத்து பொட்டேனவே தானூன்றி
கொங்கணக் கம்பளியை தோள்மேலே போட்டுக் கொண்டு
வளநாடு விட்டு வாரானே குன்றுடையான்
உறையூருப் பட்டணம் ஒன்பது தலைவாசல்
பாச்சலூர் கிராமம் பன்னிரெண்டு தலைவாசல்

அங்கிருக்கும் ஆசாரி அவனை வரவழைத்து
குன்றுடையான் தானும் ஆசாரியைக் கூட்டி வரும்போது
அப்போது பங்காளி அவர்களுமே ஏது செய்தார்
உறையூரு ஆசாரி ஒன்பது பேர்களையும்
கூட்டி வந்து பங்காளி யோசனைகள் சொல்லுகிறான்

வாருமையா ஆசாரி வள நாடு நீர் போனால்
தாமரையாள் தன்னையுமே தான் கண்டு அவ்விடத்தில்
தேருகளுஞ் செய்ய செலவுக்குப் பொன் வாங்கி
வாங்கி வந்து தேரும் வகையாக தானுஞ் செய்து
தேரோட்டும் வேளையிலே தாமரையை தீர்த்துக்
கட்டவேணுமய்யா
தேருக்கு நரபலியும் திறமாய்க் கொடுக்க வேண்டும்
என்று தான் சொன்னாலும் இசைந்திடுவாள் தாமரையும்
என்று சூது நினைத்தார்கள் சொந்தப் பங்காளிகளும்
அப்படியே நல்லதென்று ஆசாரி தானும் வந்து
வளநாடு வந்து வகையுடனே ஆசாரி

தாமரையாள் தன்னிடத்தில் தாம்பூலந்தான் வாங்கி
தேர் வேலை செய்வதற்காய் திட்டமது சொல்லி விட்டான்
தேர் சாமான் வாங்கி வந்து ஆசாரி சீக்கிரமாய்ச்
செப்பனிட்டான்
தேரு வேலை செய்து சீக்கிரமாய் தான் முடித்து
தாமரையாள் தன்னிடத்தில் தான்வந்து சொன்னார்கள்

அப்போது தாமரையும் அன்பாய் மனமகிழ்ந்து
நாளை வெள்ளிக்கிழமை விடிந்து பத்து நாழிகைக்கு
மதுக்கரை செல்லாயி மாகாளி அம்மனுக்கு
தேரோட்டவேண்டு மென்று தேவியவள் தாமரையும்
வளநாடு எல்லைவரை நலமாய் தமுக்கடிக்க

ஊருச்சனங்களெல்லாம் உத்தரவு கேட்டார்கள்
வெள்ளிக்கிழமை விடிந்து பத்து நாழிகைக்கு
மதுக்கரை செல்லி அம்மன் மாகாளி முன்னே



கூட்டமது கூடி கோடி ஜனம் தானிருக்க
பங்காளி சூதாலே பாதகனாம் ஆசாரி
தேருக்குச் சுள்ளாணி திறமாகத் தானும் வைத்தான்
சுவாமி அலங்கரித்து தேரின் மேல் வைத்தார்கள்
தேரு வடம் பிடிக்க திருஷ்டி குட்டி வெட்டினார்கள்

தப்பட்டை மேளம் சதிருடனே தான் முழங்க
துத்தாரி நாதசுரம் சோடு கொம்பு தானூத
ஜெய கெண்டி வாத்தியம் ஜெய ஜெயவென்று தான் முழங்க
தேவியவள் செல்லாயியை தேரின் மேல் வைத்தார்கள்
தேரு வடம் பிடித்து தென் கிழக்கு வருகையிலே

தென் கிழக்கு மூலையிலே தேரு வருகுதப்போ
அந்த மூலை விட்டுத் தேர் அடுத்த பக்கம் வருகையிலே
தென் மேற்கு மூலையிலே தேரு திரும்பி வருகுதப்போ
அந்த நல்ல மூலைவிட்டுத் தேர் அடுத்த மூலை
வருகையிலே
பங்காளி சூதாலே ஆசாரி பாதகர்கள் என்ன செய்தார்

சுள்ளாணி வைத்து தேரை திரும்பாமல் நிறுத்தி விட்டார்
தேர் இழுக்க முடியாமல் திணறுதே சனங்களெல்லாம்
அப்போது ஆசாரி அவனுமங்கே ஏது சொல்வான்
வாருமம்மா தாமரையே வளநாட்டு உத்தமியே
மதுக்கரைச் செல்லி மாகாளி அம்மனுந்தான்

தேருக்கு நரபலிதான் திடமாக வேண்டுமென்று
தேரும் அசையாமல் நிறுத்தி விட்டாள் செல்லாயி
தேருக்குத் தலை கொடுக்க தேடுமம்மா மானிடரை
என்றுதான் ஆசாரி இப்படிக்குச் சொல்லையிலே
அப்போது தாமரையாள் அவள் மனதில் தான் நினைந்து

தேருக்குத் தலை கொடுக்க தேடுவது யாரை இப்போ
மன்னவரும் நாமும் மகிழ்ந்து தலை கொடுப்போம்

என்று மனதிலெண்ணி எழுந்தாளே தாமரையும்
வாருமையா மன்னவரே வார்த்தை சொல்லக்கேளுமினி
தேருக்குத் தலை கொடுத்து செத்து மடிந்திடுவோம்
என்றுமே தாமரையும் இழுத்துவந்து மன்னவரை
மன்னவர் ஒரு பக்கம் மனைவி ஒரு பக்கமுமாய்

சக்கரத்தின் முன்னாலே தலை கொடுத்தாள் தாமரையும்
இந்த அதிசயமும் யார்க்குத் தெரிந்தது என்றால்
ஆலிலைமேல் பள்ளி கொள்ளும் அரிராமர் தானறிந்தார்
தேக்கிலைமேல் பள்ளி கொள்ளும் தெய்வகிருஷ்ணன் தானறிந்தார்

வட்டமாங் கருடனேறி வாராரே எம் பெருமாள்

செந்தலைக் கருடனேறி சீக்கிரமேதானும் வந்து
மதுக்கரை தேடியே வாராரே மாயவரும்
வந்துமே மாயவரும் வகையாகச் சூதுகளை
கண்டாரே மாயவரும் கண் கொள்ளாக் கோபமுடன்
எட்டி உதைத்தாரே தேரை இடது நல்ல காலாலே

எட்டி உதைக்கையிலே தேரு இடறி விழுகுதங்கே
காவேரி ஆற்றுக் கரை மடுவில்போய் விழுக
தேரை விட்டு செல்லாயி திரும்பி வருகையிலே
அப்போது மாயவரும் அவருமங்கே தான் பார்த்தார்
வாருமடி செல்லாயி வரிசையுடன் உந்தனுக்கு

தேரு நடத்தி வைத்த தேவியை நீ கொல்ல வந்தாய்
உத்தமியைக் கொல்ல உனக்கு மனம் வந்ததோதான்
பத்தினியைக் கொல்லவேதான் பாதகத்தி நீ நினைத்தாய்
இதிலிருந்து உந்தனுக்கு ஏழேழு சென்மத்துக்கும்
தேரும் நடக்காது திருவிழாவும் கூடாது

என்று சாபம் கொடுத்தாரே சாமி பெருமாளும்
சாபம் கொடுத்து விட்டு சுவாமி மறைந்து விட்டார்
அப்போது தாமரையும் அவளுடைய மன்னவரும்



தூங்கி எழுந்தவர் போல துடுக்காய் எழுந்தார்கள்
தேர் விழுந்து காவேரி மடுவில் மறையுதப்போ
தங்கக் கலசமது தாமரையாள் கண்ணுக்குத்
தெரிந்ததாம் அப்போது தேரின் கலசமது
புண்ணியம் செய்தவர்க்குப் புலப்படும் கலசமது

கண்டாளே தாமரையாள் கண்செய்த பாக்கியம்போல்
மதுக்கரை அம்மனையும் வணங்கிவிட்டுத் தாமரையும்
மன்னவரைக்கூட்டி வளநாடு வந்தாளே
வந்தாள் வளநாடு மன்னவர் தானுமப்போ
மனது மிகவும் நொந்து வாடியிருக்கையிலே

என்ன தர்மம் செய்தாலும் எடுத்தணைக்கப் பிள்ளையில்லை
ஊரார்கள் செய்யாத உற்றபிழை செய்தோமா?
கூலி குறைத்தோமா? குறை மரக்கால் அளந்தோமா?
பிச்சைக்கு வந்தவனைப் பின்னே வரச்சொன்னோமா?
அன்னமென்று வந்தவரை அடித்துத் துரத்தினோமா?

ஆண்டியை அடித்தோமா? அநியாயம் செய்தோமா?
பார்ப்பாரை அடித்தோமா? பால்பசுவைக் கொன்றோமா?
பங்காளி வயல்வரப்பை பாதி வெட்டிப் போட்டோமா?
சாமி சொத்தைத் தின்றோமா? தருமம் கெடுத்தோமா?
அநியாய வட்டி பெற்று அபகீர்த்தி பெற்றோமா?

காட்டிக் கொடுத்துவிட்டுக் காசு பெற்றுக்கொண்டோமா?
ஏழைகளின் நிலத்தையெல்லாம் எழுதிப் பறித்தோமா?
மற்றொருவன் பங்குக்கு வாய்ஊறி நின்றோமா?
என்னகுறை செய்தோம் நாம்? எங்களுக்கு பிள்ளையில்லை!
என்றுமிக அழுதே இதயம் மிகக் கலங்கி

மாண்டிடுவோம் என்று மனதில் மிகத் துணிந்தார்
இந்த அதிசயமும் ஈஸ்வரனார் தானறிந்து
வாராயுமையவளே வார்த்தைசொல்லக் கேளுமினி
உன்னைப்போல் பெண்ணொருத்தி உலகத்தில் தானிருந்து

பிள்ளைகளுமில்லாமல் பெருங்கவலை கொண்டேதான்
மைந்தனும் இல்லாமல் மனக்கவலை உண்டாகி
மன்னனும் தேவியுமாய் மடிந்திடவே திட்டமிட்டே
இருக்கின்றாரிப்போது ஈஸ்வரியே நானுமிப்போ
பஞ்சாங்க வேதியன்போல் பார்ப்பான்போல் வடிவெடுத்து

தாமரைக்குப் பஞ்சாங்கம் தான்சொல்லப் போய்வாரேன்
என்று சிவனாரும் எழுந்தாரே கைலைவிட்டு
பஞ்சாங்க வேதியனாய்ப் பார்ப்பான்போல் வடிவெடுத்து
வளநாடு தேடியே வாராரே ஈஸ்வரரும்
தாமரையாள் வீட்டுக்குத் தான்வந்து ஏதுசொல்வார்

வாருமம்மா தாமரையே வார்த்தை சொல்லக் கேளுமம்மா
(நீ) செய்யும் தருமங்கள் சேதியினைக்கேட்டு வந்தேன்
தர்மமும் கேட்டிடவே தான்வந்தேன் உத்தமியே
என்றுமே ஈஸ்வரனார் இயல்பாயுரைக்கையிலே
அப்போது தாமரையாள் அருளும் முகம்வாடி

செய்யாத தானமில்லை செலவழியாப் பொன்னுமில்லை
என்ன தர்மம் செய்தாலும் எந்தனுக்குப் பிள்ளையில்லை
மனது மிக வாடி வார்த்தையது சொல்லையிலே
அப்போது ஈஸ்வரனார் அவளுக்கெடுத்துரைப்பார்
அஞ்சிக் கலங்காதே அம்மா! ஆலோசித்து ஏங்காதே!

அம்பலத்துக்காணுமுண்டு அடிக்கிளைக்குப்
பெண்ணுமுண்டு
பொன்னம்பலந்தனிலே போய்நீ தவமிருந்தால்
தன்னாசி கோவிலிலே தவமிருந்து வரங்கேட்டால்
தன்னாசி மனமிரங்கி சாமி வரங்கொடுப்பார்
என்றுசொல்லி ஈஸ்வரரும் ஏகிமறைந்துவிட்டார்

அப்போது தாமரையாள் அங்கம் மிகமகிழ்ந்து
தன்னுடைய பர்த்தாவைத் தானழைத்து ஏதுசொல்வாள்
பொன்னம்பலந்தனிலே புகழ்பெரிய கோவிலிலே
தன்னாசி கோவிலிலே சாமி மனுக்கேட்க வேண்டும்



அங்கேயும் போய் நாம் அநேகநாள் தவமிருப்போம்
நாம் போய்வருமளவும் நம்முடைய திரவியத்தை
வீட்டில் வைத்துப்போனாலோ விடமாட்டார் பங்காளி
வேறு ஒரு மன்னரிடம் விட்டு நாம் போவோமென்றாள்
அந்த மொழிகேட்டு குன்றுடையான் அப்போது
ஏதுசொல்வான்

மேனாடு கொடியரசு வேட்டுவரின் ராஜகுலம்
சாந்தப் பாடிதனியரசு தனத்தில் மிகுந்தவர்கள்
அவரிடத்தில் கொண்டுபோய் அடைக்கலம் வைத்திடுவோம்
என்றுமே குன்றுடையான் யோசனைகள் சொன்னாரே
ஐங்கலத் திரவியத்தை ஆனைமேல் பொதி போட்டு
பொதி போட்டுச் செல்வமுடன் புறப்பட்டார் மேநாடு

## தாமரையாள் தன் திரவியத்தை மேனாடு கொண்டு செல்லுதல்

வளநாடு தானும்விட்டு வாராரே மேல்தேசம்
மேனாடு தானோக்கி வெகு துரிதாய்த் தானடைந்தார்
பட்டக்காரன் தன்னிடத்தில் பாங்காக வந்தார்கள்
மேனாட்டுப் பட்டக்காரன் விபரமது கேட்கின்றான்
எந்தவூர் எத்தேசம் எங்கிருந்து இங்கு வந்தீர்

உன் ஊரேது பேரேது உத்தாரம் சொல்லுமென்றார்
அப்போது தாமரையாள் அவருக்கெடுத்துரைப்பாள்
நாங்க வளநாடு தேசமையா மன்னவரும் நான் தானும்
பங்காளி பயத்தாலே பணத்தைக் கொண்டு வந்தோமையா
வரத்துக்குப்போய் நாங்கள் வருமளவும் உம்மிடத்தில்

வைத்திருந்து என் பணத்தை வந்தவுடன்
கொடுங்களென்றாள்
அப்படியே நல்லதென்று அந்த ஒரு ராஜாவும்
கணக்கன் தன்னை அழைத்து கட்டுங்கள் பணத்தையென்றார்

பணத்தையெல்லாம் எண்ணியுமே பாங்காக வையுமென்றா
அந்தப்படி கணக்கன் அளந்துமே தானும்வைத்து
பொக்கிசச் சாலையிலே போட்டான் திரவியத்தை
அப்போது தாமரையாள் அவரிடத்தில் சொல்லுகிறாள்
வாருமையா ராஜாவே வார்த்தை சொல்லக் கேளுமையா

புத்திரவரம் வாங்கப் பொன்னம்பலம் போகிறேன் நான்
வரம் வாங்கி வந்தபின்பு நான் வாங்கியே போகின்றேன்
என்றுமே தாமரையாள் இளங் கொடியும் சொல்லையிலே
பட்டக்காரன் தானும் பார்த்தானே அப்போது
இருவரையும் தான்பார்த்து என்ன நினைத்தானாம்

அவளையே பார்த்தாலே ஆதிமகா லெட்சுமிபோல்
இவளையே பார்த்தாலே இழித்தவாய்க் கிழவனைப்போ
மருந்துவைத்து குன்றுடையான் வல்லுயிரை வாங்கிவிட்
வைப்பாட்டியாகவே வைத்திடுவோம் தாமரையை
எண்ணி நினைத்தானே இரக்கமிலாச் சண்டாளன்

விருந்துக்கழைத்தாலே வெகுவிரைவில் வந்திடுவான்
சோற்றிலே நஞ்சை வைத்துத் தொலைத்திடுவோம்
என்றேதா

விருந்து சமைத்தார்கள் விபரமில்லா வேட்டுவர்கள்
சங்கதிகள் எல்லாம் ஓர் தாய்க்கிழவி தான்கேட்டு
தாமரைப் பத்தினியே தர்மமுள்ள உத்தமியே

உத்தமா பத்தினியே ஒரு சொல்லு வாசகியே
ஒரு நிமிஷம் நிற்க வேண்டாம் ஊரு போய் சேருமம்மா
என்று கிழவி சொல்ல எழுந்தாளே தாமரையும்
அப்போது பத்தினியும் அருங்கிளியும் ஏது சொல்வாள்
வாருமையா ராஜாவே வளநாடு போகவே தான்

என்னுடைய திரவியத்தை எனக்குக் கொடுமென்றாள்
அப்போது பட்டக்காரன் அவனுமங்கே ஏது சொல்வான்
பணமேது காசேது இவளைப் பதைக்க அடியுமென்றான்
காசேது பணமேது இவளைக் கட்டி அடியு மென்றான்



அடியுமென்ற சொல் கேட்டு அங்கம் பதறுகிறாள்
கட்டியடி என்றதுமே கனலாக தீயாகி
என்பணத்தை நீ பறித்து என்னை அடிக்கச் சொன்னாய்
பணத்துக்கு பதிலாக மேனாடு பிணமலையை நான்
குவிப்பேன்

தாசுக்குப் பதிலாக மேனாடு கர்ப்பம் கருவறுப்பேன்

என்று சபதமிட்டே தாமரை ஏகி வழி நடந்தாள்
வளநாடு தானோக்கி வந்தாளே உத்தமியும்
மன்னவரைக் கூட்டியேதான் வளநாடு தானும் வந்து
பொன்னம்பலத்துக்குப் போகவென்று தாமரையும்
கட்டுச்சாதம் கட்டியே தாமரை கடுகிப் பயணமானாள்
இப்படியாக இவர்கள் இருக்கையிலே

## தாமரையாளிடம் கோபித்துப்போன பன்றி திரும்பி வருதல்

தாமரையாள் வளர்த்த பன்றியது தானுமப்போ
தாமரையைப் போல தானும் மலடாயிருக்க
வரத்துக்கு போகிறதை பன்றி வந்து வழிமறிக்க
வழியை மறித்துப்பன்றி வாதாட்டம் செய்திடுமாம்
அப்போது தாமரையும் அருங்கிளியுமேது செய்தாள்

வளர்த்திய பாசத்தினால் பன்றி வந்ததுவே என்று எண்ணி
சோறுகளும் கொண்டு வந்து தொட்டியிலே தான்போட்டாள்
சாதமது தின்னாமல் பன்றி சகுனத்தடை செய்கிறது
சண்டையதுபோட்டு பன்றி தடத்தை மறித்ததுவே
சகுனத்தடை ஆகுதென்று தானுமந்த பத்தினியாள்

இடது காலாலே பற்றியை எட்டி உதைத்தாளே
கோபித்துப் பன்றியது கொக்கரித்துச் சொல்கிறது
வாருமடி தாமரையே வளநாட்டு உத்தமியே
உன் வயிற்றிலே இரண்டு உத்தமர்கள் பிறப்பார்கள்
என் வயிற்றுக்குட்டியது உன் இளைய மைந்தனையும்

குத்திக்குடல் பிடுங்கி குலவையிட்டுக் கொன்றுவிடும்
என்றுமே பன்றியது இச்சபதம் தான்போட்டு
பத்ரகாளி கோவிலுக்கு பாங்கான பன்றியது
வரம்கேட்கப் பன்றியது வந்ததுவே கோவிலுக்கு
கோவிலுக்கு வந்தபன்றி குலவையிட்டுச் சொல்கிறது

வாருமடி தாயே எனக்கு வரங்கொடுக்க வேணுமம்மா
புத்திர வரமெனக்குப்போதக் கொடுக்க வேண்டும்
ஐந்துகுட்டிக் கிளையகுடடி அதிகபல முள்ள குட்டி
நாலுகால் வெள்ளைபடை நடுத்தலை சுட்டியது
எழுதபடிக் கொம்பன் எதிர்த்தாரை மார் பிளக்கும்

வேப்பிலைக் கொம்பன் வெகு சமர்த்துள்ள குட்டி
சங்கரைக் கொல்ல சமர்த்துள்ள குட்டியது
என்றன் வயிற்றிலேதான் இனிப்பிறக்க வேண்டுமம்மா
என்று சொல்லிப் பன்றியது இந்தவரங் கேட்கையிலே
பத்ரகாளி மாதாவும் பாங்குடனே ஏது சொல்வாள்

சங்கருட வாளாலே பன்றி சாக வரங் கொடுத்தாள்
வரம் வாங்கிப் பன்றியது வந்ததுவே மேல்தேசம்
இப்படியாக இருக்குமந்த வேளையிலே
தாமரையாள் பத்தினியும் தன்னுடைய மன்னவரும்
எண்ணி மனங்கலங்கி இருக்குமந்த வேளையிலே

அப்போது மாயவரும் அரிராமர் ஏதுசெய்தார்
பஞ்சாங்க வேதியன்போல் பார்ப்பான் வடிவெடுத்து
தாமரையாள் வீட்டுக்குத்தான் வந்தாரப்போது
வந்ததொரு ஐயரையும் வணங்கிப் பணிகள் செய்து
நின்று மனஞ்சலித்து நெடுங்குறை சொல்லையிலே

வாருமினித் தாமரையே வார்த்தை சொல்லக் கேளுமினி
பொன்னைப் படைத்து நீ பூமியிலே தர்மம் செய்தாய்!
தங்கம் படைத்து நீ தரணியிலே தர்மம் செய்தாய்!
பொன்னைச் செலவழித்தால் புத்திரருண்டாகுமென்று
தொன்னூறும் பத்தும் வயது தொலைந்திட்டது



முன்னே நரைத்ததம்மா முகமே வெளுத்ததம்மா!!
பக்கம் நரைத்ததம்மா! பாதிவய தானதம்மா!!
மேனி தளர்ந்ததம்மா! மெத்தவய தானபின்பு
காய்க்கும் ஒரு பருவம் கன்னிகட்டும் காலமெல்லாம்
பூக்கும் பருவமது பூமாறிப் போனபின்பு

மண்டலத்தார் போலே மைந்தனை எடுக்கலாமா?
உலகத்தார்போல உத்தமியே ஈன்றெடுத்தால்
உலகம் நகைக்குமம்மா ஊரும் சிரிக்குமம்மா
மைந்தன் கவலை மனக்கவலை தீர்வதற்கு
மனக்கவலை தீர வகையுனக்குச் சொல்லுகிறேன்

வடகிழக்கு மூலையிலே மகாபெரிய சன்னதிதான்
பொன்னம்பலமென்று புகழ்பெரிய சன்னதிதான்
சன்யாசியார் வந்திறங்கி சதிராடித்தானிருந்து
சன்யாசியாரெல்லாம் சதாசிவனைத் தொழுகிறது
சன்யாசி கோவிலுக்கு தவத்துக்குப் போனாயானால்

சித்தம் இறங்கியவர் திருவாக்குச் செய்திடுவார்
வாக்கு மனுப்படிக்கு மைந்தன் பிறந்திடுவான்
மைந்தன் கவலை மனக்கவலை தீர்ந்துவிடும்
பிள்ளைக்கவலை உனக்கு பெருங்கவலை தீர்ந்துவிடும்
பொன்னம்பலத்துக்குப் போவாய்நீ தாமரையே!

அந்த மொழிகேட்டு தாமரை அப்போ மனங்குளிர்ந்து
பொன்னம்பலந் தேடிப் போக மனந்துணிந்தாள்

## தாமரையாள் புத்திரவரத்துக்குப் போகுதல்

தன்னுடைய பர்த்தாவைத் தானும் அழைத்துக்கொண்டு
அடுக்கரளி செவ்வரளி ஆனமுல்லை இருவாட்சி
கொத்தரளி கொடிமல்லிகை கொடிபடர்ந்த செண்பகப்பூ
வெட்டிவேர் மரிக்கொழுந்து வில்வபத்ரம் தானெடுத்து
சிவனார்க்குகந்ததென்று செவ்வந்திப் பூக்களுடன்

புஷ்பங்கள் தானெடுத்து பூக்குடலை தானடுக்கி
திருப்பூக்குடலை திருப்பெட்டி தோள்போட்டு
பூப்பெட்டி தோள்போட்டு பொன்னம்பலம்தேடி
பொன்னம்பலம்தேடி போராரிருவருமாய்
சன்னியாசியார் கோவிலுக்குத் தவத்துக்குப் போகையிலே

பொன்னம்பலமென்று புகழ்பெரிய சன்னதியில்
சன்னியாசியார் வந்திறங்கி சதிராடித்தானிருந்து
சன்னியாசி அய்யரெல்லாம் சதாசிவனைத் தொழுகிறார்கள்
ஜெயகண்டி தான் முழங்கித் திருச்சின்னம் தான்பிடித்து
கடல் முழக்கமாகவே கைலாசநாதரைத் தொழுவார்

இதுவே சமயமென்று இருவருமே ஓடிவந்து
சன்னியாசியார் பாதம் சரணம் பணிந்திடுவார்
அட்டம் பணிகள் செய்து அடிவணங்கித் தெண்டனிட்டு
பன்னீர்ச் செம்பெடுத்து சன்னியாசியார் பாதம் கழுவியேதான்
புஷ்பங்கள் தானெடுத்து சன்னியாசியார் பொற்பாதத்தில்போட்டு

மைந்தன் வரங்கொடுத்து என்மனக்கவலை தீருமய்யா
பிள்ளைக்கவலை என்பெருங்கவலை தீருமையா
மைந்தன் வரங்கேட்டுந் தாமரை வகையாய் மண்டியிட்டு
ஏந்தி இருகையை எனக்கு வரம் தாருமென்றாள்
மைந்தன் வரங்கேட்டு வாக்குமனு கேட்கையிலே

ஜெயகண்டி தான்முழக்கி திருச்சின்னந் தான்பிடித்து
சன்னியாசியார்தான் சதாசிவனைத் தொழுகையிலே
சன்னியாசி ஐயருக்கு சதாசிவன் சன்னத்தம் ஆகியேதான்
தாண்டிக் குதித்தெழுந்து தண்டை மிதிமிதித்து
தண்டை மிதிமிதித்து சிதம்பரத் தாண்டவமாடி வாரார்
முத்தான வாய்திறந்து உத்தரவு சொல்லுகிறார்



வாருமினித் தாமரையே வார்த்தைச் சொல்லக் கேளுமினி
மானிட ஜீவனுக்கு வயது நூறுதானுமுண்டு
சன்னியாசி கோவிலுக்கு நீ தவத்துக்கு வந்திட்டாயே
வயது நூறு கேட்டாயானால் அப்படி வாக்குமனு இல்லையிங்கே

பதினாறு வயது கேட்டால் பாலன் வரங்கொடுப்போம்

அந்த மொழிகள் சொல்ல தாமரையாள் அப்போது மனங்குளிர்ந்து

ஈனா மலடிநான் சுவாமி ஈன்றெடுத்தால் போதுமினி
பெறாத மலடிநான் பெற்றெடுத்தால் போதுமினி
பதினாறு வயதினிலே தான் சுவாமி பாலன் வரந்தர வேண்டும்

போதும் போதுமென்று தாமரை புத்திர வரங்கேட்கையிலே

சித்தம் திரும்பியேதான் சன்னியாசி திருவாக்குச் சொல்லுகிறார்

வாருமினித் தாமரையே வாக்குமனுச் செய்தேனினி
பதினாறு வயதினிலே பாலன் வரங்கொடுத்தேன்
வயது பதினாறுக்கு மைந்தன் வரங்கொடுத்தேன்
பொன்னைப் படைத்துநீ பூமியிலே தர்மமிட்டாய்

பொன்னைச் செலவழித்தாய் பொன்னரையும் பெற்றெடுப்பாய்

தங்கம் செலவழித்தாய் சங்கரையும் பெற்றெடுப்பாய்
புஷ்பம் சொரிந்ததற்கு பொற்கொடியைப் பெற்றெடுப்பாய்
அம்பலத்துக்காண் கொடுத்தேன் அடிக்கிளைக்குப் பெண்கொடுத்தேன்

மைந்தன் வரங்கொடுத்து வாக்குமனுச் செய்தேனினி

வாடாத் திருமாலை சுவாமியுட வாங்கழுத்தில் சூடினதை
மாலையைத் தானெடுத்து வலதுகையில் தான்கொடுத்தார்
வாக்கு மனுவையெல்லாம் தாமரை வாங்கி மடியில்கட்டி
மற்றுமொருக்கால் மகாதேவரைத் தெண்டனிட்டு
என் ஆசார வாசலுக்கு அடிமைப் பறையன் வேணும்

என்றுதான் தாமரையாள் இருகையுமேந்தி நிற்க
பார்த்துச் சிவனாரும் பரிவாகத் தானருளி
ஆறானைப் பலமுடைய அருமதலை தான் கொடுத்தார்
வாக்கு மனுவாங்கி வாராரிருவருமாய்
வளநாடு தேடியே வாரார்களப்போது

வந்தங்கே ஊரிலேதான் வகையாக வீற்றிருந்தார்
வாக்கு மனுவாங்கினதை சுவாமி மகாதேவர் தானறிந்து
சித்தம் தெளிந்து சுவாமி சிவனார் மனம்தெரிந்து
மாயன் பெருமாளை வரவழைத்தார் மகாதேவர்
ஆயிரம் நாமமுள்ள அச்சுதா கோவிந்தா

ஓரடியாய் புவியளந்த உலகளந்த மாயவனே
வாருமினி என்றுசொல்லி வரவழைத்தார் மகாதேவன்
வைகுந்தம் பதியிருக்கும் மாயவரும் ஓடிவந்தார்
பாதஞ் சரணமென்று சுவாமி பாதம் தான்வணங்கி
அட்டம் பணிகள்செய்து அடிவணங்கித் தெண்டனிட்டு

வணங்கிப் பணிகள்செய்து வணக்கமுடன் நிற்கையிலே
மாயன்முகம் பார்த்து மகாதேவர் சொல்லுகிறார்
வாருமினி மாயவரே வார்த்தைச் சொல்லக் கேளுமினி
பூலோக மண்டலத்தில் தாமரை பிள்ளைக் கவலைக்
கொண்டு
மைந்தன் கவலை மனக்கவலையுண்டாகி

செய்யாத தருமமெல்லாம் செய்து செலவழித்தும்
என்ன தர்மம் செய்தாலும் ஈடேற்றம் இல்லையென்று
பொன்னம்பலத்துக்கு அவர்போய் வரமும் கேட்டாரே
சன்னியாசி கோவிலிலே தவமிருந்து வரம்கேட்க
சன்னியாசி ஐயர் சதாசிவனைத் தான்தொழுது

சன்னத்தம் ஆடியவர் சொன்னதையே கேளுமினி
பதினாறு வயதென்று பாலன் வரம் கொடுத்தார்
வயது பதினாறு என்று மைந்தன் வரம்கொடுத்தார்



பொன்னர் சங்கர் பிறப்பாரென்று போதவரங் கொடுத்தார்
சன்னத்தம் ஆடியவர் சொன்படிக்குநாம்
பதினாறு வயதுக்குப் பாலன் அனுப்பவேண்டும்
பொன்னர் சங்கராய்ப் பிறக்க பூலோகம் போகணுமே
பாருலகில் மன்னவரைப் பஞ்சவரை நீ அழைத்து

பூலோக மண்டலத்தில் போக அனுப்புமினி
சிலை வீரரைவரையும் சீக்கிரமாய் நீ அனுப்பு
அந்த மொழிகள் சொல்ல மாயன் அப்போ மனங்குளிர்ந்து
வைகுந்தம் பதியிருக்கும் வாள் வீர ரைவரையும்
வாள் வீரரிருவரையும் வரவழைத்தார் மாயவனார்

வாருமினித் தர்மராஜா வார்த்தைசொல்லக் கேளுமினி
பூலோக மண்டலத்தில் (குன்றுடையான்) பிள்ளைக்
கவலைக்கொண்டு
மைந்தன் கவலை மனக்கவலையுண்டாகி
செய்யாத தர்மமெல்லாம் செய்து செலவழித்து
என்ன தர்மம் செய்தாலும் ஈடேற்றவில்லை என்று

பொன்னம்பலத்திலே அவர்போய் வரமுங்கேட்கையிலே
சன்னியாசி ஐயரவர் சதாசிவனைத் தான்தொழுது
சன்னத்தமாடியவர் சொன்னதைக் கேளுமினி
பதினாறு வயதுஎன்று பாலன் வரம் பொருந்தியேதான்
வயது பதினாறு என்று மைந்தன் வரங்கொடுத்தார்

பொன்னர் சங்கர் தோன்றிப் புகழ்பெறுவார் என்றுமேதான்
மைந்தன் வரங்கொடுத்து வாக்குமனுச் செய்தபடி
சொன்னபடி மகாதேவர் செலுத்தவேண்டுமென்று
சொன்னார்
பாருலகில் மன்னவரை பஞ்சவரை நீ அழைத்து
பொன்னர் சங்கராய்ப் பிறக்க பூலோகம் நீ அனுப்பு

சித்தம் திரும்பியேதான் சுவாமி திருவாக்குச் செய்தபடி
வாக்கு மனுப்படிக்கு நீங்கள் வையகத்தில் போகணுமே

அந்த மொழிகள் சொல்லி அரிராமர் சொல்லலுற்றார்
வாருமினித் தர்மராஜா சிலநாள் வையகங்கள் ஆண்டிருந்து
பாருலகு பதியாண்டு நீங்கள் பரலோகம் வாரபோது
வேடுபலிமூண்டு வேட்டுவர் உங்களையும் வினைப்போரு
செய்யவந்தார்
வினைப்போரு செய்ய நீங்கள் வீரியமும் பத்தாமல்

சவுரியமும் பத்தாமே நீங்கள் தாட்சிணையாய் வந்தீர்கள்
பதினாறு வயதுக்கு நீங்கள் பாருலகில் போய்ப்பிறந்து
பூலோகமண்டலத்தில் பொன்னர்சங்கரென்று சொல்லி
பதினாறு வயதுக்குப் பாருலகை ஆண்டிருந்து
பதினாறு முடிந்து நீங்கள் பரலோகம் வாரபோது

வேடுபலி மூண்டு வினைவந்து நேருமப்போ
வேலெடுத்தே விளையாடி வாள்சுழற்றிக் களம்தாண்டி
வேடுபடை பொருந்தி நீங்கள் வினைப்போரு செய்திடுவீர்
படைப்போரு மேலே உங்களைப் பரலோகம்
சேர்க்கிறேனான்
வினைப்போரு மேலே உங்களை வைகுந்தஞ்
சேர்க்கிறேனான்

அந்த மொழிகள் சொல்லி ஆயன் அப்போது சொல்லுகிறார்
வாருமினிப் பஞ்சவரே உங்களை வகுப்புப் பிரிக்கிறேனான்
தருமவீமருந்தான் தார்வேந்தர் வாருமென்றார்
அந்த மொழிகேட்டுத் தருமர் அடிவணங்கித் தெண்டனிட்டு
வணங்கிப் பணிகள் செய்து வந்துநின்றார் மாயன்முன்னே

வாருமினி தர்மராஜா வாக்குமனுச் செய்தேனினி
குன்றுடையான் தேவி குலம்பெரிய நாச்சியர்க்கு
புத்திரருமாக உத்தரித்துப் பாலருமாய்
பொன்னர்சங்கரென்று சொல்லி பூலோகம் போய்பிறந்து
பதினாறு வயதுக்குப் பாலகனாய்ப் போங்களென்று

சித்தம் திரும்பியேதான் மாயன் திருவாக்குச் செய்தபடி
வாக்கு மனுப்படிக்கு வாரார் இருவருமாய்



அர்ச்சுனா! என் நகுலா ஆன சகாதேவா
அர்ச்சுனரே வாருமென்று அரிராமர் தானழைக்க
அப்போது அர்ச்சுனனும் அடிவணங்கித் தெண்டனிட்டு
வணங்கி பணிகள் செய்து வந்துநின்றார் மாயன் முன்னே
அர்ச்சுனார் முகம் பார்த்து அரி ராமர் சொல்லுகிறார்

வாருமினி அர்ச்சுனரே வாக்குமனுச் செய்தேனினி
குன்றுடையானுடன் பிறந்த மலைக்கொழுந்தாளுக்கு
மலைக்கொழுந்தாளுக்கு நீங்கள் மைந்தருமாய்ப்போய்ப்
பிறங்கள்
நம் பெருமாள் மகனென்று நாடறியப் போய்ப்பிறங்கள்
சித்தம் திரும்பி ஆயன் திருவாக்குச் செய்தபடி

வாக்கு மனுப்படிக்கு வாரார்கள் மூவருமாய்
பத்தினி துரோபதையை ஆயன் பாங்காய் வரவழைத்து
வாருமினித் தங்கையரே என்று தானழைத்தார் மாயவனார்
பத்தினி துரோபதையே! பாஞ்சாலன் தன்மகளே!
அனலில் பிறந்தவளே ஆகாச கேசரியே!

தீண்டா நெருப்பே! துரோபதையே பாஞ்சாலி!
அர்ச்சுனர்க்குப் பாரியென்று ஐவருக்கும் தேவியென்று
ஐவரையும் காக்கவந்த ஆதிகுல தேவதையே!
வாருமினித் தங்கையரே! நானொரு
வார்த்தைசொல்லக்கேளுமம்மா!
பூலோக மண்டலத்தில் குன்றுடையான் பிள்ளைக்
கவலைகொண்டு

மைந்தன் கவலை மனக்கவலையுண்டாகி
பொன்னம்பலத்தினிலேபோய் வரமுங் கேட்கையிலே
சன்னியாசி கோவிலிலே தவமிருந்து கேட்கையிலே
சன்னியாசி அய்யர் சதாசிவனைத் தான் தொழுது
சதாசிவம் சன்னத்தமாடி அவர் சொன்னதையே கேளுமம்மா
பதினாறு வயதென்று பாலன் வரம் பொருந்தியேதான்

வயது பதினாறுமேதான் மைந்தன் வரங்கொடுத்தார்
பொன்னர்சங்கர் பிறப்பாரென்று போத வரங்கொடுத்தார்
சன்னியாசி சொன்னபடி மகாதேவர் தான்செலுத்த வேணுமென்று
பாருலகில் மன்னவரை பஞ்சவர்கள் ஐவரையும்
பொன்னர்சங்கராய்ப் பிறக்கபோ யனுப்பிவையுமென்று

சித்தம் திரும்பியே சுவாமி திருவாக்கு செய்தபடி
வாக்குமனுப்படிக்கு வாள்வீரரிருவரையும்
பூலோக மண்டலத்தில் போக அனுப்பிவைத்தோம்
பதினாறு வயதுக்குப் பாலகனாய்ப் போய்ப்பிறந்து
பதினாறுமுடிந்து அவர்கள் பரலோகம் வரும்போது

வேடுபலி மூளும்வினைவந்து நேருமப்போ
வேடுபடை பொருதி வினைப்போரும் செய்திடுவார்
வாங்காப் படைபொருதி மடிந்த களமாகிவிடுவார்
மாண்டவரை நீயெழுப்பி வைகுந்தம் வாருமம்மா!
இறந்தவரையெழுப்பி உத்தமிநீ இங்குவந்து சேருமம்மா

அந்த மொழிகள் சொல்லி அரிராமரேது சொல்வார்
வாருமினித் தங்கையரே! வார்த்தைசொல்லக் கேளுமம்மா!
அர்ச்சுனப் பெருமாளே அத்தை மகனாய்ப் பிறந்தார்
நீ மாமன் மகளும் மச்சினியாய்ப் போய்ப்பிறந்து
குன்றுடையான்தேவி குலம் பெரிய நாச்சியர்க்கு

பத்திரியுமாக உத்தரித்து போகுமம்மா
பொன்னர்சங்கருடன் பிறந்து பொற்கொடியாள் தங்கமென்று
நல்லதங்காளென்று சொல்லி நாடறிய நீ பிறப்பாய்
ஆயன் சித்தம் திரும்பியேதான் திருவாக்குச் செய்தபடி
வாக்குமனுப்படிக்கு அவர்கள் வந்தார்கள் வையகத்தில்

பொன்னர்சங்கரென்று சொல்லி பூலோகம் வந்தார்கள்
இந்தப்படியாக இவர்களிருக்கையிலே



## அத்தை மலைக்கொழுந்தி பிள்ளைவரம் வாங்குதல்

அத்தை மலைக்கொழுந்தி அரிராமர் சன்னதியில்
மகாதீர்த்தமாடி மதுரைக் கடலாடி
மாமங்கமாடி மகாதிருப்பாற் கடலாடி
கோதானம் ஈந்து கோபாலர் சன்னதியில்
ஆதி ரகுராமரையும் அச்சுதரைத் தானினைந்து

நந்தா முகுந்தா நாராயணரே போற்றியென்று
திருப்பாற்கடல் துயிலும் சீதா மனோகரனே
என் மைந்தன் கலிதீர்த்து வரங்கொடுப்பாய் ரகுராமா
என் பிள்ளைக்கவலையை பெருங்கவலை தீர்த்தருளும்
ஆதிரகுராமா எனையாட்கொள்ள வேணுமய்யா

அத்தை மலைக்கொழுந்தி ஆயன் திருச்சன்னதியில்
மகா தானம் செய்து மாயவனார் சன்னதியில்
அட்டம்பணிந்து அடிவணங்கித் தெண்டனிட்டு
சன்னதியில் காத்திருந்தாள் தப்பாமலைக்கொழுந்தி
மங்கை அலமேலு மனதிரங்கி ஏதுசொல்வாள்

சீதை மனதிரங்கி திருமாலுக்கேதுரைப்பாள்
இந்த மங்கை மலைக்கொழுந்தி மாதாவும் தான்பணிந்து
ஏந்து குழந்தைக்காக இங்குவந்து நிற்கிறாளே
மைந்தன் குழந்தைக்காக மாயவரே உம்மிடத்திலே
பணிவிடைகள் செய்து பாங்காயிருக்கின்றாளே

அவளுக்கொரு புத்திரரை அருளுவீர் மாயவரே
என்றுரைக்க அலமேலு மேகவண்ணர் தான்பார்த்து
சந்தோஷப்பட்டு தையல் மலைக்கொழுந்தியர்க்கு
உனக்கு புத்திரபாக்கியமும் போதவே நாம்கொடுத்தோம்
உனக்கு புத்திரரிரு மூன்றுமுண்டு பேருசொல்ல நீர்கேளும்

அத்தைபிள்ளை அத்தாவும் அம்மான் பெருமாளும்
செய்ய பெருமாளும் சிலைக்கேத்த வன்னியரும்

மூவர் பிறப்பார்கள் மும்மூர்த்தி ஆகவேதான்
ஆணாலழகனுமாய் ஆனந்த ரூபனுமாய்
வீராதி வீரனுமாய் வில்தொழிலுக் கேற்றவனாய்
வாள்சமர்த்துள்ளவனாய் வயது பதினாறுமதாய்
புத்திர பாக்கியம் போதவே நாம்கொடுத்தோம்

போய்வாருமென்று சொல்லி போற்றி விடைகொடுத்தார்
மாயவரும்போது மஞ்சன் கலிதீர்த்தார்
மும்மூர்த்தி யாகவேதான் மூன்று பிள்ளைதானீந்து
அந்த வரம்வாங்கி ஆயிழையாள் மலைக்கொழுந்தி
ஆயன் திருச்சன்னதியை அடைவாக வந்துசுத்தி

சாஷ்டாங்கமாக தயவாக தெண்டனிட்டு
முன்னூறு பொன்னும் முடிப்புமே தான்கொடுத்து
காணிக்கையாக கடுகியவள் தான்கொடுத்து
வாக்குவரம் வாங்கி மலைக்கொழுந்தி தானடந்தாள்
இராமருட சொற்படிக்கு நாயகியாள் தானிருந்தாள்
இப்படியாக இவரிருக்கும் வேளையிலே

## பொன்னர் சங்கர் தங்கை பிறப்பு

தாமரை பத்தினியாள் தாயாருமப்போது
வந்து வளநாட்டில் வகையுடனே தானிருந்தாள்
சன்னியாசி தன்னருளால் தாமரையும் கெர்ப்பமுற்று
மூன்றுமாத கெர்ப்பம் தாமரை முகமெல்லாம்
தான்வெளுத்து
ஆறுமாத கெர்ப்பம் தாமரை அடிவயிறுதான் கனத்து

பத்துமாதங்களுமே பாங்காய் முடிந்தபின்பு
பூரண கெர்ப்பம் பொற்கொடிக்கு அன்னேரம்
மருத்துவச்சி யில்லாமல் மாதாவும் தாமரையாள்
அத்தை மகனாரே அருமையுள்ள என்கணவா
மாமன் மகனாரே என்னை மாலையிட்ட பர்த்தாவே
மருத்துவச்சி தன்னையுமே வகையாய் அழையுமென்றாள்



அப்போது குன்றுடையார் அவருமங்கே ஏதுசெய்தார்
பாய்ச்சலூர் சென்று பங்காளிதன்னிடத்தில்
மருத்துவச்சி வேண்டுமென்று மசச்சாமி சொல்லையிலே
பங்காளி பதினொருபேர் பாதகர்கள் என்ன செய்தார்

## பங்காளிகள் மருத்துவக்கார குப்பாயியை அனுப்புதல்

பாய்ச்சலூர் பங்காளி பதினொரு பேர்களுமே
நமக்கு எதிராளி நல்லதொரு குன்றுடையான்
அவள் வயிற்றில் ஆண் பிறந்தால் நம்ம ஆயுசுக்கு
ஈனம்வரும்
அரப்பு விற்கும் கிழவியைப்போல் குப்பாயியைத்
தானழைத்து
அவனுட வாசலுக்கு அரப்புவிற்கப் போறாப்போல்

நீ போய் மருத்துவங்கள் நேராகத் தான்பார்த்து
ஆண் பிறந்தால் நீயும் அரைக்கணமே கழுத்தொடித்து
ஆழக்குழி பறித்து தாழப் புதைத்துவிடு
பெண்ணாகத்தான் பிறந்தால் பிரபலமாய் எண்ணெயிட்டு
எண்ணெயிட்டுக் குளிப்பாட்டி ஈன்றவள் தன் கைக்கொடுத்து

வந்த நல்ல நாழிகைக்கு வரிசைகளும் நாம் கொடுப்போம்
என்று சொல்லி குப்பாயியை அனுப்பிவிட்டார் பங்காளிகள்
அப்படியே நல்லதென்று அரப்புத் தலையில்வைத்து
அரப்புமே விற்க அவளுமங்கே வருகையிலே
மருத்துவச்சி இல்லாமல் வகையான குன்றுடையான்

அவ்வையார் எதிரில் வந்து அழைத்தங்கே கூட்டிவந்தான்
கோபமதுதானாகி சேர்ந்திருக்கும் வேளையிலே
சுக்கு நுணுக்குவாளாம் சூரணம் செய்வாளாம்
மிளகு நுணுக்குவாளாம் வெந்நீரு வைப்பாளாம்
மருத்துவச்சி செய்த வகைமோசம் தானறிந்து

வலது விலாவில் வகையான பொன்னருந்தான்
இடது விலாவில் இயல்பான சங்கருந்தான்

இருவர் பிறந்தார்கள் ஈஸ்வரனார் தன்னருளால்
நிலவரையின் கீழே வளர்த்தாரிருவரையும்
எல்லவரும்போல தங்காளும் தான்பிறந்தாள்
சோபந் தெளிந்தாள் துருசாய்ப் பெரியநாச்சி
அப்போ மருத்துவச்சி அரியநாச்சிக்கேது சொல்வாள்

முன்னே பிறந்ததெல்லாம் உதிரமாய்ப் போச்சுதம்மா
பின்னாகத் தான்பிறந்தாள் பேடைமயில் தங்காளும்
தங்காளை எண்ணெய்விட்டுத் தயவாய்க் குளிப்பாட்டி
தாமரை பெரியநாச்சி தன் கையிலே தான் கொடுத்தாள்
ஒன்பதானைப் பலமுடைய உற்றபொன்னர் தான் பிறந்தார்

எட்டானைப் பலமுடைய இயல்பெரிய தம்பிசங்கர்
ஏழானைப்பலமுடையாள் எழில் பெரிய தங்கையவள்
இப்படியாக இவர்களிருக்கையிலே

## அத்தை பிள்ளை மூவர் பிறப்பு

அந்த நல்ல கோனாட்டில் ஆனதொரு மைத்துனர்கள்
அத்தைபிள்ளை அத்தாவும் அம்மான் பெருமாளும்
செய்ய பெருமாளும் சிலைக்கேத்த வன்னியரும்
ஐவர்கள் தான்பிறந்து அன்பாயிருக்கையிலே
முந்திப் பிறந்து மூவரும் வீற்றிருந்தார்

பிந்திப் பிறந்தார்கள் பெரியதொரு அத்தை மக்கள்
காராம் பறைச்சிமகன் கடியதொரு சாம்பானும்
வரத்தால் பிறந்தானே மகாதேவர் சொல்படிக்கு
காராளர் ஐவருக்கும் கடியதொரு ஊழியமும்
செய்துமங்கே தானிருக்க சேவகனுமாய்ப் பிறந்தான்

இப்படிக்குத்தானும் இதமாயிருக்கையிலே
தாமரை வளர்த்துகின்ற மர நாயுமீன்றிடுமாம்
பன்னிரண்டு வீமருமாய் பாங்காக ஈன்றிடுமாம்
வண்ண லட்சம் கிடாரி மாடுகன்று போட்டிடுமாம்
பூக்கா மரங்களெல்லாம் பிஞ்சுவிட்டு நின்றிடுமாம்



ஏலம் விளையும் அண்ணர் பிறக்க இனி மிளகு பிஞ்சுவிடும்
அவர் பிறந்த நாளையிலே ஆனபன்றி பிறந்ததுவே
வேப்பிலைக்கொம்பன் வெகுபலமுள்ள பன்றி
நாலுகால் வெள்ளை நடுத்தலை சுட்டியது
எழுதபடி கொம்பன் எதிர்த்தாரை மார்பிளக்கும்
பன்றியது தான் பிறந்து பாங்காயிருக்கையிலே

## தாமரையாள் மகளை மடியில் வைத்து புலம்புதல்

தாமரைப் பெரியநாச்சி தாயாருமேது செய்தாள்
மகளை மடியில் வைத்துத் தானே புலம்புகிறாள்
மண்ணாள இரண்டு ஆணும் மனையாள பெண்ணொருத்தி
மனையாள நீ பிறந்தாய்! மண்ணாள அண்ணரெங்கே?
என்றுமே தாமரையாள் இதமாய்ப் புலம்புகையில்

புலம்புகிற சத்தமது (நிலவறையிலிருந்தே) பொன்னர்
செவிதான் கேட்டு

தாயார் அழுகிற சத்தம் சங்கருக்குக் கேட்குதங்கே
தாயாரும் தானழுக தங்கையாரும் தானழுதாள்
பாலுங் குடியாமல் தங்கை பாராமுகமாயிருந்தாள்
தாயார் அழுதசத்தம் தம்பி சங்கர் தான்கேட்டு

புறப்படும் அண்ணாவே போவோம் அரண்மனைக்கு
அப்பவே தானெழுந்து அரண்மனைக்கு வாரார்கள்
அரண்மனைக்கு வந்தார் ஆன பொன்னர் சங்கருந்தான்
தாமரையாள் தான்பார்த்து தயவுடனே ஏது சொல்வாள்
நீங்கள் யாருபெற்ற பாலகரோ அறியாமல் இங்குவந்தீர்

எவரு பெற்ற பாலகரோ இங்கு வந்துவிடடீர்கள்
என்றுமே தாயார் சொல்ல ஏது சொல்வார் அண்ணருமே
நாங்கள் வரத்தால் பிறந்தவர்கள் வாள் வீரர் நாங்களுமே
அப்போது தாமரையாள் அன்பாய் மனமகிழ்ந்து
வாரி யெடுத்தணைத்து வண்ண முத்தம் தான் கொடுத்தாள்
சேர்த்து எடுத்தணைத்து திருமுகத்தில் முத்தமிட்டு

வாய்முத்தம் தான்கொடுத்தாள் வகையான தாயாரும்
இப்படியாக இருக்கின்ற வேளையிலே
செட்டித் தெருவிலே செண்டாடி வாரார்கள்
பார்ப்பாரத் தெருவினிலே பந்தாடி வாரார்கள்
நாலுபக்கம் வீதியிலே நலமாய் விளையாடையிலே

முதலியார் வீதியிலே மூண்டு விளையாடையிலே
அப்போது முதலியார் அன்பாகத் தான்பார்த்து
நீங்கள் யாருபெற்ற பாலகரோ! எனக்கறியச் சொல்லுமென்றார்
அப்போ, குன்றுடையான் பெற்றெடுத்த குலக்கொடிகள் சொல்லுமென்றார்
தாமரையாள் பெற்றெடுத்த தவமணிகள் நாங்களென்றார்!

என்றுமே தானுஞ்சொல்ல இதமாய் முதலியாரும்
வாருமப்பா என்று சொல்லி வகையா யிருவரையும்
தாமரையாள் பக்கம் தயவாகக் கூட்டிவந்து
வாருமம்மா உத்தமியே வளநாட்டுத் தாமரையே
உன் மைந்தன் கவலை மனக்கவலை தீர்ந்ததம்மா

உன் பிள்ளைக்கவலை பெருங்கவலை தீர்ந்ததம்மா
இன்னுங் கொஞ்சங்காலம் பிள்ளைகளைக் கவனமாய்க் காருமம்மா
கருப்பத்தூர்ப்பங்காளிகள் மக்களை கண்ணாலே கண்டுவிட்டால்
கழுத்தை ஒடித்துமேதான் கிள்ளியே போட்டிடுவார்
ஆகையால் தாமரையே அடுத்த ஊர் செல்லுமம்மா

மைந்தர்களைக் கூட்டிக்கொண்டு நீ மறுநாடு செல்லுமம்மா
அப்படியே நல்லதென்று அருங்கிளியாள் தாமரையும்
எண்ணாது எண்ணி எண்ணித் (தாமரை) ஏங்கி மனம் வாடுகிறாள்
அத்தை மகனாரே அருமையுள்ள பர்த்தாவே
மாமன்மகனாரே என்னை மாலையிட்ட மன்னவரே



நாம் மக்களைக் கூட்டிக்கொண்டு மறுநாடு செல்லவேண்டும்
பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு பிறநாடு போகவேண்டும்
என்றுதான் தாமரையாள் இந்தவிதம் சொல்லையிலே

## தாமரையாளும் குன்றுடையானும் ஆதிசெட்டிபாளையம் போகுதல்

அப்படியே நல்லதென்று குன்றுடையான் அப்போ பயணமென்று
ஆதிசெட்டிபாளையமும் இவர்கள் அதிதுரிதாய் வாரார்கள்
வளநாடு விட்டுமவர் வாரார் இருவருமாய்
தோளிலே தொட்டில்கட்டி மக்களை தொடையிலே நடைபழக்கி
வயிற்றிலே தொட்டில்கட்டி தாயார் வழியில் நடைபழக்கி

ஆதிசெட்டிபாளையமும் இவர்கள் அன்பாய் வருகையிலே
செட்டியார் தான் பார்த்து இவர்கள் சேமம் விசாரித்து
வாருமம்மா தாமரையே என்று வரவழைத்தார் செட்டியாரும்
சாப்பாடு போசனமும் தயவாகத் தான்போட்டு
என்ன விசேடமம்மா இங்கு வந்த காரணமேன்

என்றுதான் செட்டியார் இனிதாகத் தான்கேட்க
பங்காளிக்காய்ப் பயந்து பரதேசம் வந்தோமையா
நல்லது இருங்களென்றார் நலமாக செட்டியவர்
இப்படியாக இவர்களிருக்கையிலே

## மேனாட்டு பையன்கள் ஆடுமாடு மேய்க்க வருதல்

ஆடு மேய்க்கும் பயல்களெல்லாம் அமராவதிக்கரையில்
கூட்டமிட்டு பையன்களெல்லாம் கோலெடுத்து விளையாடையிலே
மாடுமேய்க்கும் பசங்களெல்லாம் பந்துவிளையாடையிலே
பந்து விளையாட பொன்னர் சங்கர் பாங்குடனே வாரார்கள்
மாணிக்கப் பந்தெடுத்து மரகதக்கோல் கையிலெடுத்து

அமராவதிக் கரைக்கு அப்போது வந்தார்கள்
மேனாட்டு வேட்டுவர்மார் மக்களனைவோரும்
தலையூருக் காளிமகன் தானுமங்கே வந்துவிட்டான்
அண்ணர்களைத் தான்பார்த்து அனைவோரும் ஏதுசொல்வார்
நேற்றுப் பிறந்த பயல் பந்தடிக்க வந்துவிட்டான்

பந்தைப் பிடுங்குங்கள் நாம் பந்தடிப்போம் என்றார்கள்
சபதம் தெரியாமல் தலையூருக் காளிமகன்
சபைக் கொச்சையாகவேதான் சங்கர் பொன்னரையும்
பேசுகிறான்

பொறுமை பொறுத்த பொன்னாண்டாரப்போது
உமக்கும் நமக்கும் உறவு இனி வேண்டாமடா

விளையாட்டுப்பந்து விளையாடிக் கொள்வோமடா
என்று சொல்லி பொன்னாண்டார் இதமுடனே
சொல்லையிலே

வேட்டுவரனைவோரும் வீரியங்கள் தான்பேசி
நீங்களொருபக்கம் நாங்களொருபக்கம்
கட்சி பிரித்தார்கள் கனசமுசு வைத்தார்கள்

பன்னீராயிரம் பசங்கள் பந்து எறியையிலே
வலது காலெத்தினா சங்கருக்கு வலுக்குறைந்து
போகுமென்று

இடது காலெத்திவிட்டு ஏந்திப் பிடித்தாராம்
சின்னாண்டார் அப்போது சினத்திலே சங்கடித்தார்
அப்போ யாரை நினைத்தார் அளவற்ற பொந்தியிலே

ஆதிசிவனாண்டி ஐயரையுந் தானினைந்து
எங்கள் தாயார் பொன்னம்பலத்திலே சன்னியாசி
கோவிலிலே

வயது பதினாறு வாங்கிவந்தாள் பிள்ளைவரம்
இன்றைக்கு எடுத்த சபதம் வீணாகப் போனாலும்
சன்னியாசி கோவிலிலே கொடுத்தவரம் பொய்யாகும்

என்று சொல்லி சின்னாண்டார் எடுத்தாராம் பந்துதனை
ஆக்கரித்து பந்தெறிந்தார் அலைகடலில் போய்ச்சேர



பந்தெடுத்துப் போடுமென்று சின்னாண்டர் பதறியங்கே
நிற்கையிலே

பந்தானால் சிக்காமல் வேட்டுவர்கள் பதறியங்கே
ஓடுவார்கள்

ஓடியலைந்து உழன்றுமே நிற்கையிலே
கைக்குப்பந்து வராமல் அண்ணருக்குக் கடுங்கோபம்
வந்திடுமாம்

பந்தடிக்கும் கோலாலே பதறி அடித்தாராம்

ஆளுக்கொரு அடிதான் அடித்தார் சின்னாண்டவரும்
நினைவு மறந்துமப்போ நின்று தடுமாறி
மெய்மறந்து நின்று மிகப்பயந்து யிருக்கையிலே
அலைகடலில் போனபந்தை அண்ணர் அப்போ
நினைக்கையிலே

பந்துமே வந்ததுவே பரமசிவன் தன்னருளால்

கோபம் தணிந்து சின்னாண்டவரும்
குறுஞ்சிரிப்புக்கொண்டேதான்
அண்ணர் இருவருமே அரண்மனைக்கு வந்துவிட்டார்
வேட்டுவர் அனைவோரும் வீரியங்கள் சொல்லியேதான்
ஏழை வெள்ளாளன் பயலை இனிவைக்கப் போகாது
என்றுமே வேட்டுவர்கள் இனிச்சபதம் வைத்தார்கள்
சபதம்வைத்துத்தானிருக்க சாமி இருவருந்தான்

## பொன்னர் சங்கர் தட்டுக்கரம் கட்டுதல்

மற்றொருநாள் காலையிலே மாடுமேய்க்கும் பசங்களும்தான்
வண்ணலட்சம் வேட்டுவர்கள் வந்துமே கூட்டமிட்டு
தட்டுக்கரம் கட்டி தயவாய் இருக்கையிலே
அண்ணர் இருவருமே அடைவாகத் தான்பார்த்து
விளையாடப் போறார்கள் வீரியர்கள் இருவருமே
அப்போது அண்ணரிருவரையும் அன்பாக வேட்டுவர்கள்

வந்து வளைத்தார்கள் வண்ணலட்சம் வேடுவர்கள்
தட்டுக்கரம் கட்டவேணும் உன்சமர்த்துமே பார்க்கவேண்டும்
என்றுசொல்லி வேடுவர்கள் இதமுடனேதான் வளைத்தார்
சிறுபுலி குமாரசங்கு சீறிச்சினந்துமவர்
வாங்களடா என்று சொல்லி வந்துவிட்டார் வேடரண்டை

பொறுமப்பா தம்பியென்று பொன்னருமே தானும்வந்து
உற்று நினைந்து அண்ணர் இருவரும் உத்தி பிரித்தார்கள்
தலத்துக்கு தான்தலைவன் அந்த தலையூரு காளிமகன்
அண்ணன் இருவரையும் கால்வாரி அடிப்போமென்று
சபதம் தெரியாமல் தலையூருக்காளிமகன் சபைக்கொச்சை பேசுகிறான்

எண்ணி நினைத்தாராம் சின்னாண்டவர் எண்ணமற்ற பொந்தியிலே
பெரியண்ணா என்சுவாமி நீங்கள் பின்னாக நில்லுமென்று
ஆதிசிவனாண்டி ஐயரையும் தான்நினைத்து
ஆக்கரித்துப் பல்கடித்து அறுபதடி பின்குதித்து
முன்லாகை பின்லாகை முப்பத்திரண்டு லாகையும்

கொக்கரித்துக் குலவையிட்டு குலுங்க நகைத்துமவர்
வலது காலெத்தினால் வலுக்குறைந்து போகுமென்று
இடது காலாலே ஏந்திவிட்டார் சின்னாண்டவர்
மூன்றரைநாழி தலையூருக்காளிமகன் மூச்சடங்கிப் போனானே
அய்யோ சிவனே என்று வேட்டுவர் அலறிப்புலம்பியேதான்

சுக்குப்பொடி காதில்வைத்து துரிதாக ஊதினார்கள்
மூர்ச்சை தெளிந்து தலையூருக் காளிமகன் முழித்துமே பார்த்தானே
குலுங்கநகைத்து அண்ணர் இருவரும் குறுஞ்சிரிப்புக் கொண்டேதான்
அண்ணர் இருவருமே அரண்மனைக்கு வந்துவிட்டார்



வேட்டுவர் அனைவோரும் விரைவாகத் தான்கூடி
இப்படியாக இவர்களிருக்கையிலே

## பொன்னர் சங்கர் பள்ளிக்கூடம் போகுதல்

அண்ணர் இருவருமே அன்பாகத் தானுமங்கே
பள்ளிக்கூடத்திலே பாங்குடனே தான்படிக்க
வெள்ளிக்கிழமை விடிந்து ஐந்து நாழிகைக்கு
ஏடுவாழ்த்தித் தாருமென்று வாத்தியாரிடத்தில் இதமாக வாங்கியேதான்

தன்னோட அரண்மனைக்குத் தயவாகத் தானும்வந்து

தாயாரிடத்திலே தயவாகச் சொல்லுகிறார்
நம்முடைய இராச்சியமே நாம்போக வேணுமம்மா
வைய வளநாடு நெற்சூழ்ந்த கோனாடு
நெல்லி வளநாடு நெற்சூழ்ந்த கோனாடு
செய்ய வளநாடு சீர்பெரிய கோட்டைக்கு

ஐந்து லட்சம் பொன்சீமை ஆதிசிவன் சொல்படிக்கு
வாக்கு மனுப்படிக்கு வாழ்ந்திருக்க வேண்டுமம்மா
என்றுமவர் சொல்ல ஏந்திழையாள் நல்லதென்று
நல்லதென்று தாமரையாள் நலமுடனே சொன்னதுவே
ஊருகடந்து பொன்னர் சங்கர் உத்ராட்ச பூமிவிட்டு

காடுகடந்து பொன்னர் சங்கர் கரூர்தான் போய்ச்சேர்ந்து
பசுபதிலிங்கருட சுவாமிபாதம் நமஸ்கரித்து
சோழனுக்கும் சேரனுக்கும் சொர்ணமுடி மன்னருக்கும்
மண்ணு பிரிந்திருக்கும் மதுக்கரைக்கு வந்தார்கள்
மதுக்கரையில் குடியிருக்கும் மாகாளி செல்லியிடம்

வாக்குமனு கேட்கவென்று வாரார் இவர்களுந்தான்
பூமியதிர அண்ணர் வருகிற சத்தம் பூலோகம் தத்தளிக்க
அதிர்ந்த சத்தம் கேட்டு ஆனதொரு செல்லாயி

தலைவாசல்காவல் சடாமுனியைத் தானழைத்து
குங்கிலிகினாப் பூதத்தை சீக்கிரமாய்த் தானழைத்து

ஆரோ வருகிறார் அதிருதுபார் பூமியெல்லாம்
அவனை அடித்து பறித்து அவதூறு செய்திடுங்கள்
என்றே அனுப்பிவிட்டாள் ஈஸ்வரியும் செல்லாயி
குங்கிலி கினாப்பூதம் சீக்கிரமாய்த் தானெழுந்து
வானத்துக்கும் பூமிக்கும் ஒன்றாய் வருகுதப்போ

ஒற்றைச் சடாமுனியும் ஒருபல்லு ராட்சதனும்
அண்ணருக்கு முன்னாக அதட்டி வருகையிலே
சின்னண்ணன் வாள்வீரர் சிறுபுலி குமாரசங்கு
ஆரை நினைத்தாரப்போ அளவற்ற பொந்தியிலே
ஆதி சிவனாண்டி ஐயரையுந் தானினைத்து

எட்டி சடைபிடித்து இழுத்து மிதித்தாரே
அப்போ சடாமுனியும் ஐயோவென்று சத்தமிட
பூதம் அலறினது பூலோகம் தத்தளிக்க
அலறின சத்தம் கேட்டாள் அருங்கரையில் செல்லாயி
அபாயம் வந்ததென்று சொல்லி அடைத்தாளே தன்கதவை

பூதமலறினது பிழைமோசம் வந்ததென்று
எண்ணி மனங்கலங்கி செல்லாயி இருக்குமந்த வேளையிலே
அண்ணரிருவருமே அன்புடனே தானும்வந்து
சின்னண்ணரப்போது சினந்துமே கோபமதாய்
கோவில் திறவுமம்மா கொடுமைகள் செய்யாதே

என்று இவர்சொல்ல ஏந்திழையுந்தான் பார்த்து
ஆரப்பா என்று சொல்லி தாயார் அஞ்சியே கேட்டாளே
வளநாட்டுக் காராளர் வாள் வீரனென்றார்கள்
அருங்கரை செல்லாயி அப்போ மனமிரங்கி
கோவில் திறந்து குணமாகத் தானும்விட

அண்ணரிருவரும்தான் அம்மனை நமஸ்கரித்து
தாயே பரமேஸ்வரியே தயவாக இப்போது
உன்துணையல்லாமல் ஒருவர் துணையில்லையம்மா



உன்னை நினைத்தால் தாயே ஒருநொடியில் வரவேண்டும்
என்று சொல்லிப் பொன்னாண்டர் இதமுடனே தான்கேட்க
செண்பகப்பூ செல்லாயி சேரத்துணை வாரேனென்றாள்
வாக்குமனுக் கொடுத்தாள் வகையுடனே அப்போது
உத்தரவுபெற்று உறுதியாய் தானடந்தார்

செக்கணநத்தம் திருக்காம்புலியூரு விட்டு
அம்மான் கருப்பத்தூர் ஆனமனத்தைவிட்டு
கூத்தாழை நன்னாடு சுவாமிகோயில் தலைக்கிராமம்
ரெத்னாசலமூர்த்தி எல்லை கடந்த பின்பு

## பொன்னர் சங்கர் நெல்லறுப்பு

சிறுகமணிப்பட்டணத்தில் இவர்கள் சீக்கிரமாய்த் தானிறங்கி
பன்னிராயிரம் பள்ளர் பாங்குடனே நெல்லறுத்தார்
பொன்னரும் சங்கரும் புண்ணியனார் தான்பார்த்து
நாங்களும் நெல்லறுக்க நலமாக வாரோமென்றார்
பன்னீராயிரம் பள்ளர் பாங்குடனே அப்போது

சேருவதியிலே சிறுபிள்ளைகள் நீங்களுந்தான்
கட்டுச் சுமக்கமாட்டீர் கடுகவே போங்களென்றார்
சின்னண்ணரப்போது சினந்துமே கோபங்கொண்டு
ஆக்கரித்து வருகையிலே அண்ணருமே தான்பார்த்து
கூலிசெய்ய வந்தநாம் கோபமுங் கொள்ளலாமா

என்றுசொல்லி பொன்னாண்டர் இதமாய் வருகையிலே
ஏழைப் பிராமணர் ஏழுசெய்யு நெல்லறுப்பு
பதர்தப்பிப் போச்சுதென்று பண்புடனே ஓடிவந்து
வேலையாள் சிக்காமல் விசனமா யோடிவந்தார்
அண்ணருக்கெதிராக அலைந்தோடி வருகையிலே

பெரியண்ணரப்போது பிராமணரைத் தான்பார்த்து
இந்தநல்ல வேகமாய் ஏன் போரீரையாவென்றார்
அந்தநல்ல வேதியனார் அப்போது சொல்லுகிறார்

ஆறுமாதச் சம்பாநெல் அறுப்புத்தப்பிப் போனதினால்
இந்தநல்ல பட்டணத்தில் எளியவர்க்கு ஆள்சிக்காது
ஓடி அலைந்தேன் ஒருவருமேதான் வரவில்லை
என்று ஏழை பிராமணரும் இதமுடனே சொன்னாரே
சின்னண்ணர் வாள் வீரர் சிறுபுலி குமரசங்கு

நாங்களும் செய்யிநெல்லை நலமாயறுக்கிறோம்
சொல்லுமையா என்று சங்கர் துருசாகக் கேட்டாரே
அப்போது வேதியனார் அன்புடனே ஏதுசொல்வார்
சிறுபிள்ளை நீங்களுந்தான் செந்நெல்லறுப்பீர்களோ?
என்று சொல்லி ஐயர் இவர்களையுங் கூட்டிவந்தார்

பன்னீராயிரம் பள்ளர்களும் அவர்கள் பக்கத்திலே நெல்லறுக்க
அந்தச்செய் ஓரத்திலே ஐயருட நெல்லறுப்பு
ஏழுசெய் நெல்லறுப்பை ஐயர் இதமுடனே காண்பித்தார்
குமார சங்கரப்போது கூலி பொருதுமென்றார்
குண்டுக்கு குருணிநெல் குறையாமல் நான்தாரேன்

என்றுசொல்லி ஐயர் இதமுடனே சம்மதித்தார்
அண்ணாிருவரும் அன்புடனே சம்மதித்து
பூசை முடித்து போசனமும் செய்தபின்பு
வாரேன்நான் என்று சொல்லி வந்துவிட்டார் மறையவனும்
சின்னண்ணர் வாள்வீரர் சிறுபுலி குமரசங்கு

கட்டுகரைமேலே கனமுடனே இருங்களென்று
கச்சை வரிந்துகட்டி கடுகியே சங்கருந்தான்
ஆரைநினைத்தார் அளவற்ற பொந்தியிலே
தாயை மனதிலெண்ணி தன்பிறப்பை நெஞ்சிலெண்ணி
மாயன் பெருமாளை மனதிலே தானினைந்து

தாயார் பெரியநாச்சி தவம்பெற்றது உண்மையானால்
எடுத்த தொருசபதம் இதமுடனே இப்போது



சீக்கிரமா இந்தவேளை சிலநேர மாகவேண்டும்
என்றுசொல்லி சங்கர் இதமுடனே தானினைந்து
ஆதிசிவனாண்டி ஐயரை மனதில்வைத்து
அப்போது சங்கருந்தான் கைக்கு அரிவாளுமில்லாமல்
பக்கத்திலே தானுமொரு பனைமரம் நின்றதுவே

வலது கையாலிழுத்தால் வலுக்குறைந்து போகுமென்று
இடது கையாலே சுண்டி யேற்றபனைக் கையையுந்தான்
கை நகத்தினாலே கத்தரித்துத் தான்போட்டு
ஒருபக்கம் பிடிசேர்த்து ஒருகையிலே தான்பிடித்து
செயலிலிறங்கவே தான் சீக்கிரமாய் சங்கருக்கு

மீசை துடித்திடுமாம் முன்கோபம் வந்திடுமாம்
அவ்வரளிக் கண்கள் இரண்டும் செவ்வரளி பூத்தாப்போல
நீலவிழிக் கண்கள் இரண்டும் நெருப்புத்தணல் ஆகுதப்போ
அதிக கோபமாகி சங்கர் அரைநாழிகையிலேதான்
அடியறுப்புத் தீர்த்துவிட்டு அன்பாகச் சங்கருந்தான்

ஏழுசெய் நெற்கதிரை ஏழுகட்டாய் தானுங்கட்டி
அண்ணரிடத்திலே அன்பாக வந்து சொன்னார்
பன்னீராயிரம் பள்ளர் நமைபார்த்துமே வேண்டாமென்றார்
அவர்களை இப்போது அடைவுடனே கூட்டிவந்து
கட்டைத்தூக்கும் படியாய் கடினமாய் கூட்டிவாரேன்

என்று சின்னாண்டவரும் இதமுடனே தானும்போய்
நெல்லறுக்குமிடத்திலே நேராகப் போய்நின்று
எங்களையும் நீங்கள் இதமுடனே இப்போது
கட்டு சுமக்கமாட்டீர் கடினமாய் வேண்டாமென்று
சொன்னீர்களப்போது துரிசாக நீங்களுந்தான்

நான் கட்டின கட்டை நலமாக இப்போது
தூக்கித் தலையில்வைத்தால் துரிதமுடனே உங்களுக்கு
ஏழுசெய் நெல்லையுந்தான் இனாமாக நான் தாரேன்
என்றுமே சொன்னாரே இயல்பெரிய சங்கருந்தான்
பன்னீராயிரம் பள்ளர் பாங்குடனே வந்தார்கள்

வந்துமே பள்ளரெல்லாம் வகையாகத்தான் சேர்ந்து
சிறுபையன் கட்டிய கட்டை சீக்கிரமாய் நாமெல்லாம்
தூக்க முடியாதாவென்று துரிதாக வந்தார்கள்
(அண்ணர்) சபதம் தெரியாமல்தான் வந்தார்கள்
பள்ளரெல்லாம்
கட்டோரம் வந்துநின்று தன்னுடைய கருத்திலே
செல்லாயியை

நினைத்தாரே அப்போது செல்லாயி நிச்சயமாய்
வந்துவிட்டாள்
கட்டுமேலுக்காரென்று காரணமாய் தானினைக்க
உட்கார்ந்தாளப்போது உறுதியுடன் செல்லாயி
பன்னீராயிரம் பள்ளரையும் சங்கர் பாங்குடனே தான்பார்த்து
தூக்குமென்று சொன்னாரே துடியான சங்கருந்தான்

சுத்தியேநின்று தூக்கினார்கள் எல்லோரும்
முக்கி முனங்கி கட்டை மூன்றுதரம் தூக்கினார்கள்
கட்டுமசையவில்லை கடினமாயிருக்குதென்றார்
அப்போது சின்னாண்டார் அவரு மங்கே ஏதுசொல்வார்
உங்களால் முடியாது உறுதியாய் நீங்களுந்தான்

நில்லுங்களென்று சொல்லி நிமிசத்தில் தூக்கியேதான்
உங்கள் தலையில் உண்மையாயிப்போது
வைக்கிறேனென்று சொல்லி வகையுடனே சங்கருந்தான்
அப்போது செல்லாயியை அடைவாகத் தான்விலகச்
சொன்னாரே அப்போது சோதனையாய்ச் சங்கருந்தான்

கட்டைவிட்டு விலகினாள் கனத்ததொரு செல்லாயி
இடது காலாலே சங்கர் எத்தினார் சங்கருந்தான்
ஏழுபனை யுயரம் கட்டு இதமுடனே போய்வருதே
வருகிறபோது கட்டை வகையாய்ப் பிடிக்கச் சொன்னார்
உருண்டு திரண்டு பள்ளர் உறுதியாய் நின்றார்கள்

தாங்கிப்பிடிக்கப் பள்ளர்கள் தைரியமில்லாமல்
தலைமேலே தான்விழுந்து மடிந்தார்கள் எல்லோரும்



அப்போது பொன்னாண்டார் ஆகாது பாவமென்றார்
அண்ணர் சொல்தட்டாமல் அன்பாகச் சங்கருந்தான்
கட்டைப் புரட்டியேதான் கடுகியே அப்போது
பதினைந்து பேர்களைத்தான் பார்த்துச் சின்னாண்டவரும்
அப்பவே செல்லாயியை அடைவா யெழுப்பு மென்றார்

காவேரி சலத்தை அம்மன் கனமாகத்தான் வாரி
மூன்றுகை தானிறைத்தாள் அம்மன் முன்னே
எழுந்திருந்தார்

பன்னீராயிரம் பள்ளர் பாங்குடனே தானெழுந்து
சபதம் தெரியாமல்தான் வந்தோமென்றார்கள்
என்று சொல்லி பள்ளர்கள் இதமுடனே அப்போது

வணங்கிப் பணிகள் செய்து வகையாகப் போனார்கள்
சின்னாண்டார் அப்போது சினந்துமே கட்டுகளை
எழு கட்டுகளையும் எடுத்துமே கொண்டுவந்து
களத்துமேட்டிலே கடுகியே போட்டாரே
கட்டுக்கு ஒரு அடியாய் கடுகி அடித்தாரே

நெல்லுவேறு புல்லுவேறு நிமிடத்தில் தான் பிரித்தார்
அம்மனை நினைத்தார் அடித்ததுவே காற்றுமது
காற்றடித்து நெல்தூற்றி கடுகி குவிந்ததுவே
மலைபோல நெல்குவியல் வந்து குவிந்ததுவே
கரைமேலேநின்ற கனத்ததொரு ஆலமரம்

பிரம்மாண்டமாயிருந்த பெரியமரம் பிடுங்கி
வேரும் தழையும் விதமாகத்தான் கிள்ளி
பெருவிரல் நகத்தாலே குதைந்து எடுத்தாரே
குதைந்து எடுத்தார் கொடியதொரு மரக்கால்
ஐயரைக் காணோமென்று அண்ணருந் தான்பார்த்து

வீட்டுக்கு வந்தார் விதமுடனே அப்போது
பூஜை முடித்துவாரேன் பொறுமடா வென்று சொல்ல
கூலிபோட வாருமென்று கூப்பிட்டார் சங்கருந்தான்

பூஜைசெய்து நான்வாரேன் போடா மடப்பயலே
என்றுமே ஐயர் சொல்ல எரிபறந்து கண்சிவந்து
ஏழுகட்டுச் சுத்தாலை இடது காலாலுதைத்தார்
சுத்தாலை தூறும் தூள் தூளாய் விழுந்ததப்போ
கண்டு பயந்தானே கனகமுடன் ஐயனுந்தான்

களத்து மேட்டுக்கு கடுகியே ஓடிவந்து
நெல் குவிந்திருப்பதை நேராகத் தான்பார்த்து
இவன் மானிட ஜீவனல்ல மாயமாய் காணுகுது
என்று நினைத்து இருக்குமந்த வேளையிலே
அப்போது சங்கருந்தான் அறுப்புநெல் போடுமென்றார்

நீங்கள் அளந்து கொண்டு மிச்சத்தைப் போடுமென்றார்
அருங்கரைச் செல்லாயி அம்மனைத் தானினைத்தார்
மரக்கால் அளக்கையிலே மாதாவும் தானும்வந்தாள்
வாரி வாரிப் போட்டானே வகையாய் மறையவனும்
அரைமரக்கால் தானாச்சு ஐயருட காணிநெல்லு

எங்கய்யா ரம்பலையே என்று சொன்னார் சங்கருந்தான்
மலைபோலே தான்கிடக்கும் வைக்கபுல்லைத் தானுமப்போ
கிங்கிணிகினா பூதத்தைவிட்டு மிதிக்கவும் சொன்னாரே
பஞ்சுபஞ்சாகவேதான் புல் பாங்காய் பதிந்ததுவே
வாயு ராஜனையும் அப்போ வரவழைத்தாள் செல்லாயி

காற்றுவந்து தூற்றிக் கடுகியே விட்டதுவே
போரடி நெல் போட்டு குறை மரக்கால் ரம்பியது
அதை எடுத்துச் சங்கருந்தான் அண்ணரிடம் வருகையிலே
கண்டாரே பொன்னாண்டார் கண்கொள்ளாக் காட்சிதனை
இது ஆகாது தம்பியரே ஐயர் பாவம் பொல்லாது

நீ கொண்டுபோய் போட்டுவிட்டு குருணிநெல் வாங்கிவாப்பா
குண்டுக்கு குருணிநெல் கூலிவாங்கி வாருமென்றார்
அண்ணர் சொல்தட்டாமல் அப்படியே கொண்டு சென்று



களத்திலே போட்டுவிட்டு சங்கருமே அப்போது
குண்டுக்குக் குருணிநெல் கூலி கொண்டு வந்தாரே
அண்ணரிடந் தானும்வந்து அன்பாயிருக்கையிலே
அண்ணரிருவருடன் அன்புள்ள தங்கையரும்
நம்முடைய ராச்சியமே நாம்போக வேண்டுமென்று

## பொன்னர் சங்கர் வளநாடு போகுதல்

தாயார் தகப்பனாரும் தான்வாராரப்போது
சிறுகமணிப்பட்டணம் சீராகத் தானும்விட்டு
நெல்லிவளநாடு நேராகத்தான் வாரார்
வளநாட்டில் தானிருந்து வாரார்கள் அத்தை மக்கள்
மூவரும் எதிர்கொண்டு முடிவணங்கித் தெண்டனிட்டு

பாதஞ் சரணமென்று பணிந்தார்கள் மூவருமே
இப்படியாக இருக்குமந்த வேளையிலே
வையவளநாடு வகைசேர்ந்த கோணாடு
நெல்லிவளநாடு நெற்சூழ்ந்த கோணாடு
காலால் மடைதிறந்தால் காதவழி நீர் பாயும்

விரலால் மடைதிறந்தால் வெகு தூரம் நீர் பாயும்
ஆனை கட்டித் தாம்புடிக்கும் அழகுபொன்னி வளநாடு
கட்டுக்களங்காணும் கதிருழக்கு நெல்காணும்
முத்து விளைந்திருக்கும் மிளகுசம்பா போரேறும்
சம்பா விளையும் சருகுசம்பாப் போரேறும்

நெல்லு விளைந்திருக்கும் தேருசம்பா போரேறும்
வான்முட்ட நெல்குவியும் மலைபோலே புல் குவியும்
மாடுகட்டித் தாம்படித்தால் மாளாது என்றுசொல்லி
ஆனைகட்டித் தாம்படிக்கும் அழகுபொன்னி வளநாடு
மரக்கால் பொதி அளந்தால் மாளாது என்று சொல்லி
சாட்டால் பொதி அளக்கும் தர்மமுடி வமிசந்தான்

நெல்லிவளநாட்டில் நெற்சூழ்ந்த கோனாட்டில்
ஐந்துக்கு இரண்டு அரண்மனைக்கு மேல்வாரம்
தாரமிடுவோரும் வயல் கணக்குப் பார்ப்போரும்
அப்படியானதொரு அழகு பொன்னிவளநாடு
சிற்றாலைப் பட்டணமும் சேர்ந்த பொன்னிவளநாட்டில்

## பொன்னர் சங்கர் அரண்மனை கட்டுதல்

பத்துச்சுற்று கோட்டை அண்ணர் பாங்காக கட்டவென்று
ஏழுசுத்துக் கோட்டை அண்ணர் இயல்பாகக் கட்டவென்று
பஞ்சாங்க வேதியரை பார்ப்பாரைத் தானழைத்து
சாஸ்திரங்கள் கேட்டு தயவாக அப்போது
தங்க ளரண்மனையும் தயவாகக் கட்டுமென்று

ஐயரும் சொன்னாரே அன்பாய் மனமகிழ்ந்து
பத்துச்சுத்து கோட்டை அண்ணர் பாம்பேறா மண்டபமும்
ஏழுசுத்து கோட்டை அண்ணர் எறும்பேறா மண்டபமும்
அரக்குத் திருமாளிகையும் அபரஞ்சிக் கோட்டைகளும்
பொன்னுப்படி வெள்ளிப்படி போதவேதானிருக்கும்
தங்காள் பிறவியர்க்கு தனியாய் அரண்மனையும்
உண்டாக்கினார்கள் உற்ற பொன்னர் சங்கருந்தான்
ஒன்றாம்தளமாம் பிறவியர்க்கு ஓலைப்பூ மண்டபமாம்
இரண்டாந்தளமாம் தங்கையர்க்கு இலகு மணிமண்டபமாம்
மூன்றாந்தளமாம் பிறவியர்க்கு முத்துரத்ன மேடைகளாம்

நான்காம்தளமாம் தங்கைக்கு நவரத்ன மேடைகளாம்
ஐந்தாந்தளமாம் பிறவியர்க்கு அழகுமணிக் கோபுரமாம்
ஆறாந்தளமாம் உத்தமிக்கு அரக்குமா மேடைகளாம்
ஏழாந்தளமாம் பிறவியர்க்கு ஏற்றமணி மண்டபமாம்
எட்டாந்தளமாம் பிறவியர்க்கு எறும்பேறா மண்டபமாம்

ஒன்பதாந்தளமாம் பிறவியர்க்கு உயர்ந்ததொரு
மேடைகளாம்
பத்தாந்தளமாம் பிறவியர்க்கு பவழக்கால் மண்டபமாம்



சீவிவழித்து சித்திரமும் தானெழுதி
ஏழு கட்டரண்மனையும் இருட்டறை மாளிகையும்
வேல் பொருதுங் கண்களுக்கு விலாம்பிச்சி
கோட்டையிட்டார்

அஞ்சடுக்குப் பஞ்சுமெத்தை அதன்மேலே தூளிமெத்தை
அன்னலூஞ்சல் பொன்னூஞ்சல் அரியதொரு தூங்குமஞ்சம்

தூங்குமஞ்சம் மேலே தூயமெத்தை தான்விரித்து
அந்தப்படி தங்கையர்க்கு அடைவாக சிருஷ்டித்தார்
ஆனை லாயம் குதிரை லாயம் அன்பாக உண்டு பண்ணி
ஐந்து லட்சம் பொன்சீமை ஆண்டிருக்கும் நாளையிலே
ஏலம் விளையும் வளநாட்டில் இளமிகு பிஞ்சுவிடும்

பத்தெட்டு காய்காய்க்கும் பரிவான பட்டணத்தில்
காராளர் வீதியென்றால் அதிலே கணக்கு வழக்குமில்லை
வேளாளர் வீதியென்றால் வெகு தூரமாயிருக்கும்
செட்டிமார்கள் தெருவும் சேனியர்கள் தந்தெருவும்
பார்ப்பாரகமும் பந்தி பந்தியாயிருக்கும்

பல பட்டரைத் தெருவும் பாங்காகத்தானிருக்கும்
பட்டணம் நிமிர்ந்திருக்கும் பார்த்துமுடியாது
சொல்லிமுடியாது சூழ்ந்த பொன்னி வளநாடு
கட்டி அரசாண்டார் காராளர் பொன்னர் சங்கர்
அந்தப்படி ஆண்டு அவர்களிருக்கையிலே

## வீர சாம்புவன் பொன்னரிடம் வருதல்

காராம் பறைச்சி பெற்ற கடியதொரு சாம்பானும்
தோட்டித் தெருவிலே அவன் துஷ்டத்தனம் செய்கிறான்
அவனை அடக்க அங்கே யாராலும் முடியாது
அவனுடைய தாயார் அப்போது ஏது சொல்வாள்
உன்னுடைய எசமான் உத்தமர் முன்னாலே

கூட்டிப் போய் விடுகிறேன் குணமாக உன்னையுந்தான்
அவராலேதானும் உன்னை அடக்க முடியுமடா

என்று சொல்லி சாம்புவனை இதமுடனே கூட்டிவந்தாள்
நெல்லி வளநாடு நெற்சூழ்ந்த கோனாடு
கோனாடு கூட்டிவந்து கொற்றவர்கள் முன்னாலே
கூட்டிப் போய் விடுகிறேன் குணமாக உன்னையுந்தான்
அவராலேதானும் உன்னை அடக்க முடியுமடா

என்று சொல்லி சாம்புவனை இதமுடனே கூட்டிவந்தாள்
நெல்லி வளநாடு நெற்சூழ்ந்த கோனாடு
கோனாடு கூட்டிவந்து கொற்றவர்கள் முன்னாலே
விட்டாளே அவன்தாயார் வீரமலைச் சாம்புவனை
சாம்புவனுங் கண்டானே சாமியிருவரையும்

அட்டம் பணிந்து சாம்பான் அடிவணங்கித் தெண்டனிட்டு
சரணஞ் சரணமென்று சாய்த்தான் திருமுடியை
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டான்
வாருமடா என்று சொல்லி வகையாக இருவர்களும்
இருமென்றார் பக்கத்திலே இருந்தானே சாம்புவனும்

அத்தை மக்கள் மூவருமே அன்பாக வந்தார்கள்
எல்லோருங்கூடி இருக்குமந்த வேளையிலே
அண்ணரிருவரும் அன்புடனே ஏதுசொல்வார்
வேட்டைக்குப் போய்வருவோம் வீரியனே என்று சொன்னார்
வேட்டை என்ற சொல்லைத் தாயார் விரும்பியே கேட்டாளே

## தாயார் பட்ட கஷ்டம் மக்களிடம் சொல்லுதல்

வேட்டைக்குப் போகவேண்டாம் வினைவந்து நேருமப்பா
பங்காளி கண்டால் பலியெடுப்பான் தப்பாது
போகவினிக் கூடாது பொன்னாண்டர் என்று சொன்னாள்
அப்போது பொன்னாண்டர் அன்புடனே தான்பார்த்து
பங்காளியாலே தாயார் படுகஷ்டம் பட்டிருப்பார்



பட்டதொரு கஷ்டத்தைப் பாங்காகச் சொல்லுமென்றார்
நீங்கள் பட்ட கஷ்டத்தை நிமிஷத்தில் சொல்லுமம்மா
என்று பொன்னர் கேட்க ஏதுசொல்வாள் தாயாரும்
தங்கையை மடியில்வைத்து சங்கரையும் பக்கம்வைத்து
அத்தை பிள்ளை மூவரையும் அவர்களையும் கிட்டவைத்து

சாம்புவனைத் தானும் தயவாய் இருக்கச்சொல்லி
தாயார் தான்பட்டதொரு தனித்துயரம் சொல்லுகிறார்
உங்கள் பாட்டனார் இறந்தபின்பு உங்களுட அப்பனையும்
பங்கைப்பிடுங்கிக் கொண்டு பங்காளி எல்லோரும்
ஆடுமேய்க்கப்போட்டு அரைவயிறு கஞ்சி வார்த்தார்

வயிற்றுக்கு கஞ்சி வயிராற ஊத்தாமல்
ஆடுமேய்த்து உங்களையர் அன்பாய் வருகையிலே
பங்காளி கவுண்டச்சி பாதகிகள் எல்லோரும்
வீட்டுக்கொருநாள் முறைவைத்து ஊற்றுவார்கள்
இணுங்குசோளம் குத்தச் சொல்லி எடுத்துமே வைப்பார்கள்

சோளம் குத்திக்கொடுத்து சோறுதின்னு வருகையிலே
வீட்டுக்கு வீடு சோளம் விதமாக குத்துவாராம்
அப்படிக்குத்தியும் அரை வயிறு கஞ்சிதான்
வயிற்றுக்குப் பற்றாமல் உங்களையர் மாமன்வீடு வந்தாரே
என்தாயார் தானும் இன்பமுடன் தானழைத்து

சாப்பாடுபோட்டுத் தானிருக்கும் வேளையிலே
குட்டிமேய்க்கும் கருப்பன் குட்டி மேய்க்கச் சொன்னாரே
குட்டிகளை ஓட்டி மேய்ச்சலிலே தானும்விட்டு
படுத்துமே நித்திரையும் பாங்காய்ப் போய்விட்டார்
குட்டிமேய்க்கும் கருப்பன் குட்டியைக் காணோமென்று

வந்துமே பார்க்கையிலே வகையாக உங்களையர்
நித்திரை செய்கிறதை நேராகத் தான்பார்த்தான்
குட்டிமேய்க்கும் கோலாலே அடித்தானே கருப்பனுமே
அடிபொறுக்க மாட்டாமல் அலறியே தானோடி

உறையூருப் பட்டணத்தில் ஒரு பூவாண்டிச்சி வீட்டிலேதான்
வந்துமேதானும் வகையாய் இருக்கையிலே
உறையூருப் பட்டணத்தில் ஒரு வீட்டில் கல்யாணம்
கல்யாணம் நடக்கிறதை கண்டாரே உங்களையர்
மாப்பிள்ளை பெண்ணும் மணவறையில் இருப்பதையும்

கண்டுமே தானும்வந்து கடியதொரு ஆண்டிச்சியை
என் மாமன்வீட்டில் பெண் இருக்கிறது நீ போய்
பெண்கேட்டு வாருமென்று பிரியமுடன் சொல்லையிலே
அப்போத ஆண்டிச்சி அவள்பிறந்த வீட்டிலேதான்
பெண் கொடுக்கச் சொல்லி பிரியமாய்க் கேட்டுவந்தாள்

எங்கே என்று கேட்டாரே உங்களுட ஐயனுமே
என்பிறந்தான் வீட்டிலே பெண்கேட்டு வந்தேனென்றாள்
அப்போது உங்களையர் அதிகக்கோபம் தானாகி
வீட்டைவிட்டுப் புறப்பட்டு வெளியே நடந்தாரே
ஆதிசெட்டிபாளையம் அன்பாகத் தானும்வந்து

தவிட்டுச் செட்டியார் வீட்டில் தான்வந்து நின்றாரே
அப்போது தவிட்டுச் செட்டி உங்களையரையும்
கூட்டியேதான்
தவிடுவிற்க வந்தானே தவிட்டு செட்டி அப்போது
ஒருநாளும் இல்லாத வியாபாரம் ஒழுங்காய் நடந்ததுவே
உன் தகப்பன் கால்வைக்க செட்டியார் உயர்ந்த
பணக்காரனானார்

இப்படியாக இவரிருக்கும் நாளையிலே
கருப்பத்தூர் பங்காளி கவுண்டமாரெல்லாரும்
உங்கள் மாமன் வீட்டுக்கு என்னைப் பெண்கேட்க
வந்தார்கள்
அப்போது சாம்பானுட தகப்பன் தான்கண்டு ஏதுசொல்வான்
வாருமே சுவாமி வகையாக இப்போது

எல்லோருங்கூடி எங்கே புறப்பட்டீர்கள்
என்றுமே கேட்க ஏதுசொல்வார் கவுண்டருமே



குன்றுடையான் கட்டுகிற உரிமைப்பெண் கேட்கவே
போகிறோம்

என்று கவுண்டர்களும் சொல்ல சாம்பான்
இதமுடனேயப்போது
அழுது புலம்புகிறான் அவர்களுக்கு முன்னாலே
ஏன் அழுகிறாயென்று இதமுடனே கேட்டார்கள்
குன்றுடையார் சாமி ஊரைவிட்டுப் போன பின்பு

என்னையும் முடுக்கிவிட்டீர் என்சாமி ராஜாவே
சின்னக்கவுண்டர் கல்யாணத்தில் என்னை
சேர்த்துக்கொள்வீர் என்றிருந்தேன்
அதற்காக நானழுதேன் ஆண்டவரே என்று சொன்னான்
நல்லதென்று சொல்லி நடந்தாரே கவுண்டர்களும்
சோளந்தோட்டியவனும் துருசாக ஓடிவந்து

தன்னுடைய தேவியிடம் தான்சொல்வான் அப்போது
குன்றுடையார் சாமியை நான்கூட்டியே வாரேனென்று
கட்டுச்சோறு வாங்கி கடுகி வழிநடந்தானே
ஆதிசெட்டிபாளையம் அவன்தேடி வந்தானே
ஆதிசெட்டிபாளையத்தில் உங்களையர் ஆடு மாடு
மேய்க்கிறார்

செட்டியார் வீடுதேடி தோட்டி சீக்கிரமாய்த் தானும்வந்து
குன்றுடையாக் கவுண்டரையும் கூட்டியே
போறேனென்றான்
கல்யாணம் செய்துவைக்க கடுகியே கூட்டிப்போறேன்
என்றுமே தோட்டி இதமாகத் தானுஞ்சொல்லி
குன்றுடையாக் கவுண்டரையும் கூட்டிவந்தான் தோட்டியுமே

மணியம் குறிச்சி மாமன் மலைக்கொழுந்தார் வீட்டுக்கு
வந்துமேதானும் வகையாக எந்தனையும்
கல்யாணஞ் செய்து கடுகியே அப்போது
பாதிக் கல்யாணம் பாங்காகத்தான் முடித்து
அரைக் கல்யாணஞ் செய்து அப்போ துரத்திவிட்டார்

உன்னுடைய பேரப்பெண் இருவர் பிறப்பார்கள்
என் வயிற்றில் இரண்டாண்கள் இதமாய் பிறப்பார்கள்
அவர்கள் கல்யாணஞ்செய்து கன்னிசிறை வைப்பார்கள்
என்று சபதம்சொல்லி இளங்கொடியாள் நானும்வந்தேன்
வந்து வளநாட்டில் வகையாக இருக்கையிலே

பங்காளி தன்னிடத்தில் உங்களைய்யர் பாகமது
கேட்கப்போனார்

பாகம் கொடுக்காமல் உங்களைய்யரை பதைக்க அடித்தார்கள்
அடிபொறுக்க மாட்டாமல் அலறியே கீழ்விழுந்து
துள்ளித் துடித்து துடிதுடித்துக் கீழ்விழுந்தார்
கருவேலா மரத்திலே கட்டி அடித்தார்கள்

போனவரைக் காணோமென்று போய்நானும் பார்க்கையிலே
சோர்ந்து மயங்கித் துவண்டுகிடந்தாரே
கட்டுகளைத் தானவிழ்த்துக் களையாற்றி அப்போது
முன்பழியும் பின்பழியும் முப்பழியும் தீர்ப்பேனென்று
சபதமும் நான்போட்டு தையலரும் நானும்வந்தேன்

இப்படியாக இருந்தோம் சிலகாலம்
மக்கள் முகங்காண மனது மிகத்துடித்து
பிள்ளை முகம்பார்க்க எனக்கு பெருங்கவலை தானாகி
பங்காளி வீட்டுக்கு குழந்தைகளைப் பார்க்கவே
நான்போனேன்

பங்காளி கவுண்டச்சிகள் பாதகிகள் எந்தனையும்

மலடி நிழல்பட்டால் மக்களுக்கு ஆகாதென்று
அடித்துத் துரத்திவிட்டார் அநியாயம் செய்துவிட்டார்
அவர்களுக்குச் சபதம் அருங்கிளியும் நான் போட்டேன்
என் வயிற்றில் இரண்டு வீரியர்கள்தான் பிறந்து
மக்களால் உங்களுக்கு மரத்தாலி கட்டவைப்பேன்

என்று சபதமிட்டு இளங்கொடியாள் நானும்வந்தேன்
இப்படியாக இருந்தோம் சிலகாலம்
நாங்கள் தேடும் திரவியத்தை செலவு செய்யும் ரொக்கத்தையும்



பங்காளிக்குப் பயந்து பாங்காக நாங்களுந்தான்
மேநாடு கொடியரசு வேட்டுவ ராஜனிடம்
பணத்தைக் கொண்டுபோய் அடைக்கலம் வைத்தேனான்
அவன் பணத்தை எடுத்துக்கொண்டு பாதகம்
செய்துவிட்டான்

பணத்துக்குப் பதிலாக பிணமலை குவிப்பேனென்று

சபதமும் நான்போட்டு தையலரும் நானும்வந்தேன்
இந்த முன்பழியும் பின்பழியும் முடிக்க வேண்டுமென்றாளே
தாமரையாள் சொல்லையிலே தானுமங்கே அண்ணருக்கு
பொங்குது கண்ணீர் பொழியுது மார்மேலே
சிந்துது கண்ணீரு அண்ணருக்கு சிதறுது மார்மேலே

## அண்ணர் பங்காளிகளைப் பழி தீர்த்தல்

அடா வையமலைச் சாம்புவனே மலடி பெற்ற மாங்குயிலே
வீரமலைச் சாம்புவனே வீரியனே நீயும் போய்க்
கருப்பத்தூர்கோட்டை கடுகியே நீ சென்று
பங்காளி பதினொருபேர் பாதகர்கள் எல்லோரையும்
அங்கே பிடிக்கும்சிகை இங்கே கொண்டு வாருமடா

அப்படியே நல்லதென்று ஆனதொரு சாம்புவனும்
களிங்கோல்* தடியெடுத்து கடுகியே வாரானே
கருப்பத்தூர் கோட்டை தேடி வாரானே சாம்புவனும்
கருப்பத்தூர் பங்காளி கண்டார்கள் சாம்புவனை
எந்தவூர் எவ்விடம் நீ எங்கிருந்து இங்கே வந்தாய்

என்றுமே கேட்க ஏதுசொல்வான் சாம்புவனும்
நெல்லி வளநாடு நெற்சூழ்ந்த கோனாடு
குன்றுடையார் பெற்றெடுத்த குலமணிகள் இருவருந்தான்
பொன்னர் சங்கரென்னும் புண்ணியரிருவருந்தான்
அரண்மனை கட்டி அனைவோர்க்கு விருந்துசெய்ய

* களிங்கோல்

உங்களை அழைத்துவர உத்தரவு தானுமய்யா
அப்படியே நல்லதென்று அனைவோரும் தான்கூடி
பங்காளிகள் எல்லோரும் பாங்காக வருகையிலே
பாதித்தடம் வந்தபின்பு பார்த்தானே சாம்புவனும்
நம்மளுட எஜமான் நமக்குமே சொன்னதென்ன

சொன்னதைவிட்டு சும்மா நாம் கூட்டிப்போனால்
நம்மேலே கோபிப்பார் நல்லதொரு தம்பிசங்கர்
என்றுமே தானினைத்து இதமான சாம்புவனும்
பதினொருபேர் தன்சிகையும் பாங்குடனே தான்பிடித்து
இழுத்துமே வாரானாம் எஜமானுட பக்கத்துக்கு

கண்டாரே தம்பிசங்கர் கண்கள் விழிசிவந்து
ஆக்கரித்திப் பற்கடித்து அறுபதடி பின்குதித்து
அஞ்சுமணிக் கயிற்றால் அடியுமடா என்று சொன்னார்
சொன்னதே போதுமென்று துரைமகனாம் சாம்புவனும்
அஞ்சுமணிக் கயிற்றால் அடித்தான் அவர்களையும்

அடிபொறுக்கமாட்டாமல் அலறியங்கே தான்விழுந்து
ஐயோ சிவனே என்று அலறிப் புலம்புவாராம்
விட்டுவிடு எங்களையும் வேறேஊர் நாங்கள் போறோம்
அப்போது சின்னாண்டார் அண்ணருமே தான்பார்த்து
முன்பழியும் தீர்ந்ததடா பின்பழி யிருக்குதென்று

தலைகீழாய்த் தொங்கக்கட்டி சவுக்காலடியுமென்றார்
அந்த மொழிகேட்டு அடித்தானே சாம்புவனும்
அடிபொறுக்க மாட்டாமல் அலறியே கீழ்விழுந்து
போதும் போதுமென்று சொல்லி புலம்புகிறார் பங்காளி
அவிழ்த்துவிடு சாம்புவனே அறிவுகெட்ட மூடர்களை

கட்டவிழ்த்து விட்டானே கடியதொரு சாம்புவனும்
அப்போது சாம்புவனை அண்ணருமே தான்பார்த்து
பதினொருபேர்மனைவி பாதகியைத் தானுமிப்போ
கருப்பத்தூர் சென்றுநீ கடுகியே இப்போது



அங்கேபிடிக்கும் சிகை இங்கே கொண்டுவாருமினி
என்றுமே தானுஞ்சொல்ல இதமுடனே சாம்புவனும்
போய் வாரேனென்று சொல்லிப் புறப்பட்டான் சாம்புவனும்
கருப்பத்தூர் தேடியே வாரானே சாம்புவனும்
கருப்பத்தூர் தானும்வந்து கவுண்டச்சிமார்களையும்

உங்களுட கவுண்டருக்கு உகந்த மரியாதை
கொடுத்துமே ஆச்சுதென்று கூட்டிவரச் சொன்னார்கள்
என்றுமே சாம்பு சொல்ல இதமுடனே கவுண்டச்சிகள்
சீவி சிணுக்கறுத்த சித்திரம்போல் கொண்டையிட்டு
வாரி மயிர்முடித்து வலதுபுறம் கொண்டையிட்டு

வண்ண வண்ணப் பட்டெடுத்து வகையாய் மடித்துக்கட்டி
வாரார்களப்போது வளநாடு கோட்டைக்கு
பாதிவழி வந்தபின்பு பார்த்தானே சாம்புவனும்
சும்மா கூட்டிப்போனால் தோசம் வந்துசேருமென்று
களிங்கோல் தடியாலே கழுத்திலே தான்போட்டு

நெட்டியே தள்ளிக்கொண்டு நேராகத் தான் வாரான்
அண்ணருக்கு முன்பாக அனைவரையும் கொண்டுவந்தான்
கண்டாரே சங்கருந்தான் கண்கள் விழிசிவக்க
அவ்வரளிக் கண்கள் இரண்டும் செவ்வரளிப் பூத்தாப்போல்
நீலவிழிக் கண்கள் இரண்டுமே நெருப்புதணலாகு தப்போ

அஞ்சுமணிக் கயிற்றால் அடியுமென்றார் சாம்புவனை
முன்வீச்சு பின்வீச்சு முடுக்கி அடித்தானே
அடிபொறுக்க மாட்டாமல் அலறித் துடி துடித்து
விட்டுவிடு எங்களையும் வேரேஊரு நாங்கள் போறோம்
என்று சொல்லி கவுண்டச்சிகள் இப்படிப் புலம்புகையில்

தாயாரு சொன்ன சபதம் முடிக்கவென்று
மரத்தாலி கட்டுமென்றார் வகையான சாம்புவனை
அப்போது கவுண்டச்சிகள் அனைவருமே தானழுது
நீசன்வந்து தாலிகட்ட நீதியோ உங்களுக்கு

பங்காளி கவுண்டச்சிகள் பதறி அழுகையிலே
அப்போது தாமரையும் அருங்கிளியும் ஓடிவந்து
சொன்னதே போதுமப்பா சும்மாவிடு அவர்களையும்
அப்போது சங்கருக்கு அதிக கோபம் தானாகி
அந்த மூதேவியை அடித்த அடி நம்ம தாயாரை
அடியுமென்றார்

அடியுமென்ற சொல்கேட்டு அண்ணருமே ஓடிவந்து
பொறுமை பொறுத்த பொன்னம்பலசுவாமி
அடிக்க யினிவேண்டாம் அவர்களையும் விட்டுவிடு
கட்டவிழ்த்து விட்டானே கடியதொரு சாம்புவனும்
பங்காளி பதினொருபேர் பாங்காகத் தானும்வந்து

நாடுநகரமெல்லாம் நாங்கள் விட்டுப் போறோமென்றார்
மேநாடு திசைநோக்கி விரைந்தோடிப் போனார்கள்
வேட்டுவ ராஜரண்டை விபரத்தைத் தானுஞ்சொல்லி
பொன்னரையும் சங்கரையும் பொல்லாத இருவரையும்
கொன்று பழிதீர்த்தால் கொடுப்போம் நாடு உங்களுக்கு
என்று சொல்லித்தானும் இருக்குமந்த வேளையிலே

## சேவல் கட்டுச் சண்டை

மேனாட்டு வேட்டுவர்கள் வெகு கூட்டம் தான்கூடி
வேட்டுவர் அனைவோரும் விரைவாகத் தான்கூடி
ஏழை வெள்ளாளன்பயல் இனிச்சபதம் செய்துவிட்டான்
நாம் இருபத்திரண்டுநாடு விதமுடனே தான்கூட்டி
எந்த 'விதமானாலும் இவனை இறக்கடிக்க வேண்டுமென்று

சாவல்கட்டு சண்டையாய் சமர்த்துவைக்க வேணுமென்று
அரைஞாண் கயிறுகட்டும் ஆண்பிள்ளை யுள்ளதெல்லாம்
சோடுரெண்டு சாவல் சூதகமாய்க்கொண்டுவந்து
வெள்ளிக்கிழமை விடிந்து பத்து நாழிகைக்கு
நாடுகாணி மேட்டில் நலமாக கூட்டமென்று



ஓலையெழுதி ஒரு தூதுவன் கையில் கொடுத்து
சேவகனைத் தானனுப்பி விட்டானே காளிமகன்
ஓலைகொண்டு சேவகனும் ஓடிவாரான் வளநாடு
இப்படியாக இருக்குமந்த வேளையிலே

## தங்கை சொப்பனம் கண்டு அண்ணரிடம் சொல்லுதல்

அண்ணருடன் பிறந்த அருக்காணி நல்லதங்கம்
பொன்னருடன் பிறந்த பேடைமயில் தங்கையரும்
அன்னலூஞ்சல் தூரியிலே அசந்து நித்திரை செய்கையிலே
பொன்னூஞ்சல் தொட்டியிலே பொய்யுறக்கம் தூங்கையிலே
பொல்லாத சொப்பனமும் பொன்மயிலி கண்டுவிட்டாள்

ஆகாத சொப்பனமும் அருங்கிளியும் தானுங்கண்டு
தாதிகளைத் தானழைத்து தங்கையருமேது சொல்வாள்
வாருமடி தாதிகளே வளநாட்டு அண்ணருக்கு
மேனாட்டு வேட்டுவர்கள் வெகு கூட்டம் தான்கூட்டி
சூதாலே சாவல்கட்டு துரிதாகக் கட்டவென்று

ஓலை வருகுதென்று உத்தமியும் சொன்னாளே
வந்த நல்ல சேவகனைத் தாதி வழிபார்த்து தானிருத்து
வளநாடு கோட்டைக்கு வகையாக நீர்போய்
பொன்னம்பல சுவாமியிடம் ஓலை பொருதவே
கொடுமென்றாள்

வளநாடு கோட்டைக்கு வந்தானே சேவகனும்

பொன்னரிடத்திலே போய்க்கொடுத்தான் ஓலையதை
நாடு காணிமேட்டிலே தான்வாங்கி உத்தமரும்
ஏதுசொல்வார்

நாடு காணிமேட்டிலே நலமாகக் கூடுகிறார்
சாவல்கட்டு சண்டையென்று வேட்டுவர்
சமத்துமேகூறுகிறார்

தங்கை அரண்மனைக்குத் தான்வந்தார் அண்ணர்களும்

அண்ணரைத் தான்பார்த்து அருங்கிளியும் ஏதுசொல்வாள்
சாவலும் இல்லாமல் அண்ணா சபைக்கோச்சை
போறீர்களோ?
பணத்துக்கு வாங்கினால் படைப்போரு வெல்லாது
அடையிருந்த முட்டையை உத்தமி அன்புடனே தானெடுத்து
ஆதிசிவனாண்டி ஐயரையுந் தானினைத்து

மூக்கு சிவந்தமுட்டை முதல் இரண்டு தானெடுத்து
பொன்னம்பலத்திலே என்தாயார் சன்னியாசி கோவிலிலே
வாக்குமது வாங்கி வந்ததுமே மெய்யானால்
இன்றெடுத்த சபதம் வீணாகப் போனாலும்
சன்னியாசி கோவிலிலே கொடுத்த வரம் பொய்யாகும்

என்று தங்கை சொல்ல கையிலிருந்த முட்டையுந்தான்
தாண்டிக் குதித்துத் தரையில் விழுந்திடுமாம்
முட்டை சிதறியதும் முத்துநிறச் சாவல் ரெண்டு
கால்இரண்டும் பச்சைநிறம் கடையிறகு தங்கநிறம்
பச்சைக்கால் கீரி பவளக்கால் கெருடனது

இறகுதட்டி பறவைஆடி சங்கர் முன்னே எதிரே நின்று
கூப்பிட்டது
சாவல் கட்டுச் சண்டைக்கு அண்ணர் சதிராய்ப்
பயணமென்று
அண்ணரிருவருந்தான் அத்தர் பன்னீர் மிகப்பூசி
சாந்துபுனுகு பொன்னர் சங்கர் ஐவ்வாதுமே பூசி
மார்பு நிறைந்த அண்ணர் வச்சிரமணித் தாவடமும்

இடுப்பில் நிறைந்த இயல்பான சோமன்கட்டி
சிரசில் உருமாலை சீக்கிரமாய் தானுங்கட்டி
உத்தமியாளிடத்தில் அண்ணர் உத்தரவு தானும் பெற்று
சேவலைத்தானெடுத்து அண்ணரிடம் தங்கையருந்தான்
கொடுத்தாள்
வாங்கியே அண்ணரும் வகையாக அப்போது



கண்கள் சிவந்து கடுங்கோபம் தானாகி
சாம்புவனைத் தானழைத்து சாவலைக் கொண்டுவாவென்று
வாயு வேகமாக வருகிறாரப்போது
நாடுகாணி மேடுதேடி நலமாக வாரார்கள்
வாரதைக் கண்டார்கள் வகையான வேட்டுவர்கள்

ஏழை வெள்ளாளன் பயல் இதோ வாரானென்று சொல்லி
தலையூருக் காளிமகன் தட்டவட்டம் பேசுகிறான்
அப்போ அண்ணரிருவரும் ஆனதொரு சாம்புவனும்
வந்த வந்த வேட்டுவரெல்லாம் வகையாக அப்போது
சோடுரெண்டு சாவல் சுத்தங்களென்று சொன்னார்

அப்போது பொன்னாண்டர் அன்பாகச் சொல்லுகிறார்
விளையாட்டுச் சண்டையென்றால் நாம் விலகியே
போய்விடுவோம்
தலையூருக் காளிமகன் தாட்டீகம் சொல்லுகிறான்
வினைச்சண்டை யென்றுசொல்லி கத்தி விதமுடனே
சுத்தினார்கள்
மூன்று லட்சம் சாவல் மூணரை நாழிகையில்

கத்தியும் சுத்தினார்கள் கனமாக அப்போது
அப்போ சின்னாண்டவரும் அண்ணரையும் தான்பார்த்து
கத்தி கட்டவேணுமென்று காரியமாய்த் தான்கேட்க
வல்லவர்க்குப் புல்லும் வகை ஆயுதமென்று
சொன்னாரே அப்போது சொர்ணமுடிப் பொன்னாண்டார்

குடைசீத்தை முள்ளெடுத்து சங்கர் கூசாமல் சுத்துமென்றார்
அப்போது சங்கருமே அண்ணருட சொல்படியே
குடைச்சீத்தை முள்ளெடுத்து குணமாக சுத்திவிட்டார்
வேட்டுவர்களெல்லாம் விதமாகப் பார்த்திருந்தார்
அப்போது காளிமகன் அளவுடனே சொல்லுகிறான்

கால்பணத்து சாவல்குஞ்சு இந்த கனத்தபடை வெல்லுமாடா
அரைப் பணத்துச் சாவல் குஞ்சு ஆக்கரித்து
வெல்லுமாடா?

என்று சொல்லி சபதம் இதமுடனே கூறினானே
தடவிக் கொடுத்தாரே சேவலை தம்பி சங்கர் அன்போடு
அப்போ ஆரைநினைத்தாராம் அளவற்ற பொந்தியிலே
ஆதிசிவனாண்டி ஐயரையுந் தானினைத்து
இன்றைக்கெடுத்த சபதம் இதுவீணாய்ப் போனாலும்

சன்னியாசி கோவிலிலே கொடுத்த வரம் பொய்யாகும்
அவ்வரளிக் கண்கள்இரண்டும் செவ்வரளி பூத்தாப்போல்
நீலவிழிக் கண்கள்இரண்டும் நெருப்புத் தணலாகுதப்போ
மீசை துடித்திடுமாம் சங்கருக்கு முன்கோபம் வந்திடுமாம்
(அடே) தலையூருக் காளிமகன் தனம்பெரிய சேவகன் நீ

சேவலை ஒன்றொன்றாய்விட்டாலே ஒரஞ்சு நாள்செல்லும்
ஒருமிக்க விட்டுவிடு உன்சமர்த்து பார்க்கிறேண்டா
என்று சின்னாண்டவரும் இதுமுடனே சொல்லியேதான்
ஐந்துலட்சம் சேவலையும் அன்புடனே விட்டார்கள்
தம்பிசங்கர் அப்போது சேவலைத் தட்டிக்கொடுத்தாராம்

தட்டிக் கொடுத்ததுமே தம்பி சங்கர் கையும் பட்டவுடன்
இறகெல்லாம் சேவலுக்கு ஈட்டிக் கத்தியாகிடுமாம்
பக்கத்தெலும்பெல்லாம் சேவலுக்கும் பருஞ்சாணைக்
கத்தியாகும்
தரையில் கால் பாவாதாம் சங்கருட சேவலுக்கு
மண்ணில் கால் பாவாதாம் சங்கர் மகராசன் சேவலுக்கு

கொக்கரித்துக் கூப்பிட்டு சேவல் கூசாமல் வீசிடுமாம்
முன்வீச்சும் பின்வீச்சும் சேவல் முடுக்கியே வீசிடுமாம்
தாண்டி வந்த எதிரி சேவல் தலை வேறு கால்வேறாம்
ஐந்துலட்சம் சேவல்களை அண்ணர் சேவல் அப்போதே
தீர்த்ததுவாம்
வேட்டுவர் சேவலெல்லாம் வீணாய்மடிந்தனவே
ராணுவத்தைச் சுற்றிவந்து அண்ணர் சேவல் நடுநின்று
கூப்பிடுமாம்



அண்ணர் இருவருமே சேவலை அன்புடனே தானெடுத்து
சங்கரைத் தான் பார்த்து அண்ணர் தயவாக ஏதுசொல்வார்
காயத்தைப் பார்த்து சேவலுக்குக் களை தேற்றுமென்றாரே
காயமேதும் இல்லையென்று சங்கர் சொகுசாகச் சொன்னாரே
வேட்டுவர்கள் தான்பார்த்து விசனித்துக் கண்கலங்கி

வீரியர்கள் என்று சொல்லி வெம்பி மனம் புழுங்கி
நின்று மனங்கலங்கி நினைவிழந்த வேளையிலே
அப்போது பொன்னாண்டர் அவருமங்கே ஏது சொல்வார்
சாம்புவனைத் தானழைத்து சேவல்களைக் குவியுமென்றார்
சென்னிமலை போலே சாம்பான் சேர்த்துக் குவித்தானே

பழனிமலை போலே சாம்பான் பார்த்துக் குவித்தானே
வெள்ளியங்கிரிமலை போலே விரசாய்க் குவித்தானே
ஆதிகருமலை போல் அழகாய்க் குவித்தானே
மருதமலைபோல் வளர்த்துக் குவித்தானே
சாவல் ரத்தம் தான்பெருக்கி ஆறுபோல போகுதினி

உதிரக் கருப்பென்று (நாடு காணி மேட்டில்) உண்டு பண்ணி
வைத்தாராம்

கல்லுள்ள நாள்வரைக்கும் முள் உள்ள காலம் மட்டும்
சூரியனும் சந்திரனும் சுற்றிவரும் காலம்மட்டும்
நாடுகாணிக் கருப்பனென்று நலமான தேவதையாய்
உண்டுபண்ணி வைத்தாரே உத்தமராம் பொன்னர் சங்கர்

பொன்னரும் சங்கரும் போதவே தானெழுந்தார்
வீரமலைச் சாம்புவனும் வீரியனுந் தானெழுந்தான்
அப்போ வேட்டுவர்களெல்லாம் விரைவாகத் தான்கூடி
ஏழை வெள்ளாளன் பயல் இனியிருக்கக் கூடாது
நம்மை அடக்கியவன் நாடாளப் பார்ப்பதுவோ

எப்பொழு திருந்தாலும் இவனைக்கொல்ல வேணுமென்று
என்றுமே திட்டமிட்டு இருந்தார்கள் காளிமக்கள்
அண்ணர் இருவரும் ஆனதொரு சாம்புவனும்

வளநாடு கோட்டைக்கு வாரார்களப்போது
இப்படியாக இவர்களிருக்கையிலே

## தாய் தகப்பன் மடிதல்

வளநாடு கோட்டையிலே இவர்கள் வாழ்ந்திருக்கும் நாளையிலே
குன்றுடையாக் கவுண்டருடன் குலம்பெரிய நாச்சியுமே
நானூறும் பத்தும் சென்று நரைத்த கிழமானார்
தொண்ணூறும் பத்தும் சென்று துவண்ட கிழமானார்
இத்தனைநாள் வாழ்ந்ததெல்லாம் எண்ணி மனங்கலங்கி

பங்காளிமார் செய்த பாதகத்தை நெஞ்சிலெண்ணி
நாம் வரத்தாலே பெற்றெடுத்த மைந்தரவர் பொன்னர் சங்கர்
தவத்தாலே பெற்றெடுத்த தங்கம் இனி என்னசெய்வார்
வேரோடி ஆலமரம் விழுதுவிட்டுப் படர்ந்த பின்னர்
ஆணிவேர் இற்றுவிட்டால் அக்குடும்பம் என்னசெய்யும்

கபடறியோம் சூதறியோம் காலமெல்லாம் வாழ்ந்துவிட்டோம்
கபடறியா பொன்னர் சங்கர் கல்யாணம் பார்க்கவில்லை
வெளுத்ததெல்லாம் பாலென்பான் வீரமகன் குன்றுடையான்
பழுத்த கிழமாகிவிட்டான் பரமனையே எண்ணுகிறான்
கல்லுக்கும் வாயிருந்தால் கண்ணீர் விட்டேயழுமாம்

நல்ல எங்கள் தாமரைத்தாய் நாளெல்லாம் பட்டதுன்பம்
மங்குமசையனுக்கு வாழ்க்கைப்பட்ட நாள் முதலாய்
எங்கள் தாய்பட்ட துன்பம் எடுத்துரைக்கக் கூடிடுமோ?
ஒன்றா இரண்டா ஒரு நூறு ஆயிரமா?
அன்று முதல் இன்றுவரை அவள்பட்ட துன்பம் சொல்ல

மண்ணாய்ப் பிறந்திருந்தால் வயல்வெளியில் கொட்டிடுவார்
பெண்ணாய்ப் பிறந்தேதான் தாயார் பெரும்பாடு பட்டுவிட்டாள்



மன்றாடும் தேவனையே மகாதேவனைத் தான்தொழுதார்!
காய்ந்த சருகானோம் கதிர்பழுத்த கம்பானோம்
ஓய்ந்துமே போனபின்பு உலகிலினி வேலையுண்டோ?
என்றே தியானித்து இருவருமே கும்பிடவும்
ஆதிசிவன் அன்போடு அவரை அழைத்தனரே

பரமனுடைபாதம் பாங்காகப் போய்ச்சேர்ந்தார்
அப்போது சின்னாண்டார் அண்ணரிருவருமே
அத்தைமக்கள் மூவருமாய் ஆனதொரு சாம்புவனும்
தாதியர்தானும் தங்கையை அழைத்து வந்தார்
தங்கையரும் வந்து தாயாரைத் தான்பார்த்து

பாலூத்தி பாத்திகட்டி வளநாட்டில் பாக்குமரத் தோப்பும் செய்து
பாக்குமரத்தடியில் தாமரை பார்த்தழுக பெண்ணுவைத்தார்
நெய்யூத்தி பாத்திகட்டி நெல்லிமரம் தோப்பும்செய்து
நெல்லிமரத்தடியில் தகப்பன் நின்றழுகப் பெண்ணுவைத்தார்
அழுது புலம்பியே தங்கை ஆவேசங் கொண்டிருந்தாள்

வாடி மனங்கலங்கி மருக்கொழுந்து நின்றிருந்தாள்
அப்போ அண்ணர் இருவரும் அத்தைபிள்ளை மூவரும்
வீரமலைச் சாம்புவனும் வீரியனுந்தானிருந்து
வளநாட்டுக் கோட்டையுள்ள மக்களெல்லாம் தான்கூடி
கேரளத்து மலைவளரும் சந்தனத்துக் கட்டைகொண்டு

சந்தனக் கட்டைகொண்டு சதிராகத் தானடுக்கி
குங்குமக் கட்டைகொண்டு கோளாராய்த் தானடுக்கி
தாயார் தகப்பனையும் தயவாக அடக்கம் செய்து
பொன்னம்பல சுவாமிக்கு புனிதமுடி சூட்டிவைத்தார்
அண்ணர் சடங்கு செய்தால் ஆகாது என்று சொல்லி

ஈமக்கிரியையெல்லாம் இதமாய் முடித்துவிட்டார்
அரண்மனைக்கு வந்துமவர் அன்பாயிருக்கையிலே

## தங்கை கிளி, மயில், புறா கேட்குதல்

அண்ணருடன் பிறந்த அருக்காணி நல்லதங்கம்
பொன்னருடன் பிறந்த பொற்கொடியாள் நல்லதங்கம்
சின்னண்ணா என்பிறவி செல்வத் திருமுகமே
பெரியண்ணா என் பிறவி பேர் பெரிய ராஜாவே
தாயார் இறந்ததொரு தனித்துயரம் தீர்வதற்கு

மாதா இறந்ததொரு மனத்துயரம் தீர்வதற்கு
கூடவிளையாட நாட்டுக்கிளி வேணுமென்றாள்
மயில் வேணும் குயில் வேணும் மாடப்புறா தான்வேணும்
அன்னமுடன் தாராவும் அநேகமாய் வேணுமண்ணா
கொஞ்சி விளையாட குலக்கொடியாள் எந்தனுக்கு

பஞ்சவர்ண நற்கிளியும் பவளவர்ணத்தாராவும்
கொண்டுவந்து தரவேண்டும் குலக்கொடியாள் எந்தனுக்கு
என்று சொல்லித் தங்கையரும் இதமுடனே கேட்கையிலே
அப்படியே நல்லதென்று அண்ணர் இருவரும்
கொண்டுவந்து நாம்தருவோம் குலக்கொடியே உந்தனுக்கு

என்று சொல்லி அண்ணரும் இதமுடனே தான்பார்த்து
எந்தமலைக் கிளிதான் உனக்கு ஏற்றகிளி சொல்லுமம்மா
அந்தமலை மேலே நான் வேட்டைமுகம் போய்வாரேன்
அண்ணருஞ் சொல்ல அருங்கிளியும் ஏதுசொல்வாள்
எந்த மலையிலேயும் அண்ணா எனக்கு ஏற்றகிளி
நல்லதில்லை

நாலுபுறம் மலையிலேயும் எனக்கு நல்லகிளி ஆனதில்லை
கன்னங்கருத்தமலை சுவாமி கைலாசம் போன்றமலை
நாலுபுரம் சதுரகிரி அதன் நடுவிருக்கும் வீரமலை



வீரமலைக்கிளியானால் அண்ணா விளையாட நல்லகிளி
வீரமலை வனத்தில் வெண்முடிக்குத் தென்கிழக்காய்
அடர்ந்தது பலாமரம் இருண்டதொரு சோலையது
அதிலே ராமலட்சுமணரென்றுரண்டு அன்னக்கிளிகளுண்டு
அந்த அன்னக்கிளி கொண்டுவந்தால் அருகிருந்து
பேசுமண்ணா

வீரமலை வனத்தினில் அண்ணா வேட்டைமுகம்
போய்வாரும்

அந்த மொழிகள் சொல்ல அண்ணர் அழைத்தாரே தம்பியரை
வாராயிளவரசே வாள்வீரா தம்பிசங்கு
வெற்றிமதயானை வீரியனே தம்பிசங்கு
மயில்வேணும் குயில்வேணும் தங்கையர்க்கு
மாடப்புறாதான்வேணும்

வீரமலை வனத்தில் நான் வேட்டைமுகம் போய்வாரேன்
வேட்டைக்கு நான்போய் விரைவாய் திரும்புகிறேன்
நானிருக்கும் சிங்காதனம் தம்பி நீயிருக்க வேணுமிப்போ
அந்தமொழிகேட்டு குமரசங்கு அப்போது சொல்லுகிறார்
என்னை இருக்க அண்ணா என்ன மொழி சொன்னீர்கள்

பட்டம் பொருத்ததுரை அண்ணா பாருலகு ஆண்டவர்கள்
சிங்காதனமேறி அண்ணா திருக்கொலுவு பெற்றவர்நீர்
நீரிருக்கும் சிங்காதனம் அண்ணா நானிருக்கக் கூடுமோதான்
நானிருக்கப் பொறுக்குமா நல்லவார்த்தை சொன்னீரண்ணா
நீர்போற வேட்டைமுகம் நானே போய்வாரேனினி

அந்தமொழி கேட்டு அண்ணர் அப்போது சொல்லுகிறார்
நீவேட்டைக்குப் போன இடத்தில் வேடுபடை
கண்டாயானால்

வேடுபடை கண்டாயானால் இப்பவினையென்று பாராய்நீ
வலிய உறவுபண்ணி வம்புச்சண்டைகொள்வாய் நீ
நாட்டிலே போகிறதை நமக்குக் கொண்டு வந்திடுவாய்

நீபோகும் வேட்டைமுகம் தம்பி நானேபோய்
வாரேனிப்போ
என்றுமே அண்ணர் சொல்ல ஏதுசொல்வார் சங்கருந்தான்
வேட்டைக்குப் போனவிடத்தில் அண்ணா வேடுபடை
கண்டாலும்
உங்கள் உத்தரவு இல்லாமல் ஒருவருடன் போர்புரியேன்
மயில்கள் குயில்பிடித்து அண்ணா மாடப்புறா தான்பிடித்து

அன்னங்கள் தாராக்கள் ஆனதெல்லாம் நான்பிடித்து
வாரேன் அரைநொடியில் வகையுடனே இப்போது
வேட்டைக்கு நான்போக விடைதாரும் அண்ணாவே
அந்த மொழிகள் சொல்ல அண்ணர் அப்போது
ஏதுசொல்வார்
வேட்டைக்குப்போய் தம்பிசங்கு விரைவாய் திரும்புமடா

மயில்கள் குயில்பிடித்து மாடப்புறா தான்பிடித்து
அன்னங்கள் தாராக்கள் ஆனதெல்லாம் தான்பிடித்து
வாரும் நீ தம்பி என்று வகையுடனே சொன்னபின்பு
அந்த மொழிகள் சொல்ல அண்ணர் பாதம் அடிவணங்கி
தெண்டனிட்டு
அரண்மனையினுள் புகுந்து ஆனபேழை தானெடுத்து

ஆடை விரித்தெடுத்து அலங்காரமாய் வரிந்துகட்டி
பூட்டினார் பனுதிகளைத் தன்னுடைய பொன்னுந்
திருமேனியிலே
மார்பு நிறைந்ததொரு வைரமணித் தாவடமும்
மாணிக்கம் பதித்ததொரு மார்பில் பதக்கமிட்டு
முத்து பதித்ததுவாம் மோகன மாலையிட்டு

முத்தால் அலங்கரித்த முழுநீளத் தாவடமும்
பச்சைக்கல் வச்சிரமும் பதித்த கடுக்கணிட்டு
பத்து விரலுக்கும் பசும்பொன் கணையாழி
எட்டு விரலுக்கும் இசைத்த கணையாழி
கடதாரம் முடதாரம் கண்டசரம் பூட்டியேதான்



தங்கத்தாலிழைத்த சருகு வார்த்த நிசாருடுத்து
அல்லிக்கயிரெடுத்து அலங்காரமாய்ப் பூட்டி
வர்ணக் கச்சை தானெடுத்து அதை வாகாய் வரிந்துகட்டி
எண்ணெய் கச்சை தானெடுத்து அதை இதமாய் வரிந்துகட்டி
பட்டுச்சுங்கம் பறக்கவிட்டு அதைப் பாங்காய் வரிந்துகட்டி

ஒட்டியாணம் பூட்டெடுத்து ஒரு நொடியில் தான்பூட்டி
எட்டுகட்டி போட்டடித்த இரணங்கண்ட மந்திரவாள்
இரணங்கண்ட மந்திரவாள் அதை வாகாய் வரிந்துகட்டி
வாரி வலையெடுத்தார் வீரமலை வனத்தில் வீசி
வலைபோட
வீரமலை வனத்தில் வேட்டைமுகம் போகவேதான்

ஆசாரம் வந்திருந்து அழைத்தாரே மைத்துனரை
அந்தச் சத்தம் கேட்டு மைத்துனர் அதிதுரிதாய் ஓடிவந்து
என்னை அழைத்ததென்ன மைத்துனரே எனக்காளு
விட்டதென்ன
அந்தமொழி கேட்டு குமரசங்கு அப்போது சொல்லுகிறார்
வாருங்கள் மைத்துனரே வார்த்தைசொல்லக் கேளுமினி

வளநாட்டு உத்தமிக்கு மயில்வேணும் குயில்வேணும்
அன்னங்கள் தாராக்கள் அனேகங்கள் வேணுமிப்போ
வீரமலை வனத்தில் வேட்டைமுகம் போகவேணும்
ஒருவன் வழி போகலாமா மைத்துனரே இருவரும்
போவோமினி
அந்தமொழி சொல்ல எதிரில்லா பெருமாள் அப்போ
பயணமானார்

அரண்மனையினுள்புகுந்து ஆடை அலங்கரித்து
கட்டினார் கச்சைகளை கலைந்துவிட்டார் சுங்குகளை
ஒட்டியாணம் பூட்டெடுத்து உறுதியாய்த் தான்பூட்டி
கல்தெரிக்க கணைபாயும் காண்டீபமென்ற வில்லும்
எதிர்த்தாரை ஈடழிக்கும் எமனாசூரன்கணையும்

வில்லும் இடதுகையில் விலாவில் அம்புறாத் துணியும்
வாங்குபிடிசூரி வகையாய் வரிந்து கட்டி
வீரமலை வனத்தில் இருவரும் வேட்டைமுகம் வாரார்கள்
காடுகட்டி கிளிகளைத்து வீரமலை கானகத்தில் வாரார்கள்
வாரி வலையெடுத்து வீர மலைவனத்தில் வலைபோட்டு

வீசி வலைபோட்டு வேட்டை விளையாடி வாரபோது
சேர்ந்த குறிஞ்சிவனம் செம்பூலாஞ்செடி வனத்தில்
செம்பூலாஞ்செடி வனத்தில் வேங்கை சிலகாலம்
வாழ்கிறதாம்

அறுபதடி பெருவேங்கை அது அநேகநாள் வாழ்கிறது
ஆறுமாதம் ஒரு வருஷம் அது ஆகாரம் இல்லாமல்

வாய் காய்ந்து மேனியெல்லாம் வாடுதே பெருவேங்கை
பசிவெறியில் மனித ரத்தம் பார்த்திருக்கும் பெருவேங்கை
காடுகட்டி கிளைகளைத்து கானகத்தில் வாரபோது
கண்டதே இருவரையும் வேங்கை கண்குளிரத் தான்பார்த்து
இரை இல்லை என்றிருந்தேன் இப்போ இரைவந்து
நேர்ந்ததென்று

அங்கம் ஒடுக்கியேதான் வேங்கை அடைவாகத் தான்பதுங்கி
தண்டை அடித்து வேங்கை தான்பதுங்கி இருக்கையிலே
கண்டாரே கண்ணாலே சங்கர் கனத்த முடிவேந்தரவர்
மைத்துனரைத் தான்பார்த்து வாள்வீரன் சொல்லுகிறார்
இரணங்கண்ட வாளுக்கு மைத்துனரே இரை இல்லை
என்றிருந்தேன்

மந்திர வாளுக்கு வேங்கை வகையாய் இரை ஆச்சு
அந்தமொழி சொல்ல வேங்கை அதட்டி எழுந்திருக்க
வேங்கை வெட்டும் வீரியத்தை மைத்துனரே விரைவாகப்
பாருமினி

அப்போது மைத்துனரும் அமைதியாய்ச் சொல்லுகிறார்
வேங்கை வெட்டுகிறனென்று குமரசங்கு வீரியங்கள்
பேசாதே



வெட்டுக்குத் தப்பினால் வேங்கை வீசிடுமே இருதுண்டாய்
அவருட அஞ்செழுத்து மந்திரத்தை நெஞ்சகத்தே உச்சரித்து
மந்திரத்தினாலே வேங்கையை வரிப்புற்றாய் சமைத்தாரே
வந்ததொரு வேங்கை வெட்டி வாளுக்கு இரைசெய்வேனே
வடக்கிருந்து வந்தவர்கள் வெகு மந்திரத்தால் மிகுந்தவர்கள்

மந்திரத்தினாலே இப்போவேங்கையை வரவழைத்துக்
கொல்லாட்டி

தந்திரத்தினாலே வேங்கையை தடைமுறிந்து விடாட்டி
வேங்கைவெட்டும் வாளாலே அத்தர் பெருமானை
வேகமாய் வெட்டுவேனே

வெட்டுவேனென்று சொல்லி என்றாலும் விசாரமினி
அஞ்செழுத்து மந்திரத்தை நெஞ்சகத்தே உச்சரித்து
மந்திரத்தினாலே வேங்கையை வரவழைத்துவிட்டாரே

## சங்கர் வேங்கையை வெட்டுதல்

அங்கம் ஒடுங்கியேதான் வேங்கை அடைவாகத் தான்பதுங்கி
தண்டை அடித்து வேங்கை தான் பதுங்கி வருகையிலே
வாய்திறந்து வாலாட்டி வருகுது பெருவேங்கை
நெருப்புக் குழம்பெதிர்த்து நேரெதிரே நிற்பதுபோல
மைத்துனரைப் பார்த்ததுமே வாள்வீரன் சொல்லுகிறார்

இரணங்கண்ட வாளுக்கு மைத்துனரே இரை
இல்லையென்று வந்தேன்

மந்திர வாளுக்கு மைத்துனரே வகையாயிரையாச்சு
அந்தமொழி கேட்டு வேங்கை அதட்டி எழுந்திருந்து
வாய்திறந்து வாலாட்டி வருகுது பெருவேங்கை
பின்னங்கால் தனையூன்றி முன்னங்கால் தனையெடுத்து

முன்னங்கால் தனையெடுத்து வேங்கை வீசிவரும்
வேளையிலே

ஆக்கரித்து குலவையிட்டு சங்கர் அறுபதடி பின்குதித்து
வட்டமிட்டு பவனிகொண்டு மந்திரவாள் தும்புவிட்டு

மெல்லியவாள் தும்புவிட்டு சங்கர் வீசினார்
வேங்கையைத்தான்
வீசவந்த வேங்கையைத் தான்சங்கர் முன்காலைத்
தான்தறித்து

எதிர்த்துவந்த வேங்கையைத் தான்சங்கர் இருதுண்டாய்
வீசினாரே
வேங்கையை வெட்டியேதான் விளையாடி வாரபோது
வேங்கை வீரிட்ட சத்தம் மேனாடு கேட்குதப்போ

செப்பூசி கொண்டு செவியிடித்தாற்போல்
உருக்கூசிகொண்டு உட்செவியில் விட்டதுபோல்
வானம் உடைந்திடிந்து மண்தரையில் வீழ்ந்ததுபோல்
கேட்குதே அப்போது காளி கிலேசமெத்த உண்டாகி
தலையூருக் காளிமகன் தன்செவியில் கேட்குதப்போ
இப்படியாக இவரிருக்கும் வேளையிலே

## சங்கர் கவரிமான் சல்லி வெட்டுதல்

கானகத்தில் வாழுகின்ற கவரிமான் தாரைகண்டார்
மைத்துனரைப் பார்த்து வாள்வீரன் ஏதுசொல்வார்
காளியென்றும் தூளியென்றும் குதியை கட்டிய புரவிக்கு
கடிய புரவிக்கு கவரிசல்லி பூட்டவேணும்
கவரிசல்லி வெட்டியேநான் கடுகியே வாரேனென்று

அடர்ந்தது பலாமரம் இருண்டதொரு சோலையது
இருண்டதொரு சோலையிலே இருங்காணும் மைத்துனரே
தாரைப்பற்றிப் பின்தொடர்ந்து தான்போனார் நல்லசங்கு
தண்ணீர்க் குடியுங்கண்டு கவரிமான் தனித்திருந்த
இடமுங்கண்டு
நிற்குமிடங்கண்டு கவரிமான் நின்றுரசும் மரமுங்கண்டு

கொத்திட்டுக் கொத்துவைத்து அதிலே குமரசங்கு அந்நேரம்
ஊஞ்சமரத்தடியில் சங்கர் ஒளிந்திருந்து பார்க்கையிலே
எப்போதும்போல கவரிமான் இறங்கி வருகையிலே



செம்மடையில் நீர் குடித்து கவரிமான் சீக்கிரமாய் வந்துமது
தாகங்கள் தானாற்றி கவரிமான் தானாக வந்துமப்போ
அப்போது வன்னிமரம் வந்துநின்று கவரிமான் வகையா
யிளைப்பாறுதங்கே
குஞ்சம் குலுக்கியேதான் கவரிமான் மயிர் உரசயிலே
கொத்திட்டுக் கொத்தினது குஞ்சரத்தைக் கோர்த்திழுக்க

கட்டுப்பட்ட மான்போல கவரிமான் திட்டுப்பட்டு
நிற்குதப்போ
முத்துப்போல் கண்ணீரை முகத்தோட சோரவிட்டு
தங்கம்போல் கண்ணீரை அப்போ தரையில் சோரவிட்டு
எண்ணாது எண்ணி கவரிமான் இதமாய் மனமும் நொந்து
ஒருமயிர் அறுந்தாலும் சிவனே உலகத்தாருக்கீனமினி

கடைமயிர் அறுந்தாலும் சிவனே கண்ணுக்கெல்லாம்
ஈனமினி
இப்படியாகச் சொல்லி கவரிமான் இதமாய் அழுகையிலே
பச்சைக் குடிசைவிட்டுச் சங்கர் பாங்காக அப்போது
அண்ணர் ஏறும் தெய்வப்புரவி பஞ்சகல்யாணிக்கு
காலையின்னா* நீலாவுக்கு கவரிசல்லி தான்தரிக்க

கடுகியே ஓடிவந்து கவரிசல்லி தான்தரித்தார்
கொண்டைக்கு சல்லியப்போ பஞ்சகல்யாணிக்கு
குறுக்காடும் சல்லிகளும்
பித்தட்டுச் சல்லிகளும் குதிரைக்கு பிடிவாரும் சல்லிகளும்
முன்னெற்றிக் குஞ்சம் முகமெட்டும்** சல்லிகளும்
ஐந்து கொத்துசல்லி சங்கர் அடைவாக வெட்டினாரே

சல்லியை வெட்டி குமரசங்கர் தான்விரடடிவிட்டுமப்போது
கவரி சல்லிவெட்டி குமரசங்கர் கடுகி வந்தாரப்போது

---

* காலை யூனா ** முகமொட்டும்

அத்தைபிள்ளை மைத்துனரை சங்கர் அழைத்தார்
வரிசையுடன்
வாருமினி என் அத்தா ஒருவார்த்தை சொல்லக் கேளுமினி
காடுகட்டி செடிகலைத்து என் அத்தா கலைமான்
களைத்தாயா
மலையைக்கட்டி செடிகலைத்து என் அத்தா வரிமான்
வளைத்தாயா
புனத்தைக்கட்டி செடி கலைத்து என் அத்தா புள்ளிமான்
பிடித்தாயா

காடுகட்டி செடிகலைத்து அண்ணர்புரவிக்குகவரிசல்லிதேடி
வந்தேன்
மலையைக்கட்டி செடிகலைத்து வேங்கையை மடிய
வெட்டிவந்தேன்
பொன்னாண்டார் ஏறும் புரவிக்கும் புலிநகம்
சங்கிலிகொண்டுவந்தேன்
வெட்டிவந்தேனென்று மன்னர் இருவரும் வீரியங்கள்
பேசுகையில்
சங்கரித்துவந்தேனென்று மன்னர் சவுகரியங்கள்
சொல்லியேதான்
இப்படியாகவேதான் இவரிருக்கும் வேளையிலே

## தலையூருக் காளி கொள்ளைக்கு வருதல்

தலையூருக்காளியவன் தன்படையைக் கூட்டமிட்டு
மந்திரி கர்த்தரையும் வகையுடனே கூட்டமிட்டு
கொன்றேதான் கொள்ளையிட்டு குன்றுடையான் தன்மகனை
சேனைபடை காவலரைச் செந்தூளியாக்கிவிட்டு
நெல்லிவளநாட்டை நிர்த்தூளியாக்கிவிட்டு

வெட்டிச் சிறைப்பிடித்து விருதுசின்னம் தான்முழக்கி
வருவோம் எனப்பேசி வகையுடனே தானுஞ்சொல்லி
எல்லோருங்கூடி இப்படிக்கு பேசுகையில்



பாழ்மூலைப் பல்லியது பளபளனென்று சொல்லுது
தீய்மூலைப் பல்லியது திகுதிகென்று சொல்லுது
அளைக்கொட்டி பல்லியது ஆக்கரித்துச் சொல்லுதடா
போனோமேயாமாகில் பிழைமோசம் வந்துவிடும்
அளவறுத்தப் பாராமல் அவ்விடத்தில் போகொணாது

குறியில் தெரிந்தவரைக் கூட்டிவந்து பார்க்கவேணும்
கனத்தபடை மன்னரெல்லாம் காளிக் கறிக்கையிட
மதயானை காளியவன் வரிசையுடன் தான்கேட்டு
கோடங்கிக்காரனையே கூட்டிவரச் சொன்னாரே
எவ்வூரில்தானே இருப்பான் குறிகாரன்

வெங்களநாட்டுக்குள்ளே வேதியனொருவனுமுண்டு
தட்டையை நாட்டுக்குள்ளே ஒரு சாஸ்திரியுந்தானுமுண்டு
இவ்விரண்டுபேர்களையும் இக்கணமே கூட்டிவந்து
தான்கேட்க வேணுமென்று தலையூருக் காளிமகன்
ஆளை அனுப்பினான் அழைத்தோடி வாருமென்று

துரிதாய் யழைத்துவரச் சொன்னானே காளியவன்
நல்லதென்று சொல்லி நாடியங்கே தானோடி
சீக்கிரந்தானோடி சினமே அழைத்துவந்தார்
எல்லவருங்கூடி இருக்கும் சபைதனிலே
வந்தாரே சாஸ்திரிகள் வகையாகச் சபைநடுவே

இருங்களென்று சொல்லி இன்பமுடன் தானுரைத்தார்
சாஸ்திரிமார்கள் தயவுடனே ஏதுசொல்வார்
எங்களை அழைத்தவகை ஏதுமையா சொல்லுமென்றார்
வாருமையா சாஸ்திரியே வன்மைக் குறிபார்க்க
அழைத்துவரச் சொன்னோம் அன்பாயிருவரையும்

நன்றாய்க்குறிபார்த்து நலம்பெறவே சொல்லுமென்றார்
அப்போது ஜோஸியரும் ஆண்மையுடன் தான்பார்த்து
பன்னிரெண்டு ராசிகளும் பாங்குடனே தான்பார்த்து
கௌளிகளும் சொன்ன கணிதமதைத் தான்பார்த்து

பாழ்மூலைப் பல்லிசொன்ன பலன்களையும் தான்பார்த்து
மனதில் நினைத்ததெல்லாம் வருத்தமாய்க் காணுது
சிந்தையில் நினைத்ததெல்லாம் திறமுடனே சாவாகும்
வந்திடுமே தூதாட்கள் வல்வினைகள் மெத்தவுண்டு
குறிதானும் சொல்லுதையா கோபமுள்ள மன்னவரே

ஆமையா வேதியரே ஆராய்ந்து சொல்லுமையா
பல்லி சொன்னவார்த்தை பார்த்தறிந்து சொல்லுமையா
என்று சொல்லிக் கேட்க ஏதுசொல்வார் வேதியரும்
எல்லோருங் கூடிநீங்கள் ஏகமாய் தான்பேசி
கொள்ளையிட வேணுமென்று குறித்தாற்போல் காணுது

போனீரேயாகில் பிழைமோசம் மெத்தவரும்
தலைகளுருண்டுவிடும் சனங்களெல்லாம் தான்மடியும்
உடல்கள் உருண்டுவிழும் உம்படைகள் தான்மடியும்
போகிறதேயல்லாமல் பொருந்திவரப் போவதில்லை
என்றுதான் பல்லியது இதமாகச் சொல்லுது

போகிறது ஞாயமல்ல புண்ணியரே சொல்லுகிறேன்
அப்படியானாக்கால் அதற்குவகை சொல்லுமையா
மறுபடியும் குறிபார்த்து சாஸ்திரி வகையுடனே சொல்லுகிறார்
நெல்லி வளநாடு நிகரில்லாக் கோனாடு
சிற்றாலைப் பட்டணமும் சேர்ந்த பொன்னி வளநாடு

திருக்காம்புலியூரு திரமாகக் காணுகுது
வீரமலையும் வெற்றியுள்ள ரங்கதளம்
வடபத்திரகாளி வடிவுள்ள சன்னதியில்
மதுக்கரை செல்லி மாகாளி கோவில் முன்னே
களித்தின்னுமல்லவன் காவலாய் காணுகுது

பொல்லாத காவலிலே போகவினிக் கூடாது
அல்லவென்று போனாக்கால் அதமாகப் போய்விடுவீர்
என்று தான்சொல்ல ஏதுசொல்வான் காளியவன்
கோனாடு கொள்ளையிட குறிப்பறிந்து சொல்வாயேல்
பச்சிலைக் கடகமும் பச்சைவடம் தாரோமய்யா



பாங்குடனே துப்பட்டியும் பரிவான சால்வைகளும்
இருவருக்கும் தந்திடுவோம் இயல்பாகச் சொல்லுமையா
அப்படியே நல்லதென்று ஆராய்ந்து சொல்லுகிறார்
அறிந்தமட்டும் சொல்லுகிறோம் அன்பான காளிமன்னா
மதுக்கரை செல்லி மாகாளியம்மனுக்கு

தேனிலபிஷேகம் செய்து வரவேணுமய்யா
பாலும் பழமும் பாங்கான முக்கனியும்
நல்லெண்ணெய் பால் தயிரு நாடியபிஷேகம் செய்து
களித்தின்னு மல்லனுக்கு கனபூஜை போடவேணும்
அதற்கு வகைவிபரம் அன்புடனே சொல்லுகிறோம்

கம்பரிசிமா விடித்து கருப்புக்கட்டி தான்கலந்து
களிபோலேதான் கிளறி கனமாய் உருண்டை செய்து
பூசணிப் பழம்போல் போதவே தானுருட்டி
எழுபது களியுருண்டை இதமாகத் தானுருட்டி
நாற்பது கலமரிசி நலமாகப் பொங்கலிட்டு

ஆட்டுக்கிடாய் நூறு அளவாய்ச் சமைத்துவைத்து
முட்டையிடும் கோழியொரு முன்னூறு வறுத்துவைத்து
நெய்யில் வறுத்தகறி நீங்கள் படைக்க வேணும்
மதுக்குடங்கள் நூறு வரிசையுடன் முன்னேவைத்து
எழுபது வண்டியிலே ஏற்றியே சோறுகறி

வண்டிதனை நடத்தி வரிசையாய்க் கொண்டுசென்று
காளிக்கபிஷேகம் கனமாகத்தான் முடித்து
களித்தின்னும் மல்லனுக்கு கனபூஜை போட்டாக்கால்
இன்பமுங்கொண்டு இருதோளும் பூரித்து
கொள்ளைக்கிடமுங் கொடுப்பானே மல்லனுந்தான்

அந்த மொழிகேட்டு ஆண்மையுள்ள வேடுவர்கள்
நல்லதென்று சம்மதித்தார் நாட்டாருமப்போது
குறிசொன்ன அய்யருக்கு குணமுடனே நல்வரிசை
கொள்ளைசெய்து வந்தபின்பு கொடுக்கிறோமென்றுசொல்லி
போய்வாருமென்று பொருந்தி விடைகொடுத்தார்

## ஜோசியர் சொன்னபடி காளிக்கும் களித்தின்னும் மல்லனுக்கும் பூஜை போடுதல்

கம்பரிசி மாவிடித்து களிபோலே தான்கிளறி
கம்பரிசியுருண்டை கனமாகத் தானுருட்டி
எழுபது களியுருண்டை ஏற்கையுடன் தான்சேர்த்து
ஆட்டுக்கிடாய் நூறு அடைவுடனே தான்சமைத்து
இளங்குட்டிக்கறி வறுத்து இதமாகத் தாளித்து

நாற்பதுகல மரிசி நலமாகப் பொங்கலிட்டு
முட்டையிடுங் கோழி முந்நூறு தான்வறுத்து
எழுபது வண்டியிலே ஏற்றியே சோறுகறி
நாட்டார்கள் கூடி நாடியங்கே கொண்டுசென்று
மதுக்கரை அம்மனுக்கு மகிழவே பூஜைசெய்து

களித்தின்னு மல்லனுக்கும் கனபூஜை செய்வதற்கு
ஐம்பது மாத்து அடைவுடனே தான்விரித்து
கொண்டுவந்த சோறுகறி கொட்டிவைத்தார் முன்னாலே
ஆட்டுக்கிடாய் கோழி அடைவுடனே முன்னேவைத்து
பச்சிலைகள் வைத்து பரிவாகத் தூபமிட்டு

எல்லோருங்கூடி இனிதாகத் தெண்டனிட்டு
கைகட்டி நின்றார்கள் கனமான வேடுவர்கள்
களித்தின்னு மல்லனவன் கண்ணுருட்டித் தான்முழித்து
முட்டைபோல் கண்ணிரண்டும் முழித்து விழியுருட்டி
கொட்டாவிவிட்டு குறிப்புடன் வாய்திறக்கையிலே

பல்லு மொருமுழமாம் பருத்த சுரைக்காய்போல்
கண்டார்கள் நாட்டார்கள் கைநடுங்கி கால்நடுங்கி
கண்டானே மல்லனுந்தான் காளிமக்கள் சேவகத்தை
பயப்பட வேண்டாமென்று பரிவுடனே கையமர்த்தி
நாட்டார்கள் கிட்டவந்து நலமுடனே மலனுந்தான்

என்னவரங் கேட்க வந்தீர் இயல்பான நாட்டாரே
ஒளியாமல் தானுமிப்போ உள்ளபடி சொல்லுமென்றான்



நாங்கள் வந்தசேதி நன்றாகச் சொல்லுகிறோம்
நெல்லிவளநாடு நிகரில்லாக் கோனாடு
கொள்ளைக்குப் போகவேணும் குணமாய் வரங்கொடையா
என்றுசொல்லிக் கேட்கையிலே ஏதுசொல்வான்
மல்லனுந்தான்

சாப்பிட்டுச் சொல்லுகிறேன் சற்றே பொறுங்களென்று

மண்டியிட்டு வாய்திறந்து வகையாய்க் களியுருண்டை
எடுத்தெடுத்துப் போட்டானே இன்பமுடனே
மல்லனுந்தான்

நெல்லரிசிச் சோறும் நேராய்க் கிடாக்கறியும்
இளங்குட்டித் தலைக்கறியும் இன்பமுடன் சாப்பிட்டு
சுட்டுவைத்த கோழி சுகமாக முன்னூறும்

இத்தனையும் தின்று இனிய மதுக்குடங்கள்
நூறையுமப்போது நுகர்ந்தா னரைநொடியில்
இத்தனையுந் தின்றபின்பு ஏதுசொல்வான் மல்லனுந்தான்
எங்கடா நாட்டாரே என்வயிறு ரொம்பவில்லை
கால் வயிறுகூட அடே காணவில்லை எந்தனுக்கு

தண்ணீருந்தாகம் தானாகி அப்போது
காவேரி ஆற்றுக்கரை ஓரம் வந்தல்லவோ
உறிஞ்சினான் தண்ணீரை ஒருகரண்டி இல்லாமல்
அரைவயிறு நிரம்பியதும் அடைவாக ஓடிவந்து
இதுதான் பூஜையாடா? இன்னமுண்டோ நாட்டாரே!

நாட்டார்களப்போது நடுநடுங்கி ஏதுசொல்வார்
கொள்ளை பலித்து குணமுடனே வந்தாக்கால்
வேண்டிய பூஜை விதமாகவே கொடுப்போம்
என்று அவரும் சொல்ல ஏதுசொல்வான் மல்லனுந்தான்
நம்முடைய காவலது நாடவினிக் கூடாது

சங்கருமே கண்டால் சங்கரிப்பார் தப்பாது
என்னையுமே கேட்டதற்கு இன்னுமொன்று சொல்லுகிறேன்

பாதியிரவில் பதினைந்து நாழிகையில்
திருக்காம்புலியூரு தென்சிறகு விட்டத்துக்கு
ஒருவரறியாமல் ஓடியே கொள்ளையிட்டு
வாங்களென்று சொல்லி வரங்கொடுத்தான் மல்லனுந்தான்
அவ்வாறே வேடுபடை ஆனபடை கொள்ளையிட்டு

செக்கநத்தம் பழைய ஜெயங்கொண்ட சோழபுரம்
அம்மான் கருப்பத்தூர் ஆனபதி மனத்தட்டை
கூத்தாலை நன்னாடு சுவாமிகோவில் கிராமமெல்லாம்
அந்தநல்ல பட்டணமும் அடங்கலும் கொள்ளையிட்டு
ஆடுமாடு நீங்கலாக அடக்கமான பொருள்களுடன்

பச்சனா முதலி மகள் பருவமுள்ள குப்பாயி
வாடா மரிக்கொழுந்து! மலராத மல்லி மொக்கு!
அன்னலூஞ்சல் தொட்டியிலே அனந்தல் செய்யும்
வேளையிலே
அனந்தல் தெரியாமல் அலுங்காமல் தானெடுத்து
குப்பநாச்சி அம்மாளை சிறைகொண்டு வருகையிலே

கோட்டக்கரை வாசலிலே செல்லாயிகொள்ளை
கொண்டுபோக வொட்டாள்
நாட்டுவழியை விட்டு வீரமலைக் காட்டுவழி
போவோமென்று
வீரமலைக் கானகத்தில் வேடுபடை வாரபோது
அனந்தல் தெளிந்து குப்பாயி ஆராட்டம் தான்நீங்கி
நித்திரையுந் தான்தெளிந்து நினைவு தெரிந்தபின்பு

எண்ணாது எண்ணி குப்பாயி ஏங்கி மனங்கலங்கி
புண்ணாய் மனம் நொந்து புலம்புகிறாள் அந்நேரம்
தலையெழுத்தோ சிவனே தலைநாளின் சொற்படியோ
வேதா வகுத்ததுவோ சிவசிவா விதிவசமோ எந்தனுக்கு
தங்கம் அளக்கும் கையால் தலையூருக்காளிக்கு சாணிதட்டப்
போறேனே



பொன்னளக்கும் கையாலே அவன் வாசலுக்குப்
பொதியளக்கப் போறேனே
சிங்கம் இருக்குதென்று திகிலில்லை யென்றிருந்தேன்!
சிங்கமே யெங்கொளிந்தாய்? திகில்வந்து நேர்ந்ததிப்போ
ஆனையிருக்கு தென்று சின்னண்ணா!
அச்சமில்லைஎன்றிருந்தேன்
ஆனையே எங்கொளிந்தாய்? இப்போ அச்சம்வந்து
நேர்ந்ததண்ணா

பூலாஞ்சருகரித்து சின்னண்ணா புதுக்குடத்துத்
தண்ணிகொண்டு
மேனாட்டு வேடுவர்க்கு வேலைசெய்யப் பெண்ணானேன்
ஆலாஞ்சருகரித்து என்பிறவி சின்னண்ணா அடிக்கிணற்றுத்
தண்ணிகொண்டு
அடிக்கிணற்றுத் தண்ணிகொண்டு எதிரிக்கு ஆக்கியிடப்
பெண்ணானேன்

என்று புலம்பியுமே குப்பாயி ஏங்கியழுகிறது

தங்கை புலம்பறது சங்கருக்குத் தாழ்ந்த செவி கேட்குதப்போ
அழுதகுரல் சத்தம் சங்கருக்கு அருவனத்தில் கேட்குதப்போ
எதிரில்லாப் பெருமாளைப் பார்த்து ஏதுசொல்வார்
நல்லசங்கு
ஆரோ தெரியவில்லை இந்த அருவனத்தில் புலம்புவது
பெண்குரல் சத்தம் பெரிய சத்தம் கேட்கிறது

உயர்ந்தகுன்று மேலேறி ஊடுருவிப் பார்க்கையிலே
மேனாட்டு வேடுதளம் வெகுதளங்கள் தான்வருது
வீரமலை இருகரையும் வெகுதளங்கள் வாரதைத்தான்
கண்டாரே கண்ணாலே கனத்தமுடி வேந்தரசன்
வேட்டைக்கு வந்திடத்தே வினைகள்வந்து நேர்ந்தது காண்

வந்தது வந்ததுதான் வகைமோசம் வந்ததுதான்
வேட்டைக்கு வந்தவிடத்தில் வினைவந்து நேர்ந்ததுகாண்

பச்சனாமுதலி மகள் பருவமுள்ள குப்பாயி
குப்பநாச்சியம்மாளுட குரலோசை கேட்குதுகாண்
திருக்காம்புலியூரு தேன் பொழியும் நன்னாடு
செக்கநத்தம் பழைய செயங்கொண்ட சோழபுரம்
அம்மான் கருப்பத்தூர் ஆனதொரு மனத்தட்டை

கூத்தாளை நன்னாடு சுவாமி கோவில் கிராமமெல்லாம்
கோவில் கிராமமெல்லாம் வேட்டுவர் கொள்ளையிட்டு
வாராரே
ஆடுகொள்ளை மாடுகொள்ளை அனைவருக்கும்
உள்ளகொள்ளை
வீடுவரை பெண்கள் சிறை விட்டுவைக்கப் போவோமோ
வெள்ளாளன் பெண்ணை இங்க வேட்டுவனும்
சிறையெடுத்தால்

சிறையெடுத்த வேட்டுவனை சீவுவேன் அவன் தலையை
அந்த மொழிகேட்டு மைத்துனர் அப்போது சொல்லுகிறார்
என்ன இருக்க மைத்துனரே என்னமொழி நீர் நினைத்தீர்
நாடு கொள்ளை போனால் நமக்கென்ன போகிறது?
ஊரு கொள்ளை போனால் உமக்கென்ன போகிறது?

வலிய உறவுபண்ணி வம்புச்சண்டை கொள்ளாதே
வெட்டுவேனென்று சொன்ன விசனத்தை* விட்டுவிடு
அந்தமொழி கேட்டு சங்கர் அப்போது சொல்லுகிறார்
வெள்ளாளன் சிறையெடுக்க வெகுசமர்த்தனா
வேட்டுவன்தான்
மங்கைமேல் சிறையெடுத்து இவன் மதியாமல் போகிறது

எல்லைமேல் சிறையெடுத்து எண்ணாமல் போகிறது
வெட்டுவேன் நானுமினி வேடுதளம் அத்தனையும்
விடுகிறதில்லையென்று சங்கர் விதமாகச் சொல்லையிலே
அந்தப்படி சங்கர் சொல்லி ஆங்காரங்கொண்டிருக்க

* வசனத்தை



எதிரில்லாப் பெருமாளப்போ இதமாகச் சொல்லுகிறார்
வாருமையா மைத்துனரே ஒருவார்த்தைசொல்ல நீர்கேளும்
மேனாட்டு வேட்டுவரை வெட்டித் திருப்பவென்றால்
உங்களுடைய அண்ணர் உத்தரவு வேணுமிப்போ
அப்படியே நல்லதென்று சங்கர் அன்பாக ஏதுசொல்வார்

உத்தரவு வாங்கி ஒருநொடியில் நான்வாரேன்
நான் வரும்வரைக்கும் வேட்டுவரை நகரவிடாமலேதான்
(உம்முடைய) மந்திரத்தினாலே மயக்கியே வையுமென்றார்
மந்திரத்தினாலே அவர்களைத் தாமசங்கள் செய்துவிட்டு
நீர் அடர்ந்த பலாமரம் இருண்டதொரு சோலையிலே

இருண்டதொரு சோலையிலே இருமென்றார் மைத்துனரை
மைத்துனரை இருக்கச்சொல்லி வாராரே சங்கருந்தான்
வளநாட்டு கோட்டைக்கு வந்துவிட்டாரப்போது
அப்போது அண்ணர் அரண்மனையிலேயிருந்து
பலகணிவழியாகப் பார்த்தாரே தம்பியைத்தான்

வேட்டைக்குப் போனதம்பி விரைவாய் வருவதென்ன?
காட்டுக்கே போன தம்பி கடுகிவரக் காரணமேன்?
என்று நினைத்து இருக்கிறார் அப்போது
சங்கரும் வந்து சரணம் பணிந்து நிற்க
வந்து பணிந்ததொரு வாள்வீரன் தம்பியரை

வேடு படையைக்கண்டு விரும்பியே வந்தாயோ?
என்று பொன்னர் கேட்க ஏதுசொல்வார் சங்கருந்தான்
மேனாட்டு வேடுதளம் வெகுபடைகள் கூட்டமிட்டு
சொக்கநத்தம் பழைய தென்சிறகு விட்டத்துக்கு
கூத்தாளை நன்னாடு கோவில் கிராமமெல்லாம்

கொள்ளையடித்தேதான் கூட்டமிட்டு வேடுதளம்
பச்சனா முதலி மகள் பருவமுள்ள குப்பாயி
குப்பாயி சிறையெடுத்து கொண்டுவந்தார் வேடுதளம்
வெள்ளாளன் பெண்ணையுமே வேட்டுவன் சிறை
செய்கிறதா

என்றுமே சங்கர் சொல்ல ஏதுசொல்வார் அண்ணருந்தான்
நாடு கொள்ளைபோனால் நமக்கென்ன போகிறது
ஊரு கொள்ளை போனால் உனக்கென்ன போகிறது
என்றுமே அண்ணர் சொல்ல ஏதுசொல்வார் சங்கருந்தான்
வெள்ளாளன் பெண்ணை வேட்டுவன் சிறைசெய்கிறதா?

நாம் பாத்திருக்கிறதா? நல்ல முடி அண்ணாவே!
என்றுமே தம்பி சொல்ல எரிபறந்து கண்சிவந்து
கோபம் அதுதானாகி சொல்லுகிறார் பொன்னருமே
என்னுடைய வார்த்தைக்கு எதிர்வார்த்தை சொல்லுகிறாய்?
எதிர்வார்த்தை சொன்னதற்கு இருதுண்டாய் வீசிடுவேன்

வெட்டுவேன் என்று பொன்னர் மெல்லியவாள் தும்புவிட்டு
வெட்டுவேனென்ற சொல்லை உத்தமி தங்கமும்
கேட்டுமப்போ

அன்னலூஞ்சல் மேடைவிட்டு உத்தமி அதிரக் குதித்திறங்கி
ஏறும்பேறா மேடைவிட்டு இளங்கொடியு மோடிவந்து
அண்ணரைத் தான் பார்த்து உத்தமி அப்போது
ஏதுசொல்வாள்

ஒக்கப்பிறக்கணுமா? உன்னோட ஒரு முலைப்
பாலுங்கனுமா?
கூடப்பிறந்து அண்ணா உன்னோட கூட்டுப் பாலுங்கனுமா?
ஒக்கப்பிறந்து அண்ணா உடன்பிறப்பு அல்லாவிடினும்
உதிரப் பிறப்பு அண்ணா உடன்பிறப்பு ஒண்ணல்லவா?
பெண் சிறையெடுத்துப் போக உன்மனது பொறுக்குதா

(உன்னுடைய) தங்கை சிறை போனாலும் தரிக்குமோ
உன்மனது

என்னைச் சிறையெடுத்தால் அண்ணா இருக்குமா
உன்மனது?

அந்த மொழி சொல்ல அண்ணா அப்போ மனங்கலங்கி
தம்பியரைத் தான் பார்த்து தார்வேந்தர் சொல்லுகிறார்
வெட்ட வந்தார் என்று சொல்லி விசனங்கள் வேண்டாமப்பா



நான் கோபித்த கோபத்தை குற்றமாய்ப் பார்க்காதே
வெட்டிச் சிறை திரும்பி வாள்வீரா வேடுபடை சங்கரித்து
வேடுபடை சங்கரிக்க விடை கொடுத்தேன் தம்பியரே
வாழ்த்தி விடைகொடுத்து அண்ணர் மந்திரவாள்
கைகொடுத்து

சித்தம் திரும்பி அண்ணர் திருவாக்கு செய்தபின்பு

அட்டம் பணிந்து சங்கர் அடிவணங்கித் தெண்டனிட்டு
வெட்டிச் சிறைதிருப்பி அண்ணா வீரியவான் போய்வாரேன்
அரண்மனையில் உள்புகுந்து ஆயுதங்கள் தானெடுத்து
வாங்கு பிடிசூரி வளைதடியும் சக்கரமும்
ஈட்டிக்கோல் வல்லயமும் எரியீட்டி நேரிசமும்

குறிஞ்சிகட்டி வல்லயமும் கொடங்கை சேர்ந்த நேரிசமும்
சுருக்கு முத்து பட்டா சூரவாளுங் கேடயமும்
பத்துகட்டி போட்டடித்த பாரமான கேடயத்தை
பாரமான கேடயத்தை அதைப் பாங்குடனே மேல்சூட்டி
பதினெட்டு வகை ஆயுதமும் பாங்காய் வரிந்துகட்டி

செம்பரிசை சீராவும் அதை சீராய் வரிந்துகட்டி
ஆரேணி குங்குமம் மஞ்சள் அந்த ஆசாரம் வந்துநின்று
வெற்றிமன்னன் பறைநகுலன் வீரபாகு சாம்புவனை
அவனை யழைத்து அப்போது சொல்லுகிறார்
காரியினாள் நீலாவை கவர்மாறிக் கொண்டுவந்து

கட்டுமடா கல்லணையை நீ கல்லணை நெகிழாமல்
அந்த மொழிகள் சொல்ல வீரபாகு அதிதுரிதாய் ஓடிவந்து
பஞ்சவர்ண நீலாவை அதைப் பாங்காய் கவர்மாறி
கடிய புரவியைத்தான் சாம்பான் கவர்மாறிக் கொண்டுவந்து
கட்டினான் கல்லணையை அது கல்லணை நெகிழாமல்

அங்குவடி பொன்னாலே குதிரைக்கு ஆபரணம் பொன்னாலே
பித்தட்டு பொன்னாலே பிடிவாரும் பொன்னாலே

முன்நெற்றி சல்லி* முகமெட்டும் பொன்னாலே
கொண்டைக்கு கொப்பி கொண்டுவந்து தான்பதித்தான்
நெற்றிக்குச் சுட்டிகட்டி நிழல்பார்க்கக் கண்ணாடி
முன்னங்கால் இரண்டுக்கும் பொன்னால் முகவிருது
பூட்டும் பனுதியெல்லாம் குதிரைக்கும்
பொட்டெனவேபூட்டியே தான்

கொப்பழகு மாளிகைக்கு முன்னே கொண்டுவந்து
நிறுத்தினானே
அப்போ அங்குவடி மிதியாமல் அப்புரவி மீதேறி
காலாலே தட்டிவிட்டார் குதிரை ஆலாப்போலே பறந்து
ஆலாப் போலே பறந்து வீரமலை வனத்தில்
அதிவேகமாய்வருகுதே
அத்தைபிள்ளை மைத்துனரும் (பதிவாக) அடங்கி இருந்த
இடத்தில்

குமாரசங்கு வந்து அப்போ கூப்பிட்டார் மைத்துனரை
அந்த மொழிகேட்டு எதிரில்லாப் பெருமாள் அப்போ
எழுந்திருந்து
வேடுபடை சங்கரிக்க விடைவாங்கி வந்தீரா?
அந்த மொழி கேட்க குமாரசங்கு அப்போது சொல்லுகிறார்
வேடுபடை கொள்ளையெல்லாம் விபரமாய் சொன்னேன்
நான்

அந்தமொழி சொல்லஅண்ணர் அதிகோப மாகியேதான்
வெட்டுகிறேன் என்றுசொல்லி மெல்லியவாள்
தும்புவிட்டார்
அந்த மொழிகேட்டு உத்தமியாள் அப்போது ஓடிவந்து
என்ன இருக்க அண்ணா என்ன மொழி நீ நினைத்தாய்
வெள்ளாளன் பெண்ணையுமே வேட்டுவன் வெற்றி
கொண்டு போவதா
வேட்டுவன் சிறையெடுத்தால் வெட்டியே நாம் தீர்ப்போம்!

* முகமொட்டு



என்று பெரியண்ணருக்கு உத்தமியாள் இதமாக வார்த்தை
சொன்னாள்

அந்த மொழிகேட்டு எங்கள் அண்ணர் மனங்கலங்கி
கோபித்த கோபமெல்லாம் கொண்டு மனம் பொறுத்து
வேடுபடை சங்கரித்து வெட்டிக் கெலிக்கவேதான்
வாழ்த்தி விடைகொடுத்தார் அண்ணர் மந்திரவாள்
கைகொடுத்தார்

இப்போது வெட்டி சிறைதிருப்ப வேணுமே மைத்துனரே
அந்தநல்ல வார்த்தை கேட்டு மைத்துனர் அதிக சந்தோஷமாகி
வேடுபடை தத்தளிக்க ஆனால் வெட்டுமினி உம்சமர்த்து
அந்தமொழி சொல்ல சங்கர் அப்போது மனங்குளிர்ந்து
வேடுபடை போர்செய்ய இருவர் வீரியனார் போகிறார்கள்

வாய் காய்ந்த வேங்கையைப்போல் (இருவரும்) வாரார்
படையெடுத்து

வேட்டுவர் துறையிலே வேடுதளம்வரும் படைஅத்தனையும்
கொண்டுவந்த முதலையெல்லாம் குறிக்கட்டாய்
தானுங்கட்டி

எல்லை கடந்து நாம் இத் தூரம் வந்த பின்பு
ஏழை வெள்ளாளன் மக்கள் இங்கே வரப்போறாறா?

என்று வந்த படைகளெல்லாம் வகையாகத் தானிறக்கி
கட்டுச்சோறு தின்பாரும் காலாறி நிற்பாரும்
நட்டுக்கட்டி விளையாடி சடுகுடுதான் பாய்வாரும்
அனந்தல் வந்து கண்ணயர்ந்து நித்திரைதான் செய்வாரும்
இப்படியாக இவரிருக்கும் வேளையிலே

## குடையூருக் குள்ள செல்லி கனவு கண்டு சொல்லுதல்

குடையூருக் குள்ள செல்லி கூறிடுவான் வாக்குமது
அனந்தல் வந்து கண்ணயர்ந்து ஆவேசம்* கண்டு சொல்வான்

* ஆதேசம்

ஆவேசம் கண்டுமவன் அலறி எழுந்திருந்து
கண்ட தெரிசனத்தை காளியிடம் சொல்வோமென்று
வந்து துரிதாய் வணக்கமுடன் சொல்லுகிறான்
ஐயா நான்கண்ட தெரிசனந்தான் இன்னும் கலக்கம்
தெளியவில்லை
வாளெடுத்து குமாரசங்கு வனவேட்டையாடக் கண்டேன்

குமாரசங்கர் குதிரையிலே படையைக் குறுக்காட்டி வெட்டக்
கண்டேன்
காலொடிந்து கையொடிந்து வேடுபடை களபலியாகக்
கண்டேன்
கொள்ளையடித்ததெல்லாம் (திருப்பிக்) கொண்டு போக
நானும் கண்டேன்
அந்தநல்ல வார்த்தைசொல்ல தலையூருக்காளி
அதிகோபமாகியே தான்
குடையூருக் குள்ளசெல்லி என்றைக்கும் நீ கோள் சொல்லிப்
பல்லியடா

ஏழை வெள்ளாளன் மகனா இங்கே வந்து வெட்டுகிறான்
என்ன இருக்க நீ என்னமொழி சொன்னாயிப்போ
அந்த மொழிகேட்டு குள்ள செல்லி அப்புறமே
போய்நின்றான்
ஆறுமாதம் ஒரு வருஷம் ஆகாரம் இல்லாமல்
வாய்காய்ந்த வேங்கையைப்போல் சங்கர் வாரார்
படையெடுத்து

பசிநெருப்பு வேங்கையைப்போல் படையெடுத்து வாராரே!
மார்பிலிருக்கும் புனுகுமது மணக்குதே காதவழி
கழுத்திலிருக்கும் புனுகு காதவழி தான் மணக்க
புனுகு ஜவ்வாது வாசம் காளிக்குப் பொறுக்க முடியாமல்
இந்த புனுகு ஜவ்வாது இப்போ கொண்டு வந்த பேர்களுக்கு

ஆடை அலங்கரிப்பேன் ஆபரணம் சூட்டுவிப்பேன்
வேண்டும் வெகுமதிகள் மெத்த மெத்தச் செய்துவைப்பேன்



அந்த மொழிகேட்டு வந்த சனங்க ளப்போ
செம்பூலாஞ் செடிவனத்தில் சேரக் கலைப்பாரும்
ஆவாராங் காட்டினிலே அதைத்தேடி நிற்பாரும்
அந்தநல்ல வேளையிலே (குதிரை) அதிவேகமாய் வருகுதே
அந்தப்படை சத்தத்திலே (சங்கர் குதிரை) அனுமானிக்கு
தன்னேரம்

குதிரை அனுமாதித்த சத்தம் (தலையூருக்காளிக்கு) குறிப்பாக
கேட்குதப்போ
அனுமானித்த சத்தம்கேட்டு அப்போ எழுந்திருந்து
வந்த சனத்துக்கெல்லாம் வருதிகளைச் சொல்லிவிட்டான்
ஏதோ தெரியவில்லை குதிரைசத்தம் என் செவியில்
கேட்குதிப்போ
அந்த நல்லவேளையிலே குதிரை வருகுதே அந்நேரம்

கண்டு மனங்கலங்கி வேடுதளம் கடுகியே கூடுதப்போ
நெருங்கிப் படைகூடி வேடுதளம் நின்று குலவையிட்டு
அலைக்கொட்டி குலவையிட்டு அதிர்ந்துபடை நிற்கையிலே
வாருதீர்ந்து சண்டை வேடுதளம் வகுப்பாக நிற்கையிலே
சேர்ந்துமே வேடுதளம் படைபொருத சிறப்பாக
நிற்கையிலே

கண்டாரே கண்ணாலேதான் சங்கர் கனத்தமுடி வேந்தரசர்
அந்தப்படையைக்கண்டு சங்கர் அதி சந்தோஷ மாகியேதான்
வேட்டுவரின் படை கண்டு வெகு சந்தோஷமாகியேதான்
மைத்துனரைப் பார்த்து வாள்வீரர் என்ன சொல்வார்
வேட்டுவரைச் சண்டை செய்ய மைத்துனரே வீரியரே நீர்
போறீரா

நானேதான் போகட்டுமா நன்றாய்ப் படையை வெட்ட
அப்போ எதிரில்லாப் பெருமாள் என்ன சொல்வாரந்நேரம்
என் எமனாசூரன் கணையால் எல்லாம் மடிந்துவிடும்
நீர் வெட்டிச் சிறை திருப்பும் மைத்துனரே என்று சொன்னார்
அப்போ யாரை நினைத்தாராம் அளவற்ற பொந்தியிலே

தாயை மனதிலெண்ணி தன் பிறப்பை நெஞ்சிலெண்ணி
நல்லதங்காள் உத்தமியை நினைத்தாரே சங்கருந்தான்
உடன்பிறப்பை எண்ணுகையில் ஓரானைப் பலம் வருமாம்
நடுப்படையில் போனாலும் மறுப்படாமல் வரவேணும்
தங்கையை மனதிலெண்ணி தட்டிவிட்டார் புரவிதனை

காலாலே தட்டிவிட அது ஆலாப்போல பறந்து
ஆலாப்போல பறந்து வேடுதளம் அடர்ந்தபடை உட்புகுந்து
மெல்லியவாள் தும்புவிட்டு வீசினார் நல்லசங்கு
காலற்று வீழ்வாரும் கையற்று வீழ்வாரும்
வேலற்று வீழ்வாரும் மேனி துண்ட மாவாரும்

குதிரைக்கால் மிதிபட்டு குளம்படியில் சாவாரும்
அய்யா சரணமென்று அடிவணங்கி நிற்பாரும்
சுவாமி சரணமென்று சாஷ்டாங்கம் செய்வாரும்
கைகூப்பித் தெண்டனிட்டுக் கண்பிதுங்கிச் சாவாரும்
வணங்கிப் பணிசெய்தவரைச் சங்கர் வாள்முனையில்
தள்ளிவிட்டார்

எதிர்த்து வந்த பேர்களைத்தான் சங்கர் இருதுண்டாய்
வீசினாரே
அப்போது எதிர்த்து வந்த வேடுதளம் அடிவணங்கித்
தெண்டனிட்டு
சித்தம் இரங்கியேதான் சங்கர் சீராவை உள்போட்டு
கொள்ளைப் பொருளையெல்லாம் குறிக்கட்டா
யெடுங்களென்று
வந்தசனத்துமேலே சங்கர் வகையாய் சுமையை வைத்து

பச்சனா முதலிமகள் பருவமுள்ள குப்பாயி
குப்பநாச்சி அம்மாளைக் கூட்டி வருகையிலே
வளநாடு திசைபார்த்து வாரார்கள் அந்நேரம்
சிங்காதனமேடை அண்ணர் திருக்கொலுவு விட்டிறங்கி
வெட்டிக் கெலித்தேதான் சங்கர் வேடுபடை சங்கரித்து
வேடுபடை சங்கரித்து தம்பிசங்கு வீரியவான் வாராரென்று



அண்ணர் எதிர்கொண்டு அப்போ வருகையிலே
குமாரசங்கு உத்தமா தேசி விட்டு இறங்கிக் குதித்துவந்து
அண்ணருட பாதத்தில் சங்கர் அடிவணங்கித் தெண்டனிட்டு
வணங்கி பணிகள் செய்து வாள்வீரர் நிற்கையிலே
தம்பியரைத் தான்பார்த்து தார்வேந்தர் சொல்லுகிறார்

கொண்டுவந்த கொள்ளை முதலையெல்லாம்
குறிக்கட்டாயத் தானிறக்கி
வந்த சனத்தையெல்லாம் வகையாய் அனுப்பிவிட்டு
வந்தவொரு வேட்டுவரை சங்கர் வரவழைத்து ஏதுசொல்வார்
அடா சோழருட சீமையிலே துஷ்டத்தனம் செய்கிறதை
கன்னங் களவு கருங் களவு செய்ததெல்லாம்

இனிச் செய்வதில்லை யென்று எங்களுக்கு உறுதி
கொடுங்களடா
அப்படியே வேட்டுவரும் உறுதி கொடுத்தபின்பு
உறுதிகொடுத்த பின்பு ஓடிப் பிழையுமென்றார்
கோவில் கிராமத்து குடிசனங்கள் எல்லோரையுமே
கொள்ளைகொடுத்த குடியானவரைக் கூட்டிவந்து

அவரவர் முதலையெல்லாம் அவர்களே எடுத்துக்கொள்ளும்
பொன்னம்பல சுவாமி குடிகளுக்குப் போக விடையளித்தார்
முதலியார் சனங்களையும் முழுசாகக் கூட்டிவந்து
குப்பநாச்சி அம்மாளைக் கூட்டிப் போங்களென்று
சொன்னார்
பொன்னரைப் பார்த்து அந்த இனத்தாரும் சொல்லுகிறார்

ஊரைவிட்டுப்போன சிறையை ஒப்பு கொள்ளலாகுமா?
இனத்தாரும் சொல்லையிலே ஏதுசொல்வார் பொன்னருமே
நாங்கள் சரியாக வைத்துண்டால் உங்கள் சாதியார்
ஏற்பாரோ?
நீங்கள் சரியாக வைத்து உண்டால் எங்களுக்கு
சரியாகுமென்றார்

அப்போ உத்தமியை வரவழைத்து குப்பாயி கூட்டி உண்க
என்று சொன்னாரே
அந்தமொழி கேட்டு தங்கை அழைத்தாளே தாதியரை
உத்தமி அழைக்கையிலே ஓடிவந்தார் தாதிகளும்
குப்பநாச்சி அம்மாளை கூட்டி அழைத்து வந்து
நல்லெண்ணெய் சீயக்காய் நன்றாய் நலுக்கமிட்டு

கொப்பரையில் நீரு வைத்து கோதையை முழுக்காட்டி
பன்னீரு செம்பெடுத்து புதுநீருந்தான் சொரிந்து
முழுகித் தலையாத்தி முற்றத்தில் வந்துநிற்க
குளித்துச் சிணுக்கறுத்து கோதி மயிர் முடித்து
கோதி மயிர் முடித்துத் தாதிமார் கூட்டிவந்து முன்னே
விட்டார்

பட்டுடுத்தி உத்தமியாள் பனுதிகளை பூட்டுமென
அந்த மொழி சொல்ல தாதிமார் அப்போது ஓடிவந்து
சூரியகாந்தி பட்டுடுத்தி துரிதாக ஓடிவந்து
பட்டும் உடுத்தி பனுதிகளைப் பூட்டியேதான்
சரியாய் இருமம்மாவென்று தாதிமார் தானும் இலைபோட்டு

கரகம் பிடித்து கைக்கு நீர் வார்த்து மப்போ
பிரம்புப்பெட்டி கூடையிலே போசனங்கள் தான்சொரிந்து
குத்துப் பருப்புமிட்டு குடத்தோட நெய் சொரிந்து
பதினொருவகை கறியும் பாங்குடனே முன்னே வைத்து
உண்ணுமினித் தங்கையரே என்று உத்தமியாள் சொன்ன
பின்பு

அமுது எடுத்து உண்டு அன்பாய்ப் பசியாறி
தானும் எழுந்தருள தாதிமார் ஓடிவந்து
கரகம் பிடித்து கைக்கு நீர் வார்த்துமப்போ
வெற்றிலை விடாக்காயும் மெத்தவாரித் தான்கொடுத்து
சந்தோஷமாகவே தானிருக்கும் வேளையிலே

தாயே சரணமென்று குப்பாயி சாஷ்டாங்கம் பணிகையிலே
ஏந்தி எடுத்து உத்தமியாள் எழுந்தருளும் என்று சொன்னாள்



வணங்கிப் பணிகள் செய்து குப்பநாச்சி
வணக்கமுடன் சொல்லுகிறாள்
எந்நாளும் உன் தயவு தாயே இருக்கவேணும் எந்தனுக்கு
அந்தமொழிகேட்டு உத்தமியாள் அப்போது ஏதுசொல்வாள்
இந்த நல்ல பூமியிலே இருக்கும் நல்ல நாள் வரைக்கும்

உன்னை மறவாமல் அம்மா ஒக்க வைத்து நானு முண்பேன்
அந்தமொழிகள் சொல்லி அனுப்பி வைத்தாள் நல்லதங்கை
தாதிமார் அந்நேரம் குப்பநாச்சியை தானழைத்துக் கூட்டி
வந்தார்

அவர்கள் இனத்தாரை பொன்னர் அப்போ வரவழைத்து
உங்கள் குலக்கொடியை ஊருக்கழைத்துப் போங்கள்

அந்த மொழிகள் சொல்ல இனத்தாரெல்லாம் அப்போ
அடிவணங்கி

வாருமம்மா தங்கையென்று குப்பநாச்சியை வரவழைத்து
வாரபோது

திருக்காம்புலியூரு திசைபார்த்து வாரபோது
தேனும் மலைவழியாய் சனங்கள் சேர்ந்து வருகையிலே
புண்ணாய் மனது நொந்து பொற்கொடியாள் குப்பாயி

எண்ணாது எண்ணியேதான் குப்பாயி ஏங்கி மனங்கலங்கி
பெண்ணாகப் பிறந்தவளுக்கு இத்தனை பிழைகள் வந்து
நேரணுமா?

ஊழியுள்ள காலமெல்லாம் ஒரு ஏச்சு தலையாச்சு திப்போ
இருந்துபேச்சு கேட்பதற்கு இறந்துபோனா மோட்சமுண்டு
தன் மனதில் எண்ணியேதான் சதாசிவனைத் தானினைத்து

எழுதும் பிரமனைத்தான் இருதயத்தில் எண்ணியேதான்
தெய்வமலைத் திசையைப் பார்த்து சிந்தையிலே
எண்ணியேதான்
மலையிலிருக்கும் தெய்வம் என்னை வரவழைத்துக்
கொள்ளும்சாமி

என்று நாவைப் பிடித்திழுத்து குப்பாயி நல்லுயிரை
மாய்த்துக் கொண்டாள்
வந்த சனங்களெல்லாம் (குப்பநாச்சியை) வகையாய்
அடக்கம்செய்து
தன்னூர் திசைநாடி தான்போனார் அந்நேரம்
இப்படியாக இருக்கு மந்த வேளையிலே

## தங்கையர்க்கு கிளி மயில் புறா கொடுத்தல்

தங்காள் பிறவி தனிப்பிறந்த உத்தமிக்கு
சின்னண்ணர் வாள்வீரர் குமாரசங்கு
வீரமலைக்காடு வேட்டைமுகம் போனவர்தான்
மயில்கள் குயில்பிடித்து மாடப்புறா தான்பிடித்து
அன்னமுடன் தாராவும் அனேகமாய்த் தான்பிடித்து

ராம இலடசுமணரென்ற இரண்டு அன்னக்கிளி தான்பிடித்து
கொண்டுவந்துமே கொடுத்தார் குணமயிலி தங்கையர்க்கு
வாங்கியே நல்லதங்கை வளநாட்டு உத்தமியும்
ராம இலட்சுமணரென்ற இரண்டு கிளிகளிடம்
அந்தக் கிளிகளிடம் அருகிருந்து பேசுகிறாள்

ரங்கா ரங்காவென்று நயனகவி பேசையிலே
சீரங்க ரங்காவென்று சிரித்தமுகம் பார்க்கையிலே
கூடவே பேசுது கிளி குலக்கொடியாள் உத்தமிக்கு
சந்தோஷமாகவே தானிருக்கும் வேளையிலே

## மேனாட்டு பன்றி நெல்லி வளநாடு வருதல்

மேனாட்டு வேட்டுவர்கள் வீற்றிருக்கும் நாளையிலே
மாரி மறுத்து மழைகளுமே இல்லாமல்
பூமி வறண்டு புனலுமே இல்லாமல்
இட்ட பயிர்களெல்லாம் எரிந்து சருகாய்க் கருகி
பூண்டு செடிகளுடன் பூமிகளுந் தான்வறண்டு
மழை மாரியில்லாமல் வையகங்கள் பாழாகி



வையகங்கள் பாழாகி வறண்டே இருக்கையிலே
தலையூருக் காளியவன் தான்வளர்க்கும் பன்றியது
எழுதபடிக் கொம்பன் இன்பமுள்ள பன்றியது
தலையூருக்காளி தன்னாட்டைத் தான் கடந்து
இரையுமது சிக்காமல் ஏங்கியே பன்றியது

நெல்லி வளநாட்டை நேராகத் தானோக்கி
சிற்றா லைப்பட்டணமும் சேர்ந்த பொன்னி வளநாடு
திருக்காம் புலியூரு செயங்கொண்ட சோழபுரம்
அம்மான் கருப்பத்தூர் ஆனபதி மனத்தட்டை
கோவில் கிராமமெல்லாம் கொள்ளையிட்டுப் பன்றியது

செந்நெல் கதிரையெல்லாம் தின்றழித்துப் பன்றியது
வாழை கரும்பு மஞ்சள் வகையான சோலையெல்லாம்
தின்றழித்துப் பன்றியது சேர்ந்திருக்கும் வேளையிலே
கோவில் கிராமத்துக் குடிகளெல்லாம் கூடிவந்து
வயல்களில் போய்ப்பார்த்தால் தாரை வட்ட
வட்டமாயிருக்கும்

இந்தத்தாரை என்னவென்று எண்ணி நினைத்துமவர்
எல்லோருங்கூடி இதமாகத் தான்பேசி
இப்படியாக இருக்குமந்த வேளையிலே

## குடியானவர்கள் சோழராஜனிடம் முறையிடுதல்

ஐயர் திருப்பணிக்கு ரெத்னாசலமூர்த்தி அபிஷேகக்
கட்டளைக்கு
சிவசோழர் விட்டகோவில் கிராமத்துக்
குடியானவர்களெல்லாம்
திருக்காம் புலியூரு தேன்கொழித்த நன்னாடு
செக்கநத்தம் பழைய செயங்கொண்ட சோழபுரம்
அம்மான் கருப்பத்தூர் ஆனபதி மனத்தட்டை

கூத்தாளை நன்னாடு சுவாமி கோவில் கிராமமது
குடியான சனங்களெல்லாம் கூடியே அந்நேரம்

கோவில் கிராமத்திலே நாம் குடியிருக்கப் போகாது
வெட்டி சிறை திருப்பி வெற்றிகொண்டு போனாரென்று
காகம்போல் கூட்டம் நம்மை கால் தரிக்கவொட்டாரினி
இந்தநல்ல சீமையிலே நாம் இருக்கவே போகாது
சிவசோழ ராசருட சமூகம் அறியச்செய்து

அதற்குமேலே நாம் அனைவருமே கூடியேதான்
யோசனைகள் செய்து உண்மையாய் இப்போது
மேல் காவல் வைத்து நம்மசீமை மேன்மையாய் தானிருக்க
கன்னங் களவு கருத்தாகப் போகாமல்
வாளெடுத்து சேவகரை வகையாய் அழைத்து வந்து

காவல் மிகவைத்தால் அதற்கு மேல் கனத்த குடித்தனமும்
செய்யலாம் இப்போது சீராக நாமுந்தான்
இல்லாதே போனால் இந்தச் சீமையிலே குடியிருந்து
பிழைக்க மாட்டோம் என்று பேசுகிற போதிலேதான்
அதிலே ஒரு குடியானவன் அனந்தல் வந்து கண்ணசந்து

நித்திரை சந்தானம் அவர் நேசமுடன் செய்கையிலே
ஆவேசம் கண்டு அப்போது சொல்லுகிறான்
ஐயா நான் கண்ணயர்ந்து அடைவுடனே தூங்கையிலே
படுத்துமே நான்தான் பண்பாயிருக்கையிலே
ரெத்தினாசலமூர்த்தி ரொம்பவுந்தான் நம்மபங்கில்

இருந்து அனைவரையும் இயல்பாக இரட்சிப்பார்
அவருட அனுக்ரகத்தினாலே ஆன பொன்னர் சங்கருந்தான்
நம்ம சீமைக்கு காவல் திறமுடனே ஏற்றுக்கொண்டு
வாரார்கள் என்று சொல்லி வகையாய் ஒரு பிராமணர்போல்
வந்துமே என் தெரிசனத்தில் வகையுடனே செய்துதான்

விபூதி கொடுத்து விதமுடனே அப்போது
சிந்தனைப் படவேண்டாம் சுகமாய் இருங்களென்று
சொல்லியே தான் போனார் சோதனையாய் என்னுடனே



என்று சொல்லி அந்த இயல்பான குடியானவன்
சொல்லவுந்தான் அப்போ சுகமுடனே எல்லோரும்
அந்தப்படியே நம் சீமைக்கு ஆனதொரு பொன்னாண்டார்
வரவழைத்து இப்போது வகையுடனே மேல்காவல்
ரட்சகனாய் வைத்து திறமுடனே இப்போது

ரெத்தினா சலமூர்த்தி ராஜலிங்க ஐயாவுக்கு
ஆயிரம் பொன்னெடுத்து ஆபரணம் பண்ணிவைப்போம்
ஐநூறு பொன்னெடுத்து அபிஷேகம் செய்துவைப்போம்
என்று சொல்லி குடியானவர் இதமுடனே தானுஞ் சொல்லி
இந்தப்படி குடியானவர் இதமாக சம்மதித்து

ரெத்னா சலமூர்த்திக்கு அபிஷேகம் செய்து கொண்டு
சிவசோழர் சமூகம் அறியவே வேணுமென்று
குடியானபேர்கள் எல்லாம் கூட்டமாய்க் கூடிவந்து
ஆடு பன்னிரெண்டு ஆறு மொடா நெய்யுலுப்பை
கட்டியெடுத்துக்கொண்டு கரிகால சோழரிடம்

அறிக்கை செய்யவேணு மென்று எல்லோருங் கூடியேதான்
உறையூர் திசைநாடி ஓடிவாரார் அப்போது
உறையூருப் பட்டணத்தில் சோழர் கணக்கன் ஓடிவருகையிலே
அவன் வெண்கலத்தால் பால்குடமும் பொன்னின்
கணிங்கோலும்
எடுத்துக்கொண்டு வருகிறானே இவர்களுக்கு முன்னாலே

இப்போ காராளர் தங்களையும் கணக்கன் கண்ணாலே
கண்டுமேதான்
நீங்கள் எந்தவூர் எத்தேசம் எங்கிருந்து இங்கேவந்தீர்?
உங்கள் ஊருகளும் பேருகளும் உள்ளபடி சொல்லுமென்றார்
அப்போது குடியானவர் அவரிடத்தில் சொல்லுகிறார்
நாங்கள் ரெத்னாசலமூர்த்தி கோவில் கிராமமய்யா

கோவில் கிராமத்து குடியானவர் என்று சொன்னார்
எங்கள் சீமையில் மேனாட்டு வேட்டுவர்கள் வெகுகூட்டம்
கூடியேதான்

ஆடுகொள்ளை மாடுகொள்ளை அவசூறை கொள்ளை
செய்து
கொள்ளை செய்துவருகிற குறை சொல்ல வந்தோமைய்யா
அப்போது கணக்கன் அதற்கு வகை சொல்லுகிறான்
நீங்கள் இப்படியேதான் ராஜா சமூகம் அறிய இனிப்போகாது
அவர் ஆராய்ச்சி மணிகட்டி அசையாமல் தானிருப்பார்

அந்த ஆராய்ச்சி மணியை அடித்தீரேயானால்
அந்த சத்தம் கேட்டு அரசருமே ஆளனுப்பி
உங்களைத் தானழைத்து உங்கள் குறை என்ன வென்பார்
அந்த மொழி சொல்ல குடியானவர் அப்படியே ஆகுதென்று
ஆராய்ச்சிமணி மண்டபத்தில் எல்லோரும் வந்திறங்கி

ஆராய்ச்சி மணியை அசைத்து விட்டாரப்போது
அந்த நல்ல சத்தம் ராஜாவுக்கு அனந்தலிலே கேட்குதப்போ
எண்ணாது மெண்ணி எண்ணி ராஜா எழுந்திருந்து அந்நேரம்
ஆராய்ச்சி மணிகட்டி நாம் அசையாமல் பதியிருக்க
ஆராய்ச்சி மணியுமிப்போ அசைய வந்த காரியமேன்?

எந்தவூர் அழிந்ததோ? எத்தேசம் பாழாச்சோ?
என்று மனங் கலங்கி எழுந்திருந்து அந்நேரம்
வெள்ளித் தடிக்காரர் விருதுமன்னரைத் தானழைத்து
ஆராய்ச்சி மணியுமிப்போ அசையவரக் காரணமேன்?
அதை ஆராய்ந்து பார்த்து அரைநொடியில் வரவேணும்

அப்போது தூதர் அதிதுரிதாய் ஓடிவந்து
குடியான பேரையுந்தான் கூப்பிட்டாரந்நேரம்
வந்து குடியானவர் வணக்கமுடன் நிற்கையிலே
ஆராய்ச்சி மணியை இப்போ அசைத்துவிட்ட காரியமேன்?
அந்த மொழி கேட்க குடியானவர் அப்போது ஏதுசொல்வார்

ரெத்னாசலமூர்த்தி கோவில் கிராமம் நாங்கள்
கொள்ளை கொடுத்து நாங்கள் குடித்தனம் செய்ய முடியாமல்
ராஜா சிவசோழர் பாதம் அறிய வந்தோம்!



என்று குடியானவர்கள் இதமுடனே சொன்னார்கள்
அப்போது தூதர் அவர்களை நிறுத்திவைத்து
சிவசோழ ராஜரிடம் சீக்கிரமாய் ஓடிவந்து
சுவாமி பராக்கென்று தூதர் பாதம் பணிந்து நின்று
ரெத்னாசலமூர்த்தி ராஜலிங்க அய்யருட

கோவில் கிராமத்து குடியான பேர்களெல்லாம்
கொள்ளை கொடுத்து குடித்தனம் பண்ண முடியாமல்
சுவாமி பாதம் பணிந்து அறிக்கையிட வேணுமென்று
அவர்கள் ஆராய்ச்சி மணியை அசைத்துவிட்ட சத்தமது
என்றுமே சொன்னாரே இயல்பான தூதுவரும்

அப்போது ராஜா அவர்களை அழையுமென்றார்
தூதனும் ஓடிவந்து குடியானவரை துரிதாய் அழைத்து
வந்தான்
வந்த குடியானவர் ராஜாவை வணக்கமுடன் தெண்டனிட்டு
வணங்கிப் பணிகள் செய்து அவர்கள் வணக்கமுடன்
நிற்கையிலே
அப்போது ராஜா அவர்களையும் தான்பார்த்து

என்ன குறைச்சலாய் இங்கு வந்தீர் என்றாரே
மேனாட்டு வேட்டுவர்கள் வெகுகூட்டம் தான்கூடி
காகம்போலே கூடி கருங்களவு செய்தார்கள்
ஆடுகொள்ளை மாடுகொள்ளை அவர் சூறையிட்டார்கள்
நாங்கள் கொள்ளை கொடுத்து குடித்தனம் பண்ண
முடியாமல்

ராஜ சமூகம் அறிக்கை செய்ய வந்தோமென்றார்
அப்போது ராஜா அவர்களையும் தான் பார்த்து
இதுதானா உங்கள் குறை இன்னமுண்டோ சொல்லுமென்றார்
குடியானபேர்கள் சொல்லுகிறார ரப்போது
தலையூருக்காளி தான்வளர்க்கும் பன்றியது

வரத்தால் பிறந்த பன்றி வெகு பலமுள்ள பன்றி
எழுபதடிக்கொம்பன் எதிர்த்தாரை மார்பிளக்கும்

வேப்பிலைக் கொம்பன் வெகுபலமுள்ள பன்றியது
இந்த நல்ல பன்றியது எங்களுட சீமையிலே
செந்நெல் கதிர்களெல்லாம் தின்றழித்துப் பன்றியது
வாழை கரும்பு மஞ்சள் வகையான சோலையெல்லாம்
அழித்துமே பன்றியது அதம்பண்ணி வருகுதய்யா

என்று குடியானவர் இதமாகச் சொல்லியேதான்
எங்கள் குறைகளை நீங்கள் இதமுடனே தீர்க்கவேணும்
என்று பாதம் பணிந்தார்கள் பாங்கான பேர்களெல்லாம்
சித்தம் திரும்பியேதான் ராஜா திருவாக்கு ஏது சொல்வார்
எண்ணம் கலங்க வேண்டாம் யோசனைகள்
செய்யவேண்டாம்

வாளெடுத்த பேரை வரவழைத்துக் கூட்டிவந்து
நம்மளுட சீமை மேல் காவல் ரட்சகனாய் வைக்கிறேன் நான்
ஏதுக்கும் மலைக்கவேண்டாம் யோசனைகள்
செய்யவேண்டாம்
என்று முத்தான வாய்திறந்து (ராஜா) உத்தரவு செய்தாரே
ஆடை அலங்கரித்து அவர்களுக்கு ஆபரணம் பூட்டியேதான்

வேண்டும் வெகுமதிகள் மெத்தவே தான்கொடுத்தார்
அப்போது குடியானவர் அடிவணங்கித் தெண்டனிட்டு
வணங்கிப் பணிகள் செய்து வணக்கமுடன் நிற்கையிலே
சித்தம் திரும்பி ராஜா திருவாக்குச் சொல்லுகிறார்
ஏதுக்கும் அஞ்சவேண்டாம் யோசனைகள் செய்யவேண்டாம்

உங்கள் ஊரு போய்ச் சேருமென்று உத்தரவு செய்தாரப்போ
அப்பனைகள் செய்த பின்பு குடியானவர் எல்லோரும்
வாரார்கள்
அப்போ வாசல் பிரதானியை வரவழைத்து ஏதுசொல்வார்
வாசல் பிரதானியை அழைத்து வரச் சொன்னது
சொல்லுகிறாரப்போது சோதிமணிவாய்திறந்து
மேற்கே மதுக்கரை நம்ம மேலான ராச்சியமும்



கிழக்கேதான் தஞ்சாவூர் நம்ம சீமைகிளை பெருத்த நன்னாடு
வடக்கேயும் காவேரி இது வளமான சீமையிலே
தெற்கே மதுரை எல்லை இந்த திசையான சமூகமதில்
காவல்மிக ஏற்றுக்கொண்ட கனமுடனே அவர்களுக்கு
நாடு விடுகிறதும் அவர்களுக்கு நலமான சீமையுந்தான்

உப்பளந் தருவதும் உடனே அவர்களுக்கு
(என்னுட) வமிசம் உள்ளமட்டும் அவர்களை வைத்து
நடத்துறதும்
களத்தூரு கம்பரசம் அவர்களுக்கு காணியாட்சியாகத்
தந்தேன்
கல்லடித்துத் தாரதும் சாசனம் கடுகியே இப்போது
வாரத்துக்குச் செலவு வகையுடனே சொல்லுகிறேன்

மாம்பூண்டிக் குளமும் மானியம் விடுகிறது
எனக்கு சரியான குலம் என்குலத்துக்கவன் குலமும்
சரியான குலமானால் என் சற்குணமான பெண்ணை
மூத்த குமாரத்தியை கல்யாணம் முடித்துத் தருகிறேன்நான்
இந்தப்படிக்கு பிரதானி எழுதுமென்றார் உத்திரந்தான்

சிவசோழ ராஜன் இந்தப்படி நான் தருவேன் என்றுசொல்லி
கையொப்பமிட்டு பிரதானி கையில் கொடுத்தாரே
வாசல் பிரதானியைப் பார்த்து வகையுடனே ஏது சொல்வார்
மதுரை சீமையிலே வாளெடுத்து பேர்தேடி
இருக்கும் இடம்பார்த்து அழைத்துவரச் சொன்னாரே

அறிக்கை பெற்றுக் கொண்டு அவனப்போ குதிரைஏறி
வாளெடுத்த பேர்தேடி வருகிறான் பிரதானி
உய்யக்கொண்டான் குடமுருட்டி உயர்ந்தநெறி பதிகுதிரை
சிக்கந்த மலை கடந்து திரு வடதேசம் உள்புகுந்து
மானாமதுரை மட்டும் பிரதானி வாளெடுத்த பேர்தேடி

வையகத்தில் வாரபோது வாளெடுத்தவரைக் காணோம்
செட்டிகளும் தட்டாரும் சேர்ந்து வாழும் இடைக்குடியும்

கோமுட்டியும் குடங்கொட்டியும் குடிப்பட்டார் அல்லாமல்
வாளெடுத்த பேரை வையகத்தில் எங்கும் காணோம்
என்று மதுக்கரை குலக்காடு மாமதுரை எல்லைவிட்டு
வளநாடு திசைநாடி வள்ளாளன் புரவி வருகுதே அப்போது
பிரதானி வாளெடுத்த பேர்தேடி வருகிறது தான் தெரிந்து

## பிரதானி வருகிறதை தங்கை அண்ணரிடம் சொல்லுதல்

இந்த நல்ல காரணத்தை இதமாகச் சொல்வோமென்று
சொப்பனங்கண்டவர்போல் தங்கை துரிதாக ஓடிவந்து
உப்பரிகைவிட்டு உயர்ந்த ஏகாந்த மேடைவிட்டு
அன்னலூஞ்சல் மேடைவிட்டு தங்கை அதிரக் குதித்திறங்கி
எறும்பேறா மேடைவிட்டு உத்தமியாள் வாரபோது

பலகணி வாசலிலே அண்ணர் பார்த்தாரே கண்ணாலே
தம்பியரைத் தான்பார்த்து தார்வேந்தர் ஏதுசொல்வார்
வாராய் இளவரசே வாள்வீரா தம்பிசங்கு
தங்கை அன்னலூஞ்சல் மேடைவிட்டு அண்ணர்பக்கம் வாரதென்ன

என்ன அதிசயங்கள் ஏதேது கண்டாளோ

வாரதொரு காரியந்தான் என்னவகையோ தெரியவில்லை
சோளி சதுரங்கம் அதைத் தொட்டாட்டம் விட்டுவைத்து
சதுரமணி பலகையைத்தான் அதைத்தள்ளி அப்புறந்தான்
வாராய் இளவரசி வாள்வீரன் தங்கையரே
வெள்ளேடு வாசிக்கும் வெள்ளாளன் பிறந்தவளே

உத்தமா பத்தினியே ஒருசொல்லு வாசகியே
அன்னலூஞ்சல் மேடைவிட்டு அண்ணர்பக்கம் வந்ததென்ன?

என்ன அதிசயங்கள் எது கண்டுவந்தாய் அம்மா?
அந்த மொழிகள் சொல்ல உத்தமி அண்ணருக்கு ஏதுசொல்வாள்



பொன்னூஞ்சல் தொட்டியிலே நான் பொய்யுறக்கம் தூங்கையிலே

அனந்தல்வந்து கண்ணசந்து ஆதேசம் கண்டுவந்தேன்
கண்ட தெரிசனத்தை என் கண்கள் விழிகுளிர
மனதில் உதித்த கனா மறக்க முடியவில்லை
கண்டகனா சொல்வமென்று கடுகியே வந்தேனண்ணா!

கண்டகனா சொல்லுமம்மா காதுற்றுக் கேட்கிறேன் நான்
அந்த மொழிகள் சொல்ல உத்தமி ஆதேசம் சொல்லுகிறாள்
உறையூர்ப் பதியாளும் உத்தம மன்னர் சிவசோழர்
கரிசாட்டுப் பொன்னளக்கும் கரிகாலச் சோழனவன்
ஆள் உன்னைத்தேடி அலைந்துவரக் கண்டகனா*

வாசல் பிரதானி நம்ம மனைக்கு வரக்கண்ட கனா
சிவசோழர் குமாரர் உன்னைத்தேடி வரக்கண்ட கனா
சோழர் படைக்குத் தலைவர் பட்டாணி ராவுத்தர்மார்
பட்டாணி ராவுத்தர்மார் உன்னைப் பார்க்க வரக் கண்ட கனா
அந்த மொழிசொல்ல அண்ணர் அப்போது ஏதுசொல்வார்

என்ன இருக்கநீ ஏது மொழி சொன்னாயம்மா?
சிவசோழர் நம்மையறியார்! நாம் அவரைத்தான் தானறியோம்!

முன்னறியோம் பின்னறியோம்! முகத்தினை நாம் கண்டறியோம்!

கடமை கொடுத்தறியோம் சிவசோழரை கண்டறிந்து வந்ததில்லை!

பத்திலொரு கடமை பகுதி கொடுத்ததில்லை!

ஆறிலொரு கடமை அரண்மனைக்கு மேல்வாரம்
கடமை கொடுக்காத காராளர் நம்மையுந்தான்
அவர்களைத் தேடி ஆள்வரவும் காரணமேன்?
நம்மை அவர் தேடி நாடிவரக் காரணமேன்?

---

* கண்ட(ன்) கனா மூக்கொலியுயிர்

சோழர் நாட்டு மணியமா? நல்ல துரைத்தனமும் நம்பளுதா?
சீமை மணியமா சோழர் சீமையும் நம்மளுதா?
என்ன இருக்கநீ என்ன கனா கண்டாயம்மா?
அந்தமொழி சொல்ல உத்தமி அப்போது ஏது சொல்வாள்
உத்தமியாள் கண்ட கனா ஒருநாளும் பொய்யாது

பத்தினியாள் கண்டகனா பழுதொருநாள் போகாது
காரிழையாள் கண்டகனா கைமேல் பலிக்குமண்ணா!
கணக்கர் முதலிமார் அண்ணா காரியப்பேர் போலிருந்தால்
செட்டிகளைப் போலிருந்தால் உங்கள் சேவகத்தைப் பார்ப்பாரோ
சோழி சதுரங்கம் அண்ணா சொக்கட்டான் விளையாட்டு

சொக்கட்டான் ஆட்டமது சில பேர்க்கு தொழிலில்லா ஆட்டமது
சதுரங்க ஆட்டமது சண்டியர்கள் விளையாட்டு
இது என்ன விளையாட்டு எழுந்திருங்கள் அண்ணாவே
அந்தமொழி தங்கை சொல்ல அப்போ மனங்குளிர்ந்து
ஆடுகிற சதுரங்கத்தை அப்புறமாய்த் தள்ளிவைத்து

சோழி சதுரங்கத்தைத் தொட்டாட்டம் விட்டுவைத்து
சதுரமணிப் பலகையைத் தான் தள்ளிவைத்து அப்புறமாய்
விளையாட்டு விட்டுவைத்து விரைவாய் எழுந்திருந்து
அரண்மனை உட்புகுந்து அண்ணர் ஆபரணப் பெட்டியெடுத்து
ஆடை விரித்தெடுத்து அலங்காரமாய் வரிந்துகட்டி

பொன்னுந் திருமேனியெல்லாம் பூட்டுகிறார் பொன் பனுதி
பத்துவிரலுக்கும் பசும்பொன் கணையாழி
எட்டு விரலுக்கும் இசைந்த கணையாழி
கடதாரம் முடதாரம் அண்ணர் இருவரும் கண்டசரம் பூட்டுகிறார்
மார்பில் நிறைந்ததொரு வைரமணித் தாவடமும்
மாணிக்கம் பதித்ததொரு மார்பில் பதக்கம் மின்ன



பொந்திக் கடுக்கனிட்டு பொன்னெடுத்தும் பாகுகட்டி
தும்பி பதக்கமிட்டு துத்துத் துராய் மிகப்பதித்து
தங்கத்தினாலிழைத்த சருகு நிசாரு தொட்டு
அள்ளிக் கயிறெடுத்து அலங்காரமாய்ப் பூட்டியேதான்
வண்ணக்கச்சை தானெடுத்து வகையாய் வரிந்துகட்டி

வகையாய் வரிந்துகட்டி வலதுபுறம் சுங்கம்விட்டு
எண்ணெய்க்கச்சை இடுப்பில்கட்டி இடதுபுறம் சுங்கம்விட்டு
பட்டுக் குஞ்சம் பறக்கவிட்டு பாங்காகக் கச்சைகட்டி
ஒட்டியாணம் பூட்டெடுத்து இடையில் பதித்து அப்போ
வாங்குபிடி சூரி வளைதடியும் சக்கரமும்

சுருட்டு முத்துப்பட்டா சூரவாள் கேடயமும்
ஈட்டிக் கோல் வல்லையமும் எரியீட்டி நேரிசமும்
சம்பு கத்தி சமுதாடு சமுக்குலா பட்டாவும்
பதினெட்டு ஆயுதமும் பாங்காய் வரிந்துகட்டி
பத்துக்கட்டி போட்டடித்த பாரமான கேடயமும்

பாரமான கேடயத்தை பாங்குடனே மேல்சூட்டி
எட்டுக்கட்டி போட்டடித்த இரணங்கண்ட மந்திரவாள்
இரணங்கண்ட மந்திரவாள் இதமாய் வரிந்துகட்டி
தூக்கும் பரிசையோட நிலம் தூத்துவரும் சல்லிகளும்
பதினெட்டு ஆயுதமும் அண்ணர் இருவரும் பாங்காகத் தானெடுத்து

அண்ணரிருவரும் அலங்காரமாய்ச்சிலம்பக்கூடம்
கரடிக்கூடந்தனில் கீர்த்திபெற இணைசிலம்பம்
பொருதுகிறபோது பொன்னருமே சொல்லுகிறார்

## அண்ணர் இருவரும் சிலம்பம் பொருதி விளையாடுதல்

அடா வாள்வீரா தம்பிசங்கு நான் வார்த்தைசொல்லக் கேளுமடா
நாமே விடுதிவிட்டு நலமாகப் போறபோது

வேடுபடை பொருதி வினைப்போரு செய்வதுண்டு
அன்று நீ வேடுபடை பொருதி வினைப்போரு செய்கிறதை
படைப்போரு செய்கிறதைப் பார்த்துக் குதிரைவிட்டு
வெகுசாய்ப் பரிந்து படைபொருதி படைப்போரு
செய்கிறதை

பாங்குகளை இன்றைக்கு பார்க்கவேண்டும் தம்பிசங்கு

வெட்டுஞ் சவுரியத்தை நான் உன் வீரியங்கள்
பார்க்கவேணும்

என்றுமே அண்ணர் சொல்ல இயல்பான சங்கருந்தான்
அண்ணா நீங்கள் பட்டம் பொறுத்ததுரை பாருலகு
ஆண்டவர்கள்

சிங்காதனம் பொறுத்து அண்ணா திருக்கொலுவு
பெற்றவர்கள்

வினைப்போரு செய்கிறதை வெகுவாகச் சொல்லுமுந்தான்

வந்திடுமே என்று சொல்லி வகையாகச் சங்கருந்தான்
ஒருநாளும் சொல்லாத வார்த்தை ஒருசொல் பிறந்திட்டாலும்
அந்தச்சொல் பொறுப்பேனென்று உத்திரவு செய்தாயானால்
வேடுபடை பொருதுகிற வினைப்போரு செய்வேனண்ணா!
என்று தம்பிசங்கர் சொல்ல ஏது சொல்வாரந்நேரம்

வினைப்போரு செய்யும்போது என்ன சொன்னாலும்
பொறுத்துக் கொள்வேன்

உன்னை தம்பியென்றும் பார்க்கவில்லை என்னை நீ தமைய
னென்றும் பார்க்க வேண்டாம்

என்று பொன்னம்பலசுவாமி போர்செய்ய வாராரிப்போ
மந்திரவாள் தும்புவிட்டு அண்ணர் வருகிறார் அப்போது
தன்னுட மெல்லியவாள் தும்புவிட்டு விரசுடனே பின்வாங்கி

கண்கள் சிவந்து சங்கர் கடுங்கோபமாகியேதான்
நீலவிழிக் கண்களிரண்டும் சங்கருக்கு நெருப்புத்
தணலாகிறது

வலதுபுறம் மீசையது வல்லதாய்ப்போர் செய்கிறது



இடதுபுறம் மீசையது ஈட்டியது போர் செய்கிறது
அண்ணரைப் பார்த்து சங்கர் அப்போது ஏதுசொல்வார்
அடா ஒருநாளும் சொல்லா ஒருவார்த்தை சொன்னதற்கு
என்னுடைய வாளாலே உன்னை இருதுண்டாய் வீசிடுவேன்
என்று ஆக்கரித்து குலவையிட்டு அறுபதடி பின்குதித்து

வட்டமிட்டு பவனிகொண்டு மந்திரவாள் தான்சுழற்றி
மந்திரவாள் தான்சுழற்றி வாகுடனே வீசுகிறார்
பொன்னர் மெல்லியவாள் வீச்சுதட்டி விலகிக்
குதித்துமப்போ

தம்பிசங்கு உக்கிரமாம் வீச்சையெல்லாம் கேடயத்திலே
தடுத்து

அப்போ ஆக்கரித்து குலவையிட்டு பொன்னர் அறுபதடிபின்
குதித்து

வட்டமிட்டு பவனிகொண்டு மந்திரவாள் சுழற்றிவந்து
வாகுடனே வீசுகிறார் பொன்னர் வாள்வீரர் குமாரசங்கை
பொன்னர் வீசின வீச்சையெல்லாம் சங்கர் கேடயத்திலே
தடுத்து

இவர்கள் இருவரெண்டுபேரும் வெட்டுறதும் சுட்டுறதும்
வினைப்போரு செய்கையிலே வீரவாள் வீசும் சத்தம்

கோடையிடி இடித்தாற்போல கிடுகிடென்று குமுறுது
மந்திரவாள் வீச்சு மழை மின்னல் ஜோதியைப்போல்
இப்படியாக இவர்கள் போர் செய்கையிலே
நீ சரிக்குச் சரியானாய்! சரியான பேரானாய்!
உன் சமத்தைக் கண்டு தம்பி சந்தோஷமானேனடா!

பொன்னருக்கு ஒருபுஜம் இருபுஜமாய் திரேகமெல்லாம்
பூரித்து

வாராய் இளவரசே வாள்வீரா தம்பிசங்கு
வெற்றி மதயானை வீரியனே தம்பிசங்கு
எனக்கு சரிக்குச் சரியானாய் சரியான பேரானாய்

எனக்கு எதிர்த்த துரையானாய் ஈடான பேரானாய்
நானிருக்கும் சிங்காதனம் தானிருக்க வைப்பேன்நான்
அந்த மொழிகள் சொல்லி அழைத்தாரே மைத்துனரை
எதிரில்லாப் பெருமாளைப் பார்த்து ஏதுசொல்வார் நல்ல பொன்னர்

சரிக்குச் சரியானான் என்தம்பி சரியான பேரானான்

நானிருக்கும் சிங்காதனம் தம்பியைத் தானிருக்க வைக்கவேணும்

அத்தைபிள்ளை மைத்துனரை ஆலோசனை கேட்கும்போது
எதிரில்லாப் பெருமாள் ஏதுசொல்வார் மைத்துனர்க்கு
வாருங்காண் மைத்துனரே ஒருவார்த்தை சொல்லக் கேளுமினி

உங்கள் தங்கை பின்னாலே வருகிறதை முன்னாலே சொல்கிறவள்

ஆதிநாளையில் வருகிறதை அடி நாளே சொல்கிறவள்!
நமக்கு மாதா குருவல்லவா? மந்திரியும் இவளல்லவா?
நமக்கு தாதா குருவல்லவா? தங்கை தவமணியைக் கேளுமினி

அவளை அழைத்துநீர் ஆலோசனை கேளுமென்றார்
அந்தமொழி சொல்ல பொன்னர் அழைத்தாரே தங்கையரை

உத்தமியைத் தானழைத்து ஏதுசொல்வார் அந்நேரம்
எனக்குச் சரிக்குசரியானான் தம்பி சரியான பேரானான்
எனக்கு எதிர்த்த துரையானான் தம்பி ஈடான பேரானான்
நானிருக்கும் சிங்காதனம் தம்பியைத் தானிருக்க வைக்கவேணும்

உன்முத்தான வாய்திறந்து உத்தரவு சொல்லுமம்மா

அந்த மொழிகேட்டு உத்தமி அப்போது ஏதுசொல்வாள்
பட்டம் பொறுக்கும் சின்னண்ணருக்கு பாராக்கொலு ஏற்றிருக்கும்

சிங்காதனம் பொறுக்கும் திருக்கொலு யேற்றிருக்கும்



பட்டம் சூடி சின்னண்ணருக்கு பருமுத்தால் அலங்கரிப்பீர்!
என்று முத்தான வாய்திறந்து தங்கை உத்தரவு செய்தபின்பு
வெற்றிமன்னன் பறைநகுலன் வீரபாகு சாம்புவனை
அவனை அழைத்து பொன்னர் அப்போது ஏதுசொல்வார்
சின்னாண்டவர்க்கு பட்டம் பொறுதுமிப்போ பாராக்கொலு வைக்கவேணும்

சிங்காதனம் பொறுத்து திருக்கொலுவில் வைக்கவேணும்
ஆனைபடை சேனைதளம் அத்தனையும் கூட்டமிட
நம்ம சித்தாலைப் பட்டணம் தெருக்கள் தோறும் சுற்றிவந்து
வெற்றிக்கொம்புதான் பிடித்து வெங்கலபடைமுரசு தான்முழக்கி

ஆனைபடை சேனைபடை அத்தனையும் கூட்டுமிப்போ

முத்தான வாய்திறந்து பொன்னர் உத்தரவு செய்தபின்பு
சித்தாலைப் பட்டணங்கள் வீரபாகு தெருக்கள்தோறும் சுத்திவந்து

சங்கருக்குப் பட்டம் பொறுக்குதிப்போ பாராக்கொலு வீற்றிருக்க

ஆனைபடை சேனைதளம் அத்தனையும் கூட்டமிப்போ
அடித்தான் கடிங்காளை வீரபாகு பிடித்தானே வெற்றிக்கொம்பு

படைமுரசு சத்தங்கேட்டு படைமன்னர் கூட்டமிட்டார்
போட்டமண்டி வாங்காத பொருந்தினிய கூட்டமிட்டார்
வைத்த மண்டி வாங்காத மாருவாசைக்காரரும்
படைக்குத் தலைவர் பட்டாணி ராவுத்தமார்
வெள்ளித்தடிக்காரர் விருதுமன்னர் கூட்டமிட்டார்

ஆரிய ராவுத்தமார் ஆனைப்படை [illegible]தளம்
கூட்டுகிறார் குமாரதளம் குமாரதளம் கூட்டமிட்டு
அரண்மனை வாசல்தனை அப்போது அலங்கரித்து
தோரணங்கள் கட்டி துலங்க அலங்கரித்து
கண்ணாடி தூக்கம் கட்டி அலங்கரித்து

பட்டமும் சூடி சங்கருக்கு பருமுத்தால் அலங்கரித்து
ஏகாந்த கொலுவிலேதான் சங்கரை யிருமென்று
சொன்னாரப்போ
அந்த மொழிகள் சொல்ல அண்ணர் கூடஅப்போ
கொலுவிருந்தார்
கட்டியங்கள் கூற கவிவாணர் முன்படிக்க
வெள்ளித்தடிக்காரர் விருதுமன்னர் சூழ்ந்து நிற்க

போட்டமண்டி வாங்காத பொந்தினியர் சூழ்ந்துநிற்க
நல்லெழுத்தும் தம்பட்டம் நாகசுரம் பேரிகையும்
கொட்டும் கிடுமுடியும் கோவில் மேள தாளங்களும்
இப்படி சந்தோஷமாக யிருக்குமந்த வேளையிலே

## பிரதானி வளநாடு வருதல்

வாசல் பிரதானியவர் வாளெடுத்த பேர்தேடி
வாளெடுத்த பேர்தேடி வருகிறார் அந்நேரம்
மதுரை குளக்காடு வாகனம் மாமதுரை எல்லைவிட்டு
இவர்கள் ரெண்டுபேரும் இனிச்சிலம்பம் பொருந்தினது
பரிசையோடு பரிசைபட்டு உரசினது பாரிடிபோல்
முழங்கையிலே

கோடையிடி யிடித்தாற்போல் குதிரைக்கு தான்கேட்டு
வாசலான் புரவி வருகுதே செவியடைத்து
மந்திரவாள் வீசினது புரவிக்கு மனமே வெறிதாக்க
புரவிக்குக் கண்ணு வெறியேறிக் கால்கள் விறுவிறுத்து
அறிக்கையுள்ள புரவியென்று அசையாமல் நிற்கிறதை

(பிரதானி) ஏறின குதிரைவிட்டு இறங்கியே தானும்வந்து
முன்வாகை தான்பிடித்து முன்னாகத் தானிழுத்தான்
குதிரை முன்னும் அசையவில்லை பின்னும் நகரவில்லை
அடிமேல் அடியடித்தும் குதிரை அசையவில்லை அப்போது
எண்ணாதுயெண்ணி பிரதானி ஏங்கி மனங்கலங்கி
நடுவனத்தில் குதிரையைவிட்டு நானொருவன் போகிறதா?



இது கள்ளர்பெருத்த சீமை கருவேலா முள்காடு
என்று கண்ணீர் சொரிந்து குதிரையைக் கட்டிப்பிடித்தான்
கண்ணோடிணைத்துக் கட்டிப் புலம்புகிறான்
புலம்புகிறபோது பொன்னருட பண்ணையாள்
மாடுமேய்க்கும் சிறுவர் வாராரே மாடேட்டி

மாடுகளையோட்டி சிறுவர் மகுடிக் குழலூதி
மகுடிக் குழலூதிக் கொண்டு வனத்தில் வருகையிலே
கண்டானே பிரதானி கானகத்தில் சிறுவர்களை
மாடுமேய்க்கும் சிறுவர்களே வாருங்களென்று அழைத்து
மேகங்கள் கட்டாமல் உங்கள் சீமையில் மின்னலும்
மின்னுவதேன்?

கோடையிடி யிடித்தாற்போல் குமுறுதே மேகமெல்லாம்
என்றுமே பிரதானி கேட்க ஏதுசொல்வார் சிறுவர்களும்
எங்கள் சித்தாலைப் பட்டணத்தில் சீரான பொன்னர் சங்கர்
சிலம்பம் பொருந்துறதும் சேல்போல பாய்கிறதும்
வாள் வீச்சின் சோதியது வானமது மின்னினாற் போல்

கோடையிடி யிடித்தாற்போல் எங்கள் குமர சங்கு வீசுவது
மந்திரவாள் வீசுவது ஜோதிமின்னல் மின்னினாற் போல்
துலங்குமென்று சிறுவர்களும் சொன்னார்களப்போது
வாசல் பிரதானி வகையாக ஏதுசொல்வார்
உங்களாண்டவர் அரண்மனைக்கு அடையாளம்
சொல்லுமென்றார்

நாங்கள் அடையாளம் சொன்னாலும் வேட்டைநாய் உம்மை
அண்டவிடாதென்றான்
அந்தமொழி கேட்டு பிரதானி அப்போது ஏதுசொல்வார்
அப்புறமே நின்று நீங்கள் எனக்கு அறியவே சொல்லிடுங்கள்
ஆடை விரித்தெடுத்து சிறுவர்கள் அலங்காரம் வரிந்துகட்டி
வாருமினித் தம்பியரே என்று வரவழைக்கும் வேளையிலே

சந்தோஷமாகியேதான் மாட்டிடையன் தானுமங்கே
ஏதுசொல்வான்
எங்கள் வளநாடு எல்லையிலே குதிரையேறி வரப்போகாது
வாகை பிடித்திழுத்து வாசல் வாருமையாவென்று சொல்லி
மாட்டிடையர் சிறுவர்கள் பிரதானியை
வரவழைத்துக்கூட்டியேதான்
ஊருக்கு மேற்கே ஆண்டவர், அரண்மனை உப்பரிகை
மேடையிது

ஐந்துகட்டு மேடை அரண்மனை ஆசார மேடையென்று
கைகாட்டி கண்சிமிட்டி மாட்டிடையன் கடக்கநின்று
சொல்லையிலே
வாகை பிடித்திழுத்து வாசல்பிரதானி வருகிறவேளையிலே
சிங்காதனத்தில் அண்ணர் திருக்கொலுவு வீற்றிருக்க
கண்டாரே கண்ணாலே சங்கர் கண்குளிரத் தான்பார்த்து

ஆரோ தெரியவில்லை நம்ம அரண்மனைக்கு வாராரிப்போ
வளநாட்டு எல்லையிலே குதிரை வந்தவன்போல் காணுகுது
வந்தவனைத் தானுமிப்போ வாளுக்கிரை செய்திடுவேன்
அந்த மொழி சொல்லி பொன்னர் அப்போது ஏதுசொல்வார்
மனைதேடி வந்தவரை தம்பியரே வாளுக்கிரை
செய்யலாமோ

என்னயிருக்க நீயேது சொன்னாய் தம்பியரே?
தம்பியரைத் தானமர்த்தி தார்வேந்தர் சொல்லையிலே
அந்த மொழிகேட்டு பிரதானி அப்போ மனங்கலங்கி
வெட்டுவேனென்று சொன்ன விசனமும் கேட்டுமப்போ
சிந்தை கலங்கியேதான் திகைத்து நின்று அந்நேரம்

மனந்தெளிந்து துணிந்து பிரதானி வணக்கமுடன் பணிகள்
செய்து
ஓலைச்சுருளெடுத்து சிவசோழர் உத்திரத்தை
முன்னே வைத்தான்



வண்ணச் சுருளெடுத்து சிவசோழர் வாசகத்தை
முன்னேவைத்தான்
ஓலைச்சுருளெடுத்து சிவசோழர் உத்திரத்தைப்
பார்த்துமப்போ
இன்பம் குளிர்ந்து பொன்னர் இருதோளும் பூரித்து
தன் மனத்துக்குள்ளே தானே மகிழ்ந்திடுவார்
அப்போ குமரசங்கு அண்ணரையும் தான்பார்த்து

ஓலைச்சுருள் வாசகத்தை உள்ளபடி சொல் எனக்கு
இன்றேல் ஓலைகொண்டுவந்தவனை ஒரேவெட்டில்
வெட்டிடுவேன்
அந்த மொழிகள் சொல்ல அண்ணர் அப்போது
ஏதுசொல்வார்
சோழர் வாசல் பிரதானியை சொல்லாதே இவ்வார்த்தை
ஓலைக்குள் வாசகத்தை உள்ளபடி சொல்கிறேன்

அடா வாள்வீரா தம்பிசங்கு வகையாக இப்போது
சிவசோழர் உத்தரவும் சீக்கிரமாய் எழுதியதை
உனக்கு நான் சொல்லுகிறேன் உண்மையுடன் தம்பியரே!
மேற்கே மதுக்கரை சிவசோழர்சீமை மேலான ராச்சியமும்
கிழக்கேயும் தஞ்சாவூர் கிழக்கோட்டை வாசல்மட்டும்

வடக்கேயும் எல்லை வளமிகுந்த காவேரி
தெற்கே மதுரையெல்லை இந்தத் திசை நான்கு சமூகமதில்
காவல்கொண்ட பேர்களுக்கு கடுகியே இப்போது
நாடுவிடுகிறதும் நாலுசீமை பணம் தருகிறதும்
உப்பளம் தருகிறதும் உடனேயவர்களுக்கு

வாரத்துக்கு செலவு மாம்பூண்டிகுளம் வகையாய்
விடுகிறதும்
களத்தூரு கம்பரசம் காணியாச்சி பதிவு
கல்லடித்துப்போடுறதும்
சிவசோழர் வமிசம் உள்ளமட்டும் வைத்து நடத்துறது

என்றே சிவசோழர் எழுதிய உத்திரந்தான்
என்றுமே அண்ணர்சொல்ல ஏதுசொல்வார் தம்பிசங்கு
சீமை காவல் கொள்கிறோமென்று ஓலை சீக்கிரமாய் எழுதுமண்ணா
ஓலை எழுதாவிட்டால் அவனை யொருநொடியில் வெட்டிடுவேன்
என்று தம்பி சங்கர் சொல்ல ஏதுசொல்வார் அண்ணருந்தான்

வாராய் இளவரசே வாள்வீரா தம்பிசங்கு
நீ சொல்லுகிற வார்த்தை துஷ்டத்தனமான வார்த்தை
சோழர் துரைத்தனம் செய்கிறவர் நாம் குடித்தனம் செய்கிறவர்
இவரைப் பார்க்காத போனாலும் அவரை நாம் பார்க்கவேணும்
அதனால் வெட்டுகிறேனென்று சொன்ன வீரியத்தை விட்டுவிடு

அண்ணரும் சொல்லையிலே சங்கரும் அன்பாய் மனமகிழ்ந்து
வாசல் பிரதானியை வகையாய் விசாரித்து
அனுப்பியுமே வையுமென்று சங்கர் அன்புடனே சொல்லையிலே
தங்காள் பிறவியரைத் தான்கேட்போம் என்று எண்ணி
வாராய் இளவரசி வாள்வீரன் தங்கையரே

உத்தமா பத்தினியே ஒருசொல்லு வாசகியே
வேதப்பிராமணியே வெள்ளாளன் பிறந்தவளே
பத்தினியாள் கண்டகனா அம்மா பழுதொருநாள் போகாது
காரிழையாள் கண்டகனா எனக்கு கைமேல் பலித்ததிப்போ
உத்தமியாள் கண்டகனா எனக்கு உள்ளபடி ஆச்சுதிப்போ

சிவசோழர் வாசல் பிரதானி வந்துவிட்டார் நம்மைத்தேடி
வாசல் பிரதானியை வகையாய் விசாரித்தனுப்பவேணும்
போசனங்கள் விசாரியும் பொன் போன்ற பிறவியரே



அந்தமொழி கேட்டு உத்தமி அழைத்தாளே தாதிகளை
அழகு முழிராமி அபிராமி வாருமிங்கே
திரண்ட முழியாளே திருவே நீ வாருமினி
தாதியரைத் தானழைத்து உத்தமி தானுமப்போ ஏதுசொல்வார்
செங்குச் சம்பா அரிசியதை இணை இணையாய்த் தீட்டியேதான்

நந்தா அமுது செய்யுமென்று சொன்னாளே பத்தினியாள்
அந்த மொழிகேட்டு தாதியர்கள் அதிதுரிதாய் ஓடிவந்து
போசனங்கள் தானும் பொரி கறியும் தான்சமைத்து
பதினாறு வகைக் கறிகள் பாங்குடனே தான்சமைத்து
பேடைமயில் பிள்ளை ஆண்டாள் பிரதானி அழைத்துவந்து

நல்லெண்ணெய் சீயக்காய் நன்றாய் நலுக்கமிட்டு
கொப்பறையில் நீர்வைத்து கோந்தை முழுக்காட்டி
பன்னீருச் செம்பிலேதான் புதுநீருந் தான்சொரிந்து
முழுகித் தலையாத்தி முற்றத்தில் வந்துநின்று
பச்சைவெட்டும் சந்தனமும் பாரமத்த குங்குமமும்

வெண்கலக் குளிகைரொம்ப அதை மெத்திச்சு தான்குழைத்து
திருமுடி சென்னியிலே திலகப் பொட்டுத் தானும்வைத்து
சாத்துகிறார் சந்தனத்தை பிரதானி தன்னுடைய திரேகமெல்லாம்
வந்து அரண்மனையில் வகையாகத் தானிருந்தான்
தாதிமாரோடி வந்து தலைவாழையிலை யெடுத்து

தலை வாழையிலை எடுத்து பிரதானிக்கு குறுக்காக முன்போட்டு
கரகம் பிடித்துமப்போ கைக்கு நீர்தான் வார்த்து
பிரம்புப் பெட்டிக்கூடையிலே போசனமுந்தானெடுத்து
துந்துப்பருப்புமிட்டு குடத்தோட நெய் சொரிந்து
பதினாறு வகைக் கறிகள் பாங்குடனே முன்னே வைத்து

உத்தமியாள் நல்லதங்கை ஏது சொல்வாள் அந்நேரம்
நாங்கள் பட்டிக்காட்டு குடியானவர் எங்களுக்கு பல கறியும் சிக்காது

ஐந்தாறு கறி நினைத்து அண்ணா உண்ணுமினிச் சாதமென்று
அந்த மொழிகள் சொல்லி பிரதானி அப்போது ஏது சொல்வான்

இருவருடன் பிறந்தவளுக்கு நீ எனக்கு மூவருடன் பிறப்பு

ஒக்கப் பிறந்தவர்க்கு உபசரிப்புதானு மென்ன
உண்டு எழுந்தார் சிவசோழர் உத்தமன்னன் பிரதானி
கரகம் பிடித்து தாதி கைக்கு நீர் தான்வார்த்து
வெற்றிலை விடாக்காயும் மெத்த வாரித் தான் கொடுத்து
சந்தோஷமாக பிரதானி தான் வந்தார் அந்நேரம்

வாசல் பிரதானியை பொன்னர் வரவழைத்து ஏதுசொல்வார்
எங்கள் கிட்ட வந்தது நீர் எனக்கறியச் சொல்லுமென்றார்
அந்த மொழி கேட்க பிரதானி அப்போது ஏது சொல்வார்
ஐயர் திருப்பணிக்கும் ரெத்னாசலமூர்த்தி அபிஷேகக் கட்டளைக்கும்

கோவில் கிராமத்தை கொள்ளையிட்டார் வேட்டுவர்கள்

அந்தக்குடியானவர்கள் அனைவரும் கூட்டமிட்டு
சிவசோழ ராஜாவுட சமூகம் வந்துதான் பணிந்து
கொள்ளை கொடுத்து நாங்கள் குடித்தனம் பண்ணமாட்டோம்

பிடித்தமாடு எடுத்தகொள்ளை வேட்டுவர் அவசூறை கொள்ளை செய்தார்

அவதூறு சொல்லியேதான் ராஜாசமூகம் அடிவணங்கி நிற்கையிலே

சித்தம் திரும்பி ராஜா திருவாக்கு செய்தாரே
களவை அடக்கியேதான் கட்டுப்பண்ணி தாரேனென்று
உத்தரவுசெய்துமப்போ அவர்களை ஊருக்கனுப்பிவைத்து
இந்தநல்ல உத்தரவை எழுதி என்கையில் கொடுத்தார்



வாளெடுத்தபேரை நீ வரவழைத்துக் கொண்டுவர
எங்களுட ராஜா எனக்கு உத்தரவு செய்தபின்பு
வாளெடுத்த பேர்தேடி வையகத்தில் வந்தேனான்
வையகமெல்லாம் பார்த்தேன் வாளெடுத்த பேர்காணேன்
உங்களைத் தானழைத்து இனிக்கூட்டிப் போகவென்று

அரண்மனை திசைபார்த்து அடியேனான் வந்தேனிப்போ
அந்த மொழிகேட்டு பொன்னர் அப்போது ஏதுசொல்வார்

## பொன்னர் பிரதானியை அனுப்புதல்

என்னைச் சரிக்குச் சரியாயெண்ணி பிரதானி உன்பிறகேவாரதில்லை

சோழர் வந்தால் நான் வருவேன் அவர் குமாரர் வந்தால் நான் வருவேன்

உன்பிறகே வாரதில்லை இனி நடடா உன்னூரே
அந்த மொழிகேட்டு பிரதானி அப்போது ஏதுசொல்வார்
ஒருவன் வழி போகலாமா? சுவாமி உற்றாளாய்* நீங்களனுப்பும்

அந்த மொழி சொல்ல பொன்னர் அப்போது ஏதுசொல்வார்
எதுக்கும் மலைக்காதே பிரதானி யோசனைகள் செய்யாதே
என்பேரு சொல்லியடா இருகையிலும் பொன்னேந்தி
பொன்னருட பேருசொல்லி போடா நீ உன்னூரே
உன் குதிரை மீதேறி இனி நடடா உன்னூரே

அந்த மொழிகள் சொல்ல பிரதானி அப்போ பராக்கென்று
அங்குவடி மிதித்து அப்புரவி மீதேறி
உறையூர் திசைநாடி பிரதானி உத்தமனும் தானடைந்தான்
அப்போ சிவசோழர் ஆடல் பாடல் சங்கீதம்
கேளிக்கை முகமாக சிவசோழர் கொலுவிருக்கும் வேளையிலே

* ஒற்றை ஆளாய்

அப்போது பிரதானி ராஜாவுட அரண்மனைக்கு வந்திறங்கி
ஏழுகளரியிலே இங்கே இணைகளரி உள்புகுந்து
சுவாமி பராக்கென்று சரணம் பணிந்துநிற்க
ஆடல் பாடல் களரியைத்தான் அப்போது கையமர்த்தி
வாளெடுத்த பேர்தேடி வையகத்தில் போனாயே?

வாளெடுத்த சேவகரை நீ வரவழைத்து வந்தாயோ?
அந்தமொழி கேட்ட பிரதானி அப்போது ஏதுசொல்வார்
சுத்தாத தேசமில்லை சாமி நான் தொடராத சீமையில்லை
வாளெடுத்த பேரொருவர் வையகத்தில் தானுமில்லை
வளநாடு பட்டணத்தில் வாளெடுத்த சேவகர்தான்

பொன்னரென்றும் சங்கரென்றும் புகழ்பெரிய காராளர்
வார்த்தைக்கோ வேளாளர் மந்திர வாளுக்கோ மிகசமர்த்தர்
பொறுமைக்கோ வேளாளர் படை போருக்கோ
வாள்சமர்த்தர்

இருவரெண்டு பேரும் இலங்கை சிறு புலிதான்
வாருமையா வென்று சொல்லி வரக்கேட்டேன் நானுமினி

உன்னை சரியா யெண்ணி நான் உன்பிறகே வாரதில்லை
சோழர் வந்தால் நான் வருவேன் சோழர் குமாரர் வந்தால்
நான் வருவேன்

உன் பிறகே வாரதில்லை என்று உறுதியாய்ச்
சொல்லிவிட்டார்

வாரதில்லை யென்று வலுக்காரம் பேசுகிறார்
அந்த மொழிசொல்ல சிவசோழர் அப்போது சொல்லுகிறார்

வாரும் பிரதானியரே ஒரு வார்த்தை சொல்லக் கேளுமினி
ஆனால் அவர்களுந்தான் அந்த வார்த்தை சொன்னபோதே
வலுக்காரர் தானாக வகையாயிருப்பார்கள்
அதற்குமே குற்றமில்லை அடவாய் வரச்சொன்னதுதான்
வெள்ளாளன் ஆனதினால் விரசாக இப்போது
நமக்குச்சரியாக நாமளுமே போய் அவரை



கூட்டி வரலாமே குணமாகத்தான் அவரை
நம்முடைய குமாரனை நலமாக இப்போது
பொன்னர் சங்கர் அரண்மனைக்கு பொறுமையுடன் நீயும்
போய்

அவர்களைக் கண்டறிந்து பேசி கடுகி அழைத்துவா
புள்ளி சிறு சோழரை பொன்னரிடம் அனுப்ப

ஓலைச்சுருளெழுதி ஒரு தூதுவன் கையில் கொடுத்து
புள்ளி சிறு சோழரைப் போயழைத்து வாருமென்றார்
ஓலை கொண்டு தூதன் ஓடிவருகையிலே
புள்ளி சிறு சோழர்தன் சோட்டுப் பெண்களுடன்
தாயக்கரம் ஆடி தானிருக்கும் வேளையிலே

தூதன் ஓலைச்சுருள்கொண்டு ஓடிவந்தான் அப்போது
ஓலைச்சுருள் வாங்கி அதன் உள்கருத்தைத் தான்பார்த்து
சோழருமே நமை அழைத்த சேதி தெரியவில்லை
சோழகுமாரன் துருசாய் வருகையிலே
மகனை வாரியெடுத்தணைத்து சோழர் வண்ணமுத்தம்
தான்கொடுத்து

ஏந்தி எடுத்தணைத்து மகனை இணைமார்பில் முத்தமிட்டு
வாரும் மகனே நான் ஒருவார்த்தை சொல்லக் கேளுமினி
நம்முடைய சீமையிலே நலமாக இப்போது
மேனாட்டு வேட்டுவர்கள் வெகுகூட்டம் தான்கூடி
ஆடுகொள்ளை மாடுகொள்ளை அடங்கலும்
கொள்ளையிட்டு

இப்படியே செய்கிறார்கள் இவர்களை அடக்கிவைக்க
நம்முடைய சீமைக்கு நலமான காவல்வைக்க
வளநாடு கோட்டையிலே வாள்வீரன் காராளன்
பொன்னரென்னும் சங்கரென்னும் போர்வீரர் தானுமுண்டு
அவர்களை நீபோய் அழைத்துமே வாருமென்றார்
அந்த மொழி சொல்ல சிறு சோழர் அப்போது ஏதுசொல்வார்

என்ன இருக்க நீ என்ன மொழி சொன்னீரய்யா
அவர் கள்ளர் படையுமல்ல கருமறத்தாருமல்ல
மன்னர் படையுமல்ல மறுமன்னர் தானுமல்ல
ஏழை வெள்ளாளன் பயலை எனைப்போயழைத்துவர
சொல்கிறது ஞாயமல்ல சுவாமி மகாராஜா

என்று குமாரன் சொல்ல ஏது சொல்வார் ராஜாவும்
கள்ளர் படையுமவர் கருமறத்தாரும் அவர்
அவரை அழைக்க நீயேதான் போகிறாயா நானேதான் போகட்டுமா
என்றுமே ராஜர் சொல்ல ஏது சொல்வார் குமாரனவர்

## புள்ளி சிவசோழர் வளநாடு வருதல்

நான் போய் அழைத்துக்கொண்டு நலமுடனே தான்வருவேன்
அப்போது சோழராஜர் அவர் மகனைத் தான் பார்த்து
அறிக்கையுள்ள புரவி அதனைப்பிடித்து வந்து
நாலுகால் வெண்மை நடையில் அலங்காரம்
அலங்காரம் தானும் செய்து அதன் மேலே சீனிவைத்து

கல்லணையும் கட்டியேதான் கடிவாளமே பூட்டி
சிவசோழ ராஜா புரவிக்கு திருமந்திரம் ஜெபித்து
என் மகனைக் கொண்டு நீ எகிறிக் குதிக்காதே
கடலைக்குதியாதே கருமலையைத் தாண்டாதே
விண்ணைக் கடவாதே என்மகனைக்கொண்டு வேகமாய்ப்பறக்காதே

பொறுமைய தாகவேதான் பொன்னரிடம் நீயும்போய்
திரும்பி வா வென்று குதிரை செவியிலே தானுஞ்சொல்லி
கட்டமுது கட்டி வைத்து குமாரனை கடுகி அனுப்பிவைத்தார்
வளநாடு திசை நாடி புரவி வருகுதே பாய்ந்துமப்போ
கோநாடு திசை நாடி புரவி வருகிறதே அப்போது
போதாவூர் வழியாக சோழர் புரவி வருகையிலே



போதாவூர் குளத்தடியில் சோழர் புரவியை விட்டிறங்கி
அமுது எடுத்துண்டு சோழர் அப்போது பசியாறி
வளநாடு போயறிய இனிமேல் வெகுநேரம் செல்லுமென்று
வந்தவழிபார்த்து குதிரையை மார்மூண்டு திருப்புகிறார்

## புள்ளி சிறு சோழராஜன் திரும்பிப் போகிறதை தங்கை சொப்பனங்கண்டு அண்ணரிடம் சொல்லுதல்

அன்னலூஞ்சல் மேடையிலே அனந்தல் செய்யும் வேளையிலே
கண்டாளே சொப்பனங்கள் காரிழையாள் நல்லதங்கம்
ஆதேசங் கண்டுமப்போ அண்ணர்பக்கம் ஓடிவந்து
என்னவென்று சொல்லுகிறாள் இளங்கொடியாள் உத்தமியும்
வளநாடு திசை நாடி வந்ததொரு சோழர் மகன்

வளநாடு போயடைய இன்னும் வெகுநேரஞ் செல்லுமென்று
வந்தசிறு சோழர் மகன் அண்ணா மார்மூண்டு போறானே
மார்மூண்டு போறவனை அண்ணா வரவழைத்து வாருங்கள்
அந்தமொழி சொல்ல அண்ணர் அப்போ எழுந்திருந்து
காரியினா நீலாவை கவர்மாரிக்* கொண்டுவந்து

காலாலே தட்டியேதான் பொன்னர் ஆலாப்போலே பறந்து
ஆலாப்போலே பறந்து குதிரை அதனிடத்தில் ஓடிவந்து
வளநாடு திசைநாடி நீ வந்ததொரு சிறுசோழர்
வந்தசிறு சோழர் நீர் மார்மூண்டு போறதென்ன
வாகையைத் தான்பிடித்து குதிரையை மல்லாக்காய் தானிழுத்தார்

அப்போ சிறு சோழருக்கு அதிகோபமாகியேதான்
ஆருடைய சேவகநீ குதிரையை அஞ்சாமல் வாகை தொட்டாய்

* கயிறு மாறி

எவருடைய சேவகநீ எண்ணாமல் வாகை தொட்டாய்
வாகை தொட்ட கையின் மணிக்கட்டை நான் தரிப்பேன்
மெல்லியவாள் தும்புவிட்டு சோழர் மகன் வெட்டுவே
னென்று சொல்லி

வெட்டுகிறேன் என்று சொல்ல பொன்னர்
வெகுண்டுமப்போ ஏதுசொல்வார்

வாருமையா ராஜாவே வலுக்காரம் பேசாதீர்

வெட்டுகிறேன் என்று சொல்லி வீரியங்கள் பேசுகிறீர்
புரவி புரவியென்று வெகு பிரபலமாய்ப் பேசுகிறீர்
கடலைக் குதித்திடுமா உன்புரவி கருமலையைத்
தாண்டிடுமா

விண்ணைக் குதிக்குமா உன்னைக் கொண்டு வேகமாய்ப்
பறந்திடுமா?

புரவி புரவியென்று புகழ்ந்து நீ பேசுகிறாய்

அந்த மொழிகள் சொல்ல சோழர்மகன் அப்போது ஏது
சொல்வார்

உத்தமா தேசிமுன்னே நீ ஓட நல்ல சேவகனா?
கட்டுங் குதிரை முன்னே கடிவாளம் போடுவீரோ?
அந்தமொழிகள் சொல்ல பொன்னர் அப்போது ஏது
சொல்வார்

உன் குதிரை முன்னே நான் ஓடுகிறதானாக்கால்

உன்கட்டுக் குதிரை முன்னே நான் காலாலும் ஓடுவேனே
எனக்கு என்ன வெகுமதிகள் ஏது செய்வாயிப்போது
அந்த மொழிகள் சொல்ல சோழர் மகன் அப்போது ஏது
சொல்வான்

செய்யும் வெகுமதி தான் சொல்லுகிறேன் கேளுமினி
என்குதிரை பெற்றவிலை ஆயிரம்பொன் பூண்டபணி
ஆயிரம்பொன்

இரண்டாயிரம் பொன்பெற்ற புரவி நான்கொடுக்கத் தப்பாது
உத்தமா தேசி முன்னே நீர் ஓடாதே போனாக்கால்



இந்த இரண்டாயிரம் பொன்னும் நீர் கொடுக்க
வேணுமிப்போ

இதுவே சபதமாய் வேறே சபதம் இல்லையினி
அந்தமொழி சொல்ல பொன்னர் அப்போது ஏது சொல்வார்
நீர் சொன்ன சபதமது சொல் தப்பினால் நானும் விடேன்
இப்படி பொன்னர் சொல்ல ஏது சொல்வார் சோழர் மகன்

இந்தச் சபதம் தப்பினால் உன்னையினி நானும் விடேன்
இவர்கள் ரெண்டுபேரும் அப்போ இதுசபதம் சம்மதித்து
எதுமட்டும் ஓடுவதென்று சிறு சோழர் கேட்கையிலே
அந்தமொழி சொல்ல பொன்னர் அப்போது ஏதுசொல்வார்
வாருமையா ராஜாவே வார்த்தை சொல்ல நீர்கேளும்

போதாவூர் குளத்தடியில் கட்டமுது உண்டீரே
இருந்தமுது உண்ட இடத்தில் என்ன மரங்கள் கண்டுவந்தீர்?
நான் கட்டுச்சோறு உண்ட இடத்தில் கண்டதொரு மரந்தான்
வன்னிமரம் வாழைமரம் வழியிலே நான் கண்டு வந்தேன்
அந்த மொழி சொல்ல பொன்னர் அப்போது ஏதுசொல்வார்

நீயே முந்தினால் வன்னி மரத்தில் குங்குமப் பொட்டிட்டு
அங்கே இருப்போரை சாட்சிவைத்து நீர் திரும்பும்
நானே முந்தினால் வாழை மரத்தில் சந்தனப் பொட்டிட்டு
அங்கிருக்கும் பேர்களையும் சாட்சிவைத்து நான் வருவேன்
இருவரும் சம்மதித்து இனி ஓடுவோம் என்று சொல்லி

சோழர் குமாரன் சொல்லுகிறான் பொன்னருக்கு
அறுபதடி பின்னே நின்றுஓட அப்பனைகள் செய்தேனினி
அந்த மொழி சொல்ல பொன்னர் அப்போது சொல்கிறார்
அறுபதடி விட்டீரானால் என் அடப்பக் காரன் ஓடிடுவான்
முப்பதடி விட்டீரானால் என் மூளிநாய் வளர்க்கும்பயல்
ஓடிடுவான்

அந்த மொழிகள் சொல்ல பொன்னர் அப்போது
ஏதுசொல்வார்

அப்படி அடிவிட்டு ஓடச் சொன்னால் ஆருக்கும் ஏற்காது
உன் குதிரை முன்தாவி ஒரு காலும் பின்தாவி ஒருகாலும்
சரியாக நின்றிடுவோம் சமர்த்து மேல் ஓடிடுவோம்
முன்காலொருகாலும் பின்காலொருகாலும்
முன்தட்டு ஒருகையிலே குதிரை பின்தட்டு ஒரு கையிலே

சரியாக நின்றுமப்போ சோழரைத்தான் ஓடும் என்று
சொன்னார்

பட்டாணிச் சவுக்கெடுத்து சோழர்விட்டார் புரவியைத்தான்
காலாலே தட்டிவிட்டார் பொன்னர் ஆலாப்போலே பறந்து
ஆலாப்போலே பறந்து அதிதுருசாய் ஓடிவந்து
வாழை மரத்திலேதான் வகையான பொட்டுமிட்டு

அங்கிருக்கும் பேர்களைத்தான் அனைவரையும்
சாட்சிவைத்து

எதிராக வந்து நின்று சோழரைப்பார்த்து ஏதுசொல்வார்
பொன்னருமே

உன் உத்தமாதேசி வர இந்நேரம் சோலி என்ன
கட்டை தடுக்கியதோ கல்லணை சரிந்திட்டதோ
முட்டி தடுக்கியதோ உன் குதிரைக்கு முன்வாகை
அந்திடுச்சோ

இடறி விழுந்திட்டதோ உன் குதிரை இளமணலில்
பாய்ந்திட்டதோ

உன்குதிரை வருவதற்கே இன்னேரம் சோலி என்ன
அந்த மொழி சொல்ல ராஜகுமாரன் அப்போது ஏது
சொல்வார்

வாருமினி நல்ல பொன்னு உன் வார்த்தைக்கு நான் என்ன
சொல்வேன்?

மேகம் பறந்தாலும் வெகு தூரம் நான் பறப்பேன்

காகம் பறந்தாலும் கருதியே நான் பறப்பேன்
காகத்திலுங்கடுசு உன்னைக் கண்ணாலே காண்கிலையே



நீநின்றது கண்டேன் நான் உன் வார்த்தையது கேட்டேன்
நான்

அப்போது கண்டதல்லால் நீ போன அரவந்தெரியவில்லை
என்புரவி விலை ஆயிரம் பொன் பூண்டபணி ஆயிரம்பொன்
விளையாட்டுப் போலே என் குதிரை என்னாத்
தெய்வப்புரவி

ஏறின குதிரை விட்டு இறங்குகிற வேளையிலே

வாருமையா ராஜாவே உனக்கு வார்த்தை நான்
சொல்லுகிறேன்

நீங்கள் பட்டம் பொறுத்த துரை பாருலகம் ஆண்டவர்கள்
சிங்காதனம் பொறுத்த திருக்கொலுவு பெற்றவர்கள்
ஏறின குதிரை விட்டு இறங்குவது ஞாயமில்லை
நான் கொடுத்த குதிரையாகக் கூடவே வாருமினி

வாருமையா ராஜா என்று வரவழைத்து வாரபோது
வாள் வீரன் குமாரசங்கு வாரார் எதிராக
சோழர் குதிரை ஏறி வருகிறதை குமாரசங்கு தான்பார்த்து
அண்ணரைத்தான் பார்த்து சங்கர் அப்போது சொல்லுகிறார்
வெற்றிக்கொண்டார் யாருமிப்போ அண்ணா தோல்வியாய்
போனது யார்

என்று சங்கர் தான்கேட்க ஏதுசொல்வார் அண்ணருமே
வெற்றியோ சோழரது தோல்வியா நம்முடது
அண்ணருஞ் சொல்லையிலே சங்கர் அதிக சந்தோஷமாகி
சித்திரத்தை நீர் எழுதி அண்ணா தேரின்மேல் வைத்தாலும்
அந்த சித்திரத்தின் வாசகம் அண்ணா தெரியுமே பேர்பாதி

வென்றார் முகமுழிப்போ அண்ணா வேர்வை தெரியாதோ?
தோற்றார் முகமெனக்கு அண்ணா தோல்வி தெரியாதோ?
தோல்வியான பேர் அண்ணா தெய்வப் புரவியின் மேல்
வரலாமா

ஏறியவர் வாரதுக்கு இரு துணுக்காய் வீசலாமே
அந்த மொழி சங்கர் சொல்ல அண்ணர் அப்போது
ஏதுசொல்வார்

பட்டம் பொறுத்தவர்கள் சோழர் பாருலகம் ஆண்டவர்கள்
நீ வெட்டுகிறேனென்று சொல்லி வசனங்கள் சொல்லாதே
நம்முட புரவியின் மேல் சோழரை வைத்து நான்கூட்டி வந்தேன்

துஷ்டத்தனமான வார்த்தை சொல்லாதே தம்பியரே
ராஜ சிவசோழரைத்தான் நான் அழைத்துக் கூட்டி வந்தேன்

அரண்மனைக்கு வந்து இப்போ ஆசாரம் போயிருந்து
தங்கையரைத்தான் அழைத்தார் தார்வேந்தர் நல்லபொன்னு
அந்தமொழி கேட்டு தங்கை அண்ணர் பக்கம் வந்து நின்றாள்
தங்கையரைத்தான் பார்த்து தார்வேந்தர் ஏதுசொல்வார்
அம்மா ராஜ சிவ சோழருக்கு அமுது படைக்க வேணும்

அந்த மொழி கேட்டு தங்கை அழைத்தாளே தாதிகளை
உத்தமியாள் தானழைக்க ஓடிவந்தார் தாதியர்கள்
தாதியரைத்தான் பார்த்து தங்கையரும் ஏது சொல்வாள்
ஈர்க்கிச்சம்பா அரிசி இணை இணையாய் தீட்டியேதான்
ராஜ சிவ சோழருக்கு நன்றாய்ச் சமையுமென்றாள்

அந்தமொழிகேட்டு தாதியர்கள் அதிதுரிதாய் ஓடிவந்து
போசனங்கள் தானுமப்போ பொரிகறியும் தான்சமைத்து
பதினாறு வகைக்கறியும் பாங்காகத் தான்சமைத்து
பேடைமயில் பிள்ளையாண்டான் ராஜாவைக்கூட்டிவந்து
நல்லெண்ணெய் சீயக்காய் நன்றாய் நலுக்கமிட்டு

கொப்பரையில் நீரெடுத்து சோழருக்கு கோந்தை முழுக்காட்டி
பன்னீருச் சொம்பெடுத்து புகுநீருத் தான்சொரிந்து
முழுக்கித் தலையாத்தி சோழர் முற்றத்தில் வந்துநிற்க
பச்சைவெட்டு சந்தனமும் பாரிமெத்த குங்குமமும்
வெண்கலக்குளிகை ரொம்ப அதை மெத்திட்டுத் தான்குழைத்து

கூட்டிக் குழைத்து வெண்கலக்குளிகை ரொம்பத்தான் வழித்து
பொன் னுந்திரு மேனியிலே சோழர் போட்டுமே சந்தனத்தை



சாத்துகிறார் சந்தனத்தை தன்னுடைய திரேகமெல்லாம்
பூசியே சந்தனத்தை பொன்னுந் திருமேனியிலே
வகையாக ராஜாவும் வந்திருந்த அந்நேரம்
தலை வாழை யிலையெடுத்து தாதிமார் தான் போட்டு
கரகம் பிடித்துமப்போ தாதிமார் கைக்குநீர் வார்த்து

பிரம்புப் பெட்டிக் கூடையிலே போசனங்கள் கொண்டுவந்து
வகையுடனே சாதமிட்டு வாள் மயிலாள் தாதியர்கள்
குத்துப் பருப்புமிட்டு குடத்துடனே நெய் சொரிந்து
பதினாறுவகைக் கறிகள் பாங்காக முன்னேவைத்து
உத்தமியாள் நல்லதங்கை ஏது சொல்வாள் அந்நேரம்

பட்டிக்காடு குடியானவர் எங்களுக்கு பலகறியும் சிக்காது
உங்கள் கறியை நீர் நினைத்து உண்ணுமினிச் சாதமென்றாள்
அந்தமொழி கேட்டு ராஜன் அப்போது ஏது சொல்வான்
இருவருடன் பிறந்தவர்க்கு நான் மூவருடன் பிறப்பு
ஒக்கப் பிறந்தவர்க்கு அம்மா உபசரிப்புத்தானுமென்ன?

உண்ணுகிறேன் தாயே என்று உத்தமன்னர் சொன்னாரே
அமுது எடுத்துண்டு அவர் அப்போ எழுந்திருந்து
கரம்பிடித்து தாதிமார் கைக்கு நீர் வார்த்தபின்பு
வெற்றிலை விடாக்காயும் மெத்த வாரித்தான் கொடுத்து
சந்தோஷமாகவே தான் வந்தார் ராஜாவும்

ஆசாரம் வந்திருந்து அப்போது ஏதுசொல்வார்
வாருமையா நல்ல பொன்னு வெகுநேரமாகுதிப்போ
உறையூரு மட்டளவும் இனிவாங்களென்று சொல்லி
தம்பியரைத் தானழைத்து தார்வேந்தர் ஏது சொல்வார்
வாள்வீரா தம்பிசங்கு சோழர் நமை வரவழைக்க வந்தாரே

சோழர் வந்தழைக்கையிலே மறுசேதி சொல்லக்கூடுமா?
உறையூரு மட்டும்நான் இனிப்பயணம் போய்வாரேன்
அத்தைபிள்ளை மைத்துனரை அழைத்தாரே நல்லபொன்னு

அந்தமொழி கேட்டுப் பெருமாள் அதிதுரிதாய் ஓடிவந்து
பாதபணிகள் செய்து பாதாரம் தெண்டனிட்டு
என்னை அழைத்ததென்ன எனக்காளுவிட்டதென்ன?
அந்த மொழிகள் சொல்ல பொன்னர் அப்போது
ஏதுசொல்வார்
ராஜசிவ சோழர் நம்மை தானறிய வேணுமென்று

குமாரரைத் தானனுப்பிக் கூட்டிவரச் சொன்னாரே
அனுப்பி வைத்த குமாரர் கூடவே போய் அறிந்து கொண்டு
நான் வாரேன்
மைத்துனர்க்கு வார்த்தை சொல்லி வரவழைத்தார்
உத்தமியை
அந்த மொழி கேட்டு உத்தமியாள் அதிதுரிதாய் ஓடிவந்து
அண்ணருட பக்கத்திலே அப்போ வந்து நிற்கையிலே

தங்கையரைத்தான் பார்த்து தார்வேந்தர் ஏது சொல்வார்
அம்மா சிவசோழர் நம்மை அறியவே வேணுமென்று
தன்னுடைய குமாரரை விட்டு தான் கூட்டி வரச்சொன்ன
பின்பு
எண்ணம் புரியாமல் எதிர்ப்புமொழி சொன்னமானால்
கரிகாலச் சோழருக்கு கடுங்கோபபாகுமினி

அவருடகுமாரர் கூட நான் போய் அறிந்து வரவேணுமம்மா
அந்த மொழி கேட்டு உத்தமியாள் அப்போது ஏது
சொல்வாள்
சிவசோழரை யறிந்து அவர் சீமையைக் காவல் கொண்டு
சந்தோஷமாகவேதான் தான்வருவீர் அண்ணா நீர்
முத்தான வாய் திறந்து உத்தமியால் உத்தரவு செய்த பின்பு

## பொன்னர் சோழ தேசம் வருதல்

உறையூரு திசை நாடி உத்தமன்னன் வரும் போது
காகம் வலமாக கடுகி வழி தான் விடுது
கட்டிஇடம் சுட்டி இடம் காடான் இடமாச்சுதப்போ



இதுவெல்லாம் நற்சகுனமென்று மனதிலெண்ணி
தார்வேந்தர் வருகையிலே கருங்காகம் தானும் வலமாச்சு
அந்த நல்ல சகுனம் கண்டு அசையாமல் நின்றுமப்போ
வாரேனென்று தான் திரும்பி தங்கையர்க்கு வகையுடனே
ஏது சொல்வார்
அம்மா கட்டி இடம் சுட்டி இடம் காடான் இடமாச்சு

கொம்பேறுங்காகம் கொடியன் வலமாச்சு
நற்சகுனம் கண்டு நான் போகும் வேளையிலே
கருங்காகம் கூட கடுகிவலமாச்சுதென்று
அந்த சகுனம் சொல்ல உத்தமியாள் அப்போது ஏதுசொல்வாள்
வேத்தாளாய் போனவர்க்கு அண்ணா வெகுமதிகள்
செய்திடுவார்

கால் நடையாய்ப் போனவர்க்கு கனகதண்டிதான்
கொடுப்பார்
கருங்காகம் கூட கடுகி வலமாச்சுதென்று
விலங்கில்லா காவல் அண்ணா சற்று நேரம் வெயிற்காவல்
இருக்க வேணும்
அதற்குமலையாதே அண்ணா ஆலோசனை செய்யாதே
காவலென்றசொல் கேட்டாள் அண்ணா கடுகவே எழுந்திரு
நீ

நிலைமேல் சுருள் பிடித்து சின்ன அண்ணனுக்கு நடைமேல்
எழுதிவிடு
ஓலை கண்ட அக்கணமே அண்ணன் ஓடி வருவார்கள்
எண்ணம் கலங்காதீர் இனி நடந்து போகுமண்ணா
உத்தமியாள் தானுஞ்சொல்ல அண்ணர் உறையூர் திசை நாடி
குணமாக வார்த்தை சொல்லி ராஜகுமாரருடன் கூட வழி
நடந்தார்

உறையூருப் பட்டணத்தில் உற்ற மன்னர் வருகையிலே
ஆடல் பாடல் சங்கீதம் ராஜா கொலுவில் அன்புடன்
இருக்கையிலே

சிவசோழர் குமாரர் கூட்டிவந்து பொன்னரையும் முன்னே விட்டார்
அய்யா பராக்குயென்று அப்போது கைமுகைஞ்சார்
அவர்கூட கைமுகைஞ்சார் குணமான சோழருந்தான்
அப்போது களரியெல்லாம் அடங்கிவைத்து ராஜாவும்
பொன்னரையும் தான்பார்த்து புனிதமுடன் சொல்லுகிறார்

நீர் வாசல் பிரதானியிடம் வசனங்கள் சொன்னதற்கு
அதற்கு நான் சம்மதித்து அப்படியே யாகுதென்று
சந்தோஷமாக குமாரரைத் தானும் அனுப்பிவைத்தேன்
வந்துநீ கண்டபோதே வெகுசந்தோ ஷமாச்செனக்கு
உன்னை அழைத்ததுதான் என் உத்திரத்தைப் பார்த்தாயோ?

என் சீமைக்குக் காவல் வைக்க உன்னை அழைத்தேனிப்போது
என் சீமை மேற்கே மதுக்கரைக்கும் கிழக்கே தஞ்சாவூர் கோட்டை
வடக்கேவான் காவேரி தெற்கே மதுரை எல்லை
நாற்சமுக்கம் உன்காவல் நலமாக ஏற்றுக்கொள் நீ
அந்த மொழிகள் சொல்ல பொன்னர் அப்போது ஏதுசொல்வார்

வடசீமை விட்டால் அய்யாநான் வளப்பம் பண்ணிக்கொடுப்பேன்
தென்சீமை விட்டால் அய்யா செழிப்புப்பண்ணி நான்தருவேன்
கீழ் சீமை விட்டால் நாங்கள் கப்பங்கட்டி ஆண்டிடுவோம்
மேல் சீமை விட்டதனால் எங்களால் வெல்ல முடியாது
காகம்போல கூட்டம் கூடி அவர்கள் கருங்களவு செய்வார்கள்

அவசூறை கொள்ளையிட்டால் அவர்களை அடக்க முடியாது
மேனாட்டு வேடுதளம் வெகுதளங்கள் மெத்தவுண்டு
மேல் சீமைக்காவல் கொண்டு அவர்களை வெல்ல முடியாது



அந்த மொழிகள் சொல்லி சிவசோழர் அப்போது ஏது சொல்வார்
மூத்தகுமாரத்தியை திருக்கல்யாணம் முடித்து இப்போ நான் தருவேன்
உத்திரத்தில் கையெழுத்து ஒப்பம் போட்டு வைத்திருக்கும்
அந்தப்படிக்குத்தான் உனக்கு திருக்கல்யாணம் செய்து வைப்பேன்
அந்த மொழிகள் சொல்ல பொன்னர் அப்போது ஏது சொல்வார்

நீங்கள் சூரியகுல வங்கிசத்தார் நாங்கள் ஆரியகுல வங்கிசத்தார்
உங்கள் குலத்துக்கு எங்கள் குலம் ஏற்குமோதான்?
எங்கள் குலத்துக்கும் உங்கள் குலம் இசைந்துமே வராது
அந்த மொழிகள் சொல்ல சோழருக்கு அதிகோபமாகியேதான்
என் வார்த்தைக்கு எதிர் வார்த்தை சொல்ல இதற்கா அழைத்துவந்தேன்

சிறைச்சாலை கூடத்திலே பொன்னரைச் சிறைக்காவல் வையுமடா
அந்த மொழிகள் சொல்ல வெள்ளித்தடிக்காரன் ஐயா எழுந்திரென்று
காவல் என்ற சொல் கேட்டு பொன்னர் கடுகியே எழுந்திருந்து

## தம்பி சங்கருக்கு பொன்னர் ஓலை எழுதுதல்

நிலைமேல் சுருள் பிடித்து தம்பியர்க்கு நடைமேல் எழுதுகிறார்
தன்னாளாய் விட்டு சோழர் தன் கோட்டைக்கு வரவழைத்து
உபாயமாய் ஆளுவிட்டு சோழர் உட்கோட்டை வரவழைத்து
விலங்கில்லாக் காவல் நம்மை வெயில்காவல் வைத்தாரிப்போ
தாயாதி பழியாக தம்பிசங்கு தாமசங்கள் செய்யாமல்

இந்த ஓலைகண்ட அக்கணமே நீ ஒரு நொடியில் வரவேணும்
மாயச்சுருள் எழுதி தம்பியர்க்கு வரவிட்டார் உத்தரவு
அந்த மாயச்சுருள் ஓலை சங்கர் மடிமேல் விழுந்ததப்போ
அந்த மாயச்சுருள் எடுத்து சங்கர் வாசித்துப்பார்க்கையிலே
கண்கள் சிவந்துமேதான் சங்கருக்கு கடுங்கோபமாகியப்போ

அத்தைபிள்ளை மைத்துனரை அழைத்தாரே நல்லசங்கு
அந்தமொழி கேட்டு மைத்துனர் அதிதுரிதாய் ஓடிவந்து
என்னை அழைத்ததிப்போ எதற்காக மைத்துனரே
அந்தமொழி கேட்டு குமாரசங்கு அப்போது ஏது சொல்வார்
சிவசோழர் செய்த வகை சேதியைக்கேளுமினி

தன்னாளை விட்டு கோட்டைக்கு தனியாய் வரவழைத்து
உற்றாளாய் விட்டு அவரை ஊருக்கு வரவழைத்து
விலங்கில்லாக் காவல் வெயிற்காவல் வைத்துக்கொண்டார்
காவலென்று சொன்னதற்கு சோழன் கடைவாய்
கிழிக்கவேணும்
அவர் சீமையிலே ஆட்டைப் பிடித்தோமா அருங்களவு
செய்தோமா?

மாட்டைப் பிடித்தோமா மகா களவு செய்தோமா?
பூட்டை உடைத்தோமோ அவர் சீமையில் புரட்டுருட்டுச்
செய்தோமா?
விலங்கில்லாக் காவல் அண்ணரை வெயிற் காவல்
வைத்தார்கள்
உறையூருப் பட்டணத்தை அவசூறை கொள்ளையிட்டு
சோழர் மகுடந்தரித்த முடி என் வாளுக்கிரையிடுவேன்

அத்தைபிள்ளை மைத்துனர்க்கு அதுவார்த்தை
சொல்லியேதான்
வெற்றி மன்னன் பறைநகுலன் வீர சாம்புவனைத்
தானழைத்து
சுத்தாலைப்பட்டணம் தெருக்கள் தோறும் சுத்திவந்து



படைமுரசு முழக்குமடா படை மன்னர் கூட்டமிட
அந்த மொழிகள் சொல்ல வீரபாகு அதிதுரிதமாய் ஓடிவந்து
வெத்திகொம்பு கடிங்காலெடுத்து சாம்பான் விரசாக
ஓடிவந்து

சுத்தாலைப்பட்டணத்தில் தெருவீதி வந்து நின்று
அடித்தானே கடிங்காளை பிடித்தானே வெற்றிக்கொம்பு

படைமுரசு சத்தம் கேட்டு படைமன்னர் கூட்டமிட்டார்
அழகுப் பெருவீதியெல்லாம் அடர்ந்த படைகூடுதப்போ
சிங்கார வீதியெல்லாம் சினந்துமே கூடுதப்போ
மலுக்கர் துலுக்கர்களும் மாறு பாஷைக்காரர்களும்
படைக்குத் தலைவர்களும் பட்டாணி ராவுத்தரும்

காச்சு மூச்சரியாத கன்னடியர் ஒருகோடி
கீச்சு மூச்சரியாத கிண்கிணியர் ஒருகோடி
பேச்சு மூச்சரியாத பெயர்த் துலுக்கர் ஒரு கோடி
போட்டமண்டி வாங்காத பொந்திலியர் ஒரு கோடி
வைத்த மண்டி வாங்காத மாறுபாஷைக்காரர்களும்

வெள்ளித்தடிக்காரர் விருது மன்னர் கூடடமிட்டார்
ஆனைபடை சேனைதளம் அத்தனையும் கூட்டமிட்டு
கூட்டினார் குமாரதளம் வீரபாகு குமாரதளம் கூட்டமிட்டு
உத்தமன்னர் சிவசோழர் உறையூரு கொள்ளையிட
வரும்படையும் சேனையுடன் குமாரசங்கு
வருகின்றாரப்போது

படைவரும் வேகத்திலே புழுதி பறக்குதே மேகம் போல
இரவு பகலாகி அப்போ பகலிரவு ஆனதென்ன
சர்ப்பம் அணிந்ததுவோ சந்திரகிரகணமோ
எரிக்கும் பகவானை இந்திரனைச் சூழ்ந்ததிப்போ
என்ன அதிசயம் தானிது ஏதோ தெரியவில்லை

உறையூருப் பட்டணத்தில் உள்ளவர்கள் சொல்லுகிறார்
பஞ்சாங்க வேதியரைப் பட்டினத்தார் கேட்கையிலே

அந்தப் புரோகிதனார் அப்போது ஏதுசொல்வார்
பொறுமை பொறுத்த பொன்னாண்டரைக் காவல்வைத்தீர்
பொன்னாண்டார் தம்பி படையெடுக்க புழுதி
பறக்குதிப்போ
எரிக்கும் பகவானை இருள்வந்து சூழ்ந்ததிப்போ
பொன்னரைக் காவல்விட்டு போயவரைக் கூட்டிவந்து

அவர் மனத்தாங்கலில்லாமல் வணக்கமுடன்
செய்துகொண்டால்
உறையூருப் பட்டணங்கள் எப்படியும் தான்பிழைக்கும்
இல்லாதேபோனால் அவசூறை கொள்ளையாகும்
பண்டகசாலை பறந்த அரண்மனைக்கு
சுத்தாளை வாசலெல்லாம் சுத்தியே மூண்டுவிடும்

அந்தமொழிகள் சொல்ல பட்டணத்தில் அனைவோரும்
ஓடியேதான்
அடிவணங்கிப் பணிகள் செய்து இந்த அவதூறு
சொல்லையிலே
(ராஜாவும்) கேட்டு மனங்கலங்கி கிருபையுடன்
பொன்னரையும்
காவல் விட்டு கூட்டிவர கடுகியே சொல்லியேதான்
அவர் அப்பனைகள் செய்தபின்பு பொன்னரை அக்கணமே
கூட்டிவந்து

நல்லெண்ணெய் சீயக்காய் நன்றாய் நலுக்கமிட்டு
கொப்பரையில் நீரு வைத்து பொன்னரை கோந்தை
முழுக்காட்டி
திருக்கடம்பநாதருட சன்னதியில் திருவிளக்குப் பார்க்க
வைத்து
சிவசோழர் சமூகத்தில் தானழைத்துக் கூட்டி வந்து
ஊருக்கு மேற்கே உயர்ந்த மணல் மேட்டிலே தான்

வந்து இருக்கு தங்கே வான்படைகள் சேனை யெல்லாம்
நல்லெருது தம்பட்டம் நாகசுர பேரிகையும்



கொட்டுங்கிடு முடியும் கோவில் மேளதாளங்களும்
எக்காளமுதலாய கிடுமுடியும் தான் முழங்க
ஒட்டகை நகாரு இடிபோல் முழங்கிவர
பாளையம் வந்திறங்கையிலே பட்டணங்கள் அத்தனையும்
கண்டுமிரண்டுமப்போ பாளையத்தை கண்ணாலே
தான்பார்த்து

படையில்லை என்று நீர் பயந்தவன்போல் சொன்னீரே
கள்ளர் படையை உன்தம்பி கடிதழைத்து வந்தாரிப்போ
மறவர் படையை உன்தம்பி வரவழைத்து வந்தாரிப்போ
அந்த மொழிகள்சொல்ல பொன்னர் அப்போது ஏதுசொல்வார்
என் படையை அல்லாமல் இரவல்படை யாருமில்லை

என்படையும் உன்படையும் எதிர்பொருதவேணுமினி
படைமுரசு முழக்குமென்றார் சிவசோழர் படைமன்னர்
கூட்டமிட

ஒட்டகை மேல் நகாரு ஒரு பத்து தான்முழங்க
ஆனையின் மேல் பேரிகையும் அநேகம் இடிபோல்
முழங்குதப்போ
படைமுரசு சத்தம் கேட்டு சோழர் படைமன்னர்
கூட்டமிட்டார்

அந்த நல்ல வேளையிலே புள்ளி சிறுசோழர்
அதிதுரிதாயோடி வந்து
சிவசோழரைப்பார்த்து ஏதுசொல்வார் அந்நேரம்
நீர் சின்னத்துரைத்தனமா சிறு குழந்தை புத்தியோதான்
என்ன இருக்க ஐயா என்னபுத்தி நீர்நினைத்தீர்
கடலைக் கலக்குவானே பொன்னர் தம்பி கடல்நீரை
உறிஞ்சுவானே

அவரோட போர் செய்ய ஐயா யாராலும் முடியாது
அவர் இன்பம் குளிரவே பொன்னரை உபசரித்து
மனுக்கேட்டான்
நாடுதழைக்குமினி நல்ல துரைத்தனங்கள் தான் நிலைக்கும்

அந்த மொழி சொல்ல ராஜா அதிர்ந்து மனங்கலங்கி
படைமன்னர் கூடினதை நீங்கள் பாங்காகப்
போங்களென்றார்
அந்தமொழி சொல்லி ராஜா பொன்னர் பக்கம்
அணுகியேதான்
நான் கோபித்த கோபத்தை நீர் குற்றமாய்ப் பார்க்க
வேண்டாம்
காவல் வைத்தாரென்ற மனக் கலக்கத்தை விட்டுவிடு

என் சீமைக்கு காவல்வைக்க உன்னை அழைத்து வந்தேன்
காவல்கொள்ளுமென்று நான் காரியம் கேட்டதற்கு
படையில்லை என்று சொல்லி மெத்த பயந்தவர்போல்
சொன்னீரே
என் மாநாடு உன்னதுதான் நல்ல துரைத்தனமும்
உன்னதுதான்
கோபத்தை நீர் பொறுத்து நும் தம்பியரை குணமுடனே
வரவழையும்

அந்த மொழிகள் சொல்ல பொன்னர் அப்போ மனமிரங்கி
என்னுடைய தம்பியரை நீர் இனிப் பார்க்க வேணுமென்றால்
சிவசோழரையுந்தான் பாரான் திருக்கொலுவுந்தான் பாரான்
கோட்டைவாசல் சாத்தியே தலைவாசல் தான்திறந்தால்
தலைவாசல் வழியாக அவர் தனித்து வருகையிலே

சரணம் பணிந்தாரென்று தான் பொறுத்துக்கொள்ள
வேண்டும்
சீட்டுந்திருமுகமும் சிருஷ்டித்தார் மாயோலை
காவலும் விட்டுழிப்போ நமக்கு கனக ஆபரணம்
பூட்டியேதான்
உம்தம்பியரைத் தானழையும் என்று ராஜா உத்தரவு
செய்தாரிப்போ
ஒற்றைக் குதிரைவிட்டு தம்பிசங்கு ஒருவனும் வரவேணும்
சீட்டுத் திருமுகமும் அண்ணா சீக்கிரமாய் ஏவிவிட்டார்



அந்த ஓலைகண்ட நாழிகைக்கு குமராசங்கு ஒருவருமாய்த்
தான்வாரார்
தத்தும்குதிரை விட்டு சங்கர் தார்வேந்தர் வருகையிலே
கோட்டைத் தலைவாசல் காக்கும் சோணகிரி வில்லியர்கள்
கோட்டை வாசல் சாத்தி திட்டி வாசல் திறந்து விட்டார்
கோட்டை வாசல் திறங்களென்று கூப்பிட்டார் நல்ல சங்கு

அந்தமொழிகேட்டு தலைவாசல்காரர் அப்போது ஏது
சொல்வார்
கோட்டைவாசல் திறக்க எங்கள் ராஜா உத்தரவு இல்லை
இப்போ
திட்டிவாசல் வழியாக நீர் சென்றேறிப் போகுமையா
அந்த மொழிகள் சொல்ல சங்கருக்கு அதிகோபமாகியேதான்
சோழர் ஏழு சுத்து கோட்டையை உடைத்தார் பெருவிரலால்

அப்போது கிடுகிடென்று கோட்டை அதிர்ந்து
விழுந்ததப்போ
ஏறின குதிரைவிட்டு சங்கர் இறங்காமல் வாரபோது
அண்ணரைக் கண்டுமப்போ புரவியை அன்பாக விட்டிறங்கி
வாங்கோபம் சினத்துடனே வாராரே நல்லசங்கு
எதிராக வந்து (ராஜாவைப் பார்த்து) என்னசொல்வார்
நல்லசங்கு

உன்சீமையிலே ஆட்டைப் பிடித்தோமா அருங்களவு
செய்தோமா
மாட்டைப்பிடித்தோமா உன்சீமையிலேமகா களவு
செய்தோமா
பூட்டை உடைத்தோமா? உன் சீமையில் புதுமைகளைச்
செய்தோமா
தன்னாளாய் விட்டுக்கோட்டைக்கு தனியே வரவழைத்து
உபாயமாய் ஆளு விட்டு உன்னூர் வரவழைத்து
விலங்கில்லாக் காவல் வைத்ததற்கு வெட்டுவேன் நானும்
உன்னை

உன் சின்னஞ்சிறு தலையை சிரசை அறுப்பேனினி
உன் மணிமகுடந்தரித்த முடியை மந்திர
வாளுக்கிரையிடுவேன்
வெட்டுகிறேனென்று சொல்லி மெல்லியவாள் தும்புவிட
அந்தமொழி சொல்லையிலே அண்ணர் முன்னே வந்துநின்று
ராஜாவைப் பின்னே வைத்து பொன்னர் வந்து முன்னே
நின்று

தம்பியரைப் பார்த்து தார்வேந்தர் ஏதுசொல்வார்
பட்டம் பொறுத்தவரை சோழர் பாருலகையாண்டவரை
சிங்காதனம் பொறுத்த திருக்கொலுவு பெற்றவரை
வெட்டுகிறேன் என்றுசொல்லி தம்பிசங்கு
விசனங்கள்கொள்ளாதே*
அந்தமொழி கேட்டு தம்பிசங்கு அப்போ மனங்குளிர்ந்து

அண்ணா நீர் சொன்னதற்கு மனம் பொறுத்தேன் சோழர்
சொன்ன பிழையைவிட்டேன்
அந்த மொழிகள் சொல்ல ராஜா அப்போ மனங்குளிர்ந்து
ஆடை அலங்கரித்து பொன்னருக்கு ஆபரணம் பூட்டுகிறார்
கடதாரம் முடதாரம் பொன்னருக்கு கண்டசரம்
பூட்டியேதான்
மாணிக்கம் பதித்ததொரு பொன்னருக்கு மார்பில்
பதக்கமிட்டு
அள்ளிச் செலவழிக்க ஆயிரம் பொன் தான்கொடுத்து
பச்சைக்கல் பதித்த பல்லாக்கு முன்னே வைத்து
தங்கமுலாம் பூசியுள்ள தண்டிகையும் முன்னே வைத்து
தண்டிகைக்கு ஏற்ற தணிந்த சிவியாகும்
பல்லாக்குக்கேற்ற பதிந்த சிவியாகும்
இந்த வெகுமதிகள் உன்னுதென்று ராஜா உத்தரவு செய்த
பின்பு

* வசனங்கள் சொல்லாதே.



பொன்னாண்டார் தம்பியர்க்கு ராஜா வெகுமதிகள்
செய்வோமென்று
வாசல் பிரதானியை வரவழைத்துக் கேட்கையிலே
என்ன வெகுமதியும் ஏற்காது சங்கருக்கு
மத்தகத்து வெள்ளானை மதகிரியை அலங்கரித்து
அந்த மத வெள்ளானையை சங்கருக்கு வெகுமதிகள் செய்ய
வேணும்

அந்த மொழிகள் சொல்ல பாகனை அழைத்தாரே ராஜாவும்
யானையுட பாகனைத்தான் அழைத்துமே ஏது சொல்வார்
மத்தகத்து வெள்ளானை மதகரியை அலங்கரித்து
யானை அலங்கரித்துக் கொண்டுவர ஆக்கினைகள்
செய்தபின்பு
யானை அவிழ்த்து வந்து அலங்கரித்தார் அந்நேரம்

பக்கத்துக்கு மூன்றானை பந்தம் புனைத்துக் கொண்டு
கொண்டுவந்து அந்நேரம் குமாரசங்கு முன்னே விட்டார்
பந்தம் புனைந்ததெல்லாம் அதைப் பாங்காய் அவிழ்த்து விட்டு
இந்த நல்ல வெள்ளையானையை சங்கரே உந்தனுக்கு
தந்தேனிப்போ
அந்த மொழிகள் சொல்ல பொன்னர் தண்டிகை
மேலேறினாரே
வந்தார் குமாரசங்கு வெள்ளானை மேற்கொள்ளவேதான்
யானை பணிகள் செய்து அடைவாகப்பதுங்கிடுதே
மத்தகத்து வெள்ளானை சங்கர் மதகரிமேல் ஏறிக்கொண்டார்
அப்போது வாள்வீரர் குமாரசங்கு ஆனைமேல் ஏறியேதான்
அதட்டுகிறபோது அப்பேர்ப்பட்ட வெள்ளானை

அதிர்ந்து கிடுகிடுவென கோவென்று சத்தமிட்டே
வால் முறுக்கி லத்தியிட்டு வெள்ளானை வீறிட்டு வாரபோது
அண்ணரைப் பார்த்துசங்கர் அப்போது சொல்லுகிறார்
சிவசோழர் யானையைத்தானே வெகு பெரிதாய்ச் சொல்லிக்
கொண்டார்

இந்த வெள்ளானையைப் பார்த்தால் நம் எருமைக்கன்று
போலவேதான்
நம்மைச்சுமக்க மாட்டாமல் வீறிட்டுக் கத்திடுதே
நீர் தண்டிகையை முன் நடத்தும் அண்ணாவென்று
தானும்சொல்லி
வெள்ளானை மேலேறி சங்கர் விருது பரிவீச
பதினெட்டு வகை மேளம் வாத்தியங்கள் தான்முழங்க

உறையூருப்பட்டணத்தில் பவனி வருகையிலே
பட்டணத்து வீதியிலே மகா பெரிய கல்தூணு
கல்தூணைக்கண்டாரே கனகமுடி வேந்தனுமே
அந்தக்கல் தூணும் ஆறுபாக அகலம் அறுபதுபாக நீளமது
பட்டணத்து வீதியிலே பவனி வருகையிலே

அண்ணரைத்தான் பார்த்து சங்கர் அப்போது ஏதுசொல்வார்
இந்த நல்ல கல்தூணை நான் எடுத்து நிறுத்துகிறேன்
நீர் நகத்தாலே குழிகிள்ளும் நிறுத்துகிறேன் என்று சொல்லி
தம்பியரைத்தான் பார்த்துபொன்னர்தானுமவர்
ஏதுசொல்வார்
குழியுமது கிள்ளிவிட்டேன் எடுத்து நிறுத்துமென்றார்

மத்தகத்து வெள்ளானை மதகரியை விட்டிறங்கி
பலத்தால் அசைத்தெடுத்து பெருவிரலால் தாங்கிவைத்து
நகத்தாலே கூரு* கொண்டு நிறுத்தினார் கல்தூணை
அண்ணரைப்பார்த்து குமாரசங்கு அப்போது ஏதுசொல்வார்
நிறுத்தின கல்தூணை வெட்டி என்மந்திரவாள்
நுண்மையறிய வேணும்

கல்தூணை வெட்டியிப்போ என்மந்திரவாள் கடுமையறிய
வேணும்
அந்தமொழிகள் சொல்ல பொன்னர் அப்போது
ஏதுசொல்வார்

* கூறு



மண்ணாண்டார் மன்னர் முன்னே மதலை சிறுசோழர்
முன்னே
கண்ணெதிரே கண்காண நீர் கல்தூணை வெட்டாவிட்டால்
பொன்னாண்டார் தம்பி கல்தூணை வெட்டி பிழைபோனார்
என்று சொல்வார்
அந்த மொழி கேட்டு சங்கர் அப்போது ஏதுசொல்வார்
கண்ணெதிரே கண்காண சோழர் முன்னே கல்லூணை
வெட்டுகிறேன்

என்று வீசினார் கல்தூணை விழுகுது பார் முன்பாக
இப்பெரிய கல்லூணை எட்டுத்துண்டாய் நான்தரிப்பேன்
மெல்லியவாள் தும்புவிட்டு வீசினார் கல்தூணை
வீசின கல்தூணும் அது விழுந்துதே முன்பாக
இருபுறமும் தான் சுழட்டி அதை எட்டுத்துண்டாய்தான்
தரித்தார்

எட்டுத்துண்டாய் வீசியேதான் சங்கர் ஏதுசொல்வார்
அந்நேரம்
சோழர் திருக்கடம்பர் சன்னதிக்கு இரண்டுதிரு
நிலைக்கல்தானாச்சு
சோழர் பலகணிவாசலுக்கு இரண்டுபாவு பலகை ஆச்சு
சோழர் ஆயிரங்கால் மண்டபத்துக்கு இரண்டு
உத்திரமுமாகுமினி
அந்தமொழிகள் சொல்ல அப்போது ஏதுசொல்வார்

இப்பெரிய கல்தூணும் சங்கருக்கு இலவம் பஞ்சுதானாச்சு
அந்தமொழி சொல்லி ராஜா அப்போ ஏதுசொல்வார்
என்சீமை மேற்கே மதுக்கரைதான் கிழக்கேயும் தஞ்சாவூர்
வடக்கே தான் காவேரி தெற்கே மதுரை எல்லை
நாற் சமுக்கம் என் சீமை நல்லபொன்னு உன்காவல்

என்சீமை உன்காவல் துரைத்தனமும் உன்காவல்
சீமைக்காவல் உன்னுதென்று சிவசோழர் கையொப்பம்
போட்டாரப்போ

என்று சொல்லிப் பேசி இதமாக அப்போது
உறையூர் பட்டணத்து வீதியிலே அண்ணர் பவனி வருகையிலே
மல்லர் தெருவீதியிலே அண்ணர் வாரார் பவனிவலம்
மல்லர்களும் சித்தர்களும் வழியை மறித்துமப்போ
வழியை மறித்துமப்போ மல்லர்கள் வந்தெதிர்த்து நிற்கையிலே

அப்போது சின்னாண்டர் அவர்களுக்கு ஏதுசொல்வார்
ஆயிரம்பேர் மல்லர்களும் அனைவோரும் வாங்களென்றார்
உங்களுட சமர்த்தை நான் இனிப்பார்க்க வேணுமென்று
மத்தகத்து வெள்ளானை மதகரியை விட்டிறங்கி
அட்டமிட்டு பவனிகொண்டு அறுபதடி பின்குதித்து

வட்டமிட்டு விளையாடி வந்து புகுந்தார் மல்லர் பெருஞ்சேனையில்
தண்டை மிதிமிதித்து குமாரசங்கு தாண்டிக்குதிக்கையிலே
காலில் மிதிபட்டு மல்லர் களைப்போடு வீழ்வாரும்
முன்குதிக்க பின்குதிக்க மிதிபட்டு மூர்ச்சை போய் வீழ்வாரும்
ஐயா சரணமென்று அடிவணங்கி நிற்பாரும்

சுவாமி சரணமென்று சாஷ்டாங்கம் செய்வாரும்
அப்போ குமாரசங்கு அனைவரையும் போங்களென்றார்
மல்லர் தெருவீதியிலே வந்தார் நகரில் வலம்
உறையூருப்பட்டணத்தில் பவனி வலம் வந்துமப்போ
சிவசோழரைப் பார்த்து ஏதுசொல்வார் நல்லபொன்னு

என்பேரு சொல்லி என் சீமை இரு கையிலும் பொன்னேந்தி
பொன்னாண்டர் பேரு சொல்லி போகலாம் எந்தமட்டும்
உங்கள் சீமையிலே செப்பூசி போனாலும் பொன்னூசி நான் தருவேன்



எதுக்கும் மலைக்கவேண்டாம் யோசனைகள் செய்ய வேண்டாம்
அந்த மொழிசொல்ல சிவசோழர் அப்போது ஏதுசொல்வார்
என்சீமையிலே எந்தமனுக்கேட்டாலும் அந்தமனு உன்னுதுதான்
நாடுமே உன்னுதான் நல்ல துரைத்தனமும் உன்னுதான்
நீர் இருக்கிறது உறையூரு உனக்குள்ளே நான்குடியிருப்பு

நான் சீமைபதி ஆள்கிறது துரைத்தனமும் உன்னுதான்
கட்டித் தழுவியேதான் பொன்னரைக்கையெடுத்து கொலு முகைந்து
கூடக்கொலுமுகைந்து சோழருக்கு குணமுடனே வார்த்தை சொல்லி
சிங்காதனத்திலே அண்ணர் திருக்கொலுவு வீற்றிருக்க
இன்னமொரு சேதிசொல்வேன் இதமாக நீர் கேளும்

இன்பமுடன்தான் கேட்டுத் தெம்பெனக்கு சொல்லிவிடும்
தலையூருக்காளியவன் தான் வளர்க்கும் பன்றியது
மேநாட்டுக்காளியவன் மேன்மையாய் வளர்த்தபன்றி
கோனாட்டுக்கேகி உறையூரு கொட்டமிட்டு சேதிகளை
திட்டமது சொல்வேன் திடமாக நீர் கேளும்

சங்கு வெள்ளைக் கொம்பன் வெகுசவுரிய முள்ளகுட்டி
சிங்கமும் நாலுகால் சித்திரப்பூ வாலுவெள்ளை
கண்டதில்லை இது வரைக்கும் பன்றியுட கட்டழகு வீரியமும்
தெண்டனிட்டு அக்காண்டி தேவியருள் பெற்றுமிங்கே
மேவியேதானும் வந்து நந்தவனமெல்லாம் மிகஅழித்து

கொம்பால் உழுது மிருகம் வெம்பாலொழுகத்தின்று
கொக்கரித்துப் பன்றி குலாவி எழுந்திரித்து
மீன் பூக்க நீர் குடித்து வெய்யவன் உதிக்குமுன்னே
செய்யுமது கடந்த வீரமலை தேன்பூத்த காட்டினிலே
செண்பகப்பூ மெத்தையின்மேல் சீருடனே கண்வளரும்

நந்தவனங்கதலி கன்னல் நலமான உய்யக்கொண்டான்
நாட்டிலுள்ள செந்நெல் எல்லாம் நலமாயழித்துவிட்டு
தோட்டங்கள் தோறும் பன்றி துளைத்துப்பிடுங்கியது
இந்தப்படி செய்கிறதைக்கண்டு இதமான நாட்டார்கள்
வம்பு செய்த பேரைப்பன்றி வாரியே கோபங்கொண்டு

வாரிவளைத்துடலைப்பூரி வதைக்குமது
கொம்பபெனழுந்திருந்தால் வீரமலைக்குன்று நடுங்கிவிடும்
அப்படியாக்கொத்த ஆனதொரு பன்றியினால்
உழவு நடவு மில்லை உபத்திரவங்கள் மெத்தவுண்டு
களவுகொண்டு போறபன்றி ஒருவர் கட்டுக்கடங்காது

கொட்டமிட்டு வருகிற கோலவாணப்பன்றி வெல்ல
எங்களால் முடியாது நீங்கள் இச்சணமே பன்றியைத்தான்
குத்தியே தந்தாலே குலவேந்த ருங்களையும்
மெச்சிக்கொள்வோமென்று சொல்லி ராஜன் மேன்மையாய்த்
தானுரைத்தார்
உற்ற பொன்னர் சங்கரையும் ராஜன் மெத்த தழுவிக்கொண்டு

அந்தமொழிகேட்டு பொன்னர் அப்போது ஏதுசொல்வார்
அதற்கிப்போ வேளையில்லை ஆனாலும் உங்களுக்கு
முன்வந்து நாளையிலே பன்றியை முடிவு செய்து தாரோ
மென்று
ராஜாவுட பாக்கிலை வெகுமதியும் பாங்காகத்தான் வாங்கி
ஊர்போய் வாரோமென்று ராஜாவுட உத்தரவு
பெற்றுக்கொண்டு

தன்னுடைய பாளையத்தை பார்க்கத்தான்
வாரார்நல்லபொன்னு
அத்தை பிள்ளை மூவர்களும் அடிவணங்கித் தெண்டனிட்டு
ஆனைபடை சேனையெல்லாம் அதிரக்கொலு முகைந்தார்
கூடக்கொலு முகைந்தார் பொன்னர் கொற்ற முடிவேந்தரசர்
தந்தப்பல்லக்கேறி பொன்னர் தண்டிகையும் முன்னாக



வெள்ளானை பின்னாக சங்கர் விரசாகத்தான் வாரார்
நெல்லிவளநாடு நெற்சூழ்ந்த கோனாடு
வளநாடு திசைநாடி வருகுமந்த நாழிகைக்கு
ஆனைபடை சேனைதளம் அணி அணியாய் முன்னடக்க
குதிரைபடை சேனைதளம் குமிகுமியாய் முன்னடக்க

அனுமந்தபால்விருது அடர்ந்து பரிவீசி வர
சூரியபகவான் விருது சுற்றி நெருங்கிவர
வசவசங்க டலால் விருது வளைந்து பரிவீசிவர
கட்டியங்கள் கூறி கவி வாணர் முன்படிக்க
வெள்ளித் தடிக்காரர் விருது மன்னர் முன்னடக்க

போட்டமண்டி வாங்காத பொந்திலியர் சூழ்ந்துவர
வெண்சாமரை வீச விருது மன்னர் சூழ்ந்து வர
வளநாடு பட்டணத்து வடபுறத்து வீதியிலே
அரண்மனைக்குப் போகாமல் ஆனபொன்னர் சங்கருமே
தண்டிகையுமுன்னாக சங்கர் வெள்ளானை பின்னாக
அந்தபடியாக அண்ணர் இயல்பாய் வருகையிலே

## பொன்னர் சங்கர் திருமணம்

மணியங்குறிச்சி மலைக்கொழுந்தார் வீட்டுக்கு
தாய்மாமன் வீட்டுக்கு பொன்னர் தயவுடனே வாரபோது
தாய்மாமன் பெண்கள் தயவாக அப்போது
சித்தாடை கொய்துடுத்தி சின்ன முச்சி கொண்டேதான்
மண்சோறு மரக்கறிகள் பெண்கள் ஆக்கி விளையாடையிலே

பெண்ணழகைக் கண்டாரே பிரியமுடன் பொன்னர் சங்கர்
தாய்மாமன் வீட்டுக்குத்தயவுடனே மன்னர்களும்
மலைக்கொழுந்தார் பிள்ளை மனையில் மன்னவர்கள்
போயிறங்கி
வந்த உறவுமுறையை மாமன் வாருமென்று தான் கேட்டு
வந்தவர்களெல்லாம் வகையாய் இருங்க ளென்று

என்ன விபரம் வந்ததுதான் இயல்பாகச் சொல்லுமென்றார்
அந்த மொழி கேட்டுப்பொன்னர் அதுவார்த்தை
ஏதுசொல்வார்

கல்யாணஞ் செய்ய கனமுடனே இப்போது
பெண் கேட்க வந்தோம் பிரியமுடன் உம்மிடத்தில்
நல்லதென்று சொல்லி நலமாய் அவர்களுந்தான்

பெண்மாமன் தன்னை பிரியமுடன் தானழைக்க
மாமனும் வந்து மாளிகையில் தானிருந்து
பட்டுப்பாய் போட்டு பாங்காய் இருங்களென்று
சாஸ்திரங்கள் பார்க்க தயவாக அப்போது
கங்கணப்பொருத்தம் கனப் பொருத்தம் பார்க்கவே தான்

பஞ்சாங்க வேதியரைப் பார்ப்பனரைத் தானழைத்து
சாஸ்திரங்கள் பாருமென்று தயவாகச் சொன்னாரே
அந்த மொழி கேட்டு ஐயர் அன்பாகத்தானுமப்போது
புஸ்தகத்தை நூல் வாங்கி பொருத்தமும் பார்த்தாரே
பொன்னருக்கு முத்தாயி பொருத்தம் இருக்குதென்று

பதினொரு பொருத்தம் (பெரியண்ணருக்கு) பாங்காய்
இருக்குதென்று
சங்கருக்குப்பவளாயி சரி பொருத்தம் என்று சொல்லி
ஒன்பது பொருத்தம் சின்னண்ணருக்கு ஒரு பொருத்தம்
நல்லதென்று
கங்கணப் பொருத்தம் ஐயர் கனப்பொருத்தம் நல்லதென்று
அந்த மொழிகள் சொல்ல அண்ணர் இருவரும் அப்போ
மனங்குளிர்ந்து

பட்டுப்பாய் மேலிருந்து அண்ணர் இருவரும் பரிசமேதான்
பொருத

தாம்பாளந்தானெடுத்து தயவுடனே முன்னே வைத்து
தேங்காய் பழமும் திறமாகக்கூட வைத்து
கிழங்கு மஞ்சள்தானும் கிருபையுடன் முன்னே வைத்து
புஷ்பங்கள் தன்னை புகழுடனே மேலே வைத்து



சந்தனமும் குங்குமமும் தயவுடனே முன்னே வைத்து
தாய்மாமன் கையில் தயவுடனே தானெடுத்து
கொடுத்தார்களப்போது குணமான மன்னருந்தான்
தாய்மாமன் வாங்கி தயவுடனே அப்போது
பெண்ணை வரவழைத்து பிரியமுடன் கூட்டி வந்து

பட்டுப்பாய் மேலே பெண்களைப் பாங்காகத் தானிறுத்தி
மாமனுந்தானுமப்போ பெண்கள் மடியிலே தானமர்த்தி
பரிசம் பொருதி பாங்குடனே எல்லோரும்
வெற்றிலைப்பாக்கு உறவின்முறைக்கு விதமாய்ப்பரிமாறி
வந்த உறவின்முறையார் வகையாக எல்லாரும்

நல்ல நாள் பார்த்து நலமாய் முகூர்த்தமிட
பங்குனி மாதம் பதினைந்தாம் தேதியிலே
வெள்ளிக்கிழமை விஜயதசமியிலே
நல்லமுகூர்த்தம் நலமாக வைத்தார்கள்
கல்யாணமுகூர்த்தம் கனமுகூர்த்தம் வைத்தார்கள்

போய்வாரோ மென்று சொல்லி புண்ணியர் இருவரும்
தண்டிகையின் மேலேறி பொன்னர் தயவாக முன்னடந்து
வெள்ளாளை மேலேறி சங்கர் விதமாகப் பின்னடந்து
ஆனை படைசேனை அணி அணியாய்த் தானடக்க
அரண்மனையை நோக்கி அண்ணர் அன்பாய் வருகையிலே

வீதிக்குவீதி விதமாகத் தோரணங்கள்
கண்ணாடி தூக்கம் கட்டி அலங்கரித்து
வீதிக்கு வீதி விதமாக ஆலாத்தி
தங்கத்தால் ஆலாத்தி அரண்மனை தாதியர்கள் ஏந்தி நிற்க
முத்தாலே ஆலாத்தி உத்தமியாள் முன்னாக சுத்திடவே

சிங்காதனத்திலே அண்ணர் திருக்கொலுவு வீற்றிருந்தார்
தாழ்ந்த கொலுவிலேதான் குமாரசங்கு தானும்
கொலுவிருந்தார்
ஆனைபடை சேனைதளம் அணி அணியாய் வந்து நின்று

சுவாமி பராக்கென்று சரணம் பணிகையிலே
கூடக்கொலு முகைந்தார் கொற்ற முடிவேந்தரசன்
சிங்காதனத்தின் மேல் சீராய்க் கொலுவிருந்தார்
தங்கையரைத் தானழைத்து பொன்னர் தயவுடனே ஏது சொல்வார்

வாருமினித் தங்கையரே வார்த்தை சொல்லக் கேளுமம்மா

கல்யாணம் செய்யக் கடுகியே இப்போது
பங்குனிமாதம் பதினைந்தாம் தேதியிலே
வெள்ளிக் கிழமையிலே விஜய தசமியிலே
நல்லநாள் பார்த்து நாங்கள் முகூர்த்தமிட்டு வந்தோம்
கல்யாணமுகூர்த்தம் கனமுகூர்த்தமிட்டு வந்தோம்

அந்த மொழிகள் சொல்ல அழைத்தோமே உத்தமியே
அப்போது உத்தமியும் அதுவார்த்தை என்ன சொல்வாள்
அந்த நல்ல முகூர்த்தம் அடைவாக எந்தனுக்கு
சம்மதந்தானென்று சொல்லி தயவுடனே வார்த்தை சொல்ல
அந்தமொழி கேட்டு அண்ணர் அழைத்தாரே மைத்துனரை

மைத்துனரைத்தான் அழைத்து வகையாக இப்போது
வாருங்கள் மைத்துனரே வகையாக இப்போது
வீரபாகு சாம்புவனை விதமாக நீர் அழைத்து
சுத்தாளைப் பட்டணம் சூழ்ந்த நெல்லி வள நாட்டில்
கல்யாணமென்று சொல்லி கனமுரசு அடிக்கவேதான்

தவில்முரசு தானடிக்கத் தான் சொல்லு மைத்துனரே
அந்த மொழி சொல்ல அத்தை பிள்ளை அழைத்தாரே சாம்புவனை

அந்தநல்ல வேளையிலே வீரபாகு அப்போது ஓடி வந்து
அட்டம் பணிகள் செய்து அடி வணங்கித் தெண்டனிட்டு
என்னை அழைத்ததென்ன சுவாமி எந்தனுக்கு புத்தி என்ன
அந்த மொழி கேட்க எதிரில்லா பெருமாள் அப்போது ஏது சொல்வார்



வாருமடா வீரமலை நான் வார்த்தை சொல்லக் கேளுமடா
உங்கள் ஆண்டவரிருவருக்கும் உண்மையாயிப்போ தான்
கல்யாண முகூர்த்தம் கனமுகூர்த்தம் ஆனதினால்
சுத்தாளைப் பட்டணம் சூழ்ந்த நெல்லி வளநாடு
நெல்லி வளநாட்டில் நெற் சூழ்ந்த கோனாட்டில்

கல்யாணமென்று சொல்லி கடுகியே இப்போது
அடியுமடா கடிங்காளை* பிடியுமடா வெற்றிக் கொம்பை
அந்த மொழி கேட்டு சாம்பவன் அதிதுருசாய் ஓடிவந்து
கடிங்காளை தானெடுத்து கடுகியே ஓடிவந்து
அடித்தான் தவில் முரசு பிடித்தானே வெற்றிக் கொம்பு

வெற்றிக் கொம்பு சத்தம் கேட்டு விதமாக எல்லவரும்
பட்டணத்துச் சனங்களெல்லாம் பாங்காகத்தான் கேட்டு
இருக்குமந்த வேளையிலே இயல்பாக அப்போது
நாட்டுக்கு நாடு நலமாகப்பாக்கு வைத்தார்
ஊருக்கு ஊரு உடனே தான் பாக்கு வைத்தார்

வீட்டுக்கு வீடு விதமாகப் பாக்கு வைத்து
வந்து நிறைந்தார்கள் மகா கோடி சனங்களெல்லாம்
எல்லவரும் வந்து இருந்தார்கள் அரண்மனையில்
கமுகு பிடித்துமப்போ காதவழி பந்தலிட்டு
மூங்கில் பிளந்து முக்காதம் பந்தலிட்டு

வன்னிமரம் பிளந்து வகையாகப் பந்தலிட்டு
தென்னைமரம் பிளந்து தெருவெல்லாம் பந்தலிட்டு
அரண்மனைக்குள்ளே அன்பாய் மணவறையும்
சந்தன மரம் பிளந்து சதுரப்படகால் நிறுத்தி
குங்கும மரம் பிளந்து கொடுங்கைவளை பரப்பி

பவளக்கொடி அறுத்து பரப்புவளை தான் போட்டு
நீங்கா வளை பரப்பி நிற்கவே பந்தலிட்டு

* கனிங்கோல்

வண்ணார்கள் மாற்று வகையுடனே தானுங்கட்டி
கண்ணாடி தூக்கம் கனமாகக் கட்டி வைத்தார்
நாலுதலை வாசலுக்கும் நலமாக வாழை கட்டி
தூணுக்குத் தூணு தூண்டா விளக்கெரிய
குத்துவிளக்கு குலவிளக்கு நின்றெரிய

பக்க விளக்குபகல் விளக்கு தானெரிய
நில விளக்கு அருள் விளக்கு நிலைவிளக்கு நின்றெரிய
மாணிக்க விளக்கெரிய மன்னவர்கள் வந்து நிற்க
வீதிக்கு வீதி விதமான தோரணங்கள்
மாந்துளிர்த் தோரணங்கள் வாசலெங்கும் கட்டினார்கள்

மணவறை சிங்காரம் மன்னவர்கள் செய்தார்கள்
அப்போது பொன்னாண்டர் அழைத்தாரே மைத்துனரை
மைத்துனரைத் தானழைத்து மன்னவரும் ஏது சொல்வார்
நல்ல முகூர்த்த வேளை நலமாக நீர் தானும்
பல்லாக்குப் போகிகளை பாங்காக நீர் கூட்டி

நாதசுரமேளம் நலமாக நீர் அமைத்து
தவில் முரசு தன்னுடனே தயவாக நீரும் போய்
பெண்ணழைத்து வாருமென்று புண்ணியனும்
தானுஞ்சொல்ல
அப்போது நல்லதென்று அத்தை பிள்ளை அத்தாவும்
செய்ய பெருமாளும் சிலைக்கேற்ற வன்னியரும்

மலைக்கொழுந்தா பிள்ளை வீட்டுக்கு மன்னவர்கள்
அப்போது
பல்லாக்குத் தன்னுடனே பாங்காய் அவர்களுந்தான்
கோவில் மேளதாளத்துடன் குணமுடனே தான்போய்
இறங்கினாரப்போது இயல்பாக எல்லவரும்
வந்த உறவின் முறையை மலைக்கொழுந்தார்
வாருமென்றுதான் கேட்டு

இருங்களென்று சொல்லி இயல்பாக அப்போது
வெற்றிலைபாக்கு உறவின் முறைக்கு விதமாய்ப் பரிமாறி



சாப்பாடு செய்து தயவுடனே எல்லோரும்
பெண்கள்தமை எடுத்து பல்லக்குமேல் பிரியமுடன்
மாமன்வைத்து
பல்லக்கு போகிகளும் பாங்குடனேதான் தூக்கி
கொட்டும் கிடுமுடியும் கோவில் மேளந்தான் முழங்க
நாதசுரமூத நாட்டியங்களாடிவர

பெண்ணை அழைத்து வந்தார் பெருமையாய் மன்னவர்கள்
அரண்மனைக்கு வந்து அன்பாகப் பெண்ணை வைத்து
வேதப்பிராமணர்கள் வேதங்கள் ஓதி நிற்க
மந்திரவேதங்கள் மாதவர்கள் ஓதி நிற்க
இந்திரர் வானவர்கள் எங்கும் நிறைந்து நிற்க

அண்ணர் இருவரையும் அன்புடனே தானழைத்து
சம்பங்கி எண்ணெய் கொண்டு தலைமுழுகி மயிராத்தி
கோதி மயிரை குளிரச்சிணுக்கெடுத்து
திருமுடி நெற்றிக்கு திருநீற்றுக் காப்புமிட்டு
சந்தனப்பொட்டு சதிருடனே தானும்வைத்து

சாந்து புனுகு சவ்வாது தானணிந்து
பேழைதனை யெடுத்து பூட்டை மிகத்திறந்து
பூட்டினார் ஆபரணம் தங்கள்
பொன்னுந்திருமேனியெல்லாம்
பட்டுக்கரை சோமன் பாங்காகத் தானெடுத்து
மணவறை வேஷ்டி மன்னவர்கள் தானுங்கட்டி

மல்லிகைப்பூ ஆரம் மாமனுந்தான் போட்டு
மணவறையைச்சுத்தி மைத்துனர் மன்னவரைக்கூட்டி வந்து
பட்டுப்பாய் போட்டு பாங்காகத் தானிருந்து
பஞ்சாங்கப் பிராமணர்கள் பாங்காக முன்னிருந்து
தலைவாழை இலையைத்தயவுடனே தான் போட்டு

பச்சரிசி வைத்து பாங்குடனே அப்போது
வெற்றிலை பாக்கு விதமுடனே முன்னே வைத்து
தேங்காய் பழமும் திட்டமுடன் முன்னே வைத்து

சாம்பிராணித்தூபம் தயவுடனே தான் கொடுத்து
நவதானியங்கள் நன்றாகக் கொண்டுவந்து
நல்ல மஞ்சள்துகிலில் நலமாகத்தான் முடித்து
முகூர்த்தக்கால் தன்னை முன்னாகக் கொண்டுவந்து
ஒன்பது பேர் பெண்கள் உறுதியாய்த்தான் பிடித்து

மந்திர வேதம் மறையவர்கள் தான் ஓத
மாவிலை நவதானியமும் மறையோனுங்கட்டியேதான்
முகூர்த்தக்கால் தானும் மணவறையில் முன்னாகத்தானிருத்தி
அரசுடனே பேய்க்கரும்பு அடைவுடனே தானுங்கட்டி
ஆனை அரசாணி அன்பாக முன்னே வைத்து

சாலுங்கரகமும் சம்பிரமுடன் முன்னே வைத்து
முன்னூறு பெண்கள் முகூர்த்தமிட்டார் முளைப்பாரி
ஐந்நூறு பெண்கள் அள்ளியிட்டார் முளைப்பாரி
கங்கணமெடுத்து இருவருக்கும் கையிலே தானுங்கட்டி
அம்மி வலமாக அரசாணி முன்பாக

பிரம்பு வலமாக பேய்க்கரும்பு முன்பாக
ஐந்து பேர் பெண்கள் அடைவுடனே தான்போய்
மணப்பொங்கல் வைத்தார்கள் மாதர்கள் கொண்டு வந்து
மணப்பொங்கல் வைத்து வகையாகத்தான் படைத்து
விக்னேஸ்வரரை விநாயகரைத்தான் பணிந்து

மணவறையைச் சுத்தி அத்தைமக்கள்
மன்னவரைக்கூட்டிவந்து
தண்டிகையின் மேலே அண்ணர் தயவாகத்தானிருந்து
வெள்ளானைமேலே சங்கர் விருதுடனே தானிருந்து
கொட்டுங்கிடுமுடியும் கோவில் மேளதாளமுடன்
ஆனைமேல் பேரிகை அதிர்ந்து முழங்கிவர

ஒட்டகை மேல் நகாரு ஒருகோடிதான் முழங்க
நல்லெழுத்து தம்பட்டம் ராய கெடி முழங்க



குதிரைமேல் நகாரு கூடவேதான் முழங்க
புல்லாங்குழலூத பேரிகையும்தான் முழங்க
கட்டியங்கள் கூறிக் கவிவாணர் சூழ்ந்து வர
வெண்சாமரை வீசி விருது மன்னர் சூழ்ந்து வர
வெள்ளித்தடிக்காரர் விருதுமன்னர் சூழ்ந்து வர

பட்டுக்குடைவிருது பாங்காய்ப் பிடித்து வர
நீலக்குடை விருது நெருக்கியே தான் பிடிக்க
எக்காளம் தானூதி இடிபோல் முழங்கி வர
பதினெட்டு வகை மேளம் பாக்கியமும் முன்னடக்க
தண்டிகை முன்னாக வெள்ளானை பின்னாக

விக்னேஸ்வரரை விநாயகரைத்தான் தொழுது
வலமாக சுத்தியேதான் இருவரும் வாரார் அரண்மனைக்கு
ஆனையேறி மாலைசூடி அலங்காரமாய் வரும்போது
தண்டிகையை விட்டுப்பொன்னர் தயவாகத்தானிறங்கி
வெள்ளானை விட்டு சங்கர் விதமாகத்தானிறங்கி

வண்ணார்கள் மாத்தின்மேல் வந்தார் இருவருந்தான்
பட்டெடுத்து அத்தைமகன் பாங்காய் திரைபோட்டு
பட்டுத்திரைக்குள்ளாக அண்ணர் பாங்காகத்தானிருக்க
அப்போது உத்தமியாள் அண்ணன்மார்தேவிதனை
கூட்டியேதானும் தந்து குணமாக அப்போது

சம்பங்கி எண்ணெய்கொண்டு பெண்களுக்கு தலையை
முழுக்காட்டி
குலுக்கிச் சிணுக்கறுத்து கோதி மயிர் முடிந்து
கோதி மயிர் முடிந்து பெண்களுக்கு கோந்தையிலே
பூச்சூட்டி
நெற்றிக்கு நீறுமிட்டு நிறக்கவே பொட்டு வைத்து
பட்டுடுத்தி பெண்களுக்கு பணிகளைப்பூட்டியே தான்

மல்லிகைப்பூ ஆரம் பெண்களுக்கு மாமனுந்தான் போட்டு
திண்ணை வலமாக உத்தமியாள் சீக்கிரமாய்க் கூட்டிவந்து

பட்டுப்பாய் மேலே பாங்காகத் தானிறுத்தி
கங்கணம்தானெடுத்து ஐயர் கையிலேதான் கொடுக்க
வேதங்கள் தானோதி விதமாய் மறையோனும்
கன்னியர்கள் கையிலேதான் ஐயர் கங்கணமும் கட்டியேதான்
உத்தமியாள் நல்ல தங்கை உண்மையுடன் பெண்கூட்டி

பட்டுத்திரை மறைவில் பாங்காகத்தானிருத்தி
பட்டுத்திரைக்குள்ளிருந்து மன்னரிருவருக்கும்
பாங்காகப்பால்வார்த்து
பால்வார்த்து கால்கழுவி அண்ணருக்கு பட்டால்
ஈரம்துவட்டி
மிஞ்சி தரித்தார் அண்ணருக்கு மெல்லியர்கள் அப்போது
குலை வாழைப்பழம் பிதுக்கி மாமன் மகள் கூசாமலே
எறிந்தார்

அத்தை மக்கள் தானும் அன்புடனே அப்போது
பழ மும் மேல் படாமல் பட்டாலே தாங்கினார்கள்
மாப்பிள்ளையைக்கூட்டி மணவறையைச் சுத்தி வந்து
பட்டுப்பாய் மேலே பாங்காயிருக்கவைத்து
உத்தமாபத்தினி ஒரு சொல்லு வாசகத்தி

அண்ணன்மார் தேவி தன்னை பத்தினி அன்புடனே
கூட்டிவந்து
மணவறையில் தானும் வகையாய் இருக்க வைத்தார்
கண்ணாலே கண்டால் பெண்களை கால்பலம்
குறையுமென்று
நடுவேதிரை போடுமென்றார் நன்றாக அப்போது
நடுவேதிரை போட்டு நன்றாக வைத்தார்கள்

வலமாக பெண்ணை வைத்து வகையாக அப்போது
மந்திரங்கள் தான் ஓதி மாமறையோர் அப்போது
கப்பிவகை கொண்டு வந்து துரிதாக முன்னே வைத்து
ஓமம் வளர்த்து ஓம சாந்தி செய்தார்கள்
தாம்பாளம் தான் வாங்கி ஐயர் தயவாக முன்னே வைத்து



வெற்றிலைப் பாக்கு விதமாக மேலே வைத்து
தேங்காய் பழமும் திறமாய் உடைத்து வைத்து
புஷ்பங்கள் தானெடுத்து புகழுடனே மேலே வைத்து
மங்கிலியந்தானெடுத்து உத்தமி மறையவனார் கையில்
கொடுக்க
வேதியனார் தானும் மங்கிலியம் வெத்திலைப் பாக்கு
மேலே வைத்து

தேவர்கள் தானும் செயமுடனே தான் வாழ்த்த
சந்திர சூரியர்கள் தயவுடனே தான் வாழ்த்த
நாற்பத்தெண்ணாயிரம் கோடி ரிஷிகளும் தான் வாழ்த்த
தொண்ணூறு பிராமணர்கள் தொட்டு நமஸ்கரித்து
ஐநூறு பிராமணர்கள் அப்போ நமஸ்கரித்து

நல்லோர் பெரியோர்கள் நலமாய் நமஸ்கரித்தார்
மன்னவர்கள் தானும் மகிழ்ந்து நமஸ்கரித்தார்
மங்கிலியம் தன்னை மறையவனும் தானெடுத்து
மாங்கல்யம் தான் தரித்தார் மன்னர்கள் இருவருமே
பத்தினியார் கழுத்தில் பாங்காய்த் திருப்பூட்டினார்கள்

தேவர்கள் எல்லோரும் ஜெயபேரிகை முழக்க
விருது பல முழங்க வேதங்கள் தானோத
கைகோர்வை தான் கொடுத்தால் கனங்குறைந்து
போகுமென்று
சுண்டுவிரல் கொடுத்தால் மன்னர் தோசம் வருமென்று
சொல்லி
பொன்னால் விரல்கள் செய்து போத விரல் பிடித்து

கைகோர்வை தான்கொடுத்தார் காராளர் பொன்னர் சங்கர்
பெண்களுக்கு மாமன் பிரியமுடன் பட்டம் கட்டி
ஆயிரம் பிரமணர்கள் அள்ளி மணமுமிட்டார்
ஐநூறு பிராமணர்கள் அருமை மணமுமிட்டார்
தொண்ணூறு பிராமணர்கள் தொட்டு மணமுமிட்டார்
உற்றார் உறவின் முறையார் உகந்து மணமுமிட்டார்

நல்லோர் பெரியோர்கள் நலமாய் மணமுமிட்டார்
அரசாணி சுற்றிவந்து அரண்மனையில் உட்புகுந்து
பட்டுப்பாய் போட்டுப் பாய்மேலே தானிருந்து
கைகோர்வைதான் வாங்கி கடுகியே அப்போது
மாப்பிள்ளைக்கு மாமன் மாலை கழட்டி வைத்து

பெண்ணுக்கு மாமன் பிரியமுடன் தானும் வந்து
மாலை கழட்டி வைத்து மன்னவர்கள் அப்போது
பாலும் பழமும் பரிவாகத்தான் கொடுத்து
வந்த பிராமணர்க்கு வகையாகத்தான் கொடுத்து
வெற்றிலை பாக்கு விதமாகத்தான் கொடுத்து

சொர்ண புஷ்பம் தானும் சுகமுடனேதான் கொடுத்து
வந்த உறவின் முறைக்கு வகையாகப் பாக்கு வைத்தார்
பல்லாங்குழியும் பாங்குடனே தான் ஆடி
வந்த உறவின் முறைக்கு வகையாக அன்னமிட்டு
குத்துப்பருப்பும் இட்டு குடத்தோடு நெய் சொரிந்து

பதினாறுவகைக் கறியும் பாங்குடனே முன்னே வைத்து
சாதமும் சாப்பிட்டு தயவுடனே கை அலம்பி
பாக்கிலையும் தானெடுத்து பரிமாறி ஆனபின்பு
ஊர்வலம் போக உற்ற பொன்னர் சங்கருந்தான்
மாலையுந்தானெடுத்து பொன்னர் சங்கருக்கு மாமனுந்தான் போட்டு

தண்டிகையின் மேலேறி பெரியண்ணர் தயவாகத் தானிருந்து
அத்தை மகன் தானும் அன்புடனே கூட்டிவந்து
பாக்கு வெற்றிலை மடித்துப் பாங்குடனே தான்கொடுத்தார்
வாங்கியே போட்டுக்கொண்டு வரிசையுடன் பொன்னர் சங்கர்

கொட்டும் கிடுமுடியும் கோவில் மேள தாளமுடன்

யானையின் மேல் பேரிகை அதிர்ந்து முழங்கிவர
ஒட்டகைமேல் நகாரு ஒருகோடி தான் முழங்க



நல்லெருது தம்பட்டம் ராயகெடி முழங்க
குதிரைமேல் நகாரு கூடவேதான் முழங்க
புல்லாங்குழலூத பேரிகை தான் முழங்க
கட்டியங்கள்கூற கவிவாணர் சூழ்ந்துவர
வெண்சாமரை வீச விருது மன்னர் சூழ்ந்து வர

வெள்ளித்தடிக்காரர் வேட்டைமன்னர் சூழ்ந்துவர
பட்டுக்குடை விருதுபாங்காய்ப் பிடித்துவர
நீலக்குடை விருது நெருங்கியே பிடித்துவர
எக்காளம் ஊதி இடிபோல் முழங்கி வர
பதினெட்டுவகை மேளம் பாக்கியமுந்தான் முழங்க

நிலபுருசு வாணம் நின்று கிடு கிடென
தீவட்டி மத்தாப்பு திறமுடனே தான்பிடித்து
தண்டிகை முன்னாக வெள்ளானை பின்னாக
விக்னேஸ்வரரை விநாயகரைத்தான் தொழுது
தேங்காயுடைத்து தெண்டம்பணிந்து ஈஸ்வரரை

வலமாகச் சுத்தியேதான் பொன்னர் சங்கர் வருகிறார் அப்போது
சுத்தாளைப் பட்டணம் சூழ்ந்த நெல்லி வளநாட்டில்
வீதிக்கு வீதி விதமாக ஆலாத்தி
வீட்டுக்கு வீடு விதமாகச் சுத்தியேதான்
ஆலாத்தி தானெடுத்தார் அன்புடனே மன்னவர்க்கு

வந்து அரண்மனையில் வகையுடனே தானிறங்கி
பவளத்தால் ஆலாத்தி பாங்கியர்கள் தானெடுக்க
முத்தாலே ஆலாத்தி உத்தமியார் முன்னாக சுத்திவிட்டாள்
பத்தினியாள் தானும் பாங்காகப் பட்டெடுத்து
திருஷ்டி படுமென்று சொல்லி அண்ணரிருவருக்கும் திறமாக சுத்திவிட்டார்

அரண்மனையில் உட்புகுந்து அண்ணர் ஆசாரம் வீற்றிருக்க
மாமன்தான் அப்போது அண்ணருக்கு மாலை எடுத்துவிட்டார்

மூன்றாஞ்சடங்கு முளைப்பாரி எடுத்தார்கள்
மாப்பிள்ளையும் பெண்ணும் மன்னவர்கள் அப்போது
சங்கையும் வெள்ளியும் தயவுடனே தானெடுத்து
அம்மி மிதித்து அருந்ததி தானுங் கண்டு
ஆனை அரசாணி அடைவாகத்தான் படைத்து

நாலாஞ் சடங்கு நாகவள்ளி தான் முடித்து
மாப்பிள்ளை பெண்ணு மன்னவர்க்கு அப்போது
கங்கணம் தரித்தார்கள் கன்னியர்கள் தங்களுக்கு
ஐந்தாஞ்சடங்கு மஞ்சள் நீர்தானாடி
தண்ணீர்த் துறைக்கு தயவுடனே அப்போது

முளைப்பாரி தானெடுத்து முன்னாகத்தான் போய்
தானங்கள் செய்து தயவுடனே மன்னர்களும்
விபூதி தான் பூசி விதமுடனே அப்போது
சந்தனம் புனுகு சவ்வாது தான்பூசி
வந்த அரண்மனையில் வகையுடனே தானிருக்க

அரண்மனையில் தாதியர்கள் ஆலாத்தி சுத்திவிட்டார்
பத்தினியாள் ஆலாத்தி பாகுடனே தானெடுத்தாள்
வந்து உறவின்முறையார் வகையாக எல்லாரும்
பாக்கிலை தான்வாங்கி பாங்காகத் தெண்டனிட்டு
கூடக் கொலுமுகைந்தார் கொற்றமுடி வேந்தரசர்

பயணமென்று சொல்லி பாங்கான மன்னரெல்லாம்
அவரவர் ஊருக்கு அவர்களும் போய்ச் சேர்ந்தார்
அண்ணரிருவர்களும் அத்தை மக்கள் மூவருமாய்
வையவளநாட்டில் அண்ணர் வகையுடனே அப்போது
சந்தோஷமாக பொன்னர் சங்கர் தயவாகத் தானிருந்து

பெண்களிருவரையும் வைத்தார்கள் சிறைதனிலே
அரசாளும் நாளையிலே அன்பான பொன்னர் சங்கர்
இப்படியாய் இவர்கள் இருக்குமந்த வேளையிலே



## பொன்னர் சங்கர் பன்றி வேட்டைக்குப் போகுதல்

சிவசோழராஜன் சொன்ன திறமுடைய பன்றிதனை
தன்னந்தனியனது தனிக்காட்டுக் கொம்பனது
வெந்தமுகமுமது வேப்பிலைக் கொம்பனது
நாலுகால் வெள்ளை நடுத்தலை சுட்டியது
பூவாலு வெள்ளை புகழ்பெரிய பன்றியது

எழுபதடிக் கொம்பன் எதிர்த்தாரை மார்பிளக்கும்
வேப்பிலைக் கொம்பன் வெகு பலமுள்ள பன்றி
அதை செயிக்க வேணுமென்று சொல்லி திறமுடைய
பொன்னர் சங்கர்

மைத்துனரைத் தானழைத்து மன்னவருமேது சொல்வார்
வீரபாகு சாம்புவனை விதமுடனே நீர் அழைத்து

வாருமென்று சொன்னாரே வகையுடனே அப்போது
அப்படியே நல்லதென்று அழைத்தாரே சாம்புவனை
அழைத்ததொரு வேளையிலே சாம்பன் அதிதுரிதாய்
ஓடிவந்து

சுவாமி சரணமென்று சாஷ்டாங்கம் தெண்டனிட்டு
என்னை அழைத்ததென்ன எந்தனுக்குப் புத்தி என்ன

என்று சாம்பன் கேட்க ஏது சொல்வார் மைத்துனரும்
வாருமடா வீரபாகு வகையாக இப்போது
சோழ மகாராஜருடன் சொன்ன கெடுபடிக்கு
பன்றியைக் குத்த வேணும் அதற்கு படை வேலு வேணுமடா
நம்ம சித்தூரு ஆசாரி சிவதகுரு கண்ணாளன்*

மாட கொல்லனாசாரியை வரவழைத்து வாருமென்றார்
அப்படியே நல்லதென்று அழைத்தோடி வாரேனென்று
சித்தூரு தேடியே சாம்பான் சீக்கிரமாய் ஓடிவந்து

* கன்னாளன்

மாடக்கொல்லனாசாரியை வாருமென்று தானழைத்தான்
அழைத்த சத்தம் கேட்டு ஆசாரி தானும் வந்து
என்னை அழைத்ததென்ன ஏது வகை சொல்லுமப்பா
என்றுமே ஆசாரி இப்படியும்தான் கேட்க
வளநாட்டு எசமானர் உன்னை வரவழைத்தார் உந்தனையும்

என்று சொல்லவுமே சாம்பன் ஏது சொல்வான் ஆசாரி
அப்படியானால் அடியேனும் வாரேனென்று
வளநாடு தானோக்கி வாரானே ஆசாரி
வளநாடு தானும் வந்து வகையுடனே அப்போது
பொன்னருட பாதம் போற்றிப்பணிகள் செய்து

என்னை அழைத்ததென்ன எந்தனுக்குப்புத்தி என்ன
என்றுமேதான் கேட்க ஏது சொல்வார் பொன்னருந்தான்
வாருமப்பா ஆசாரி வகையுடனே எங்களுக்கு
பன்றிவேல் தானும் பாங்குடனே செய்யவேணும்
பதினைந்து பாக அகலம் அறுபது பாக நீளம்

படைவேலுச் செய்யவேணும் பாங்குடனே இப்போது
புறக்கடையில் தான் கிடக்கும் பெரியதொரு இரும்புக்கட்டி
இரும்புக்கட்டி தானெடுத்து இதமான வேலுஞ்செய்து
செய்து முடியுமடா சீக்கிரமாய் என்று சொன்னார்
அப்படியே நல்லதென்று ஆசாரி தானும் சென்று

புறக்கடையில் இருக்கும் பெரியதொரு இரும்புக்கட்டி
பார்த்தானே ஆசாரி பதைத்து மனம் தடுமாறி
இந்த நல்ல கட்டியிலே (வேல் செய்ய) இயலாது
என்றுஎண்ணி

என்று மனதிலெண்ணி ஏகி வழி நடந்தான்
தன்னுட மனைவியிடம் தான் வந்து ஏது சொல்வான்

பொன்னருக்கும் சங்கருக்கும் புகழ் பெரிய வீரருக்கும்
பன்றிவேல் வேண்டுமென்று பாங்குடனே எந்தனையும்
வேலுமது செய்யச்சொல்லி வெற்றிலை பாக்குக் கொடுத்தார்
வெற்றிலைப் பாக்கு விதமுடனே வாங்கிவந்தேன்



வெற்றிலைப் பாக்குவிதமுடனே தான்வாங்கி
அந்த நல்ல வேலுச்செய்ய ஆகாது நம்மாலே
நாம் இந்த ஊரு விட்டு வேறு ஊரு போய்ப் பிழைப்போம்
கட்டுச்சோறு கட்டுமென்று கடுகியே சொன்னானே
சொல்லியே ஆசாரி சோர்ந்து படுத்தானே

படுத்து நல்ல ஆசாரி பாங்குடனே கண்ணயர்ந்தான்
அந்த நல்ல வேளையிலே ஆதிரெகு ராமர்
இந்த ஆபத்துவேளையிலே இவனுக்கு உதவி
செய்யவேணுமென்று
நித்திரையில் சொப்பனத்தில் நேர்மையாய்ச் சொல்லுகிறார்
நீ ஊருக்கு மேற்கே உலை வையுமென்று சொன்னார்

நாங்களுமே வந்து வேல் நலமாகத்தானும் செய்வோம்
சொப்பனமும் சொல்லி சுவாமி மறைந்துவிட்டார்
தூங்கி எழுந்திருந்து ஆசாரி சொப்பனமும் கண்டுமவன்
ஊருக்கு மேற்கே உலை வைத்தான் ஆசாரி
விடியற்காலம் போய் பார்க்க வேலை முடித்தாச்சு

வேலை முடித்தாச்சு மேல் வேலை செய்யவேண்டும்
கண்டானே ஆசாரி கண் குளிரத்தான் பார்த்து
சந்தோஷ மாகியே வந்தான் வளநாடு
பொன்னரிடம் வந்து புகழுடனே ஏது சொல்வான்
வேலும் அடித்து வந்தேன் வீரியனேஎன்று சொன்னான்

நல்லதென்று ஆசாரிக்கு நலமுடனே வெகுமதிகள்
கொடுத்து அனுப்பிவிட்டு குணமுடனே பொன்னருந்தான்
தம்பிசங்கர் தன்னிடத்தே தான் சொன்னாரப்போது
சந்தோஷமாகி சங்கர் சாம்புவனைத் தானழைத்து
வேல் எடுக்கப் புறப்பட்டார் வீரியனும் அப்போது

மாயனுட சூழ்ச்சி சங்கருக்கு மனதில்தெரியாது
சங்கருடைய சமர்த்தை தானறிய வேணுமென்று
பாறைமேல் வேல் நிறுத்தி ஈயம் பாங்குடனே
காய்ச்சிவிட்டார்

தம்பிசங்கர் தானும்தான் கண்டார் வேலதனை
ஆக்கரித்துப் பலகடித்து அறுபதடி பின்குதித்து
எட்டியே வேல் பிடிக்க எழும்பவில்லை வேலுமது
வல்ல சமர்த்து சங்கருக்கு வலுவும் குறைந்த தப்போ
என்ன இருக்க நாம் என்ன மதி நினைத்தோம்

தாயை மனதிலெண்ணி தன் பிறப்பை நெஞ்சிலெண்ணி
மாயன் பெருமாளை மனதிலே தான் நினைத்தார்
தங்கள் பிறவியரும் தாதிகையில் நீர் கொடுத்து
பிடிசொம்பு தீர்த்தம் பொற்கொடியும் தான் கொடுத்தாள்
தீர்த்தத்தை வாரி வேல்மேல் தெளித்தாரே சங்கருந்தான்

தீர்த்தமது பட்டவுடன் எழும்புதே வேலுமது
இடது கையாலே சங்கர் எட்டியேதான் பிடித்தார்
பிடித்துமே வேலதனை எடுத்துவந்தார் வளநாடு
வளநாடு தானும் வந்து வைத்தார் தலைவாசல்
சாம்புவனைத் தானழைத்து தமுக்கடிக்கச் சொன்னாரே

எடுத்தான் கடிங்காளை சாம்பன் பிடித்தானே
வெற்றிக்கொம்பு
தமுக்கடிக்க சத்தம் கேட்டு ஜனங்களெல்லாம் கூட்டமிட்டு
பட்டணத்தில் உள்ளவர்கள் பன்றி வேட்டை போகவென்று
வேடர் ஒரு கோடி வில்லியர் ஒரு கோடி
குறவர் ஒரு கோடி கூட்டப்படைதான் கோடி

மறவர் ஒரு கோடி மன்னவர்கள் தான் கோடி
மான் வலைகள் ஒரு கோடி மயில் வலைகள் தானெடுத்து
நாய்கள் ஒரு கோடி நலமாகத்தான் கூட்டி
பாசக்கழுத்துடனே பலநாய்கள் தான் கோடி
செய்மறை நாய்களுடன் செவலை நாய் கூட்டியேதான்

வெள்ளைநாய் ஒரு கோடி வேண்டிய நாய்களுடன்
கருப்பு மறைகளுடன் கனந்த நாய் எண்கோடி



இப்படிக்குத்தானும் இதமாய்த்தாளத்துடனே
மட்டடங்காகப் பொன்னர் சங்கர் மன்னவர்க்குத்திட்டம்
சொல்வார்
காரியக்காரர்களே இந்தக்கால் சினத்தில் பன்றிதனை
வீறிடவே குத்தி வெண்முடியில் தானுமதை
பதினாறு கூறாக பாங்காகத்தான் போட்டு

காருள்ள சேனைகளும் கண்டு மனம் மகிழ
தங்காள் வெகுமதியும் நாங்கள் வாங்காமல் போனாலோ
பொன்னர் சங்கர் தானுமல்ல நாங்கள் பிடித்தது வாளுமல்ல
என்று மண்டியிட்டு தான் பொருதி மணி மந்திர வாளெடுத்து
மதப்புலிபோல் தான் சீறி மன்னர் பொன்னர் சங்கருந்தான்

தண்டை இட்டு ஆபரணம் தான் சூட்டி சிரசினிலே
சந்திர காவி உருமாலை சுங்குவிட்டுத்தான் துலங்க
விந்தையுடன் கட்டிப் பன்றி வேட்டை என்று வேல் எடுத்து
(என்று) மீசை முறுக்கியேதான் மேன்மையாகச்
சொன்னார்கள்
பொன்னர் சங்கர் கோபம் கொண்டு பொங்கியே
தானழைத்து

சாம்புவனைத்தான் பார்த்துச் சொல்லுகிறார் அப்போது
பட்சமுடன்தான் வளர்த்த தங்கையுட பச்சை
நாய்க்குட்டிகளும்
பன்னிரெண்டு நாய்களுமே பாங்காகக் கொண்டு வாரார்
சொல்லிப் பரியேறினார் பொன்னர் சங்கர்துரிதாய் நிலம்
நடுங்க
பன்றிவேல் தான் எடுத்து பரிஏறிப் பொன்னர் சங்கர்

சேனைத்தளத்துடனே தீர்க்கமுடன் தாங்கள் செல்ல
பட்டாணி ராவுத்தர்மார் பணிந்து சலாம் செய்துநிற்க
பொன்னர் சங்கர் படைஏக வானில் செந்தூளாய்க்
கண்டவுடன்

சேர்ந்து நடந்து வந்து நாட்டிலுள்ள சேனைபடைகள்
எல்லாம்

வீரமலை நாலிடமும் காணவர்கள் மேவிகளைகட்டியேதான்
காட்டைக்கலைத்து விட்டு பட்சி கரடி புலி சிங்கங்களை
காட்டானை தன்னையுமே பொன்னர் சங்கர் கடுகியே
வென்றுமப்போ

வித்தகனார் வேட்டை ஆட பன்றி மெல்லத் தொனிதான்
கேட்டு

நித்திரையும் தான் குலைந்து பன்றி நிமிசம் எழுந்திருந்து
மெத்தையது விட்டுப் பன்றி மீறியே கோபங்கொண்டு
சத்துருவாம் பொன்னர் சங்கர் முன்னே தானே எதிர்த்து
நிற்கும்

எதிர்க்கவேணும் பொன்னர் சங்கர் பன்றியை கதிக்கவும்
கண்டாரப்போ

இன்பமுடன் சேனைகளும் சுத்தி தெம்பாய் வளைத்துக்
கொண்டார்

கதித்தெழுந்த சேனை முன்னே பன்றி குதித்தெழுந்து கோபம்
கொண்டு

கண்கள் பொறிபறக்க பன்றி பொங்கியே தான் எழுந்து
மண்டியிட்டுப் பாய்ந்து பன்றி தண்டையது தான் அடிக்க
(அதைக்) கண்டு கொண்டு வந்த படை சிந்தையது தான்
துடிக்க

மற்றும்படை அம்பு தொட்டு பன்றியைக் குத்தி தெண்டால்
அடிக்க

அந்த அம்புக்கு தண்டை கண்டு பன்றி கொம்பாலே தான்
ஒடிக்க

வம்பு செய்த பேரை யெல்லாம் பன்றி வெம்பியே தான்
வதைக்க

வாரியடித்துடலை பன்றி பூரியேதான் வதைக்க
தம்பூர் முரசடித்து இவர்கள் அம்புதனைத்தீட்ட



அம்புதனைத்தீட்ட பன்றி கொம்பையது தீட்ட
அத்தைபிள்ளை சேனை வந்து பன்றியை சுத்தியே சூழ்ந்து
நிற்க

பன்றியது ஆர்ப்பாட்டமாக படைசேனை தூள் பறக்க
சுத்தவீரர் பொன்னர் சங்கர் கர்த்தனுமே தான் எழுந்து
அதை துண்டு செய்ய வேணுமென்று மனது கொண்டு மிக
எழுந்து

எத்தனமாய் பன்றிதனை தாக்கித்தடுத்துப் பொன்னர்
சங்கர் ஏனத்துக்கேற்ற வேல்தானுமெடுத்துக்கொண்டு
தாக்கி நிற்கப்பாகன் கண்டு நாய்க்கு மிகச் சாடை செய்தான்
சாடையது கண்டு சாம்பான் நாயும் பன்றியின் கூடவே ஏகி
பாயும் பன்றி மீதினிலே பச்சை நாயுமிகப் பாயவேதான்

பச்சை நாயும் பன்றியை பதறிடவேதான் பிடித்து
வேயும் என்றுதான் எழுந்து சங்கர் வேலுவிட வேணுமென்று
விட்டாரே வேலதனை பன்றி வீறிட்டபயமிட
வீறிட்ட சத்தமது தலையூருக்கு விபரமாய் கேட்குதப்போ
செப்பூசி கொண்டுமது செவியில் இடித்ததுபோல்

உருக்கூசி கொண்டுமது உட்செவியில் விட்டது போல்
பாரில் விழவேதான் சங்கர் பாய்ந்தவேல் தான் எடுத்தார்
பொறுமை பொறுத்தருளும் பொன்னாண்டார் தானுமெச்சி
சென்றபடை ராஜனுக்கு நன்றாகத் தானுவந்து
பன்றியதைக் குத்தி பதினாறு கூறாய்த்தான் பகிர்ந்து

அவரவர்க்குத் தக்கபடி அடைவுடனே தான் கொடுத்து
தம்பூரடிக்க வீரபாகன் தவில் முரசு தான் முழங்க
அந்தச்சத்தத்தொனி கேட்டு படைகள் மெத்தவேதான் துடிக்க
உல்லாச மாகவேதான் பொன்னர் சங்கர் பல்லக்கு
ஏறவேதான்

அந்த உத்தமர்க்கு வெண்சாமரை மெத்தவே வீசிவர

வெற்றியுள்ள அத்தை பிள்ளை சுத்தியது மேல் ஏற
கட்டியங்கூர்ந்து எட்டுத் திசை நடுங்க

அதைக்கண்ட சனங்களெல்லாம் கொண்டுமிக நடுங்க
தட்டதிர மேளம் பதினெட்டுமே தான் முழங்க
பொன்னர் சங்கர் படைகண்டு உறையூரு ராஜா புகழ்ந்து
மனைவிளங்க

க்ஷத்திரியர் சிவசோழர் உத்திரங்கள் தான்கூற
காளி பன்றி குத்தி காராளர் சாரிவாரர் என்று சொன்னார்

அந்த மொழிகேட்டு வேந்தன் சிந்தை களி கூர்ந்து
பொன்னர் சங்கர் தங்களையும் எதிர்கொண்டு தானழைத்து
மந்திரி மனமகிழ்ந்து தந்திரியுமேயெழுந்து
வச்சிர பொன்னாண்ட வரை மெச்சிக் கொண்டு தானும் வந்து
அழைத்துக் கொண்டுதான் போய் ஆன பொன்னர் சங்கருக்கு

ஆலாத்தி தான் எடுத்து அன்பாக வைத்துக்கொண்டு
அந்தமுள்ள பொன்னர் சங்கர் அரசனையும் வந்து கண்டார்
கண்டுதான் பொன்னர் சங்கர் காவலனைத்தான் போற்றி
கொண்டுமே தான் எழுந்து ராஜன் குணமுடனே தான் தழுவி
விண்டுமே தான் உலகில் உங்கள் வீரியத்தைப் போலுமிந்த

மண்டலத்தில் காணேன் என்று மன்னவரும்
மெச்சிக்கொண்டார்

தங்களுரை தான் கேட்டு துரைவீரர் பொன்னர் சங்கர்
கண்கள் கனிகூர்ந்தவர்க்கு* கனம் சொல்வார் காராளர்
உங்கள் பலம் அல்லாமல் இனி உலகத்தில் பன்றிவென்ற
நல்ல பலனாவதுண்டோ என்று நல்கினார் பொன்னர் சங்கர்

ராஜாவும் தானுமப்போ நன்றாய் மனமகிழ்ந்து
சூரர் பொன்னர் சங்கருக்கு தீரனுமே** தான் புகழ்வார்
எங்கள் இடர் தீர்க்கும்படி உங்களையுந்தான் தேடி
சுவாமி வரவிட்டார் என்று பொன்னர் சங்கரையும்
நாடியிப்போ

வெகுமதியும் தான் கொடுத்தார் வேந்தர்களுக்கப்போது

* களிகூர்ந்து     * தீரமுமே



வாங்கியே பொன்னர் சங்கர் வகையாகப்போற்றி செய்து
வாழ்த்தி எடுத்து ராஜ மரியாதை செய்தாரப்போ
போய்வாரோம் என்று சொல்லிகாராளர்
போற்றிப்பணிந்தேதான்
சிங்கமுகப் பல்லாக்கு பொன்னம்பல சுவாமி சேரவேதான்
ஏறி
வெள்ளானை மேலே தம்பிசங்கு விருதுடனே தான் ஏறி

வெற்றிப் பரிமீதில் அத்தாவும் தானேறி
வீரமலைச் சாம்பானும் வெண்கலக் கொம்பூத
சுத்தி வெடிக்காரர் சுத்தியே வாரார் அப்போது
ராஜா கட்டுமெட்டு உறையூரு வாசல்விட்டுமே தான் கடந்து
விந்தையுள்ள நாகசுரம் மேளந்தொளி முழங்கிவர

தந்தப்பல்லக்கேறி பொன்னம்பல சுவாமி தாட்டிமையாய்
வாராரே
வெள்ளானை மீதேறி தம்பிசங்கு விருதுடனே தான்வாரார்
பரிஏறி அத்தாவும் பாங்குடனே தானும் வர
நெல்லி வளநாட்டில் நெற்சூழ்ந்த கோனாட்டில்
பொன்னி வளநாட்டில் புகழ் பெரிய கோனாட்டில்

வந்துதான் பொன்னர் சங்கர் மாளிகையில் உள் புகுந்தார்
பத்தினியாள் ஆலாத்தி பாங்காகச் சுத்திவிட்டாள்
தங்கையர்க்கு சேதி சொல்லி தார்வேந்தர் தானிருந்தார்
இந்தப்படி சோழராச்சியம் காவல் கொண்டு இருக்கையிலே
மாதமூன்று மழையும் வருஷம் ஒரு பொன்மாரி பெய்து

நீதி தவறாமல் நெல்லி வளநாட்டில்
கட்டின ஏர்க்கைந்து பணம் கடமை நிகுதிபண்ணி
கறந்து வைத்த பாலதனை காகமது தீண்டாமல்
பசுவும் புலியும் ஒரு பார்துறையில் நீர் குடிக்க
எலியுடனே பூனைகளும் இருந்து விளையாட
கன்னங் களவுமில்லை துர்ச்சனங்கள்தாமு மில்லை

சிவ சோழர் பட்டணத்தில் திட்டம்பண்ணி வாரார்கள்
சிவ சோழர் சீமையிலே ஏது சொல்வார் மானிடர்கள்
பொன்னருட காவலினால் ஒரு பிழைகளும் இல்லாமல்
நாமும் புகழுடனே இருக்கிறோம் நம் நாட்டில்
சிவசோழர் பட்டணத்தில் இவர்கள் கட்டி அரசாண்டால்

நமக்கு சிந்தனையும் இல்லை என்று பேசுகிறார் அப்போது
இந்தப்படியாக இவர் ஆளும் நாளையிலே
அப்போது ஆதி பரமேஸ்வரனார் அரனாருந்தானெழுந்து
வைகுந்தம் பதியிருக்கும் மாயவரைத் தானினைக்க
அப்போது எம்பெருமான் ஆயரவர்தான் பார்த்து

கைலாச நாதரவர் கடுகி அழைக்கையிலே
வட்டமாங் கருடனேறி வாராரே எம்பெருமான்
செந்தலைக் கருடனேறி சீக்கிரமே தான் வாரார்
கைலாசபதி நோக்கி கர்த்தனுமேதான் வாரார்
ஆதி பரமேஸ்வரரை மாயன் அடிவணங்கித் தெண்டனிட்டு

என்னை அழைத்த வகை ஏது வகை சொல்லுமையா
அப்போது ஈஸ்வரனார் அன்புடனே சொல்லுகிறார்
பூலோகம் தன்னிலே குன்றுடையான் பிள்ளைக் கவலை கொண்டு

மைந்தன் கவலை மனக்கவலை தானாகி
தாமரை பெரிய நாச்சி தான் பிள்ளையில்லையென்று

பொன்னம்பலத்திலே போய்வரமுங்கேட்கையிலே
சன்னியாசியார் நாச்சியர்க்கு வாக்கு மனுச் செய்ததற்கு
பதினாறு வயதினிலே மக்கள் பிறப்பாரென்று
பொன்னர் சங்கர் பிறப்பாரென்று பெயரும் வைத்துத்தான் கொடுத்தார்
சன்னியாசியார் சொல்படிக்கு நாம் செலுத்தவே வேணுமென்று



பாருலகில் மன்னவரை பஞ்சவரைத்தானழைத்து
பொன்னர் சங்கராய்ப் பிறக்க போங்களென்று வாக்குரைத்தோம்
பதினாறு வயதுக்கு பாருலகில் போங்களென்று
சொன்ன நாள் வந்திட்டுது வயது துலைந்திட்டுதே
இட்டநாள் வந்திட்டது அவரை அழைக்கவே வேணுமினி

பதினாறு முடிந்த பின்பு பாரதத்தை நீர் நடத்தும்
சித்தம் திரும்பி மகாதேவர் திருவாக்கு செய்த பின்பு
மாயன் பெருமாள் மனதில் கபடுடையான்
படைப்போரு மூட்டியே தான் பாரதத்தை நடத்தவேணும்
சித்தமுடையவர்தான் ஆயன் திரு மனதிலெண்ணியப்போ

பொன்னர் சங்கர் இருவருடன் போர்க்களங்கள் செய்யவேதான்
பாரதத்தை உண்டுபண்ணி ஆயன் படைப்போரு மூட்டுகிறார்
பதினெட்டு நாட்டுக்கும் தலையூருக்காளி படைக்கு தலைவனவன்
வெள்ளிக்கட்டுக்காரன் வேடுமணியனவன்
சல்லிக் கட்டு வில்லுக்காரன் தலையூருக் காளியவன்

தண்ணீர்க்கரையில் தான் தன்னுடைய தந்தம் விளக்கையிலே
தலையூருப் பெண்டுகள் தான் தண்ணீர்க்கு வந்தவர்கள்
தண்ணீர்க்கு வந்தவர்கள் தங்கள் குறை ஏதுசொல்வார்
அம்மா பிள்ளாய் பிள்ளாச்சி வாருமினித்தங்கையரே
சிவ சோழர் சீமை எல்லாம் பொன்னர் சிறை மீண்டு காவல் கொண்டார்

கரிகாலன் சீமையெல்லாம் பொன்னர் காவல் கொண்ட நாள் முதலாய்
நாம் மஞ்சள் குளிக்கமறந்தோம் வயிற்றில் கருவிழந்தோம்
கீழநாட்டு அன்னமும் நாம் மேல் நாட்டுத் தண்ணீரும்
உண்டிருந்த பேர்களெல்லாம் உறங்கினோம் நாமுமிப்போ

அந்த மொழி கேட்டு தலையூருக்காளி அதிகோப
மாகியேதான்

தந்தம் விளக்காமல் தானும் எழுந்திருந்து
என்னதான் சொன்னாய் பிள்ளாய் ஏழைப்பிள்ளாய் பிள்ளாய்நீ
ஏழை வெள்ளாளன் மகனை விட எளியவனா நானுமிப்போ?
இன்னும் படை கூட்டி இனி மூன்று நாளையிலே

வளநாடு கொள்ளையிட்டு சங்கரை வளைத்துப் பிடிக்காட்டி
கோனாடு கொள்ளையிட்டு கொண்டுவரு காட்டி
என்பேரு காளி அல்ல நான் எடுத்ததும் வில்லுமல்ல
அந்த மொழிகள் சொல்லி தலையூருக்காளி அப்போ
எழுந்திருந்து

அரண்மனை வந்து தன்னுடைய ஆசாரம் போயிருந்து

பதினெட்டு நாட்டுக்கும் தலையூருக்காளி பாங்காக
சீட்டெழுதி

ஆத்தூரு பின்னம் அடுத்த பவுத்திரமும்
பின்னம் பவுத்திரமாம் பிரபனைத்த நாட்டார்க்கு
தட்டைய நாடும் தாராபுர நாடும்
கரூர் பதிநாடு காங்கய நாட்டார்க்கு

பருத்தி பொதிநாடும் பழினப்பொதி நாடும்
வெற்றிநாடு வேங்கள நாடு மேனாட்டில் வேடுதளம்
உள்ளதெல்லாம்

பதினெட்டு நாட்டாருக்கும் காளி பாங்காக கண்டெழுதி
இந்த ஓலை கண்ட நாழிகையில் பதினெட்டு நாடும் ஒரு
நொடியில் வரவேண்டும்

ஆணென்று பிறந்ததெல்லாம் அத்தனையும் வரவேண்டும்

அரைஞாண் கயிறு கட்டின பேர் அத்தனையும் கூட்டமிட்டு
பதினெட்டு நாடும் பாளையமாய் கூடவேணும்
ஓலை கண்ட நாழிகையில் பதினெட்டு நாடும் ஒரு
நொடியில் வரவேண்டும்



கடைசீட்டுக் காகிதமும் காளி கடுகியே அனுப்பி வைத்தான்
பதினெட்டு நாடுமப்போ பாளையங்கூடியேதான்
பம்பைத்தலைக்காரன் பத்து லட்சம் பேர்களுமே
நரைத்தலைக்காரன் நாலு லட்சம் பேர்களுமே
மொட்டைத் தலைக்காரன் மூன்று லட்சம் பேர்களுமே

மூன்று குடுமிக்காரன் கணக்கில் அடங்காது
பதினெட்டு நாடு பாளையம் கணக்கிலடங்காது
வளநாடு சண்டையிட வாலாகுழலெடுத்தார்
மூங்கில்குழல் போல மூன்று லட்சம் குழல் எடுத்தார்
நாணல் குழல் போல நாலு லட்சம் குழல் எடுத்தார்

பதினெட்டு நாடும் பாளையங்கள் கூடியப்போ
நாலு காணி மேட்டிலே தான் நடை கூடாரம் தானடித்து
பதினெட்டு நாடும் அப்போ பாளையத்தில் வந்திறங்கி
பதினெட்டு நாட்டார்க்கும் தலையூருக்காளி பாங்காய்
விருந்துசெய்து

பால் ஆடுகுத்தி பாங்காய்க் கறி சமைத்து
சூலாடுகுத்தி சுகமாய்க் கறி சமைத்து
பதினெட்டு நாட்டாரையும் பாங்காய் வரவழைத்து
துரிதாய் வரவழைத்து துடியாய் விருந்து வைத்து
அமுதுண்டு எழுந்திருந்து அல்லவரும்* கை அலம்பி
வெற்றிலை விடாய்க்காயும் மெத்த வாரித்தான் கொடுத்து

சந்தோஷமாகி இவர்கள் தானிருக்கும் வேளையிலே
பதினெட்டு நாட்டாரையும் பாங்காய் வரவழைத்து
பொன்னருட அரண்மனைக்கு தூது போய் வாருமினி
சங்கர் அரண்மனைக்கு தூதுதான் போரதாருமினி
ஆரடா போகிறவன் என்று ஆலோசனை கேட்கையிலே

பதினெட்டு நாட்டாரும் பயந்துமங்கே ஏது சொல்வார்
எங்களால் ஆகாது எங்களையா ராஜாவே
இப்படியாக இவர்களிருக்கையிலே

* எல்லோரும் (கொங்கு நாட்டு வழக்கு)

## தட்டான் சூழ்ச்சி

செக்க நத்தம் புலியூரு செம்பகுல ஆசாரி
மாணிக்கத் தட்டாத்தி பெற்ற மார்வேந்தன் ஆசாரி
செம்பகுல ஆசாரி சிறு கிணத்து வன்னி தட்டான்
அந்த வழியாக அவன் வரும் வேளையிலே
மேனாட்டு வேட்டுவர்கள் வெகு கூட்டம் தான் பார்த்து

என்ன தான் நாட்டாரே இந்தக் கூட்டம் கூடினீர்கள்
எந்த ஊர் கொள்ளையிட இந்தக் கூட்டம் கூடினீர்கள்
என்று ஆசாரி தான் கேட்க அப்பச் சொல்வார் நாட்டார்கள்
என்னுடைய பன்றிதனை இவன்தானா வெட்டுகிறவன்
நான் வளர்த்த பன்றிதனை நல்லதம்பி சங்கர் கொன்றார்

இவனை வெட்டாது போனால் வேட்டுவனும் நானல்லவே
கொள்ளையிட்டு நாமும் கொண்டு வர வேண்டுமடா
என்ன உபாயம் இதற்கு நீ சொல்லுமடா
அதற்கு வகைவிபரம் ஆண்டவனே சொல்லுகிறேன்
தந்திரத்தினாலே சதி சூது தானும் செய்து

தலைகுனிய வைத்து நான் வாரேன் நாட்டாரே
இந்தப்படி நான் செய்தால் எனக்கு என்னதாரீர் நாட்டாரே
பிடித்தமாடு எடுத்த கொள்ளை செம்போந்த பேர்பாதி
உன்னுதடா
உன் வம்சம் உள்ள மட்டும் உன்னை வைத்து நடத்துவேன்
நான்
உன் கோத்திரம் உள்ள மட்டும் கொடுத்து நடத்துவேன் நான்

பொன்னர் சங்கர் அரண்மனைக்கு தூது போகவேணும்
செம்பகுலா
அந்தமொழிகள் சொல்ல செம்போந்தம் அப்போது ஏது
சொல்வான்
பொன்நாழி செய்துமே போகவேணும் தூது இனி



பனுதி விலைக்கெனக்கு பத்துப்பொன் வேணுமினி
செலவுக்கு ஐந்துபொன் அத்தோட சேர்த்து
கொடுங்களென்றான்
அந்த மொழிகள் சொல்ல தலையூருக்காளி அப்போதே
பொன்னெடுத்து
பதினைந்து பொன்னெடுத்து பாங்காய்க் கொடுத்துமப்போ
வெற்றிலை விடாக்காயும் மெத்தவாரித்தான் கொடுத்து

துரிதாக நீர்போய் தூது பார்த்து வாருமினி
அந்த மொழிகள் சொல்ல ஆசாரி அடிவணங்கித்
தெண்டனிட்டு
பொன்னர் அரண்மனைக்கு போய் வாரேன் சுவாமியென்று
முதுகிளத்தான்* ஓடியேதான் திடுக்கென்று தானடந்தான்
வாரவழியிலே தான் மாவிலிங்க மரமும் கண்டான்

அந்த மாவிலங்க மரத்தை வெட்டி மரநாழி திருக்கடைந்து
அரைமாத்தின் பொன்னெடுத்து அரைத்து வழித்தெடுத்து
கால்மாத்தின் தங்கத்தில் அதிலே கலந்து உருக்கியேதான்
பொன்நாழி என்றிருக்க அதைப்பூசுகிறான் மேல்பூச்சாய்
தங்கத்தினால் நாழியென்று அதைத் தடவுகிறான் மேல் பூச்சாய்

பொன்னாழி என்று செய்து அதற்கு போட்டுவைத்தான்
முத்திரையை
கருவூலமென்று சொல்லி அதைக் கட்டி வைத்து
முத்திரையை
தன்னுடைய தாயாரை ஆசாரி தானழைத்துஏது சொல்வான்
கட்டமுது கட்டுமம்மா நான்கடுகி வழிபோகவேணும்
நேரம் தானாகுதம்மா நான் நெடுந்தூரம் போகும் வழி

வளநாடு போயறிந்து அதனுடைய வளப்பமெல்லாம்
பார்க்கவேணும்
அந்த மொழிகள் சொல்ல அவன் தாயார் அப்போது ஏது
சொல்வாள்

* முதுகிழத்தான்

## செம்பகுலன் தாயார் போகவேண்டாமென்று சொல்லுதல்

குன்றுடையான் மக்களுக்கு என்மகனே கோள்
நினைக்கவேண்டாம்நீ
பால்வார்த்த வீடு அது அவர்களுக்கு பாதகம் நினைக்க
வேண்டாம்
உப்பிட்ட வீட்டுக்கு என்மகனே ஒரு அபகேடு நினைக்காதே
பொன்னர் அரண்மனைக்கு தூது போகாதே என்மகனே
அந்த மொழிகள் சொல்ல தட்டான் அதிகோபமாகியேதான்

பொன்னருக்கு எதிரியாய் போகாதே என்றாயே
சீறி எழுந்திருந்து தாயாரை தலையிலடித்தானே
கண்ணீர் சொரிந்துமப்போ தாயார் கடைக்கண்ணில்
முத்துதிர்த்து
ஏங்கி அழுதுமப்போ என்ன சொல்வாள் அந்நேரம்
பிள்ளை என்று என் வயிற்றில் பெரும்பாவி ஏன் பிறந்தாய்?

மைந்தன் என்று என் வயிற்றில் மாபாவி ஏன் பிறந்தாய்?
தாயுரை கேளாமல் தட்டவட்டம் பேசுகிறாய்
என்ன செய்வேன் ஈஸ்வரனே இவன் தலையில் நீர்தானும்
காராளன் தன் கையிலே இவனை கண்டதுண்டமா வெட்டி
வாள் வீரர் பொன்னர் சங்கர் வாளுக்கிரையாக

எழுதினீரோ பிர்மாவே இவன் தலையில் நீர்தானும்
என்ற இவன் தாயார் இரு கண்ணிலே நீரோட
அவன் பானை இறக்கிவைத்து பச்சரிசிதானெடுக்க
அந்த நல்ல வேளையிலே அன்பான மேகெவுளி
அலைக்கொட்டி சொல்லிவிட அவள் அருகே திகைத்து
நின்று

எடுத்த அரிசியை ஏந்தி முறத்தில் வைத்து
மகனை மிகப்பார்த்து வாயிலறைந்து கொண்டு



முகத்தில் அறைந்துகொண்டு முறையோவென அழுதாள்
அரிசி எடுக்கையிலே அலறுதே மேகெவுளி
இந்த மரநாழி கொண்டு நீ வளநாடு போகாதே
பூச்சு மரக்கால் எடுத்து பொன்னரண்டை போகாதே
மோசம் வரும் மகனே இப்போ மேகெவுளி சொல்லுதடா

இந்த நாட்டார் உரை கேட்டு நல்ல பகை நீ நினைத்து
போகாதே என் மகனே புத்தி அல்ல உந்தனுக்கு
காராளர் தன்னிடத்தில் கன்னாளர் போனமென்றால்
கன்னாளர் வந்தாரென்று கனக பிரியமுடன்
வேண்டியதெல்லாம் கொடுப்பார் வெகுமானியம் விடுவார்

காரளார் இருவருக்கும் நீ கலக்கம் நினையாதே
வெள்ளாளர் ஆனவர்க்கு ஒரு வேதனையும் தேடாதே
என்று அவன் தாயார் இப்படியே தானுரைத்தாள்
அவள் கையை நெறித்து கன்னத்தின் மேலே வைத்து
ஆரும் துணையில்லை என்று அலறி மிக அழுதாள்

செம்பகுல ஆசாரி சீறியவன் தான்கேட்டு
தலை மயிரைத் தான்பிடித்து தவடையிலே தானடித்தான்
கட்டுச் சோறு கட்டுமென்றால் களரி இங்கே கூட்டுகிறாய்
மேகெவுளி சொல்லு தென்று விரட்டி இங்கே பேசுகிறாய்
தட்டவட்டம் பேசாதே சாதம் சமையுமென்றான்

அப்போது மாதாவும் அழுத கண்ணில் நீரோட
சங்கடமாகவேதான் சாதம் மிகச்சமைத்து
இவனுக்கு காலம் வந்து நேர்ந்ததென்று கட்டுச்சோறு கட்டி
வைத்தாள்
செம்பகுலன் சாப்பிட்டுதீர இளைப்பாறி
தாயாரைத்தானழைத்து தடப்பயணம் போவதற்கு

கட்டுச் சோறு தாருமென்றான் கடுகடுத்து மாதாவும்
கட்டுச்சோறு தானெடுத்து அவன் கையில் கொடுக்கையிலே
தவறித் தடுமாறித் தரையில் விழுந்திடவே

தாயாருமப்போது தலையிலடித்துக்கொண்டு
உடம்பு தடுமாறி ஒருகை தலையில் வைத்து
நீ தூர வழி போவதற்கு தூக்கி வந்த சோறுதான்
தவறி விழுந்துதடா மகனே தடையல்லவோ உந்தனுக்கு
நீ போக வேண்டாமடா பிழை மோசம் வந்துவிடும்

நீ தனித்து வழி போகிறது நலமல்ல உந்தனுக்கு
பொறுமை பொறுத்தவராம் பொன்னம்பல சுவாமி
(அவருடைய) வளநாடு சீமைக்கு நீ வஞ்சனைகள் செய்யாதே

காராளர் நாட்டுக்கு நீ கலக்கங்கள் வையாதே
என்று சொல்லி அவன் தாயார் இப்படியேதானுரைக்க

சேதிதனைக்கேட்டு செம்பகுலன் எழுந்திருந்து
எட்டி உதைத்தான் தாயாரை ஏழடி தரையில் விழ
தரையில் விழுந்தவளைத் தலைமேலே தான் உதைத்து
உதாசீனமாய்த் தான் பேசி உதைத்தவளைத் தான்பார்த்து
குணங்கெட்ட மூதேவி குறுக்கே தடை பண்ணுவையோ
என்றுமே தட்டான் இப்படிக்குச் சொல்லையிலே

### தட்டான் தாயார் சாபமிடல்

நீ போன தடம் மீளாமல் போவையென்று சாபமிட்டாள்
தாயை உதைத்தவன் தான் வரவும் போவானோ
இவள் தடையிலிருப்பேனோ நான் போறேன் என்று சொல்லி

மனையிலிருப்பேனோ என்று மரக்கால்தனை எடுத்து
கக்கத்திலேதான் போட்டு கட்டுச்சோறு தானெடுத்து

கடுங் கோபங்கொண்டு கடுகி வழி போகையிலே
அவன் மாதாவும் தானெழுந்து வாசலிலேனவே வந்துநின்று
அவன் போகிற வழி பார்த்து பொட்டென ஏது சொல்வாள்
நீ போடா பொறுக்கழிவாய் பொன்னருட கைவாளால்
நீ சாவாய் சருக்கழிவாய் சங்கருட கைவாளால்



நீ போகிற தடம் ஒழிய திரும்பிவரப்போறதில்லை
இந்த இருவருட கைவாளால் இருதுண்டாய்ப் போய்விடுவாய்
என் கும்பி பதைக்குதடா கூறு இரண்டாய் போய்விடுவாய்
மாரு தடவியவள் மனையிலே வீற்றிருந்தாள்
தாய் சொல்லை தட்டி அவன் தனிவழியேதான் நடந்தான்

வளநாடு திசை நாடி தட்டான் வாரான் துரிதாக
வாரவழியிலேதான் அவனுக்கு மட்டை குறுக்காச்சு
மட்டை குறுக்கானாலும் நமக்கு நட்டமில்லை ஒரு நாளும்
என்று அப்பால் வழி நடந்து ஆனதொரு தட்டானும்
போகும் தடந்தனிலே பொல்லாச் சகுனமங்கே

நாரான் வலமாக நல்ல போத்து இடமாக
ஓரி குறுக்கே வர ஒற்றைப்பார்ப்பான் எதிரே வந்தான்
கருநாயும் முன்னே வந்து கடுகியே அப்போது
கால்தூக்கி நீர்கழியும் அவன் கண்ணுக்கு முன்பாக
எண்ணெய் தலையிட்டு எதிரே வரக்கண்டானே

இத்தனை சகுனம் தட்டான் எதிரே வரக்கண்டானே
திரும்பி வருவானோ செம்பகுலன் சண்டாளன்
ஊர் தேடிப் போகாமல் ஓடி வழி நடந்தான்
அவனுக்கு பொல்லாங்கு ஓலை பிடரியிலே வந்து நிற்க
மாற்றானுங்காலனும் அவனை வாவென்று அழைக்கையிலே

போங்காலம் வந்ததினால் புத்தி கெட்டு மெய்மறந்து
சகுனத்தடை பாராமல் தானடந்தான் செம்பகுலன்
வெட்டுவாத்துறை வழியாய் வாரானே செம்பகுலன்
வளநாடு பட்டணத்தில் தட்டான் வந்துமே உள் புகுந்து
அந்தி நேரம் ஆன பின்பு பொன்னர் அரண்மனைக்கு வாரானே

பலகணி வாசலிலே பொன்னர் பார்த்தாரே கண்ணாலே
நீ யாருடைய மனிதரடா அரண்மனைக்கு வந்ததென்ன?

அந்த மொழிகள் சொல்ல தட்டான் அதிதுரிதாய் ஓடி வந்து
சுவாமி பராக்கென்று சரணம் பணிந்துமப்போ
அட்டம் பணிகள் செய்து அடி வணங்கி நிற்கையிலே
நீ எந்த ஊர் எவ்விடம் இருக்குந்தலம் எது சொல்
அந்த மொழிகள் சொல்ல தட்டான் அப்போது ஏது
சொல்வான்

செக்கநத்தம் சுவாமி செயங் கொண்ட சோழபுரம்
கரிகாலச் சோழருக்கு கருவூலம் கொண்டு போறேன்
அந்தி தானாச்சி நான் அதிக தூரம் போகும் வழி
நேரந்தானாயிட்டுது நெடுந்தூரம் போகும் வழி
கள்ளர் பெருத்த வழி சுவாமி கருவேலா முள்ளு வழி

அதற்கு பயந்து அரண்மனையில் அண்டி இருந்து போக
வந்தேன்

அந்த மொழிகள் கேட்டு தங்கை அப்பொழுது ஓடிவந்து
உத்தமியாள் நல்லதங்கை என்ன சொல்வாள் அண்ணருக்கு
அச்சமற்ற வாசல் நம்ம அசையா நகருக்கு
கூச்சமற்ற வாசல் அண்ணா நம் குலுங்கா நகருக்கு

குலுங்கா நகருக்கு இவன் கோலு* வந்த தட்டானிவன்
தட்டானை வெட்டியே தான் அண்ணா சங்காரம் பண்ணி
விடும்

அந்த மொழிகள் சொல்ல பொன்னர் அப்போ மனங்கலங்கி
தங்கையரைத்தான் பார்த்து தார்வேந்தர் ஏது சொல்வார்
என்ன இருக்க நீ என்ன மொழி சொன்னாயம்மா

நம்ம மனைதேடி வந்தவனை நாம் வாளுக்கிரை செய்கிறதா
பெண் சொல்லைக் கேட்டு சுவாமி பெருமாள் பிழை
போனார்

உன் சொல்லை நான்கேட்டு உலகாள்பவன் பிழை போவேனோ
அண்ணர் அந்த மொழி சொல்ல உத்தமியாள் அப்போ
மனதிலெண்ணி

* கோள்



இனி எந்தவிதம் சொன்னாலும் அந்தவிதம் கேட்பதில்லை
மகாதேவர் மூட்டுகிற வந்தவிதி போய்விடுமா?
என்று மனதிலெண்ணி உத்தமியாள் தானடந்தாள்
அப்போது தட்டானை பொன்னர் அருகே வரவழைத்து
எண்ணம் கலங்காதே தட்டான் அப்போ மனங்குளிர்ந்து

கொண்டுவந்த கருவூலத்தை நீ குறிக்கட்டாய்க் கட்டிவைத்து
அரண்மனையின் வாசலிலே அண்டியிருந்து போடா நீ
அந்த மொழிகள் சொல்ல தட்டான் அப்போ மனங்குளிர்ந்து
கருவூலத்தைக் கொண்டுவந்து சுத்தாலை கதவடியில் வைத்து
மப்போ

ஆசார வாசல் முன்னே அனந்தல் வந்து கண்ணயர்ந்து

கள்ளக் குறட்டை விட்டு கண்ணாளன் தூங்கினானே
அப்போ பொறுமை பொறுத்தருளும் பொன்னம்பல சுவாமி
நித்திரை செய்கையிலே நீதி கெட்ட செம்பகுலன்
தூக்கங்கள் இல்லாமல் தட்டான் சோதித்துப் பார்த்திருந்து
பாதி இரவில் பதினைந்து நாழிகையில்

தட்டான் எழுந்திருந்து தலைக் கடையில் வந்து நின்று
சுத்தி எங்கும் பார்த்து தட்டான் சூது நினைத்தானே
சலதாரைக் கல்லை தான் பெயர்த்து தட்டானும்
பொன்னருட பூமுடிக்கு பூச்சூட வேணுமென்று
கல்லுமிக எடுத்து கடுகி வருகையிலே

சித்துளி நாய் கண்டு சீறியே தான் குலைக்க
சோனங்கி நாய்கள் கண்டு துள்ளி எழுந்திருந்து
பாசக் கழுத்துடனே படுத்திருக்கும் நாய்களெல்லாம்
மூளிநல்ல நாய்களுடன் முடுகி எழுந்திருந்து
முடிக்கித்தனை* குலைத்து முன்வாலைத் தான் சுழட்டி

ஆக்கரித்து தான் குலைத்து ஆர்ப்பரித்து நிற்கையிலே
தட்டானுங்கண்டு சதிகேடன் தான்பயந்து

* தலை?

பின்னே வைத்த காலை முன்னே வைக்கமாட்டாமல்
நெஞ்சு பறை அறைந்து நெடு மூச்சுத்தானெரிய
மரம் போல நின்றானே மதிமயங்கி தட்டானும்
பனந்துண்டம் பாரக்கல் தலையில் வைத்து
நின்றான் மதிமயங்கி நெடுநேரம் மெய்மறந்து

ஆளைக்கண்டு நாய்கள் அரண்டே குலைக்கையிலே
பொறுமை பொறுத்த பொன்னம்பல சுவாமி
பொட்டெனவே கண்விழித்து போர்வைதனை நீக்கி
பார்த்தார் பொன்னாண்டவரும் தட்டான் பனைமரம்போல்
நிற்கின்றதை
கண்டு பொன்னாண்டவரும் கள்ளன் இவன் என்று சொல்லி

அதட்டியே பொன்னாண்டார் ஆரடா என்று சொல்ல
வேட்டை நாய் அத்தனையும் வெகுண்டு மிகக்குலைக்க
செம்பகுல ஆசாரி திகைத்துமிகத் தான் பயந்து
அஞ்சி நடுங்கித் தட்டான் அடித்துடைகள் தான் நடுங்கி
யாரும் இல்லை ஆண்டவனே அடியேன் நான் செம்பகுலம்

கூடத்தில் படுத்திருந்தேன் கொசுக்கடித்த காரணத்தால்
வெகுநேரம் தூக்கமில்லை வேதனைகள் ஆனதினால்
தலைக்குசரம் வேணுமென்று தான் எழுந்து இங்கே வந்தேன்
கல்லை எடுத்துக்கொண்டு கடுகி நான் போகவென்றால்
வேட்டைநாய் கண்டு வெகுவாய்க் குலைக்குதையா

அங்கே வருவமென்றால் அடியெடுக்க ஒட்டுதில்லை
கூடத்தில் போகவென்றால் நாய்குரல்விட்டுக்
குரைக்குதையா
தேவரீர் பேசுகையில் தெளிவு வந்ததெந்தனுக்கு
என்று தான்செம்பகுலம் எடுத்துரைத்தான் அது கேட்டு
அல்லவடா தட்டானே அறிவு கெட்ட மூடா நீ
வெளியே நீ போகவென்றால் என்னை விரசாயெழுப்பாமல்



தலைக்கு சரம் வேணுமென்றால் தானெழுப்பிச்
சொல்லாமல்
நீ வாயரவம் பண்ணாமல் மறுவார்த்தை பேசாமல்
நீ பேசாமால் எழுந்ததனால்* பிழை மோசம் வந்துவிடும்
நாயைக்கட்டியிருந்ததினால் நாணயமாய்ப் பேசுகிறாய்
இல்லாத போனால் நீ எங்கு தப்பப் போகிறாய் நீ

உன்னை சந்து சந்தாய்ப் பேர்த்தெரியும் தனித்து எழுந்ததற்கு
என்று பொன்னாண்டவரும் இதமாக வார்த்தை சொல்லி
குலைக்குமந்த நாய்களைத்தான் உத்தமருந்தானடக்கி
தட்டானைக் கூடத்தில் தான் போகச் சொன்னாரே
கூடத்தில் தட்டானும் குறுகி மனந்தானொடுங்கி

பதைபதைத்து தட்டானும் பண்பாய் படுத்திருந்து
எப்பொழுது விடியுமென்று எண்ணி அவன்தானிருந்தான்
விடிய நல்ல காலமதில் பொன்னர் துரிதாய் எழுந்திருந்தார்
அந்த நல்ல வேளையிலே ஆனதொரு செம்பகுலன்
தூங்கி எழுந்திருந்து திருஅனந்தல் நீங்கியேதான்

வாரி எழுந்திருந்து மன்னவனார் கிட்ட வந்து
பொறுமை பொறுத்த பொன்னம்பல சுவாமியாரே
ஆண்டவரே என் சுவாமி அடியேனான் போகவேண்டும்
நல்லதென்று பொன்னாண்டர் நலமாகப் போய் வாடா
என்று பொன்னாண்டவரும் இதமுடனே வார்த்தை
சொன்னார்

நல்லதென்று போய் தட்டான் நலமாகவே பார்த்து
கதிரோன் உதித்தஉடன் கண்ணாளன் அப்போது
வைத்த கருவூலத்தை தட்டான் வகையுடனே தான் எடுத்து
கருவூலத்தைத் தானெடுத்து தட்டான் கட்டவிழ்த்துத் தான்
பார்த்து

---

* எழுந்தாயானால்

என்நாழி அல்ல இது வேறு இத *நாழி வைத்திருந்து
பொன்னாழி கொண்டுவர வேறு மரநாழி வைத்தீரே
கைப்பொருளும் இல்லாமல் கடன் பொருளும் தான் வாங்கி
பொன்நாழி கொண்டு போனால் சோழர் பெற்றவிலை
பொன்கொடுப்பார்
பொன்நாழி கொண்டுவர சிவனே மரநாழி ஆச்சுதிப்போ

இந்த விதிக்குறைக்கு என்ன செய்வேன் சிவனே
காராளர் அரண்மனையில் களவில்லை என்று வந்தேன்
வெள்ளாளர் அரண்மனையில் வினையில்லை என்று வந்தேன்
வெள்ளாளன் செய்தபிழை சிவனேவேடனுந்தான்
தேவலையே
காராளர் செய்த பிழை கள்ளர் மற்றவருந்தான் தேவலையே

வைத்த கருவூலத்தை சிவனே வகுப்புகுழைத்தாரே
இந்நாழி வைத்துமப்போ சிவனே இருந்தபடி
வைத்தவர்தான்
அடித்துப்பரித்தாலும் சிவனே அவதூறு ஆகுமென்று
கொண்டுவந்த கருவூலத்தை குறிக்கட்டவிழ்த்தெடுத்து
வைத்த கருவூலத்தை மனந்துணிந்து எடுத்தவர்தான்

காயாச்சி** ஆண்டபொருள் சிவனேகடத்த
மனங்கூடுமோதான்
அய்யோசிவனே என்று மாரடித்து புலம்புகிறான்
அரண்மனை வாசலிலே அவன் அழுதுமுறை செய்கையிலே
பொன்னம்பல சுவாமியர்க்கு அப்போ மனமிரங்கி
நன்மை செய்த பேர்களுக்கு ஆசாரி தீமை நினைத்தாயே

என் வாசலிலே இருந்து வம்புகள் செய்யாதே
நீ வைத்த கருவூலத்தை வகையாய்த் தொடவுமில்லை
உனக்கென்ன நிர்ணயங்கள் செய்து தரவேணுமடா

* ஏதோ ** கையாட்சி – அடைக்கலம்



என்று பொன்னாண்டார் சொல்ல ஏதுசொல்வான் ஆசாரி
வெள்ளாங்குளத்திலே விதமான ஏரிமேலே
வெண்கல மதகு என்று ஏழு மதகுகளுந்தானுமுண்டு
அந்த மதகுகளில் அநேகம் முதலை உண்டு
அதில்உள் குமுழி புகுந்து பிற குமுழி வாரனடா

நாளை வெள்ளிக்கிழமை விடுதி விட்டுப் போவதில்லை
திங்கள் கிழமையிலே சத்தியம் செய்துமே தாரனடா
என்றுமே பொன்னர் சொல்ல ஏது சொல்வான் தட்டானும்
நம்பி வருவேன் நல்ல திங்கள் கிழமையிலே
என்றுமே தட்டானும் ஏகி வழி நடந்தான்

சந்தோஷமாகத் தட்டான் தானுமே அப்போது
நாட்டு வழியை விட்டு வீரமலை காட்டுவழி வாரானே
மேனாடு திசைநாடி தட்டான் வேகமாய் வாரானே
வெட்டுவாத்துறை கடந்து மதுக்கரையுந்தான் கடந்து
நாடுகாணி மேட்டுக்கு தட்டான் நடந்தான் துரிதாக

வாம்பகையும் சேனை எல்லாம் வேடுதளம் வகையாய்
வருகையிலே
அந்தப்படை உள்புகுந்து தட்டான் அதிதுரிதாய் வந்துமப்போ
தலையூருக்காளிக்கு தட்டான் சரணம் பணிந்து நின்று
வணங்கிப்பணிகள் செய்து தட்டான் வணக்கமுடன்
நின்றானே
பொன்னர் அரண்மனைக்கு தூது போயே திரும்பினையே

போனதொரு காரியத்தை புகலுமடா இப்போது
அந்தமொழிகள் சொல்ல தட்டான் அப்போது ஏது
சொல்வான்
காய்பறிக்க போனவன் நான் கனிந்த பழம் கொண்டுவந்தேன்
தந்திரத்தினாலே பொன்னரைத் தலை குனிய வைத்தேனான்
களவு செய்த கள்ளனென்று பொன்னரைக் களங்கப்படுத்தி
வந்தேன்

சத்தியம் செய்கிறேன் என்று தலை குனிந்து பேசினார்
மனது கலங்கடித்து சத்தியம் வாரேனென்று சொல்லுகிறார்
வெள்ளிக்கிழமையிலே விடுதிவிட்டு வெளியே நான் வருவதில்லை
திங்கள் கிழமையிலே திரும்பிவரச் சொன்னாரென்னை
சத்தியத்துக்குட்படுத்தி சம்மதிக்கவைத்தேன் நான்

அந்த மொழி கேட்டு தலையூருக்காளி அதிக சந்தோஷமாகி
திங்கள் கிழமையானால் தட்டான் சூலம் எதிராகும்
அருக்கன் கிழமையானால் தட்டான் சுருக்காய் நடவுமென்றான்
அந்த மொழி சொல்லி தலையூருக்காளி அனுப்பி வைத்தான்
திருக்கிணத்தை நாடியப்போ தட்டான் துருசாக வாரானே

சந்தோஷமாகத் தட்டான் தானும் வந்து அப்போது
அருக்கன் கிழமையினால் தட்டான் அப்போ பயணமென்று
கட்டமுது கட்டியேதான் தட்டான் கடுகிவழி வாரானே
வளநாடு திசைநாடு செம்பகுலன் வாரான் துரிதாக
வழியில் வருகையிலே மனதிலெண்ணிப் பார்த்துமப்போ

பிடித்த மாடு கொள்ளையிலே பேர்பாதிதான் கொடுத்தால்
வைத்துப் பிழைக்கலாம் வெகு காலம் உள்ள மட்டும்
என்று மனதிலெண்ணி தட்டான் இன்பங்குளிர்ந்து மப்போ
ஒருபுசம் இருபுசமாய் உடம்பெல்லாம் பூரித்து
ஆலித்து மனங்குளிர்ந்து தட்டான் அப்போ வருகையிலே

மதுக்கரை கடந்து தட்டான் வட்டவாத்துறை கடந்து
வீரமலைக்காட்டு வழி தட்டான் விதமாகத் தான்கடந்து
வளநாட்டை நாடியவன் வந்தானே செம்பகுலன்
அந்திப்பொழுதோட பொன்னர் அரண்மனைக்கு வந்துமப்போ
ஆசாரவாசல் முன்னே தட்டான் அனந்தல் வந்து கண்ணயர்ந்து



தூங்கி எழுந்திருந்து தட்டான் திரு அனந்தல் நீங்கியே தான்
காலையில் எழுந்திருந்து கதிரோன் உதித்தவுடன்
வந்து பணிகள் செய்து வணக்கமுடன் என்ன சொல்வான்
சத்தியம் செய்கிறேனென்று சுவாமி தயவுடனே சொன்னதற்கு
நான் வந்தேன் இப்போது நலமாக உங்களிடம்

அந்த மொழி சொல்ல பொன்னர் அப்போது மனங்கலங்கி
உத்தமியாள் சொன்ன வார்த்தை நான் ஒரு வார்த்தை கேளாமல்
நன்மை செய்யக் கருமம் நமக்குப் பலித்ததிப்போ
என்று மனதிலெண்ணி பொன்னம்பல சுவாமி எழுந்து கொலுவை விட்டு
சிங்காதனமேடை திருக்கொலுவு விட்டிறங்கி

ஆசாரம் வந்திருந்து அண்ணர் அழைத்தாரே உத்தமியை
அந்த மொழி கேட்டு உத்தமி அண்ணர் பக்கம் வந்து நின்று
கண்ணீர் ததும்பியேதான் உத்தமி காரிழையாள் ஏது சொல்வாள்
வருமுன் கனவு கண்டு அண்ணா வருவது நான் சொன்னதற்கு
விதிகளையும் வென்றுதான் அண்ணா விலக்கவும் கூடுமா

பெண் சொல்லைக்கேட்டு பெருமாள் பிழை போனாரென்று
உன் சொல்லை நான் கேட்டு உலகாள்பவன் பிழைபோவேனோ
என்று மனதிலெண்ணி அண்ணா எடுத்தெறிந்தாய் என் வார்த்தை
விதியிது வசம் வந்த பின்பு அண்ணா விலக்கவும் தான் விட்டிடுமே
பிரமன் தலையில் எழுதினது தப்பவுந்தான் போகுமா

சத்தியத்தைக் கூறி அண்ணா தட்டானின் பின்போக
வேதன் வகுத்த விதி விதி வசமோ உந்தனுக்கு

முன் எழுத்தோ பின்னெழுத்தோ முதல் நாளை
சொல்படியோ
வெள்ளாங் குளத்திலே அண்ணா குமுழியிலே உள் புகுந்து
நிலையாத குமுழியிலே அண்ணா நிர்ணயமும்
பண்ணவேதான்
சத்தியமும் செய்ய இப்போ உன் தலையில் விதிவசமோ?
சத்தியங்கள் செய்ய இப்போ சதிகாரன் பின் போனால்

விடுதி விட்டுப் போன பின் வேடுதளம் வந்திடுமே
அத்தை பிள்ளை மைத்துனரை அழைத்து அடைவாக
வார்த்தை சொல்லி
உங்கள் தம்பியர்க்குமே காவல் மைத்துனரை தானழைத்து
வார்த்தை சொல்லி
அவர் பக்கம் ஒப்புவித்து தம்பியை அடைவாக பத்திரம்
பண்ணி
அதற்குமே தந்திரமாய் மைத்துனர்க்கு அடைவாக
வார்த்தைசொல்லி

பத்திரங்கள் செய்யும்படி மைத்துனர்க்கு பாங்காக
வார்த்தைசொல்லி
சத்தியத்தை நீர் குறித்து இந்த தட்டானுடன் பின் போக
உத்தமியாள் சொன்ன பின்பு அண்ணர் ஊடுருவத்தான்
பார்த்து
பெண் புத்தி கேளாமல் நான் பிழை மோசம் போனேனே
அம்மா நான் உன் புத்தி கேளாமல் ஒருவனாய்ப் போகிறேன்

இனி நடக்கும் காரியத்தை ஏந்திழையே சொல்லுமம்மா
இப்படி பொன்னர் சொல்ல ஏது சொல்வாள் உத்தமியும்
அத்தை பிள்ளை மைத்துனரை அழைத்துமே நீர் தானும்
புத்திமதிகள் சொல்லி புறப்படுங்கள் சத்தியமே
என்றுமே தங்கை சொல்ல ஏது சொல்வார் அண்ணருமே

வாருங்காண் மைத்துனரே வார்த்தை சொல்லைக் கேளுமினி
இன்னாள் இதுவரைக்கும் இருந்தோம் வளநாட்டில்



முன்னாள் விதிப்படியோ முக்கண்ணனார் சொல்படியோ
நான் சத்தியத்தைக் காப்பாற்றத் தட்டான் பின் போன பின்பு
வேடு படை வந்தாலும் மைத்துனரே வெளியே நீ போகாதே
கோட்டை விட்டுப் போகாதே கொற்றவா பறைநகுலா
சத்தியத்தைக் கூறி இந்த தட்டான் பின் நான் போய்த்தான்

சத்தியம் பண்ணி நான் சதிராய்த் திரும்பு மட்டும்
தம்பி பதனம் காண் தார் வேந்தன் பத்திரங்காண்
விடுதி விட்டுப் போனபின்பு வேடு படை வந்தாலும்
வேடுபடை வந்தபோதே என் தம்பி வினை என்று
பாரானதை
வினை என்று பாராமல் அதை விளையாட்டாய்
எண்ணிடுவான்

வேடுபடை கண்டாலும் எங்கள்தம்பி வினைப்போரு செய்ய
வேண்டாம்
தம்பி பதனம் தார்வேந்தர் பத்திரங்காண்
அத்தை பிள்ளை மைத்துனர்க்கு அது வார்த்தை
சொல்லையிலே
எதிரில்லாப் பெருமாள் மைத்துனரைப் பார்த்து ஏது
சொல்வார் அந்நேரம்
உன்சொல்லை அல்லாமல் உங்கள் தம்பி ஒருவருட
சொல்கேளான்

என் சொல்லைக் கேட்பாரோ உங்களுட தம்பியர்தான்
தமையன் சொல்லையல்லாமல் தனியொருவர் சொல்
கேளார்
அந்த மொழி சொல்ல பொன்னர் அப்போது ஏது சொல்வார்
வாருங்கள் மைத்துனரே வகையுனக்குச் சொல்லுகிறேன்
சம்பிரதாயம் சொல்லுகிறேன் சதுரங்கம் விளையாடுங்கள்

சோழி சதுரங்கம் சொக்கட்டான் விளையாடுங்கள்
விளையாடி வெற்றிகண்ட பேர்களை வேடுபடை
போர்செய்யுங்கள்

விளையாடி தோற்றவரை வீரபத்ர யானை கட்டும்
சங்கிலியால்
ஆனை கட்டும் சங்கிலியால் அதில் விலங்கு
மிகப்பூட்டிடுங்கள்
இது சம்பிரதாயம் இனி சம்பிரதாயம் இல்லை இனி
அந்த மொழிகள் சொல்ல எதிரில்லா பெருமாள் அப்போது
ஏது சொல்வார்
நீர் ஒன்பதானைப் பலமுடையார் உங்கள் தம்பி எட்டானைப்
பல முடையார்

அது ஆனை கட்டும் சங்கிலிதான் உங்கள் தம்பியர்க்கு வெகு
நீளமோ தான்
அந்த மொழிகள் சொல்ல பொன்னர் அப்போது ஏது
சொல்வார்
வாருங்காண் மைத்துனரே வகையுனக்குச் சொல்லுகிறேன்
ஆனைகட்டும் சங்கிலிதான் என் தம்பியர்க்கு அது வெகு
நீளமல்ல
என்னுடைய ஆக்கினைகள் சொல்லிவைத்து அடைவாக
பூட்டிடுங்கள்

என்னுட ஆக்கினைக்குத்தான் பயந்து என்தம்பி
அடங்குவான் சங்கிலிக்கு
அந்த மொழிகள் சொல்லி பொன்னர் அப்போது ஏது
சொல்வார்
சத்தியங்கள் பண்ணி நான் சதிராய்த் திரும்புமட்டும்
தம்பி பதனங்காண் மைத்துனரே தார் வேந்தா உன் காவல்
பதனமென்று மைத்துனர்க்குப் பத்திரங்கள் சொல்லியேதான்

அந்த மொழிகள் சொல்லி கோட்டைத் தலைவாசல்காரனை
அழைத்தாரே நல்ல பொன்னு
தலைவாசல் காவலர்கள் தாமுமே ஓடிவந்து
வணங்கிப்பணிகள் செய்து வணக்கமுடன் நிற்கையிலே



அடா சத்தியத்தை நான் கூறி இந்தத் தட்டான் பின்நான்
போறேன்
சத்தியங்கள் பண்ணி நான் சதிராய்த் திரும்புமட்டும்
கோட்டை பதனமடா கொத்தளங்கள் எச்சரிக்கை
பதனம் பதனமென்று பாரமுடி நல்ல பொன்னு
வெற்றி மன்னன் பறை நகுலன் வீரபாகைத்தானழைத்தார்

அப்போது வீரபாகு அதிதுரிதாய் ஓடிவந்து
சுவாமி சரணமென்று சாஷ்டாங்கம் செய்கையிலே
அடா வெற்றி மன்னா பறைநகுலா வீரபாகு சாம்புவனே
சத்தியத்தைக் கூறியிப்போ தட்டான் பின்போறேன் நான்
சத்தியங்கள் பண்ணி நான் சதிராய்த்திரும்பு மட்டும்

வீரமலைச்சந்து வழிமேல் காவல் உன்னுதடா
வையமலைச் சந்து வழிக்காவல் பத்திரமடா
வேடுபடை கண்டாயானால் வெற்றிக்கொம்பு நீ பிடியும்
வெற்றிக்கொம்பு பிடித்த பின்பு வெண்கலக்கடிங்காலடியும்
உன் தவில் முரசுசத்தமடா எனக்கு சரிகுமுழி கேட்டாலும்

சத்தியங்கள் செய்யாமல் தான் துரிதாய் நான் வருவேன்
வீரபாகு சாம்பனுக்கு இந்த விதங்களெல்லாம் சொல்லி
வைத்து
காளி என்னும் நீலாவைக் கவர் மாறிக் கொண்டு வந்து
கட்டுமடா கல்லணை தான் நீ கல்லணை நெகிழாமல்
அந்த மொழிகள் சொல்ல பொன்னர் அரண்மனையில்
உட்புகுந்து

ஆடை விரித்தெடுத்து பொன்னர் அழகாய் வரிந்து கட்டி
பூட்டினார் பனுதியெல்லாம் தன்னுடைய பொன்னுந்
திருமேனியிலே
பத்து விரலுக்கும் பசும்பொன் கணையாழி
எட்டு விரலுக்கும் இசைந்த கணையாழி
மார்பு நிறைந்ததொரு வைரமணித் தாழ்வடங்கள்

மாணிக்கம் பதித்ததொரு மார்பில் பதக்கமிட
தம்பிப் பதக்கமிட்டு முத்து துராயுமிகப்பதிந்து
பொந்திக்கடுக்கனிட்டு பொன்னெழுத்தும் பாகு கட்டி
தங்கத்தினாலிழைத்த சருகை நிசாரணிந்து
அல்லிக் கயரெடுத்து அலங்காரம் பூட்டியேதான்

வண்ணக்கச்சை தானெடுத்து அதை வாகாய் வரிந்து கட்டி
எண்ணெய்க்கச்சை தானெடுத்து அதின்மேல் இதமாய்
வரிந்துகட்டி

பட்டு சுங்கம் பறக்க விட்டு பாங்காகச் சுங்கு விட்டு
ஒட்டியாணம் பூட்டெடுத்து இடையில் பதிந்துமப்போ
பதினெட்டு ஆயுதமும் பாங்காய் வரிந்து கட்டி

பத்து கட்டி போட்டடித்த பாரமான கேடயமும்
அந்த பாரமான கேடயத்தை பாங்காக மேல் பூட்டி
எட்டுக்கட்டி போட்டடித்த அது இரணங்கண்ட மந்திரவாள்
இந்த இரணங்கண்ட மந்திரவாள் அதை இதமாகத்தானெடுத்து
ஆரணியம் தூங்கு மஞ்சம் விட்டு ஆசாரமும் வந்து நின்று

காளியென்னும் நீலாவை வீரபாகு கவர்மாத்திக் கொண்டு
வந்தான்
கட்டினான் கல்லணையை அப்போ கல்லணை நெகிழாமல்
அங்குவடி பொன்னாலே குதிரைக்கு ஆபரணம் பொன்னாலே
பித்தட்டுப் பொன்னாலே குதிரைக்குப் பிடிவாரும்
பொன்னாலே

முன்னெற்றி சல்லி முகமெட்டும்* பொன்னாலே

கொண்டைக்கு கொப்பி கொண்டுவந்து தான் பதித்து
நெற்றிக்குச் சுட்டி கட்டி நிழல் பார்க்கக் கண்ணாடி
பூட்டும் பனுதியெல்லாம் பொட்டெனவே பூட்டியேதான்
கொப்பழகு மாளிகைக்கு முன்னே கொண்டுவந்து
நிறுத்தினானே

---

* முகமொட்டு



## பொன்னர் சத்தியத்துக்குப் போகுதல்

அங்குவடி மிதியாமல் அப்புரவி மீதேறி
தட்டானை முன்னடத்தி பொன்னம்பலம் தத்துக் குதிரை
விட்டார்
சத்தியத்தைக் கூறி இவர்கள் தான் வருகும் வேளையிலே
போதாவூர் வழியாக வாரார் இருவருமாய்
வாரவழியிலே தான் வெள்ளாளர் வெகுசனம் கூட்டமிட்டு

அதிலே அறுபது பேர் காராளர் அறுபது தண்டிகைகாரர்களும்
உறவின் முறைவழக்காக அவர்கள் சபை கூடி
இருக்கையிலே
அந்த சபையிலே தான் தட்டான் அடைவாக தெண்டனிட்டு
வணங்கிப் பணிகள் செய்து தட்டான் வணக்கமுடன் ஏது
சொல்வான்
நான் வைத்த கருவூலத்தை பொன்னர் மனதாரக்
கொள்ளையிட்டார்

கையாச்சி ஆள்வமென்று பொன்னாண்டார் கடத்த
மனங்கூடாமே
சத்தியத்துக்குள்பட்டு பொன்னாண்டார் சம்மதித்து
வாராரிப்போ
என்னுடமை போச்சு இனி என் செய்வேன் ஐயாவே
அந்த சபை நடுவே தட்டான் அழுது முறை செய்கையிலே
அந்த சபையார்தான் அப்போது ஏதுசொல்வார்

ஏறின குதிரைவிட்டு பொன்னர் இறங்காமல் நிற்கிறவர்
உன்னை மதிப்பாரோ தட்டான் உன்னுடைமை தருவாரோ
அந்த சபையார்தான் அதுவார்த்தை சொல்லையிலே
கேட்டுமனம் வெகுண்டு சரீரம் கிடுகிடென்று தானாடி
அங்கமெல்லாம் துள்ளி ஆன கண்கள் தான்சிவந்து

மீசை பதறுமாம் பொன்னருக்கு மேல்புருவம் ஆடிடுமாம்
அறுபதுபேர் தங்களையும் பொன்னர் ஆக்கரித்துதான்
பார்த்து

சபையாரைத் தான்பார்த்து பொன்னம்பல சுவாமியுமேது
சொல்வார்
உங்கள் சபைக்கு முன்னே குதிரைவிட்டு இறங்கியே
கையைக் கட்டி
கைகட்டி வாய்பொத்தி நான் கடக்க நின்று பேசணுமா
உங்களுக்கு வணங்கி நான் பேசினால் மனதுக்கு
ஏற்றுமிப்போ
அவன் வார்த்தை கேட்டாப்போல் என் வார்த்தை கேளாமல்

மண்ணிலிருந்து நீங்கள் வழக்கோரம் சொன்னீர்களே
பொய் வழக்கு சொன்னீர்கள் பூமியிலே தானிருந்து
ஓர வழக்குரைத்தால் உங்கள் தலைமேலே
இந்தப் பருமரங்கள் தானொடித்து பாங்காய் விழுங்கண்டீரே
இது மண்ணுள்ள காலத்துக்கும் வளரும் அபகீர்த்தி

புல்லுள்ள காலத்துக்கும் புதுமை நடக்குமினி
உங்கள் காராள வங்கிசத்தில் கண்குருடாய் தான் பிறக்கும்
இங்கிருக்கும் பேர்களுக்கு இனிப்பிறக்கும் பிள்ளை
எல்லாம்
முட்டிவயிறும் சட்டித்தலையுமாய்
நீங்கள் பெற்ற பிள்ளை எல்லாம் பின்னும் முடமாக

உங்களுட வம்சம் உள்ளமட்டும் பிறக்குமினி
அந்தச் சபையைப் பார்த்து அது சாபம் சொன்னவுடன்
தழைத்திருந்த ஆலமரம் சபையோர்கள் பார்த்திருக்க
அலறி விழுந்திடுமாம் ஆன சபை நடுவே
பார்த்துப் பொன்னாண்டவரும் பல்கடித்து அப்போது

தட்டானைத்தான் பார்த்து பொன்னாண்டர் தானுமப்போ
ஏது சொல்வார்
நீர்க்குமிழி உள்புகுந்து உனக்கு நிர்ணயமும் பண்ணுவது
சத்தியம் நான் பண்ணுகிறேன் தட்டான் நீ முன் நடடா
தட்டானை முன்னடத்தி பொன்னர் தத்துக்குதிரைவிட்டார்
வெள்ளாளங்குளத்துக்கு இவர்கள் வருகையிலே



## வளநாடு கொள்ளையிட வேடுபடைகள் வருதல்

வளநாடு கொள்ளையிட வருகுதே வேடுதளம்
மேகம் சுமந்து மின்னும் பின்னும் வாராப்போல
கோநாடு கொள்ளையிட்டு குமாரசங்கைப் பிடிக்க
குழுகுழுவாய் வேடுதளம் கூட்டமிட்டுத்தான் வருதே
வெற்றி மன்னன் பறைநகுலன் வீரபாகு சாம்பானும்

வீரமலைச்சந்து வழிமேல் காவல் வந்தவன் தான்
கள்ளுச் சாராயம் கடுகவேதான் குடித்து
கஞ்சாமயக்கம் கொண்டு வீரபாகு கனத்த உடல் மிகச்சாய்த்து
கள்ளுவெறிகள் கொண்டு வீரபாகு கஞ்சா மயக்கம் கொண்டு
அனந்தல் வந்து கண்ணசந்து அசந்து நித்திரை செய்கையிலே

ஆற்றை மரித்து அரியகுளம் தேக்கி நின்று
மேல்வெள்ளம் வந்து மிதந்து முறித்தாப் போல்
மேனாட்டு வேடு தளம் வெகுதளங்கள் வாரபோது
நித்திரைதான் தெளிந்து வீரபாகு நினைவு தெரிந்த பின்பு
உயர்ந்த குன்று மேலேறி வீரபாகு ஊடுருவப் பார்த்தானே

எழுந்திருந்து நின்று மப்போ இருபுறமும் பார்க்கையிலே
வருகுதே வேடுதளம் வழிகள் தெரியாமல்
கண்டு மனங்கலங்கி சாம்பான் கண்ணீர் ததும்பியே தான்
வீரமலைச்சந்து வழிநம்மை மேல் காவல் வைத்ததற்கு
மேல் காவல் வைத்திருந்து விதிசெயல்
வீணாகப்போய்விட்டதே

பால்வளர்த்த வீட்டுக்கு சிவனே பாதகம் நினைத்திட்டேனே
பாரவாளுங் கேடயத்தை பருமணலில் பாய்ச்சி அப்போ
வெத்திக் கொம்பு கடிங்காலை வீரமலை வனத்தில்
ஒளித்துவைத்து
பஞ்சைபர தேசியைப்போல் சாம்பான் பதுங்கியே
தானிருந்தான்

துடைகள் தெரியவேதான் ஒரு துண்டுதனையுடுத்து
புல்லறுக்கும் அரிவாளை பிறகாலேதான் சொருகி
அந்தப்படை முன்னே நின்று ஐயா சரணமென்றான்
வந்தப்படைகள் அப்போ வளைந்துநின்று சூழ்ந்துகொண்டு
வெட்டுமடா என்பாரும் இவனைக்கட்டுமடா என்பாரும்

இடித்திடித்துத் தள்ளி தலையூருக்காளிக்கு எதிராக
முன்னேவிட்டார்

சுவாமி சரணமென்று சாம்பான் சரணம் பணிந்துமப்போ
வணங்கிப் பணிகள் செய்ய வணக்கமுடன் நிற்கையிலே
எந்தவூர் சொல்லுமடா இப்போ என் படையைப் பார்க்க
வந்தாய்
வழிக்காவலாய் இருந்தவனா வந்தவகை சொல்லுமடா

அந்த மொழி கேட்க சாம்பான் அப்போது ஏது சொல்வான்
என்பேரு வீரபாகு சாமி நான் இருக்கிறது வளநாடு
பொன்னாண்டர் பந்திக் குதிரை கட்டும் பறையனும்
நானடியேன்
சம்பளமும் இல்லாமல் சலித்துமிக இங்கே வந்தேன்
வீணானவீண்கவலை பொன்னாண்டர் வெட்டிவேலை
வாங்குகிறார்

வளநாடு கொள்ளையிட நீங்கள் வருகிற சேதிகேட்டு
கோனாடு கொள்ளையிட நீங்கள் கூடிவார சேதிகேட்டு
வாரதொரு சேதிகேட்டு சுவாமி தான்வந்தேன் எதிராக
கூடிவார சேதிகேட்டு சுவாமிவழி கூட்டிப்போக நானும்
வந்தேன்
அந்தமொழிகள் சொல்ல தலையூருக்காளிக்கு அதிக
சந்தோஷமாகி

உங்கள்கோட்டைக்கு உள்ளாளுமாகுமோ
உளவாளுமாகணுமோ
அந்த மொழி சொல்லி தலையூருக்காளிக்கு அப்போது
ஏதுசொல்வான்



ஊரறிவேன் உளமறிவேன் எங்கள் கோட்டைக்கு உள்ளாளும்
நானாவேன்
சின்னாண்டவரைக் கைப்பிடியாய்த்தான் பிடித்து கட்டியே
நான் தருவேன்
வளநாடு கொள்ளையிட்டு வரலாமே என் சுவாமி
இந்தவிதம் நான்செய்தால் எனக்கென்ன தாரீர் நாட்டாரே
அந்த மொழிகள் சொல்ல தலையூருக்காளி அப்போது
ஏதுசொல்வான்

பிடித்தமாடு எடுத்தகொள்ளை பேர்பகுதி உன்னுதடா
வீட்டுக்கு ஐந்துபணம் வரிவைத்து தாரமடா
எங்கள் ஊழியுள்ள காலமட்டும் ஒரு காணி நான்தாரேன்
கல்லுவெட்டிப்போட்டு காணியுமே நான் தாரேன்
எங்கள் வம்சம் உள்ளமட்டும் உன்னைவைத்து
நடத்துகிறோம்

என்றுமே நாட்டார்சொல்ல ஏதுசொல்வான் சாம்பானும்
மேனாட்டுவேட்டுவரை மிகவும்நம்பப் போகாது
கீழ்நாட்டு முதலிகளை கேசவரை நம்பலாமா?
தாய்க்குமே பிள்ளையில்லை தலைநோய்க்கு
மருந்துமில்லை
அண்ணன்தம்பியென்று பாராமல் கழுத்தறுக்கும் பேர்நீங்கள்

முன்னாலே போகவிட்டு பின்னாலே கால்வெட்டுரவர்
நல்லதொரு வேட்டுவரை நம்பமாட்டேன் நானுமினி
அந்தமொழிகள் சொல்ல காளி அப்போது ஏதுசொல்வான்
வீரமலை தெய்வமறிய சத்தியம்நான் செய்கிறேண்டா
என்ன சத்தியம் செய்தாலும் சுவாமி ஏற்காது எந்தனுக்கு

கொண்டுவந்த ஆயுதத்தை குறிக்கட்டாய் கட்டியேதான்
தவமலைக்கிணைமலையாய் சரியாகத்தான் குவித்து
இந்தப்படி செய்வனென்று தெய்வமலைபார்த்து
ஆயுதத்துக்குமுன்னாக அனைவரும் சத்தியம் செய்யவேணும்

எனக்கு சம்மதமென்று வீரபாகன் சத்தியம் கேட்கையிலே
அந்தமொழிகள் சொல்லகாளி அப்பொழுதே சம்மதித்து
வந்த சனத்துக்கெல்லாம் வருதிகளைச் சொல்லிவிட்டான்
சஞ்சுவத்தை எல்லாம் வீரமலைக்கு சரியாய்க் குவியுமென்று
வந்தசனங்களெல்லாம் ஆயுதத்தைவகையாய் இறக்கிவைத்து

ஊணான்கொடிபிடுங்கி (எல்லவரும்) ஒரு கட்டாய்க்
கட்டிவைத்தார்
தவமலைக்கு இணைமலையாய் அதைத் திறமாகத்தான்
நவித்தார்
சொன்னபடி தப்பாமல் சாம்பானுக்கு செலுத்திரது
சொன்னதெல்லாம்
இப்படி தருவோம்என்று எல்லவரும் தான்பணிந்து
மலையைத் திசைநோக்கி வணங்கிப்பணி செய்கையிலே

## வீரபாகு படையைச் சங்கரித்தல்

பாரவாளும் கேடயமும் பருமண்ணில் பாய்ச்சியதை
பெருவிரலால்தானுதைத்து அவர்கள் அறியாமல்
தானெடுத்து
அப்போ யாரை நினைத்தானாம் அளவற்ற பொந்தியிலே
ஆதிவனாண்டி ஐயரை மனதிலெண்ணி
மாயன் பெருமாளை மனதிலே தானினைத்து

தங்காள் பிறவியரைதானினைந்து அந்நேரம்
மெல்லியவாள் தும்புவிட்டு வீசுகிறான் அப்போது
காலற்று வீழ்வாரும் கையற்று வீழ்வாரும்
மேலற்று வீழ்வாரும் மேனி துண்டாமாவரும்
அய்யோசிவனே என்று மிரண்டு அலறி விழுந்தோடுவாரும்

வெட்டித்தரம் அறுக்க வெகுநேரம் செல்லுமென்று
மூக்குத்தரம் நாக்குதரம் விழுந்தவரை முடியை
அறுத்தெடுத்து



கச்சைப் புரையிலே வீரபாகு மெத்ததரம் போட்டு
காலாகத்தட்டியேதான் வீரபாகு ஆலாப்போல பறந்து
மேல்காவல்போனவன்தான் வீரபாகு வேகமாய்
வந்துமப்போ
சுவாமிபராக்கென்று வீரபாகு சரணம்பணிகையிலே
வீரமலைச்சந்துவழி நீ மேல் காவல் போனாயடா

மேல்காவல் போனவன் நீ வேகமாய் வந்ததென்ன
ஆளியைக் கண்டு நீ அரண்டோடி வந்தாயா
வேங்கையைக் கண்டு நீ மிரண்டோடி வந்திட்டாயா
அந்தமொழிகள் சொல்ல வீரபாகு அப்போது ஏது
சொல்வான்
வேங்கையைக் கண்டுதான் மிரண்டோடி வருகவில்லை

மேனாட்டு வேடுதளம் வெகுதளங்கள்தான் வருது
அதுகண்டு நானுமிப்போ சுவாமி அடியேனும் ஓடிவந்தேன்
அந்தமொழிகள் சொல்ல சங்கருக்கு அதிகோபமாகியேதான்
என்பந்திச் சோறுண்டையடா பயலே என்னினும் பகுதி
பலமில்லையடா
வேடுபடைகண்டுநீ மிரண்டோடி வந்ததற்கு

மிரண்டோடி வந்ததற்கு வெட்டுவேன் நானுமுன்னை
என்று அதட்டி எழுந்திருந்து சங்கர் ஆக்கரித்து வாளெடுத்தார்
அட்டமிட்டு பவனிகொண்டு வீரபாகு அறுபதடி பின்குதித்து
வட்டமிட்டு ஓடிவந்து சின்னாண்டவர்க்கு வாகுடனே
தெண்டனிட்டு
கச்சைப்புரைய விழ்த்து சின்னாண்டவர்க்கு மெத்த சரம்
குவித்தான்

வெட்டிவந்தேன் என்று சொல்ல
வெகுசந்தோஷமாகியேதான்
ஆடை அலங்கரித்து சாம்பனுக்கு ஆபரணம் பூட்டினாரே
அப்போ எதிரில்லாப்பெருமாள் ஏதுசொல்வார் சாம்பனிடம்
நீவெட்டிவந்தேன் என்று சங்கரிடம் வெகுமதிகள்
வாங்கினாயே

நீ வெட்டிவந்தவிதத்தை விளம்புமடா என்னிடத்தில்
அந்தவிதம்சொல்ல சாம்பன் அப்போ ஏதுசொல்வான்
வீரமலைச் சந்து வழிமேல் காவல்போன இடத்தில்
கள்ளுச்சாராயம் கடுகியேநான் குடித்து
அனந்தல் வந்து சற்று அசந்து படுத்துவிட்டேன்

நாணல்காடுபோல நாலு லட்சம் ஈட்டிக்காரர்
நாய்பிடிக்கும் பயல்களைப் போல் நாலாயிரங்கோடி
கூத்துபார்க்க வந்ததுபோல் கூட்டம்வெகுகோடி
திரண்டுவருகையிலே திக்கென்று தானெழுந்து
உச்சிக்கரடு அது உயர்ந்தகுன்று மேலேறி

பார்த்தேன்நான் சுவாமி படைகள் வருகிறதை
கண்டுமே நானும் கண்கள் மிகச்சிவந்து
ஈட்டிப்பிடி ஆயுதமும் ஈரமண்ணில் தான்புதைத்து
மண்ணில்புதைத்து மறைத்தேன்நான் கேடயத்தை
பஞ்சைபரதேசியைப்போல் பாங்காய்த்துணியும்கட்டி

வேடுபடை முன்னே விதமாய் வருகையிலே
வெட்டுமடா என்பாரும் இவனைக் கட்டுமடா என்பாரும்
தலையூருக்காளியிடம் இவனைத் தள்ளுமடா என்பாரும்
இப்படித்தள்ளிக்கொண்டு காளிக்கு எதிரே
கொண்டுவிட்டாரே
தலையூருக்காளி தானுமவன் ஏதுசொல்வான்

எந்தஊர் எவ்விடம் நீ இருக்கிறது சொல்லுமடா
நான்வளநாடு காராளர் வாள்வீரர் பொன்னர்சங்கர்
அடிமைப்பறையன்நான் ஐயாவே என்று சொன்னேன்
என்பேரு வீரபாகு நான் இருக்கிறது வளநாடு
சம்பளம் இல்லாமல் சலித்துமிக இங்கே வந்தேன்

வளநாடுகொள்ளையிட நீங்கள்வந்த சேதிநான்கேட்டு
உங்கள் படையைக்கண்டு ஓடிவந்தேன் நாட்டாரே



எங்கள் துணைவந்தாயானால் வெகுமதிகள்
நான்கொடுப்பேன்
நீங்கள் வெகுமதி செய்வதானால் சத்தியம் செய்யவேணும்
என்னடா சத்தியங்கள் செய்யவேணும் உந்தனுக்கு
உங்கள் ஆயுதத்தை எல்லாம் அடைவாக கீழ்போட்டு
தெய்வமலைக்குச் சமமாய் குவித்துவைத்து தானுமப்போ

சத்தியங்கள் செய்தால் அரண்மனைக்குச் சம்மதித்து
கூட்டிப்போவேன்
என்று ஆசையை நான்சொல்ல அப்போ அவர் சம்மதித்து
கட்டுக்கட்டாய் கட்டியேதான் கருமலைபோல்தான்
குவித்தார்

சத்தியங்கள்பண்ணி சரணம் பணிகையிலே
பருமணலில் பாய்ச்சினது பாரவாள் கேடயத்தை

பெருவிரலால் தானுதைச்சு அதைபின்னாகத்தானெடுத்து
வீசினேன் ஒருபுறமாய் மேனாட்டுவேடுவரை
வெட்டித்தரம் அறுத்தால் வெகுநேரம் செல்லுமென்று
மூக்குத்தரம் நாக்குத்தரம் முடியை மிதித்தறுத்தேன்
அந்தமொழிசொல்ல எதிரில்லாபெருமாள் அப்போது
ஏதுசொல்வார்

சங்கரையும்தான் பார்த்து உங்கள் தமையனார்
சொன்னதுதான்
கணவாயைக் கட்டி சுவாமி கருவறுத்தேன் வேடுவரை
மந்திரவாளுக்குசுவாமி வாளுக்கிரைவேணுமென்று
சங்கருக்கு அறிக்கைசெய்ய அடிமைப்பறையன் வந்தான்
அச்சேதிக்கேட்டு சின்னாண்டவர் ஆலித்தெழுந்திருந்தார்

படைஎன்று சொன்னபோதே பதறிஎழுந்திருந்தார்
வேடுபடை என்று சின்னாண்டவர்
வெகுண்டுமேதான்சிரித்து
மண்டியிட்டுக் கொக்கரித்து வலதுகையில் வேல்வாங்கி

இடதுகையில் கேடயமும் இடுக்கினார் சங்கருமே
நீலவிழிக்கண்கள் இரண்டும் நெருப்புத்தணல் பறக்க
கோலவிழிக்கண்கள் இரண்டும் கொடுங்கனல் நெருப்பெரிய
அதைக்கண்டுதான் அத்தைபிள்ளை அவருமேகிட்டவந்து
என்ன இருக்க அத்தான் என்னபுத்திநீ நினைத்தீர்

வேடுதளம்வந்ததென்றால் நம் வேட்டைநாய்போதாதோ
அந்த கருஞ்சனங்கள் வந்ததென்றால் நம்
கருப்புநாய்போதாதோ
பொறுமை பொறுத்தருளும் பொன்னம்பலசுவாமி
வெள்ளாங்குளத்துக்கு அவர் சத்தியமேபோயிருக்க
சத்தியம்மெய்யாகி நம்மசுவாமி வருமளவும்

நம்மகோட்டைதான் போனாலும்
கொற்றவர்கள்மாண்டாலும்
ஆடுசிறை மாடுசிறை வேட்டுவர் அடித்தோட்டி
போனாலும்
நம்மவளநாடுபோனாலும் வாள்வீரர் மைத்துனரே
தாலிபறி சேலைபறி அவன்தான் பறித்துப்போனாலும்
நம்மகோனாடு போனாலும் கொற்றவரே நீர்கேளும்

நம்மதங்கையரை விட்டுத்தான் பிரியப்போகாது
மைத்துனர்க்குக்கோபம் தணிந்து குளிர்ந்தமுகம்தானாகி
மைத்துனரைக் கைபிடித்து வாருமென்று கூட்டிவந்து
சித்திரச் சாவடியில் சேரவே வீற்றிருந்து
சங்கரையுந்தான் பார்த்து உங்கள் தமையனார்
சொன்னதுதான்

## அத்தைபிள்ளையும் சங்கரும் சொக்கட்டான் ஆடுதல்

சதுரங்கம்ஆடிநாம் இருப்பமென்று சொன்னாரே
சோழிசதுரங்கம் சொக்கட்டான் தானாடி



வெற்றிகொண்டபேர்களுந்தான் வேடுபடைபோர்
செய்யவேணும்
அந்தப்படி மைத்துனரே நாம் அடைவாய்
விளையாடிடுவோம்
என்று சொல்லி அவர்கள் இருவருமாய் தான்சேர்ந்து
இருவரும் கைகோர்த்து ஏகாந்தம்தான்பேசி
சொக்கட்டான் காயெடுத்து சுகமாக முன்னேவைத்து

மைத்துனரைப்பார்த்து மறுவார்த்தை ஏதுசொல்வார்
நான்தோற்றால் மைத்துனரே நீர்சொன்னபடி நான்கேட்பேன்
நீ தோற்றால் மைத்துனரே உனக்கென்ன பந்தயங்கள்
அப்படியேநானும் நீ சொன்னபடி நான்கேட்பேன்
இருவிரண்டுபேரும் இணைசம்மதி தானாகி

பஞ்சணையில் வீற்றிருந்து பாங்காக மைத்துனரும்
வைரத்தூண்பக்கத்திலே வந்திருந்தார் சங்கருமே
தங்கையரை சாட்சிவைத்து தானும்கயிர்போட்டார்
பகடைவிழுகாமல் பந்துவிழுந்தது காண்
தோற்றுவிட்டார் என்று எதிரில்லாபெருமாள் துடைதட்டி
தான்சிரித்தார்

இதுபிள்ளையார் ஆட்டமென்று சங்கர்பின்னும்
கயிர்போட்டார்
முக்காலும் தம்பிசங்கர் மூன்று தரம் தோற்றுவிட்டார்
தோற்றுவிட்டோம் என்றுசங்கர் சோர்ந்துமே தானிருந்தார்
நீதோல்வியாய்ப்போனவர்க்கு
பொன்னர்சொன்னபடிசெய்யவேணும்
எழுந்திருந்துவாருங்காள் உங்களண்ணர் உத்திரவுசெய்தபடி

வாருங்காண்மைத்துனரே என்றுவகையுடனே கூட்டிவந்து
ஆனைகட்டும் தூணோடே அடைவாகச் சாயுமென்று
வாள்வீரர்சங்கரைத்தான் வகையாக இருக்கவைத்து
ஆனைகட்டும் சங்கிலியால் அடைவாக மேல்பூட்டி
மிஞ்சினசங்கிலியை காலில்விலங்காக பூட்டிவிட்டார்

சங்கரையுந்தான்பார்த்து அத்தான்தானுமப்போ
ஏதுசொல்வார்
ஆனைகட்டும் சங்கிலிதான் உனக்கு அதுவெகுநீளமல்ல
உங்கள் அண்ணர் ஆக்கினைகள் சொல்லிவைத்தேன் அடங்கி
இரும்பேசாமல்
சத்தியத்தில் போனவர்கள் சதிராய் திரும்புமட்டும்
எங்களுடகாவலிலே இருந்தஇடம் பேராதே

இந்தமொழிகள்சொல்லி சாம்பானுக்கு அப்போது
ஏதுசொல்வார்
படைமன்னர் கூட்டமிட படைமுரசு முழக்குமடா
அந்தமொழிகள் சொல்லி எதிரில்லாபெருமாள்
அரண்மனையில் உள்புகுந்து

## வேடுபடைமேல் அத்தை பிள்ளை மூவரும் சண்டை செய்யப் போகுதல்

ஆடைவிரித்தெடுத்து மூவரும் அலங்காரமாய் வரிந்துகட்டி
கட்டினார்கச்சைகளை அதின்மேல் கவிழ்த்துவிட்டார்
சுங்குகளை
ஒட்டியாணம் பூட்டெடுத்து இடையில்பதித்து அப்போ
பதினெட்டுவகை ஆயுதமும் பாங்காய் வரிந்துகட்டி
படைப்போருசெய்யவே எதிரில்லாப்பெருமாள் பாங்கான
காண்டீபம்

எதிர்த்தாரை ஊடறுக்கும் அந்த எமனாசூரன்கணையை
பாங்காகத்தானெடுத்து வேடுபடை பொருத வேணுமென்று
அத்தைமக்கள் மூவரும் வந்து ஆசாரம் நிற்கையிலே
வெற்றிமன்னன் பறைநகுலன் வீரபாகுசாம்புவனும்
படைமுரசுமுழக்கினான் சுத்தாலை பட்டணத்து வீதியிலே

படைமுரசு சத்தம்கேட்டு படைமன்னர் கூட்டமிட்டார்
வெள்ளித்தடிக்காரர் விருதுமன்னர் கூட்டமிட்டார்
போட்டமண்டி வாங்காத பொந்திலியர் கூட்டமிட்டார்
மலுக்கர் துலுக்கர்களும் மாறுபாஷைக்காரர்களும்



கட்டியங்கள் கூறிவரக் கலிவாணர் கூட்டமிட்டார்
ஆனைபடை சேனைதளம் அத்தனையும் கூட்டமிட்டு
வேடுபடைபொருத இவர்கள் வீரியர்கள் வரும்போது
பச்சைக்குடைவிருதும் எதிரில்லாப்
பெருமாளைப்பத்திவரும் ராணுவமும்
சிவப்புக்குடை விருதும்எதிரில்லாப் பெருமாளை
சேர்ந்துவரும் ராணுவமும்

நீலக்குடைவிருதும் இவர்களைநெருங்கிவரும் ராணுவமும்
அதிரப்படையெடுத்து எதிரில்லாபெருமாள் அப்போ
வருகையிலே
மணப்பாறைசந்துவழி அத்தைமகன்சேனை வருகுதே
அந்நேரம்
மேனாட்டுவேடுதளம் அங்கேவெகுதளங்கள் கூட்டமிட்டு
கடலும்சமுத்திரமும் கலந்து பிரிந்தாப்போல்

வெள்ளமதுபோல வீரமலைவனங்களெல்லாம் வேடுதளம்
நிற்குதப்போ
அந்தப்படை சேனை எல்லாம் அணி அணியாய் வந்துநிற்க
கலந்துபடை பொருதுகையில் காரிடிபோல் முழங்குதப்போ
வானமிரைகிறது வீரமலைவனங்களெல்லாம் சிலைஒடும்
கணைகள் பறக்கிறதும் இருதரத்தார்கலந்து போர்
செய்கிறதும்

பார்த்து இருந்தாரப்போ எம்பெருமான் படைப்போரு
செய்கிறதை
காண்டீபம் தானெடுத்து நாம் கணைதொடுக்க
வேணுமென்று
எமனாசூரன்கணைக்கு அதற்கு ஏதுவான உபதேசம்சொல்லி
காண்டீபம்தானெடுத்து கையிலே வில்பிடித்து
இதமான கணை தொடுத்தார் எதிரில்லாப்பெருமாள்தான்
வந்துஎதிர்த்து முன்னே வகையாய்க் கணைதொடுத்தார்

எமனாசூரன் கணையை இதமாய்த்தொடுத்துவிட
கிள்ளிச்சிறகறுத்து அந்தகணை கண்டபேரை ஊடறுத்து
மேகம் இறைத்தாப்போல் விண்ணுலகம்தான் பறந்து
மேகமண்டத்தில்போய் நின்று வெகுமழை
பொரிந்தாற்போல்
மாரிபொழிந்தாப்போல் மழைமேகம் சூழ்ந்ததுபோல்

மாரிகணைபொழிந்து வேடுதளம் மடிந்திடுதே அந்நேரம்
வேடுதளம் மடிந்து இவர்கள் வெற்றிகண்டு வாரபோது
ஆயனுடகாரணத்தால் வீரமலை ஐவனங்கள் காந்தலிட்டு

## அத்தை பிள்ளை மூவரும் நச்சு நீருண்டு மடிதல்

மலை ஆளிதணல்வீச அத்தைபிள்ளை சேனை எல்லாம்
மயக்கங்கள் ஆகுதப்போ
தண்ணீர் தண்ணீர் என்பாரும் தாகவிடாய் ஆவாரும்
மேனிமயங்குவாரும் விடாய்தாக்கி வீழ்வாரும்
அந்தநல்ல வேளையிலே ஆயனுட காரணத்தால்
மலைநாகம் செத்து இற்று மழையுரம் வருகுதே நச்சுத்
தண்ணீர்

ஆனைபடை சேனையெல்லாம் அத்தைமக்கள் மூவருந்தான்
நச்சு நீர்வாரியுண்டு நல்லுயிரும் மாண்டுவிட்டார்
தண்ணீர் தவியாமல் வீரபாகு தாகவட்டம்* ஆகாமல்
மேனிமயங்காமல் சாம்பனுக்கு மெய்வாட்டம் ஆகாமல்
சங்கருக்கு சேதிசொல்ல ஆயன் சவுரியத்தைத்தான்
கொடுத்தார்

ஆனைபடைசேனையெல்லாம் அத்தனையும்
மாண்டதைத்தான்
கண்டுமனங்கலங்கி வீரபாகு கண்ணீர் சொரிந்துமப்போ

* தாகவாட்டம்



என்செய்வோம் என்றுசொல்லி வீரபாகு எண்ணி
நினைத்தழுது
அழுதுஇனி ஆவதென்ன சின்னாண்டவர்க்குச்
சொல்வமென்று
வந்து துரிதாக வாள்வீரர்சங்கருக்கு முன்னேநின்று
ஏங்கி அழுதுமப்போ என்னசொல்வான் வீரபாகு
அரசன் இல்லாதபடை சுவாமி ஆண்மையும் செய்யாமல்

ஆனைபடைசேனைதளம் சுவாமி அத்தனையும்
மாண்டிட்டுதே
ஆனைபடைதோற்றாய் வெள்ளானைகுஞ்சரத்தை நீ
இழந்தாய்
குதிரைப்படைதோற்றாய் வெள்ளானைக்குஞ்சரத்தை நீ
இழந்தாய்
ஆனைகட்டும் சங்கிலிதான் அதுதான் பெரிதாச்சோ
தன்னுயிர் தப்பவேணுமென்று தாட்சிணையாய்ப் பூண்டதிது

அந்தமொழிகள்சொல்ல சங்கருக்கு அதிகோபமாகியேதான்
கண்கள்சிவந்து சின்னாண்டவர்க்கு கடுங்கோபம்
சினத்துடனே
ஆக்கரித்துபல்கடித்து சங்கர் அதட்டி எழுந்திருந்தார்
ஆனைகட்டு சங்கிலிதான்தெரித்து அபயமிட்டு
போய்விழுமாம்
வீசிஎழுந்திருக்க வெள்ளானைகட்டும் சங்கிலி
விலங்குதரித்துவிடும்

வாங்கோபம் சினத்துடனே முத்தானவாய் திறந்து
ஏதுசொல்வார்
வெற்றிமன்னா பறைநகுலா வீரபாகு சாம்புவனே
சிவசோழர் கொடுத்த அந்த தெய்வப்புரவி கொண்டுவந்து
கட்டுமடாகல்லணைநீ கல்லணை நெகிழாமல்
அந்தமொழிகள்சொல்லி சங்கர் அரண்மனையில் உட்புகுந்து

பேழைதிறந்தெடுத்து புடவைதனை விரித்து
ஆடைவிரித்தெடுத்து அலங்காரமாய் வரிந்துகட்டி
ஆபரணபெட்டிதனை அடைவாகத்தான் திறந்து
பூட்டினார்பொற்பனுதி தன்னுடபொன்னுந்திரு மேனி
எல்லாம்
மார்புநிறைந்த வைரமணிதாழ் வடமும்

மாணிக்கம்பதித்ததொரு மார்பில் பதக்கமிட
பத்துவிரலுக்கும் பசும்பொன் கணையாழி
எட்டுவிரலுக்கும் இசைந்த கணையாழி
கடதாரம் முடதாரம் கண்டசரம் பூட்டியேதான்
பொந்திகடுக்கனிட்டு பொன்னெழுத்தும்* பாகுகட்டி

தும்பி பதக்கமிட்டு முத்துதுராய் மிகப்பதித்து
தங்கத்தினால் இழைத்த சருகுவார்த்த நிசாருதொட்டு
அல்லிக்கயிறெடுத்து அலங்காரமாய்ப் பூட்டியேதான்
வண்ணக்கச்சைதானெடுத்து அதைவாகாய் வரிந்துகட்டி
வகையாய் வரிந்துகட்டி வலதுபுறம் சுங்குவிட்டு

எண்ணெய்க்கச்சை தானெடுத்து அதை இதமாய் வரிந்துகட்டி
இதமாய்வரிந்துகட்டி இடதுபுறம் சுங்குவிட்டு
பட்டுக்குஞ்சம்பறக்கவிட்டு அதைப் பாங்காய் வரிந்துகட்டி
ஒட்டியாணம் பூட்டெடுத்து அதை ஒழுங்காய்
இடையில்பூட்டி
பதினெட்டு ஆயுதமும் பாங்காய் வரிந்துகட்டி

பத்துக்கட்டி போட்டடித்த பாரமான கேடயமும்
பாரமான கேடயத்தை பாங்காக மேல்பூட்டி
எட்டுக்கட்டி போட்டடித்த இரணங்கண்ட மந்திரவாள்
இரணங்கண்ட மந்திரவாள் அதை இதமாகத் தானெடுத்து
செம்பரிசை சீராவை சீக்கிரமாய்த் தானெடுத்து

* பொன்னமுத்தம்



ஆரூரளி தூங்கு மஞ்சம் ஆசாரம் வந்துநின்று
அப்போ தெய்வப்புரவிதனை வீரபாகு சீக்கிரமே
கொண்டுவந்து
பஞ்சகல்யாணியது பஞ்சவர்ண நீலாவை
கட்டினான் கல்லணையை வீரபாகு கல்லணை நெகிழாமல்
அங்கு வடிபொன்னாலே குதிரைக்கு ஆபரணம்
பொன்னாலே

முன்னெற்றிசல்லி முகமெட்டும் பொன்னாலே
பின்னெற்றிசல்லி பிடிவாரும் பொன்னாலே
நெற்றிக்குசுட்டிகட்டி நிழல்பார்க்க கண்ணாடி
கொண்டைக்குகொப்பி கொண்டுவந்து தான்பதித்து
பூட்டுகிறபனுதியெல்லாம் பொட்டெனவே பூட்டியேதான்

பெரியகாண்டி அம்மன்துணை உண்டாக வேண்டியது
செங்கமா முனியப்பன் துணை உண்டாக வேண்டியது
வாது கருப்பண்ணன்துணை உண்டாக வேண்டியது
வையம்பெருமாள் செய்யபெருமாள்துணை உண்டாக
வேண்டியது (என்று)

ஒற்றைக்குதிரைவிட்டு சங்கர்ஒருபடை போகையிலே
உத்தமியாள் நல்லதங்கம் அப்போ ஓடிவந்து முன்னேநின்று
என்சொல்லைமதியுமண்ணா என்சொல்பேச்சைக்
கேளுமண்ணா
உத்தமியாள் சொல்கிறதை ஒருவார்த்தை கேளுமண்ணா
என்சொல்லைமதியேனென்றும் பெரியண்ணர் என்பேச்சை
கேளேனென்றும்

பெண்சொல்லைக்கேட்டு சுவாமி பெருமாள்
பிழைபோனாரென்றும்
உன்சொல்லை நான்கேட்டு உலகாள்பவன்பிழை
போவேனோ என்றும்
தங்கைசொல்லைத் தட்டிவைத்து பெரியண்ணன்
தட்டான்பின் போனாரே!

உத்தமியாள் சொன்னவார்த்தை ஊடுருவ நீர்பாரும்
சத்தியத்தில் போனவர்தான் பெரியண்ணர் சதிராய்த்
திரும்புமட்டும்
விடுதிவிட்டுப்போகவேண்டாம் அண்ணாவினைப்போரும்
செய்ய வேண்டாம்
வாரவிதிகள் வந்தால் அரண்மனை வாசலிலே வரட்டும்
இனி
ஆனைப்படை தோற்றாலும் மைத்துனர் அத்தைபிள்ளை
மாண்டாலும்

குதிரைப்படை தோற்றாலும் அண்ணாகோடிபடை
மாண்டாலும்
விடுதிவிட்டு குதிரை ஏறி அண்ணாவெளிப்பட்டுப்
போகவேண்டாம்
அந்தமொழிகேட்டு சங்கர் அப்போது ஏதுசொல்வார்
என்ன இருக்க உத்தமியே நீ ஏதுமொழி சொன்னாயம்மா
ஆனைப்படை தோற்று மைத்துனரை அத்தாவை நானிழந்து

குதிரைப்படை தோற்று மத்தகத்து குஞ்சரத்தை நானிழந்து
நிற்கப்பொறுக்குமா அம்மா நிற்க மனங்கூடுமா
அதுவார்த்தை சொல்லியேதான் குதிரையை அப்போ
நடத்துகிறார்
ஒற்றைக்குதிரைவிட்டு சங்கர் ஒருவருமாய் போகையிலே
உத்தமியாள் நல்லதங்காள் உடன்பற்றிப் பின்தொடர்ந்து

பட்டணத்தில் உள்ளவர்கள் பார்ப்பார் முதலிமார்கள்
கணக்கர்முதலிமாரே அட காரியப்பேர் அண்ணமாரே
கோட்டைவாசல் சாத்திஇப்போ அண்ணர்குதிரைவாகை
பிடியுமென்றாள்
அந்தமட்டும் பட்டினத்தில் அனைவோரும் ஓடிவந்து
சுவாமி பராக்கென்று சரணம் பணிந்துமப்போ
சற்றே பொறுக்கவேணும் சுவாமி தாமதங்கள்
செய்யவேணும்



சத்தியத்தில் போனவர்தான் (சுவாமி பெரியண்ணர்)
சதிராய்த்திரும்பு மட்டும்
அந்தமொழிகள் சொல்ல சங்கர் அப்போது ஏதுசொல்வார்
வாருங்கள் அண்ணமாரே உங்களுக்கு வார்த்தை நான்
சொல்லுகிறேன்
ஆனைபடை தோற்று அத்தைபிள்ளை மைத்துனரை
நானிழந்து
நிற்கப்பொறுக்கலையே அண்ணமாரே நிற்கமனங்
கூடலையே

கோட்டை திறங்களிப்போ நீங்கள் குதிரைவாகை
விடுங்களிப்போ
அந்தமொழிகள் சொல்ல பட்டணத்தில் உள்ள அனைவருமே
ஏதுசொல்வார்
என்னதான் சொன்னாலும் சுவாமி இதமாய் உரைத்தாலும்
சற்றே பொறுக்கவேணும் சுவாமி தாமதங்கள்
செய்யவேணும்
அந்த மொழிகள் சொல்ல சங்கருக்கு அதிகோப
மாச்சுதப்போ

கொடுஞ்சவுக்குதனை ஆட்டிபுரவியை கொடுங்கணைத்து
தான்திருப்ப
பட்டாணி சவுக்கெடுத்து பளீரெனவே வீசிவிட்டார்
ஏழுசுத்து கோட்டையையும் எட்டா மதிலையும்தான்
எட்டாமதிலையும்தான் குதிரை தட்டாகத் தாண்டிட்டுதே
பின்தட்டைதான் பிடித்து வீரபாகு குதிரையின் பின்னே
குதித்தானப்போ

காலாலே தட்டிவிட்டார் குதிரை ஆலாப்போல பறந்து
ஆலாப்போல பறந்து குதிரை அதிவேகமாய் வருதே
மணப்பாறை சந்துவழி குதிரைவிட்டு வருகிறார் நல்லசங்கு
விடுதிவிட்டு நல்லசங்கு வெளிப்பட்டு வரும்போது
பதினாறு முடிந்ததுவே சங்கருக்கு பாரதம் முடிக்கவேணும்

## மாயவர் சங்கர் மேல் அம்பு விடுதல்

மாத்தானைப்போல மாயன்சங்கரை மடிந்தகளம் செய்யவேணும்
எதிராளிபோல நின்று சங்கரை இறந்தகளம் செய்வோமானால்
தம்பி பலிக்காக (பதினெட்டு நாட்டையும்) பொன்னர் தானுங்கருவறுப்பார்
மாயன் பெருமாள் மனதில் கபடுடையான்
எதிராளிபோல மாயன் எடுத்தார் ஒரு சொரூபம்

பழிகாரன்போல மாயன் பாங்காய் வடிவெடுத்தார்
மாத்தானைப்போல சுவாமி மாயன் வடிவெடுத்தார்
தங்கத்தினாலிழைத்த சரிகை வார்த்த குல்லாவும்
சரிகை வார்த்த குல்லா தலையில் மிகச்சூடி
சாய்ந்த கொண்டை மேலணிந்து மீசை தலையூருக்காளியைப் போல்

வாழைத்த்ண்டை வில்லாக மல்லிகைப்பூ கணையாக
சிலை வளைத்து வில்லாக அதை சிருஷ்டித்தார் மாயவனார்
வில்லும் கையில் பிடித்து சுவாமி வேடனைப் போல் வடிவெடுத்தார்
சல்லிகட்டும் வில்லெடுத்தார் தலையூருக்காளியைப்போல்
வெள்ளிக்கட்டு வில்லெடுத்து சுவாமி வேட்டுவனைப் போலானார்

எதிராளிபோல சங்கரை ஒளிந்திருந்து கொல்லவேணும்
சந்துவழிபார்த்து சுவாமி தானும் ஒளிந்திருந்து
பச்சைக்குலை முறித்து சந்து வழியில் பாங்காய் ஒளித்துவைத்து
பச்சைக்குலை மறைவில் சுவாமி பதிவிருந்தார் வேடுவன் போல்
மணப்பாறை சந்துவழி குதிரைவிட்டு வருகிறார் நல்லசங்கு
மார்புக்கு நேராக குதிரை வருகுது என்று சொல்லி



மாத்தானைப்போல மாயன் மண்டியிட்டுத் தான்பதுங்கி
சிலைவளைத்து வில்வாங்கி அப்போ சீராய்க்கணை தொடுத்தார்
செங்கணையின் அம்புமுனை தெய்வப்புரவியைத் தப்பிவிட்டு
நெத்திக்கு நேர் பிடித்து மாயன் நேர் கணையின் அம்பை விட்டார்
விட்டசரம் அம்பாகி விரைந்து கடல்குமுறி

மின்னல் ஒளிபோல வெளிச்சமிட்டுக் கண்பறித்து
ஆவிதணல் வீசி அறுபது வேங்கைமரம் கருகி
வீரமரம் தட்டுருவி விரைந்துமது போகையிலே
ஆவிதணல் வீசியப்போ வேங்கைமரம் பட்டுதப்போ
வாரதொரு அம்பைச் சங்கர் வகையாகத்தான் பார்த்து

நெற்றிக்கு வந்த அம்பை சங்கர் நேரிசத்தால் தட்டிவிட்டு
வந்ததொரு அம்பை சங்கர் வலதுகையில் தான்பிடித்து
அம்பு வந்த திசைபார்த்து குதிரையை அப்போ திருப்புகிறார்
அம்பு வந்த திசைபார்த்து குமாரசங்கு ஆக்கரித்து பல்கடித்து
பச்சைக்குலை மறைவில் வேடா பதுங்கி இருந்து நீயும்

மண்டியிட்டெழுந்திருந்து வாகாய்க் கணைதொடுத்தாய்
என்று வாங்கோபம் சினத்துடனே வாய்திறந்து ஏதுசொல்வார்
(வேடா) நீ எதிர்த்துப் போர் செய்யாமல் ஒளிந்திருந்து அம்புவிட்டாய்
என்னைக் கல்லம்பு* கொண்டு கலங்கவே எய்தாயே
உனது மணிமகுடம் தரித்த முடி மந்திரவாளுக்கிரைசெய்வேனென்று

வட்டமிட்டு குதிரை விட்டு மந்திரவாள் தும்புவிட்டு
மெல்லியவாள் தும்புவிட்டு வீசுகிறார் அப்போது

---

* கள்ளம்பு

வீச்சுக்கு தப்பி ஆயன் வேடனைப்போல்
விலகிக்குதிக்கையிலே
விலகிக்குதிக்க நீ வெகுசமர்த்தனடா வேட்டுவனே
வட்டமிட்டு குதிரைவிட்டு வாகுடனே வீசுகிறார்
மந்திரவாள் வீச்சுக்குத் தப்பி ஆயன் மாத்தானைப்
போலவேதான்
அப்போ மாத்தானைப்போல ஆயன்
மண்டியிட்டுத்தான்பதுங்கி

எதிராளிபோல மாயன் ஒதுங்கிப் பதுங்கியேதான்
ஒதுங்கிப் பதுங்கியேதான் வேங்கைமரத்து ஒளிவிருந்து
சொல்லுகிறான்
கும்பிட்டாரை வெட்டாத குருகுலத்து வங்கிசம் நீ
உன்னுடன் எதிர்த்தாரை வெட்டினால் ஏற்கும் சவுரியந்தான்
விழுந்தவரை வெட்டினால் உனக்கு வீரியமும் ஏற்குமோடா

அந்த மொழிகள் சொல்ல குமாரசங்கு அப்போ
மனதிலெண்ணி
மானிடசீவனென்றால் மத்திரவாளுக்குத் தப்பி மறுவார்த்தை
பேசுறதா
மானிட சீவனல்ல சுவாமி மாயனுமாய்க் காணுமிவர்
மாயவனார் என்று சொல்லி சங்கர் மனதில் தெரிந்துமப்போ
ஏறினகுதிரைவிட்டு சுவாமியை இறங்கிப்
பணிசெய்வமென்று

உத்தமாதேசி விட்டு சங்கர் இறங்கிக் குதிக்கையிலே
மாயவனார் என்று சங்கருக்கு மனதில் தெரிந்திடுமாம்
இறங்கியே சங்கர் நம்மை இருகாலும் தான் பிடிப்பார்
என்று மாத்தானைப்போல சுவாமி மாயவனார் ஏகிவிட்டார்
கையிலிருந்த அம்பை சங்கர் கட்டழகர் தான்பார்த்து

தாயார் பெரியநாச்சி தகப்பனார் குன்றுடையான்
பொன்னம்பலத்தில் உங்களையர் பேறுபெற்று வந்தபடி



வயது நூறு என்று சொல்லி உங்களை வாக்குவரம்
வாங்காமல்
பதினாறு போதுமென்று உங்களையர் பாலன் வரம்
வாங்கிவந்தார்
பதினாறு முடிந்ததினி நீங்கள் பரமன் கதி சேரவேணும்
எழுத்து முடிந்ததினி நீங்கள் இங்கிருக்கக்கூடாது
என்றுமே அம்பிலே தான் எழுதி இருந்ததையும்

பார்த்துமே தம்பி சங்கர் பரமன் செயல்தானெனவே
செங்கணையின் அம்பை சங்கர் சீக்கிரமாய்த்தான் பார்த்து
மாயவனார் அம்பு என்றால் இது மாயமாய் தானுமினி
நெற்றியிலேபட்டு நேராகத் தானுமிப்போ
வன்னிமரம் - வைரமரம் வாகாகத் தட்டுறுவி

வேங்கை மரம் வீரமரம் விதமாகத்தான் பாய்ந்து
திருப்பாற்கடல் மூழ்கி தினதீர்த்தம் தானாடி
செங்கணையின் அம்பு சீருடனே எந்தனிடம்
வரவேணும் என்று சொல்லி சங்கர் வகையுடனே அம்பை
விட்டார்
சங்கர் மொழிப்படியே அம்புதான் பாய்ந்து நெற்றிதனில்

மரங்கள்தனில் பாய்ந்து மகாதீர்த்தம் தானாடி
வந்ததே அம்பு வகையுடனே சங்கரிடம்
அப்போ குதிரைமேல் போட்டிருந்த குங்குமப்பட்டெடுத்து

## சங்கர் பிராணனை விடுதல்

பட்டைவிரித்தெடுத்து சங்கர் பாங்காய் மடித்துவைத்து
பூமியிலே நாமிருந்தால் பொன்மேனி புழுதி படியுமென்று
பாறைமேல் பட்டு அதை பாங்காய் விரித்துவைத்து
அதன்மேல் வலதுகாலை ஊன்றி வைத்து இடதுகால்
மண்டியிட்டு
மண்டியிட்டு காலூன்றி மார்பில்வைத்து கேடயத்தை

வடக்குமுகம் திரும்பி வைகுந்தம்பார்வையுந்தான்
கைலாசம் பார்த்த கண்ணு குமாரசங்கு கண்ணுறக்கமாகி
விட்டார்

தாரை அடியெடுத்து வீரபாகுதான் வரும்வேளையிலே
கண்டார் குமாரசங்கு படுகளத்தை கண்கலங்கித்தான் பார்த்து
ஏங்கி அழுதுமவன் என்ன சொல்வான் வீரபாகு

மலையோட சிற்றெறும்பு உன்னோட மற்போரு
செய்தார்கள்

எதிர்த்துப்படைபொருதி உன்னை இந்த
இறந்தகளமாகவேதான்
மடிந்தகளமாக்க உனக்கு மாத்தான் இருந்தானே
என்று ஏங்கி அழுதுமப்போ என்ன சொல்வான் வீரபாகு
சிவனை நினைந்து ஸ்ரீராமரையுந்தான் தொழுது

எழுதிய பிரமனைத்தான் ஈஸ்வரனைத்தானினைந்து
சத்தியத்தைக்கூறி இப்போ எங்கள் ஆண்டவர் சதிராய்
வெள்ளாங்குளத்தில்
சதிராக இப்போது எங்கள் ஆண்டவர் சரிகுமுழி வந்தாலும்
நான் அடிக்கும் தவில் முரசுசத்தம் எங்கள் ஆண்டவர்க்கு
சரிகுமுழி கேட்கவேணும்
அடித்தான் கடிங்காளை வீரபாகு பிடித்தானே வெற்றிக்
கொம்பை

வெற்றிக்கொம்புதான் பிடித்து வீரபாகு அந்நேரம்
அந்தவெற்றிக்கொம்பு கடிங்காளை விண்ணுலகம்
போங்களென்று
அப்போ கடிங்காளை வீரபாகு ஆகாசமாய் விட்டெறிந்து

**வீரசாம்பான் மடிதல்**

மந்திரவாள் தும்புவிட்டு வீரபாகு வகையாகத் தான்வாங்கி
அலகு நிறுத்திவைத்து வீரபாகு அப்போ மனந்துணிந்து
அட்டமிட்டு பவனிகொண்டு அறுபதடி பின்குதித்து



வட்டமிட்டு விளையாடி வாள்மேல் வந்து குதித்தான்
அப்போ
வாளுமே பட்டுருவி வீரபாகு மடிந்தகளமாகிவிட்டான்
இந்தப்படியாக இங்கே இருக்குமந்த வேளையிலே

**பொன்னம்பல சுவாமி சத்தியம் செய்தல்**

சத்தியத்தைக் கூறியேதான் பொன்னாண்டவர் தட்டான் பின்
போனவரும்

சத்தியமே பண்ணவே குதிரைவிட்டு தானும் இறங்கியப்போ
செல்வவிநாயகனைத் தெண்டனிட்டு கைமுகஞ்சு
கணபதி சக்தியென்றால் கனசக்தி என்பார்கள்
(இவன்) வைத்த கருவூலத்தை மனதாரத் தொட்டதில்லை

இவன் கொண்டுவந்த கருவூலத்தை குறிக்கட்ட வீழ்த்ததில்லை
மலையளவு வைத்தாலும் கருவூலத்தை தினையளவு
நானறியேன்
மறுசாட்சி வைப்பமென்றால் மானிடரைக் காணோமிப்போ
நீதி விளங்கவேணும் சுவாமி நீதி பார்த்து நிற்கவேணும்
ஞாயம் விளங்கவேணும் சுவாமி நடுபார்த்து நிற்கவேணும்

விக்னேஸ்வரரை சுவாமி விநாயகரைத் தெண்டனிட்டு
சத்தியமும் பண்ணவேதான் தான்வாரார் நல்லபொன்னு
சிவனை நினைத்துமப்போ ஸ்ரீராமரையுந்தான் தொழுது
எழுதும் பிரம்மாவை ஈஸ்வரரைத்தான் தொழுது
மாயன்பெருமாளை மனதிலேதான் தொழுது

தாயை மனதிலெண்ணி தன்பிறப்பை நெஞ்சிலெண்ணி
சன்யாசி ஐயரையும் தவங்கொடுத்த புண்ணியரையும்
போர்கொடுத்த பொன்னம்பலசுவாமி பொசிவாசி ஐயரைத்
தானினைந்து
வாகெடுத்து இளமயிரை வதிர்ந்து பிரித்துவிட்டு
கூட்டிப் பிடித்துத்தான் கோடாலி
முடிந்துமப்போதான்போட்டு

மந்திரவாள் தும்புவிட்டு வகையாகத்தான் வாங்கி
சத்தியங்கள் பண்ணுகிறேன் தட்டானேதான்
பார்த்துக்கொள்ளுமடா
ஓங்கிக்குதித்துமப்போ பொன்னர் உட்குமுழிதான் புகுந்தார்
ஐநூறு நாகம் குமுழியில் அடைகிடந்து வாழ்கிறதை
தொண்ணூறு நாகம் குமுழியில் துள்ளி விளையாடுறதை

மலைவிரியன் செந்நாகம் வாழும் குமுழியது
எட்டடி விரியன் முதல் குமுழியில் இருந்துமங்கே
வாழ்கிறதை
கண்டு பொன்னாண்டவரும் கனத்ததொரு வாள் எடுத்து
வீசினார் பொன்னாண்டார் குமுழியில் வீற்றிருந்த
அரவமெல்லாம்
துண்டு துண்டாகவேதான் தூள் தும்பியாக வெட்டி

அடைத்திருந்த அக்குமிழி ஆறுபோல் தானோட
எட்டி அங்கே வாள்வீச குமுழியில் இருந்ததொரு
சர்ப்பமெல்லாம்
மாண்டதுவாம் சர்ப்பமெல்லாம் குமுழிவழியாகத்தான்திறக்க
அடைத்திருந்த குமுழி ரத்தம் ஆறுபோல் தானோட
ரத்தம்பெருகி அங்கே குமுழியில் நாலுபக்கம் சிவப்பாக

இப்படி உட்குமுழி புகுந்து பொன்னர் புறகுமுழி வாரபோது
சுற்றி எங்கும் பார்த்தான் தட்டான் சுமைக்கேற்ற
கல்லுமில்லை
விக்னேஸ்வரருக்கு விநாயகர்க்கு முன்னாக
மூக்கரைப் பிள்ளையாரை எடுத்து பொன்னர் முடிமேலே
போடவென்று
கற்பனைகள் தான் நினைத்து பொன்னர் தலைமேலே
கல்போட
வந்துஎடுத்தாளே மூக்கரை பிள்ளையாரை வகையுடனே
அந்நேரம்



வந்து தொட்ட தட்டானை பிள்ளையார் மல்லாக்காய்த்
தள்ளிவிட்டார்
மல்லும் தள்ளுமாகவேதான் தட்டான் மல்லாடி நிற்கையிலே
உட்குமுழி புகுந்து சுவாமி பிறகுமுழி வந்துவிட்டார்
சத்தியம்நான் பண்ணினது தட்டானே சம்மதியும்
அல்லவோடா
அந்தமொழிகள் சொல்ல தட்டான் அப்போது ஏது
சொல்வான்

ஒருதரம் சத்தியந்தான் சுவாமி உலகத்துக்கு ஏற்காது
பிறகுமுழி உள்புகுந்து சுவாமி உள்குமுழி வந்தீரானால்
சத்தியம் வந்ததென்று சுவாமி சம்மதிப்பேன் நானடியேன்
அந்தமொழிகள் சொல்ல பொன்னர் அப்போது
ஏதுசொல்வார்
சிக்கினேண்டா உன்கையில் ஒருவாக்கினால்
சிரசுஉள்பட்டேனடா

கட்டுப்பட்ட மான்போல தட்டானே சிக்குபட்டுப்
போனேண்டா
முன்விழுந்த கோந்தையைத்தான் வாரிப்பின்னாடிதான்
முடிந்து
கூட்டி மயிர்முடிந்து கோடாலி முடிந்துமங்கே தான்போட்டு
பிற குமுழி உட்புகுந்தார் பொன்னம்பல சுவாமி
காய்ந்துவரும் தண்ணியிலே பொன்னர் நீந்திவரும்
தாராபோல்

ஓடிவரும் தண்ணியிலே ஒதுங்கிவரும் நாரையைப் போல்
தள்ளாடித் தள்ளாடி (வெள்ளாங்குளத்தில்) சரிகுமிழி
வாரபோது
வெற்றிமன்னன் பறைநகுலன் விருதுபறை முழக்கினது
தவில்முரசு முழக்கினது பொன்னருக்கு சரிகுமுழி
கேட்டுதப்போ
எண்ணி மனங்கலங்கி அப்போ ஏதுசொல்வார்
நல்லபொன்னு

(சிவ-சிவா) மண்ணிழந்தேன் மனையிழந்தேன் வாள்வீரன்
சங்கரையும் நானிழந்தேன்
பொன்னிழந்தேன் பொருளிழந்தேன் பொற்கொடியை
நானிழந்தேன்
மேனாட்டு வேட்டுவர்க்கு இவன் மேலாளாய் வந்தவன்தான்
தலையூருக்காளிக்கு இவன் தன்னாளாய் வந்தவன்தான்
வீணாய் வழக்கிழுத்து படுபாவி வீண்சத்தியம் கேட்கிறானே
தன்மனதிலெண்ணியே பொன்னர்
தான்வருகும்வேளையிலே
குமுழிதோரணக்கல்லை பிடுங்கி உட்குமுழி தூணிலே
சாய்ந்துமப்போ
தலைமேலே கல்லைவைத்து தட்டான் நிலையாக
நிற்கிறானே
தட்டான் நிழலுமப்போ (மந்திரவாள் சோதி)
தண்ணியிலேதான் துலங்குமப்போ
பார்த்தாரே கண்ணாலே-தட்டானை-பாரமுடி நல்லபொன்னு
தலைமேலே கல்லைபோட தட்டான் சரிநின்றுவிட்டானே
என்று வந்தவழியோட பொன்னர் மார்மூண்டுதான்திரும்பி
பிற குமுழி மேலேறி சுவாமி பின்னாக வாரபோது
கண்டாரே கண்ணாலேதான் சுவாமி கனத்தமுடி வேந்தரசன்
தட்டான் தண்ணியைப் பார்த்தமுகம் தானுமெங்கும்
பாராமல்

தலைமேலே கல்லைவைத்து தட்டான் நிலையாக நிற்கிறதை
என்தலையில் போடவாநீ இப்பெரிய கல் எடுத்தாய்
மேனாட்டு வேட்டுவர்க்கு நீ வேகாளாய்* வந்தவன்தான்
வீணான வீணில் நீ என்னை வீண் சத்தியம்
கொண்டாயிப்போ
தலைமேலே கல்போட சதிநினைத்த தட்டான் நீ

* வேவு ஆளாய்



என்வார்த்தை அழிக்கவடா வெகுசமர்த்தனா தட்டான் நீ
என் தவத்தை அழிக்க வெகு சமர்த்தனா என்று சொல்லி
கண்கள் சிவந்து பொன்னர் கடுங்கோபமாகியேதான்
மெல்லியவாள் தன்னாலே தட்டானை வீசினார்
இரண்டுதுண்டாய்
தட்டான் தலையற்று அவன் சாய்ந்திருந்த தூணுமற்று
பக்கத்துத்தூணிலே கணையாழிபட்டு பதிந்ததே மோதிரங்கள்
வாளாலே வீசிவிட்டார் வட்டப் பாறைமேல் விழுக
தாருதாராய் அறிந்து தட்டான் சவத்தை கூறுகூறாய்த்
தள்ளுகிறார்
மந்திரவாள் முனையிலே சவத்தை வகையாகக் கூறுவைத்து
காக்கை கழுகினங்கள் கானகத்து வாகனங்கள்
ஈஇனங்கள் எறும்பினங்கள் எல்லவரும் வாய்காவல்
கல்லுள்ள காலத்துக்கும் இது கதையாய் நடக்குமினி
புல்லுள்ள காலத்துக்கும் இது புதுமை நடக்குமினி
என்றுமுள்ள காலத்துக்கும் தட்டான் இறந்துபோய் ஏச்சாச்சு
இந்த அபகீர்த்தி இது என்றைக்கும் பேராகும்
அந்த மொழிகள் சொல்லி பொன்னர் அப்புரவி கிட்டவந்து
கட்டிப் பிடித்துமப்போ குதிரையை கண்ணாலே
தானழைத்து
என்புரவி என் பறவை என்னசெய்வேன் நானுமிப்போ
மண்ணிழந்தேன் மனையிழந்தேன் தங்கை மாணிக்கத்தை
நானிழந்தேன்
பொன்னிழந்தேன் பொருளிழந்தேன் புலிக்குட்டி
சங்கரையும் நானிழந்தேன்
என்செய்வேன் என்று சொல்லி பொன்னர் ஏங்கிமனதுருகி
அப்போ தெய்வப்புரவிதானும் அனுமானித்துதலை
அசைத்திடுமாம்
எண்ணங்கலங்க வேண்டாம் சுவாமி யோசனைகள் செய்ய
வேண்டாம்

அங்கம் கலங்கவேண்டாம் அழவேண்டாம் அண்ணாநீ
கடலைக் குதிக்கிறேன் அண்ணா
உன்னைக்கொண்டுகருமலையைத் தாண்டுகிறேன்
விண்ணைக் குதிக்கிறேன் உன்னைக்கொண்டு வேகமாய்ப்
பறக்கிறேன்

தம்பி பலிவெட்டி சுவாமி நீ தான்திரும்பி நீவருவாய்
அப்போ தலையை அசைத்து குதிரை
அனுமானித்துச்சொல்லிடுமாம்

கண்ணீர் வழிந்திடுமாம் புரவிக்கு காட்டானைப்
பலம்வருமாம்

அங்குவடி மிதியாமல் அண்ணர் அப்புரவி மீதேறி
தம்பி பலிவாங்கவேதான் தான்போரார் நல்லபொன்னு
பதினெட்டு நாடுமே தம்பி பலிக்கு கருவறுக்க
எதிர்த்துவரும் வேட்டுவரை ரணதுண்டம் கூறுபோட

தத்துக்குதிரைவிட்டு பொன்னர் தார்வேந்தர் போகையிலே
இரத்னாசலமூர்த்தி ராஜலிங்க ஐயாவை
சீரங்க நாயகரை சிந்தையிலே தானினைந்து
துர்க்கைபிடாரியம்மா தொட்டியத்து மாகாளியம்மா
அருங்கரையில் செல்லாயி அப்போ மனதில் தானினைந்து

பெற்றெடுத்த பொன்னம்பல சுவாமி பொசிவாசி
ஐயரைத்தான் நினைந்து

சன்யாசிஐயரைத் தவங்கொடுத்த புண்ணியரைத் தான்
நினைந்து

தாயை மனதிலெண்ணி அவர் தன்பிறப்பை நெஞ்சிலெண்ணி
மாயன் பெருமாளை அவர்தன் மனதிலே தான்நினைந்து
தங்கள் உடன்பிறப்பைத் தானும் மனதிலெண்ணி

## பொன்னம்பல சுவாமி படைகளை வெட்டுதல்

பாலன்படை போறேன் பக்கமே வாங்களென்று
சுவாமிகளைத்தான்நினைக்க குதிரை வட்டமிட்டுத்தான்
திரும்பி



வட்டமிட்டுத்தான்திரும்பி வருகுதே அப்புரவி
வெட்டுவாத்துறை வழியாய் மதுக்கரையுந்தான் கடந்து
விண்பறந்து மண்பறந்து-புரவி-மேகமெல்லாம்
தாண்டிவரும்

தட்டைய நாடும் தாராபுரநாடும்
பள்ளிப்பொதிநாடு பருத்திப்பொதிநாடு

வெத்திநாடு வேங்கலநாடு இதுவெல்லாம் வெட்டியே
சங்கரித்து

ஆத்தூரு பின்னம் அடுத்த பவுத்திரமும்
காங்கையநாடும் கருவூர்ப் பதிநாடும்
வெண்டையம் குலுக்கிநாடு வெத்தியுள்ள நன்னாடும்
பூந்துறைநாடும் புகழ்பெரிய நன்னாடும்

ஓமலநாடு ஓங்குபுகழ் அறையநாடு
கிழக்குவளநாடு கீர்த்தி உள்ள மேனாடு
பெரியமலையாளம் பெருந்துறையும் நன்னாடு
வேடுதளம் உள்ளதெல்லாம் பொன்னர் வெட்டிக்கருவறுத்து
ஆணென்றுபிறந்தெல்லாம் பொன்னர் அறுத்துச்சிரமரிந்தார்

பதினெட்டு நாட்டையும் பொன்னர் பார்த்துக் கருவறுத்து
சதிராய்வரும்போது அப்போதான் சொல்வாள் வேட்டுவச்சி
தலையூருக்காளி பெண்கள் தண்ணீர்க்கு வாரபேர்கள்
இளைக்கம்பஞ் சோறுதின்னும் ஏழை வெள்ளாளன்மகனே
நாங்கள் பலிஎடுக்காதபோனாலும் நலமுடனே எங்களுட

வயிற்றுக்கருவும் உனை வகையாய் பலிவாங்கும்
எங்கள் வயிற்றுக்கரு உங்களை எதிர்ப்பலியும்
வாங்குமென்றாள்

அந்தமொழிகள் சொல்ல பொன்னருக்கு
அதிகோபமாகியேதான்
வாகையைத்தானிழுத்து குதிரையை வட்டமிட்டுத்தான்
திருப்பி
திருப்பிக்குதிரைவிட்டு ஆண்டவர் சீக்கிரமாய் அந்நேரம்

வயிற்றுக்கருவுகளை வகையுடனே தான்பார்த்து
ஆண்கருவு உள்ளதெல்லாம் பொன்னர்
அறுத்துக்கலக்கியேதான்
பெண்கருவு ஆனதையும்பொன்னர் பொருதிவைத்து
வாரபோது

## மாயவன் வேடுவர் குலம் தழைக்க பொன்னரிடம் வரம் வாங்குதல்

மாயன் பெருமாளும் மனதில் கபடுடையான்
மாற்றானைப் போலவேதான் மாயன் வேற்று ரூபம்
ஆகியேதான்
மொண்டிப்புனல் வேடனைப்போல் முன்னேவந்து
நின்றானே
அந்தநல்லவேளையிலே பொன்னர் அப்போ
குதிரையைவிட்டு
வருமந்தவேளையிலே புனல்வேடன் குதிரையை
வகையாகத் தானிறுத்தி

வாகையைத் தான் பிடித்து வகையுடனே நிற்கையிலே
பொறுமை பொறுத்த பொன்னாண்டார் ஏதுசொல்வார்
என்குதிரைவாகை பிடித்ததற்கு மந்திரவாள் வீசவேண்டா
என்று சொல்லிப் பொன்னர் மந்திரவாள்
இதமுடனேதானோங்க
அந்த நல்லவேளையிலே வேடன் அப்போது ஏதுசொல்வான்

மேனாட்டு வேடுவர்கள் எழுபது வெள்ளம்சேனை
அணி அணியாய்ப் போறபடை துணி துணியாய்வெட்டும்
பொன்னர்
பொன்னாளிக்கையா புனுகணிந்த மணிமார்பா
சந்தனமணிமார்பா தளத்துக்கெல்லாம் வன்னியனே
வேட்டுவரைக்குலவையிட்டு விழிபிடுங்கும் நல்லபொன்னு



கும்பிட்டாரை வெட்டாத குருகுலத்து வங்கிசமே
சாய்ந்தாரை வெட்டாத சதுரமுடி நல்லபொன்னு
அந்தமொழிகள் சொல்லி புனல்வேடன் அன்புடனே
நிற்கையிலே
என்ன வெகுமதிகள் உனக்கு இயல்புடனே வேணுமடா?
எனக்கு வெகுமதிகள் ஆண்டவனே ஏதொன்றும்
வேண்டாமினி

ஆனதொரு நாடுகள்தான் ஆண்கருவு இல்லாமல்
கருவருத்து போட்டதற்கு கர்த்தனே நீர்தானும்
கருவுகள் உண்டாகும்படி எனக்கு கனத்தவரம் தரவேணும்
அந்தமொழிகள் சொல்ல அழகு பொன்னாண்டவரும்
தன்மனதுதான் திரும்பி தானுமப்போ ஏதுசொல்வார்

கட்டைதழையுமடா கருவுகள் உண்டாகுமினி
வெட்டவெட்டத்தான் தழைக்கும் வெத்திவேங்கள
நாடுமென்று
சித்தமிரங்கியே பொன்னர் திருவாக்குத்தான் கொடுத்து
வாக்குமனுக்கொடுத்து பொன்னர் வருகிறார்
குதிரையின்மேல்
கௌசைநல்லபாளியிலே பொன்னர் கைகாலுஞ் சுத்திசெய்து

கத்திகளும்தானலம்பி கச்சைஉறை உள்போட்டு
காடுகடந்து பொன்னர்கடுகியே வாராரப்போ
மதுக்கரையுந்தான் கடந்து பொன்னர் வாரார் துருசாக
வருகிறபோதிலேதான் வகையுடனே மாயவரும்
புலவனைப்போல் ஆயன் புண்ணியனார் வந்துமப்போ

குதிரைக்கு முன்னாக புலவன் குணமுடனே அப்போது
பொன்னர்தனைப்பார்த்து புலவன் பொறுமையுடன்
சொல்லுகிறான்
கோட்டை மதிலுக்கும் கொங்குதாரா புரத்துக்கும்
நட்டைநாடும் தளத்துக்கெல்லாம் பெரியநாடு
ஆத்தூரு பின்னம் அடுத்த பவுத்திரமும்

பஞ்சுப்பொதி நாடும் பழனிப்பொதிநாடும்
பெரியமலையாளம் பேர்பெரிய பூதமட்டும்
வெட்டிக் கருவருத்த வீரியனையுங் கண்டேன்
பொன்னரையுங் கண்டேன்நான் சங்கரையுங்
கண்டுவிட்டேன்
நல்லதங்காள் உத்தமியை நானுமே கண்டேனே

வெட்டும் பரிநகுலா வீரமலைக் காவலனே
பொன்னாளிக்கையா புனுகணிந்த மணிமார்பா
சந்தனமணிமார்பா தளத்துக்கெல்லாம் வன்னியனே
தலையூருக்காளி படை கருவறுத்த நல்லபொன்னு
அந்தமொழிசொல்ல பொன்னர் அப்போது ஏதுசொல்வார்

என்ன வெகுமதிகள் புலவனாரே உனக்கு இயல்பாக
வேணுமினி
வேண்டிய வெகுமதிகள் எனக்கு வெகுதாயம் தரவேணும்
கடதாரம் முடதாரம் புலவனாரே கண்டசரம் நான்தாரேன்
கடதாரம் முடதாரம் சுவாமி கண்டவர்கள் படைக்கில்லையா
மார்பில் அணிந்ததொரு மாணிக்கப் பதக்கம் நான்தாரேன்

அந்தமொழிகள் சொல்ல புலவன் அப்போது ஏதுசொல்வான்
மாணிக்க பதக்கம் சுவாமி மன்னர்கள் படைக்கில்லையா
வேண்டும் வெகுமதிகள் மெத்தவே நான்தாரேன்
எந்தவெகுமதியும் சுவாமி எனக்கு மனமுமில்லை
அந்தமொழிகள்சொல்ல பொன்னர் அப்போது
ஏதுசொல்வார்

(பின்னே) எந்தவெகுமதிதான் ஏற்குமது உந்தனுக்கு
தலையில் மிகப்பதித்த தங்கக் கிரீடமதை
தந்தாலே என்மனது சம்மதமுமாகு மென்று
சொல்லியேதான்கேட்க இது சோதனையோ என்று
பொன்னர்
தன்மனதுக்குள்ளே பொன்னர் தானுமே எண்ணியேதான்
மாயவனார் என்றுசொல்லி மனதில் தெரிந்துகொண்டு



ஏறினகுதிரைவிட்டு பொன்னர் இறங்கிப் பணி
செய்வமென்று
தன்மனதிலே தானும் பொன்னர் தயவுடனே தானுமெண்ண
இவர் மனதிலெண்ணியது மாயவர்க்குத் தான்தெரிந்து
ஏறுங் குதிரைவிட்டு இவன் இறங்கி வருவானாகில்
நம்முடபாதம் இவன் நலமாகத் தான்பிடிப்பான்

என்று புலவனாரும் இதமுடனே அப்போது
வந்த புலவனாரும் அவர் வகையாக ஏகிவிட்டார்
புலவனார் போனபின்பு பொன்னருந் தானப்போது
வளநாடு திசைபார்த்து பொன்னர் வருகிறார் குதிரைமேல்
தம்பிபலி திருப்பி பொன்னர்தான் வரும்வேளையிலே

## தங்கை சொப்பனங்கண்டு அண்ணியர் இடத்தில் சொல்வது

அப்போ அண்ணருடன் பிறந்த அருக்காணி நல்லதங்கம்
சத்தியத்தில்போன அண்ணர் சதிராய் வரக்காணோம்
சின்னண்ணர் வேடுபடைபோன மெய்யான வீரியர்தான்
வெட்டிக்கெலித்து இன்னும் விடுதிவரக் காணோமே
வருவார்வருவாரென்று உத்தமி வெகுநேரம் பார்த்திருந்து

இருந்துமனம்சலித்து எழுந்திருந்தாள் நல்லதங்கம்
அன்னலூஞ்சல் மேடையிலே பொன்னூஞ்சல் தொட்டியிலே
(அப்போ) ஆடுது அன்னலூஞ்சல் அசையுது பொன்தூரி
ஓடுது அன்னலூஞ்சல் உவையுது* பொன்தூரி
பொன்தூரி மெத்தையிலே தங்கை பொய்யுறக்கம்
தூங்கையிலே

பஞ்சுமெத்தை மேலாக உத்தமியாள் பாங்காகத்தான்படுத்து
திருஅனந்தல் செய்கையிலே ஒரு சொப்பனமும் கண்டாளே

---

* உகைகின்றது

அனந்தல் செய்யும் வேளையிலே ஆதேசம் கண்டாளே
கண்டாள் தெரிசனைகள் தன்னுடகண்கள் விழிகொள்ளாமல்
ஆதேசங்கண்டு தங்கை அதிதுரிதாய்த் தானெழுந்து
சிவசிவ என்ன இருக்கவேதான் என்ன கனாக் கண்டேன் நான்

சத்தியத்தில் போனவர்க்கு என்ன சதிபிழைகள் நேர்ந்ததுவோ

படைபோன சின்னண்ணருக்கு படுமோசம் வந்திட்டுதோ
நான் கண்ட ஆதேசம் நல்லண்ணர் தேவியர்க்குச் சொல்வமென்று
அண்ணருட தேவியர்க்கு கண்ட ஆதேசம் சொல்வமென்று
இருந்த கொலுவைவிட்டு உத்தமி ஏகாந்த மேடைவிட்டு
முத்துப்பதித்தபடி உத்தமி மூணுபடி தான்கடந்து

பவளம்பதித்தபடி உத்தமி பத்தாம்படி கடந்து
செம்பொன் அழுத்தினது உத்தமி சேரப்படி கடந்து
பொன்னழுத்தும் மாளிகையில் உத்தமி பொன்கதவைத் தான்திறந்து
ஆச்சாவுந்தேக்குமரம் அண்ணர் அடியளந்து கூடமிட்ட
வாச்சாப்பூ மாளிகைக்கு வந்துநின்றாள் உத்தமியும்

அண்ணன்மார் தேவிகளை உத்தமி அழைத்தாள் வரிசையுடன்
வரிசைப் பேரிட்டழைத்தாள் அண்ணர் வாள்வீரர் தேவிகளை
நல்லுடைய நாயகமே பெரிய நல்லண்ணர் தேவியரே
நில்லாள் திருமுகமே எங்கள் சின்னண்ணர் தேவியரே
அண்ணருட தேவிகளை உத்தமி அழைத்தாள் வரிசையுடன்

அம்மாள் அழைக்கிறது அனந்தலிலே கேட்குதப்போ
துள்ளித் துடித்துமப்போ அண்ணர்தேவி துரிதாய் எழுந்திருந்து
சேலைகட்டித் தலைமுடிந்து அண்ணர்தேவி சீக்கிரமாயோடிவந்து
பாதம்பணிகள் செய்து உத்தமிக்கு பாதாரம் போற்றிசெய்து



சாந்தால் தரைமெழுகி சந்தனத்தால் கோலமிட்டு
பட்டுப்பாய்தான்விரித்து உத்தமிக்குப் பாங்காகப் போட்டுவைத்து

பட்டுப்பாய் மேலாக உத்தமி பாங்காயிருக்கையிலே
அப்போது தாதியர்கள் உத்தமியை அடைவுடனே சுத்திநிற்க
அண்ணருட தேவிமார் உத்தமியை அப்போதுதான்கேட்க

பொன்னருடன் பிறந்த பேடைமயில் ஏதுசொல்வாள்
அண்ணருடன் பிறப்பு அழகுமயில் ஏதுசொல்வாள்
தொண்ணூறு பிராமணர்கள் தொட்டு மணமுமிட்டு
ஐந்நூறு பிராமணர்கள் அழுத்தமிட்ட மங்கிலியம்
ஓமப்புகையினிலே உத்தரித்த மங்கிலியம்

அறுந்துவிழக் கண்டேனம்மா! நான் ஆணழகர் தேவியரே
பாலிசிதறி பருமணலில் பூத்தாப்போல்
தாலிசிதறியுமே தரையில் விழக்கண்டேன்நான்
நான் கண்டதொரு ஆதேசம் சொன்னால் பகலுமிரவாகும்
கண்டதொரு தெரிசனைதான் கண்கள் விழிகொள்ளாமல்

மனத்திலுதித்த கனா இதை மறக்க முடியாதென்று
கண்டகனா சொல்வமென்று காரிழையீர் வந்தேனிப்போ
அந்தமொழிகேட்டு அண்ணர் தேவி அப்போது ஏதுசொல்வாள்
உத்தமி நீ கண்டகனா ஒளிக்காமல் சொல்லுமம்மா
கண்ட கனாவையெல்லாம் கவனமாய்ச் சொல்லுமம்மா!

அந்தமொழி சொல்ல உத்தமி கண்ட ஆதேசம் சொல்லுகிறாள்
தொண்ணூறு பிராமணர்கள் தொட்டு மணமுமிட்டு
ஐந்நூறு பிராமணர்கள் அழுத்தமிட்ட மங்கிலியம்
நல்லவர்கள் பெரியவர்கள் நாள் குறித்த மங்கிலியம்
ஓமப்புகையிலே உத்தரித்த மங்கிலியம்
அந்த சாமப்படையிலேதான் தடவித்திரியக்கண்டேன்

பாலைசிதறி பருமணலில் பூத்தாப்போல்
எங்கண்ணர்தாலி சிதறி தரையில் விழக்கண்டேன்நான்
ஆதேசம் கண்டதையும் அண்ணியரே கேளுமினி
வீரமலைக் கானகத்தில் ஐந்து சலகிருது
ஐந்துசலகிருது* அதிலே அருகிருந்து வாழக்கண்டேன்
அதிலே ஒருசலகிருது வெள்ளைச்சலகிருது
அந்தவெள்ளைச் சலகிருது வேறுபட்டுப் போகக்கண்டேன்
நாலுசலகிருது நல்லபுலி காத்துப்பட்டு
நல்லபுலி காத்துப்பட்டு நாலும் நடுவனத்தில் சோரக்கண்டேன்
இன்னும் நான்கண்ட ஆதேசம் எடுத்துரைக்கக் கேளுமம்மா
ஆண்மயிலும் பெண்மயிலும் (வீரமலை வனத்தில்)
அங்கிருந்து வாழக்கண்டேன்
அங்கேஒரு புனல்வேடன் செங்கணையில் அம்புதொட்டு
செங்கணையில் அம்புதொட்டு (அம்மயிலை) சேரவே
எய்யக் கண்டேன்
ஆண்மயிலுக் கம்புபட்டு அது அலறிவிழக் கண்டேன்நான்
சோடுபிரியாத அந்தத் தோகை மயில்பேடு
அதைவிட்டுப்பிரிந்து வேறுபட்டுப் புலம்பக்கண்டேன்
கண்டகனா நான்சொல்வேன் காதுற்றுக்கேளுமினி
பண்ணையத்தில் பால்கறக்கும் பால்பசுக்கள் அத்தனையும்
கன்றை இழந்துமேதான் கதறிப் பதைக்கக் கண்டேன்
கன்று கட்டும் தும்புகளைக் கரையான் அரிக்கக்கண்டேன்
இன்னமுண்டு ஆதேசம் சொல்லுகிறேன் கேளுமினி
அண்ணமார் தேவிகளே அருகிருந்து கேளுமினி
ஆனைகட்டும் சாவடியில் அக்கினித்தீ மூளக்கண்டேன்
நான் கண்ட ஆதேசம் அண்ணமார் தேவிகளே ஆகுமோ
ஆகாதோ
குதிரைகட்டும் சாவடியில் குதித்துத்தீ மூளக்கண்டேன்

* சலகை எருது



அந்தமொழிகள் சொல்ல அண்ணர் தேவிகள் அப்போது
ஏதுசொல்வார்
என்ன இருக்கநீ மாதாவே என்னகனாக் கண்டாயம்மா
உங்களண்ணர் மலைக்கு மருந்துமுண்டோ மன்னவர்க்குத்
தீங்குமுண்டோ
வென்னீர் கொதிப்பதனால் வீடுவெந்து போய்விடுமோ
தவளை குதிப்பதனால் தண்ணீர் கலங்கிடுமோ?
வேங்கைக்கு முன்னே (வேடுபடை)
வெள்ளாடெதிர்ப்பதுண்டோ
சிங்கத்தின் முன்னேதான் சிறுமான் எதிர்ப்பதுண்டோ
என்ன இருக்க உத்தமி என்னகனாக் கண்டுசொன்னாய்?
உங்களண்ணர் வேடுபடை சங்கரித்து வெட்டி
வந்தேனென்று சொல்லி
சங்கரித்து வந்ததெல்லாம் உன்னுடனே சவுரியங்கள்
பேசுவார்கள்
வெட்டிவந்தேன் என்று உன்னுடனே வீரியங்கள் பேசுவார்கள்
அந்தமொழிகள்சொல்ல உத்தமியாள் அப்போ மனங்குளிர்ந்து
ஆனால் வெட்டிக்கெலித்துவர இன்னும்
வெகுநேரமாகுமோதான்
நித்திரையுந்தான்வருக இன்னும் நெடுநேரம் செல்லுமினி
பந்து எடுத்துவாங்கள் நாம் பந்தடித்து விளையாடுவோம்
அந்தமொழிகள் சொல்ல அண்ணர் தேவி அதிதுரிதாய்
ஓடிவந்து
பொன்பந்து பொன்துடுப்பு பொட்டெனவே கொண்டுவந்து
இந்தாதாயே என்று ஏந்திழையாள் முன்னே வைத்தார்
பஞ்சுமெத்தை மேலிருந்து உத்தமி பந்தெடுக்கும்
வேளையிலே
பந்து தவறியது பஞ்சணைமெத்தை படுக்கையிலே
வீழ்ந்திட்டது
எடுத்தபந்து தவறினதை உத்தமி எண்ணி மனங்கலங்கி

எண்ணாதும் எண்ணியேதான் உத்தமி எழுந்தறவே யோசித்து
அண்ணன்மார் தேவிகளைப்பார்த்து அப்போது
ஏதுசொல்வாள்
எந்நாளும் இல்லாமல் இப்ப எடுத்தபந்து தவறுவதேன்?
எடுத்தபந்து தவறியது என்னகெடுங்காலம்
நன்று வருவாரென்று நான் ஒரு நல்ல குறிபார்க்கவேணும்

தாதிமார் பெண்டுகளைத் தானழைத்து உத்தமியாள்
நார்மாட்டுச்சாணியுடன் நல்லமாட்டுக் கோமயமும்
ஈனாக்கிடாரிச்சாணம் இளங்கன்றின் கோமயமும்
தாதிமாரே கொண்டுவாங்களென்று
தானும்சொன்னாள்உத்தமியாள்
அந்தமொழிகள் சொல்ல தாதிமார் அதிதுரிதாய் ஓடிவந்து

நார்மாட்டுச்சாணமும் நல்லமாட்டு கோமயமும்
ஈனாக்கிடாரிச்சாணமும் இளங்கன்றின் கோமயமும்
இவையெல்லாம் கொண்டுவந்து ஏந்திழையாள்
முன்னேவைத்தார்
நார்மாட்டுச்சாணமும் நல்லமாட்டுக் கோமயமும்
நாலுமூலைசதிரப்பட நன்றாகத் தான்மெழுகி

விக்கினேஸ்வரரை சுவாமி விநாயகரை உண்டுபண்ணி
அருகுதனைச்சூடி சுவாமி அய்யரையும் உண்டுபண்ணி
புஷ்பங்கள்தானெடுத்து சுவாமிபொன்முடிமேல்
தான்சொரிந்து
வெற்றிலை விடாக்காயும் சுவாமிவிநாயகர்க்கு
முன்னேவைத்து
சாம்பிராணித்தூபம் சம்பிரமமுடன் முன்னேவைத்து

பெரியண்ணர்க்கென்று சொல்லி உத்தமி எடுத்தாள்
ஒருதேங்காய்
முக்கண்ணின் தேங்காயை முகூர்த்தமுன் முன்னேவைத்து
விக்னேஸ்வரரை சுவாமி விநாயகரைப் போற்றிசெய்து



சத்தியத்தைக் கூறியேதான் எங்களண்ணர் தட்டான்பின்
போனாரே
சத்தியமும் பண்ணியேதான் எங்களண்ணர் சுதிராய்
வருவாரென்றால்
முக்கண்ணின் தேங்காயும் இதுமுகூர்த்தமுன்
உடையவேணும்
அந்தமொழிகள் சொல்லி அப்போ எடுத்தாள் ஒருதேங்காயை
முக்கண்ணின் தேங்காயை உத்தமி மோதினாள் கல்லோடே

மோதின தேங்காய்தான் அது முகூர்த்தமுன் உடைந்திட்டுதே
சின்னண்ணர்க்கென்றுசொல்லி உத்தமி எடுத்தாள் ஒரு
தேங்காயை
வெட்டிக்கெலித்து எங்களண்ணர் வேடுபடைசங்கரித்து
வேடுபடைசங்கரித்து எங்களண்ணர்
வீடுவந்துசேர்வாரென்றால்
இந்த முக்கண்ணின் தேங்காயும் முகூர்த்தமுன்
உடையவேணும்

அந்தநல்ல தேங்காயை உத்தமி அப்பவே மோதினாள்
சிந்திச்சிதறி தேங்காய் சிதறிப் பொடியாச்சுதப்போ
வாடாத புஷ்பமெல்லாம் வாடிமுகம் சேர்ந்ததப்போ
கையை நெறித்துமப்போ உத்தமி
இருகண்ணோடறைந்தழுது
முத்துப்போல் கண்ணீரை உத்தமி முகத்தோடே
சோரவிட்டாள்

பவளம்போல் கண்ணீரை உத்தமி பக்கமெல்லாம்
சோரவிட்டாள்
ஏங்கி அழுதுமப்போ என்னசொல்வாள் நல்லதங்கம்
அண்ணன்மார்தேவிகளைப்பார்த்து உத்தமிஅப்போ
மனங்கலங்கி
பத்தினியாள் கண்டகனா பழுதொருநாள் போகாமல்
உத்தமியாள் கண்டகனா இப்போ உடனே பலித்திடுமே!

மாண்டகளமாயிருக்க நாம்மனையில் சுகமிருக்க
எங்களண்ணர் இறந்தகளமாயிருக்க நாம் இங்கே
சுகமாயிருக்க
மாண்டகளம் தேடியேதான் வீரமலைகளெல்லாம்
பார்க்கவேணும்
ஒருத்திவழி போறவற்கு நங்கையரே
உற்றதுணைவாருமென்றாள்
தனித்துவழி போறவற்கு நானேதுணை வாங்களென்றாள்

வாள்வீரன் தேவிகளை உத்தமி வாவென்றழைக்கையிலே
அண்ணருடதேவிமார் அப்போது ஏதுசொல்வார்
வாள்வீரன் தேவியென்று வையகத்தில் பேரானோம்
போர்மன்னர் தேவியென்று பூலோகத்தில் பேரானோம்
உங்கவண்ணரைத்தேடியிப்போ உன்பிறகே நாங்கள்வர

பூண்டபனுதி இல்லை பொற்பனுதி நல்லதில்லை
உடுத்தின துகில்களிலே ஒருதுகிலும் நல்லதில்லை
அந்தமொழிகள்சொல்ல உத்தமி அழைத்தாளே தாதிகளை
தாதிகளைத்தானழைத்து உத்தமிதானுமே ஏதுசொல்வாள்
அண்ணருடதேவிதன்னை அழைத்துவந்து நீங்களிப்போ

நல்லெண்ணெய் சீயக்காய் நன்றாய் நலுக்கமிட்டு
கொப்பரையில் நீர்வைத்து கோந்தை முழுக்காட்டி
பட்டுகள்தானுடுத்தி பனுதிகளைத் தான்பூட்டி
நிற்கப்பணிபூண்டு நிமிஷத்தில் கூட்டிவாரீர்
அந்தமொழிகள் சொல்ல அண்ணர்தேவிகளை
அழைத்துவந்த தாதியர்கள்

நல்லெண்ணெய் சீயக்காய் தேய்த்து நன்றாய் நலுக்கமிட்டு
கொப்பரையில் நீருவைத்து கோந்தை முழுக்காட்டி
பன்னீருசொம்பிலேதான் புதுநீருந் தான்சொரிந்து
முழுகிதலையாத்தி அண்ணர்தேவிமார் முற்றத்தில்
வந்துநிற்க
குலுக்கிச்சிணுக்கறுத்துக்கொண்டு கோந்தைமயிர் முடித்து



நெற்றிக்கு நீறுவைத்து நிற்கவே பொட்டுமிட்டு
கொண்டைக்குக் கொப்பிவைத்து கூந்தலிலே பூத்தொடுத்து
பூட்டுகிறபனுதியெல்லாம் புதுப்பனுதி தான்பூட்டி
இழையாயிரம்பெற்ற இந்திரவர்ணப் பட்டுடுத்தி
பெரியண்ணர்தேவியர்க்கு பிழையில்லாப் பட்டுடுத்தி

சூரியகாந்தப்பட்டு (சின்னண்ணர் தேவிக்கு)
சுருக்காகத்தானுடுத்தி
பட்டுடுத்தி பனுதிபூண்டு அண்ணர்தேவிகளை பாங்கிமார்
கூட்டிவந்து
தாதிமார்கூட்டிவந்து உத்தமிக்குத்தானெதிரே
முன்னேவிட்டார்
(அண்ணருட) தேவிகளைப்பார்த்து உத்தமி தேம்பியே
சொல்லுகிறாள்
நேரந்தான் ஆகுதிப்போ நாம் நெடுந்தூரம் போகும்வழி

அந்திதான் ஆகுதிப்போ நாம் அனேகதூரம் போகணுமே
அந்த மொழிகள் சொல்ல அண்ணர்தேவி அப்போது ஏது
சொல்வார்
இருந்தமனைசாத்தி நாங்கள் உன்பிறகே வாரோமினி
வாழ்ந்தமனைசாத்தி நாங்கள் வாரோமினி உன்பிறகே
அந்த மொழிகள் சொல்லி அண்ணர் தேவிமார் அதிதுரிதாய்
வந்துமிப்போ

வாழ்ந்தமனை புகுந்து வாள்வீரர் தேவியர்கள்
சாத்திக்கதவடைத்து தாழ்ப்பாளைப் பூட்டினார்
இறுக்கிக் கதவடைத்து இரண்டு தாள் போட்டார்கள்
அண்ணருடதேவிகள் இன்னம் வரக் காணோமென்று
இருந்து மனஞ்சலித்து உத்தமியாள் அப்போது

சாலமறத்தியர்கள் சற்றிரக்கம் அற்றவர்கள்
நீலமறத்தியர்கள் அடி நிட்டூரக் காரியர்கள்
எங்களண்ணர் மாண்டகளமாயிருக்க உங்களுக்கு
மனதுபொறுக்குமா

பூட்டியது போதுமண்ணி! பூட்டைத்திறங்களண்ணி!
சாத்தினகதவை இப்போ தாளைத் திறங்களண்ணி!
அந்த மொழிகேட்டு அண்ணர்தேவி அப்போது
ஏதுசொல்வார்
உங்களண்ணருடனும் ஒக்கக் குடியிருந்து உபசரித்து
வாழ்ந்ததற்கு
கூடக்குடியிருந்து நாங்கள்குடிவாழ்க்கை செய்ததுதான்

கண்டும் அறியாயோ காரிழையே உத்தமியே
ஐந்து வயதிலே நாங்கள் அறியாப்பிராயத்திலே
மண்சோறு மரக்கறிகள் நாங்கள் ஆக்கி விளையாடையிலே
எங்கள் அரண்மனை வாசலுக்கு பெண்கேட்க வந்தாரப்போ
ஈச்சம்பாய்போட்டு எங்கள் தாய்மாமன்
இருங்களென்றுசொல்லாமல்

பட்டுப்பாய்விரித்து பாங்காகப் போட்டு வைத்தார்
பட்டுப்பாய்மேலாக உங்களண்ணர் பாங்காகத்தானிருந்தார்
பேரழகு கண்டுமேதான் எங்களய்யர் பெண்கொடுக்கச்
சம்மதித்தார்
ஆணழகுதான்பார்த்து எங்களய்யர் அப்போது சம்மதித்தார்
நாட்டில் பெரியவரை நல்லவரைத் தானழைத்து

ஊரில் பெரியவரை உறவின்முறையைத் தானழைத்து
கோதானம் தான்கொடுத்து குருக்கள்மாரைத் தானழைத்து
பஞ்சாங்க வேதியரைப் பார்ப்பாரைத் தானழைத்து
கங்கணப்பொருத்தம் கனப்பொருத்தம் பார்க்கையிலே
புத்தகத்து நூல்வாங்கி பொருத்தங்கள் பார்க்கையிலே

பதினொரு பொருத்தமம்மா பாக்கியமும் நல்லதுதான்
எனக்கிளையதங்கையர்க்கும் உங்கள் சின்னண்ணருக்கும்
கங்கணப்பொருத்தம் கனப்பொருத்தம் பார்க்கையிலே
ஒன்பது பொருத்தம் ஒரு பொருத்தம் நல்லதுதான்
அந்த மொழிகள் சொல்ல உங்களண்ணர் அப்போ
மனங்குளிர்ந்து



பட்டுப்பாய்மேலிருந்து உங்களண்ணர் பரிசம்
பொருந்தினார்கள்
பெருமகிழ்ச்சியோடு அப்போ எங்களய்யர் பெண்கொடுக்கச்
சம்மதித்தார்
கல்யாணமென்று எங்களய்யர் கனத்த முரசறைந்தார்
சந்தனமரம் பிளந்து சதிரப்படக்கால் நிறுத்தி
குங்குமமரம் பிளந்து கொடுங்கைவளை பரப்பி

பவளக்கொடி அறுத்து பரப்புவளை தான்போட்டு
நீங்காவளைபரப்பி நிற்கவே பந்தலிட்டு
குத்துவிளக்கெரிய குளிர்நிலவு நீர்தெளிக்க
தூண்டாமணிவிளக்கு தொடர்ந்துமே நின்றெரிய
கல்யாணமென்று சொல்லி அதுகதையாய் நடந்ததப்போ

உங்களண்ணர் ஆனையேறி மாலைசூடி அன்புடனே
வாரபோது
தண்டிகை முன்னாக வெள்ளானை பின்னாக
வெள்ளையானை மீதேறி வீரியர்கள் வாரபோது
நல்லெருது தம்பட்டம் நாதசுரம் பூரிகையும்
கொட்டுங்கிடுமுடியும் கோவில் மேள தாரைகளும்

எக்காளமூதி கடிபோல் முழங்கிவர
பதினெட்டு மேளவகை பாக்கியங்கள் முன்னடக்க
வீருரணமூத விருதுபரி வீசிவர
கட்டியங்கள் கூற கவிவாணர் முன்படிக்க
அப்படி ஆனையேறி மாலைசூடி அன்புடனே வாரபோது

வண்ணார்கள் மாத்து வாரவழிதோறும் போட்டுவைத்து
வண்ணான் தன் மாத்துமேலே வந்தார்கள் உங்களண்ணர்
வந்து நிறைந்தார்கள் வயிரமணிப் பந்தலெல்லாம்
பட்டால் திரைவளைத்து உங்களண்ணர்
பாவனையாத்தானிருந்து
பட்டுத்திரைக்குள்ளாக பால்வார்த்துக் கால்கழுவி

பால்வார்த்துக் கால்கழுவ பட்டால் ஈரம் துவட்டி
அம்மிவலமாக அரசாணி முன்பாக
திண்ணைவலமாக உங்களண்ணர் திருவலமும் வந்திருந்து
ஐந்நூறு பிராமணர்கள் அள்ளி மணமுமிட்டு
தொண்ணூறு பிராமணர்கள் தொட்டு மணமுமிட்டு

நல்லவர்பெரியவர்கள் நலுங்கிட்டா ரப்போது
கங்கணமும் கட்டியேதான் கணபதியை கைதொழுது
தாலித்திருப்பூட்டத் தான்வருகும் வேளையிலே
எங்களண்ணர் உடன்பிறந்த அண்ணன்மாரெல்லவரும்
குலைவாழைப் பழம்திருத்தி உங்களண்ணர் திருமார்பில்
விட்டெறிந்தார்

பொன்னனுந்திரு மேனியர்க்கு உங்கள் மைத்துனர்
போர்த்தினார் பட்டாலே
தங்கத் திருமேனியர்க்கு உங்கள் மைத்துனர் தாங்கினார்
பட்டாலே
அம்மிவலமாக அரசாணி முன்னாக
பிரம்புவலமாக பேய்க்கரும்பு முன்னாக
திண்ணைவலமாக உங்களண்ணர் சுத்திவந்து தானிருந்தார்

நாங்களும் திண்ணைவலமாக சுத்திவந்து தானிருந்தோம்
ஒரு சாண் பலகையிலே நாங்கள் ஒக்க இருந்த தோஷமுண்டு
சிறு விரல் கொடுக்கையிலே உங்களண்ணர் சூது வினை
செய்தாரே
தன் விரல் கொடுக்கலாகாதென்று பொன்விரலும்
வைத்திருந்து
பொன்விரலும் வைத்திருந்து பொருந்தவே கைக்கொடுத்தார்

கைகொடுத்த நாள் முதலாய் நாங்கள் கசந்த* குடி வாழ்க்கை
கட்டோடு வெற்றிலையும் கமுகின் இளம்பாக்கும்

* கசந்த(ம்)



ஈழத்துப் பாக்கும் இளங்கொடிக்கால் வெற்றிலையும்
கடல்கரையில் சுண்ணாம்புகொண்டுவந்து கால்மாட்டில்
நின்றாலும்
ஏனென்று கேளாரே உங்களண்ணர் எதிர்த்து விழியாரே
பூமியைப் பார்த்த முகம் பெண்ணின் முகம் பாராரே
தாலிகட்டும் தோஷமுண்டு! தவிக்கவிட்டார் எங்களையும்

ஏழரை நாட்டுச் சனியன் இது எங்கே வந்ததென்பார்
இழையாயிரம் பொன் பெற்ற இந்திரவர்ணப் பட்டுடுத்தி
உத்திரத்தைப்* பிடித்து உங்களண்ணரிடம் ஒதுங்கியே
நின்றாலும்
ஏனென்றுகேளாரே உங்களண்ணர் எதிர்த்து விழியாரே
மாடத்தைக் கட்டிவைத்து உங்களண்ணர் மயிலைச்
சிறையில் வைத்தார்

கூடத்துப் பொன் கூண்டில் உங்களண்ணர் குயிலைச்
சிறையில் வைத்தார்
இங்கேயிருக்கையிலே நாங்கள் இச்சிறையை நோக்கினமே
அங்கேயும் நாங்கள் வந்து அருஞ்சிறையை நோக்கணுமா
இருந்த மனையை விட்டுத் தாயே உன் பிறகே வாரதில்லை
வாழ்ந்த மனையை விட்டு வாரதில்லை உன் பிறகே

அந்த மொழிகள் சொல்ல உத்தமியாள் அப்போது ஏது
சொல்வாள்
வையகத்தார் போலே நீங்கள் வாழ்ந்திருப்பீரென்றிருந்தேன்
தேசத்தார் போலே நீங்கள் சேர்ந்திருப்பீரென்றிருந்தேன்
ஊருலகத்தார் போல அடிஉறவுள்ளீ ரென்றிருந்தேன்
பாருலகத்தார்போலே அண்ணியரே பழகிடுவீரென்றிருந்தேன்

வண்ணத்துப் பொம்மைகளை உங்களை வைத்தாரே
வாஞ்சிறை**தான்

* உத்தரியம் – முந்தானை ** வாழுஞ்சிறை

தாழைத் திறங்களடி அண்ணர்தேவியரே தான் குறையைச்
சொல்லுங்கடி
மனையைத் திறங்களடி உங்களுட மனச்சலிப்பைச்
சொல்லுங்கடி
அந்தமொழிகள் சொல்ல அண்ணர்தேவிகள் அப்போது ஏது
சொல்வார்
வாழ்ந்தமனையிலேயிருந்து நாங்கள் வைகுந்தம் போறதற்கு
வைகுந்தம் போறவர்க்கு மனச்சலிப்புத் தானுமில்லை

அக்கினிக்குப் பூஜை செய்து எங்களை அனுப்பிவைத்து நீர்
போகும்
கானலுக்குப் பூஜை செய்து எங்களைக் கடத்திவிட்டு நீர்
போகும்
அந்தமொழிகள் சொல்ல உத்தமியாள் அப்போது ஏது
சொல்வாள்

கானலுக்கு பூஜையிட உங்களை கடுகி வளர்த்தேனோ
வானலுக்கு பூஜையிட உங்களை வளர்த்தேனோ இதுகாலம்

வெந்து தணிந்தாலே அண்ணர் தேவிகள்
மிஞ்சாதொருவருக்கும்
வாழ்த்தி வரங்கொடுங்கள் அண்ணர் தேவிகளே வைக்க
நெருப்பையினி
அந்த மொழிகள் சொல்ல அண்ணர் தேவிகள் அப்போது ஏது
சொல்வார்
வட்டமிட்ட பூரணிபோல் உங்கய்யர் வளர்ந்து கொண்ட
நாத்துப்போல
ஆல்போல் தழைதழைத்து அருகதுபோல் வேரூணி

மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பாய்
நித்தியக் கல்யாணம் பச்சைத் தோரணமுடனே
பச்சைத் தோரணமதுதான் உங்கய்யர் வாசல் பாங்காய்
அலங்கரிக்க
வாழ்த்தி வரம்கொடுத்தேன் வையும் நெருப்பை என்றார்
அந்த மொழிகள்சொல்ல உத்தமி அக்கினிப் பந்தெடுத்தாள்



சிவனைத் தொழுதுமப்போ ஸ்ரீராமரைத் தானினைத்து
எழுதிய பிரமனைத்தான் ஈஸ்வரரைத் தானினைத்து
பேர்கொடுத்த பொன்னம்பல சுவாமி பொசிவாசி ஐயரையுந்
தானினைத்து
பத்தினியும் நானானால் நான் போடும் பூப்பந்து
பக்கமெல்லாம் போகாமல்
உத்தமியும் நானானால் போடும் பந்து ஒரு பக்கம்
போகாமல்

வெந்து தணியட்டுமே வேதனையும் ஆறட்டுமே!
என்று சொல்லி உத்தமியாள் இயல்பாக அப்போது
கண்ணீர் அழுதகண்ணீர் காரிழையாள் வழித்தெறிந்தாள்
அக்கினிக் கண்ணீரை அண்ணர் அரண்மனை மேல்
விட்டெறிந்தாள்
அழுத கண்ணீர் மாலையிட்டோர் அக்கினியின் பந்தாகி

விழுந்த கண்ணீர் பூப்பந்தாய் மின்னல்கொடிபோல் விழுந்து
பட்டகசாலை அண்ணர் பரந்த அரண்மனையும்
சுத்தாலை வாசலெல்லாம் சுத்தித் தீ மூளுதப்போ
வெந்து தணிந்து வெகு நேரம் சென்ற பின்பு
ஆக்கத்தை அளவறுத்து உத்தமி மழை மேகத்தை
வரவழைக்க

ஊசிபோல் மின்னல் மின்னி உறியதுபோல் காலூணி
பாசிபோல் படர்ந்த மேகம் பருத்ததுளி கொழுத்து
மாறியதோர் மழைமேகம் மாசியிறை புகைசூழ்ந்து
பொங்கிப் பொழியுது பொய்யாத மழைமேகம்
கடல் குமுற மதிலிறைய கதவி வெள்ளம் தடுமாற

அனலும் தணிந்த பின்பு உத்தமி அங்கம் பொறுக்கவேதான்
பக்கெலும்பு பலுவெலும்பு பதினாறு எலும்புகளும்
அங்கம் பொறுக்கியே தான் உத்தமி புதுக்கும்பந் தனிலடக்கி
செங்குளத்துத் தண்ணியிலே சீராகத்தான் போட்டு

முன்போட்டுப் பின்னே முழுகி எழுந்திருந்து
நீங்கள் மூதாக்கள் சீர்பாதம் சேருமென்று உத்தமியும்
மூன்று கை நீரெடுத்து முன்னேதான் அள்ளிவிட்டு
எள்ளும் தண்ணீரும் அண்ணர் தேவியர்க்கு இதமாய்த்
தெளித்துமப்போ
கல்லுக்கடன் தீர்த்தேன் சொர்க்கம் கைலாசம் சேருமினி

மைந்தரில்லாச் சொத்து உங்கள் மனிதரிடம் சேருமினி
பிள்ளை இல்லாத சொத்து உங்கள் பிறந்திடத்தே சேருமது
பூஜை பொனக்காரம் உங்கள் பிறந்தகத்தே போய்ச் சேரும்
என் பிறகே தொடர்ந்து நீங்கள் இனி வரவும் வேண்டாமடி
முக்காலும் மூன்று தரம் தங்கை முழுகி எழுந்திருந்து

ஈரம் துவட்டி தங்கை இள நல்ல பட்டுடுத்தி
ஈஸ்வரரைத் தானினைத்து எண்ணியவள் தன் மனத்தில்
பொன்னரியாள் தானும் புதுக்கும்பம் தானெடுத்து
கும்பத்தில் நீரு மொண்டு உத்தமி குணமுடனே கரை ஏறி
வாராள் அரண்மனைக்கு உத்தமி வகையுடனே அப்போது

அண்ணருட அரண்மனையில் உத்தமி ஆசாரம் தான் பார்த்து
ஐந்து கட்டரண்மனையும் ஆசார மேடை எல்லாம்
உப்பரிகை மேடை உரகாந்தக் கொலு மேடை
சிங்காதன மேடை திருக்கொலுவு மேடையெல்லாம்
உத்தமியாள் தான் பார்த்து ஏது சொல்வாள் அந்நேரம்

வாழை பயிரிடுவார் அண்ணா உன் நாட்டில் வான்கமுகு
வைப்பார்கள்
தென்னை பயிரிடுவார் (உன் நாட்டில்) செவ்விளநீர்
வைப்பார்கள்
கரும்பு பதிநாட்டி உன்நாட்டில் காப்பார்கள் வையகத்தே
வளநாடு அரசாள அண்ணாவே வைக்கவில்லை நீ அரசு
உன் காணி சிறந்தாள அண்ணா கருத்தாளி வைக்கவில்லை

உன் பூமி சிறந்தாள அண்ணா புத்திரனை வைக்கவில்லை
உன் சீமை சிறந்தாள துரைத்தனமும் வைக்கலையே



ஆணாக நான் பிறந்தால் உன்சீமை அரசுபதி ஆண்டிருப்பேன்
பெண்ணாக நான்பிறந்து புலம்புகிறேன் நானடியாள்
ஆனைபோல் நீ இருந்து அண்ணா அரசாளும்
அரண்மனையில்
பூனைபோல் நானிருந்து புலம்புகிறேன் நானடியாள்
தென்னை நிறைந்திருக்கும் அண்ணா தெருவீதி பூத்திருக்கும்

தென்னைதலை சாய்த்தே என் பிறவி சேர்ந்தழுக போனீரே
மந்தை நிறைந்திருக்கும் அண்ணா வான்வீதி பூத்திருக்கும்
மந்தையது சீர்குலைய அண்ணா மரித்து நீர் போனீரோ
மஞ்சள் வளர்ந்திருக்கும் சின்னண்ணா மருதாணி
பூத்திருக்கும்
வயலெல்லாம் நெல்வளரும் சின்னண்ணா வாடுகிறேன்
நான் தனியாய்!

இஞ்சி வளர்ந்திருக்கும் சின்னண்ணா எலுமிச்சை
பிஞ்சுவிடும்
இளங்கொடியாள் நான் தனியே இருந்து புலம்புகிறேன்!
ஊரெங்கும் பட்டாளம் சின்னண்ணா ஓடிவந்த வேடுதளம்
ஓடிவந்த வேடுதளம் அண்ணா நீ ஒரு நொடியில்
சாய்த்தாயே!
நாடெல்லாம் பட்டாளம் சின்னண்ணா நடுங்கிவந்த
வேடுதளம்

நடுங்கிவந்த வேட்டுவரை அண்ணா நீ நலிய வெட்டிச்
சாய்ப்பாயே
குப்பாயி சிறைபிடித்துக் கொள்ளையிட்ட வேட்டுவரை
தப்பாமல் சங்கரித்து சின்னண்ணா தவிடுபொடி செய்தாயே
பச்சனா முதலிமகள் சின்னண்ணா பருவ முள்ள குப்பாயி
பக்கம் அழுதகுரல் உன்னை பதை பதைக்க வைத்ததுவே!

ஒக்கப் பிறக்கணுமா? சின்னண்ணா ஒருதாய்
முலைப்பாலுண்ணணுமா?
பக்கம் ஒரு பெண்ணழுதால் உன் பட்டாளம் சீறுமண்ணா!
சின்னண்ணா என்பிறவி என் செல்லத் திருமுகமே

பெரியண்ணா என் பிறவி பேர்பெரிய ராஜாவே
சத்தியத்தைக் கூறி அண்ணா நீ தட்டான் பின்னே போனாயே
சத்தியமும் பண்ணி நீ சதிராய் வரக்காணேன்
உங்களை விட்டுப் பிரிந்து அண்ணா உத்தமியாள் வேறுபட்டேன்
தனித்து பிரிந்து அண்ணா தனியொருத்தி வேறுபட்டேன்
வேட்டைத் துறையிலேதான் அண்ணா வேறுபட்டமானது போல்
தண்ணீர்த்துறையிலே தான் அண்ணா தனிப்பிரிந்த மானது போல்
உங்களைப் பிரிந்து அண்ணா உயிர் துடித்தேன் உத்தமியாள்
எங்கேயென்று நான் காண்பேன் சின்னண்ணரைத் தேடியேதான்
எவ்விடமென்று நானறிவேன் என்று சொல்லி உத்தமியாள்
அங்காடி கண்டறியேன் அண்ணா அசல் முற்றம் போயறியேன்
வாசல் கடந்தறியேன் வாழும் வீதி போயறியேன்
மனையில் பிறந்து அண்ணா திரையில் வளர்ந்தவள் நான்
எரிக்கும் பகவானை வெளியில் வந்து இந்திரனைக்கண்டறியேன்
பகலெரிக்கும் சூரியனை வெளிப்பட்டுப் பகவானைக் கண்டதில்லை
என்று தண்ணீர்த்துறைக்கு தடமறியா உத்தமியாள்

## தங்கை படுகளம் தேடிப் புறப்படுதல்

அண்ணரைத் தேடி உத்தமி ஆகம் புலம்புகிறாள்
மருவியே தான் வீரமலை வான்மலை திசைநாடி
ஆரணங்கு வீரமலை அம்மலையின் திசை நோக்கி
போகத்தான் மனந்துணிந்து பொற்கொடியாள் நல்லதங்கம்
சிவசிவா என்னையிப்போ சீர் தப்பி வெளியில் விட்டீர்



பொன்னம்பல ஈஸ்வரரை பொற்கொடியாள் மனதிலெண்ணி
விபூதிதனை யெடுத்து தங்கை விரைவாய்த் தலையணிந்து
வேதனையை நெஞ்சில் வைத்து உத்தமி பிரமாவை நொந்து கொண்டு
உடுத்தினாள் நற்றுகிலை இட்டாளே முக்காடு
போட்டதொரு முக்காடு தன்னுடைய புறவடிவு தெரியாமல்
இட்டதொரு முக்காடு தன்னுட எழில்மேனி தெரியாமல்
சந்திரனார் தெரியாமல் அம்மாள் தலைநிறைய முக்காடு
சூரியனார் தெரியாமல் அம்மாள் துகிலால் திரை வளைத்து
தாகங்கள் அண்ணருக்கு தண்ணீர்விடை யாகுமென்று
பானக்கம் செய்வதற்கு உத்தமி பழைய புளிதானெடுத்து
ஏலம்சுக்கு தங்கை இனிய கிராம்புடனே
எடுத்துமே உத்தமியாள் இயல்புடனே அப்போது
மடியிலே தானுங்கட்டி உத்தமி வழி நடக்க வேணுமென்று
எடுத்தாள் திருக்கரகம் கையில் ஏந்தினாள் உத்தமியும்
ஏந்தியது திருக்கரகம் உத்தமி ஓங்கியது பூங்குலையும்
கரகம்தனை ஏந்தி உத்தமியாள் கானகத்து திசைபார்த்து
வாள்வீரனைத் தேடி உத்தமி வாராளே நல்ல தங்கம்
அண்ணர் மாண்டகளம் தேடி உத்தமி வீரமலை பார்க்க வாராளே
அண்ணர் சென்ற கனம் தேடி உத்தமி தேவமலை பார்க்க வாராள்
பட்டு நிலம் தூத்துவர அம்மா பாடகக்கால் சிலம்பு கொஞ்ச
முத்துநிலம் தூர்ந்துவர அம்மா முன்னெற்றி வேர்த்துதிர
அன்னநடை அழகும் தங்கத்தின் ஆசார பாவனையும்
வேந்தரயருடனே வெள்ளாண் தளத்துடனே
முத்துப்போல் கண்ணீரை அம்மா முகத்தோட சோரவிட்டு
பவழத்திருமேனியிலே கண்ணீரைப் பக்கமெல்லாம் சோரவிட்டு
கூவும் குயிலது போல் அம்மா கொஞ்சும் கிளிபோல

கிளிபோலே வாய் திறந்து அம்மாள் கொடியாள்
புலம்பிவாராள்
அண்ணர் மேல் ஆவலுடன் உத்தமி ஆகம் புலம்பி வாராள்
பார்த்தைப் பார்த்த கண்ணும் உத்தமி பல திசையும் பாராமல்
பூமியைப் பார்த்த முகம் உத்தமி பிரிது முகம் பாராமல்
அடிமேல் அடிவைத்து உத்தமி அன்னம் போல் வழி நடந்து

பாதத்தில் ஈ யெறும்பு பழுது படுமென்று சொல்லி
புல்லுக் கசங்கினாலும் வீரமலை காட்டு பூச்சி புழு
நோகுமென்று
அடிமேல் அடிவைத்து உத்தமி அன்னம் போல் நடை நடந்து
வாள்வீரனைத் தேடி உத்தமி வீரமலை வனத்திலே வாரபோது
ஆனை நெரிஞ்சி முள்ளு அண்ணா அதிலே அடிவைக்க
பயமாகுதிப்போ

நரிமிரட்டி முள்ளு அதிலே நடக்கப் பயமாகுதிப்போ
புலி மிரட்டி முள்ளு அண்ணா வனத்தில் பூதப்பயமாகுதிப்போ
கோரிரண்டம் முள்ளு வனத்தில் குறுக்கே கணவாயாம்
சில்லென்ற காடும் செடியும் வனாந்திரமும்
கல்லும் மலையும் அண்ணா அதைக் கடக்கவென்றால்
வெகுதூரம்

பார்த்தொரு திசையெல்லாம் வேற்று முகமாகுதிப்போ
எண்ணாதுமெண்ணியேதான் உத்தமி புண்ணாய் மனது நொந்து
சிவசிவாவென்று சொல்லி உத்தமி சிவனாரை நமஸ்கரித்து
வீரமலை என்று சொல்ல அண்ணா நான் விசனமாய்க்
கேட்டிருந்தேன்
வீரமலை வனம் புகுத எனக்கு விதியுமுண்டோ இன்னாளில்

வாமலை என்று சொல்லி இதை வாய் விசுலங்*
கேட்டிருந்தேன்
வாமலைவனம் புகுத சுவாமி மாயனுட சொல்படியோ

* வசனமாய்



அருவனத்தில் நான் தனித்து அழுது பரிதவிக்க
பெண்ணாக நான் பிறந்து வீரமலை வனத்தில் புலம்பிப்
பரிதவிக்க
என்று சொல்லி உத்தமியாள் இயல்புடனே அப்போது
ஆதிசிவன் மாயவரை உத்தமி அன்புடனே தானினைத்து
தென் மதுரை சொக்கரையும் தேவி மீனாக்ஷியையும்

காஞ்சிபுரம் வாழும் காமாட்சி அம்மனையும்
சிவந்திலிங்க ஈஸ்வரரை உத்தமி சிந்தையிலே தானினைத்து
திருவானைக்காவல் வாழும் செம்புலிங்க ஈஸ்வரரை
அகிலாண்ட ஈஸ்வரியை அன்புடனே தானினைத்து
பசுபதி ஈசருட பாதத்தை நெஞ்சில் வைத்து

வடிவுள்ள மங்கையரும் மங்கை சுத்தி வன்னியரும்
பெருங்கருணை அம்மனையும் பேர் போன ஈசனையும்
தேனார் குழலியம்மா என்சிந்தையில் நீ துணையாய்
சுரும்பார் குழலியம்மா சொக்கலிங்க நாயகரே
அந்தி காந்திமதி தாயாரே எனக்கு கடிய துணை வருவீர்

சத்தேழு கன்னிகளே தையலம்மா நாயகியே
மதுக்கரை குடியிருந்தே வாழும் செல்லாண்டியம்மா
ஆகாச தேவதையே ஆனதொரு கன்னியரே
நான் ஒருத்திவழி நடப்பதற்கு நீங்கள் உற்றதுணை
வரவேண்டும்
நான் பெண் பிறந்த பேதையற்கு பெரிய துணை வரவேணும்

நான் வனத்தில் நடப்பதற்கு நீங்கள் வாய்த்த துணை
வரவேணும்
நான் காட்டில் நடப்பதற்கு நீங்கள் கடியதுணை வரவேணும்
என்று சொல்லி தங்கையரும் ஈஸ்வரரைத் தானினைந்து
அருவனத்தில் நான் புலம்ப சுவாமி ஆயனுட காரணமா
என்று மனதிலெண்ணி உத்தமி ஏங்கிப் புலம்புகையில்
சித்தமிரங்கியேதான் சுவாமி சிவனாரும் காட்சி தந்தார்

உத்தமியாள் வார வழி அது சுத்திஓடி நிழல் விழுகும்
பத்தினியாள் வாரவழி அதுபாதை தடமாகும்
முன்னேஓடி வழிவிலகி உத்தமிக்கு பின்னே ஓடிவளரும்
(முன்னிருக்கும்) மரங்கள் செடிகள் எல்லாம் மல்லிகைப்பூ பூத்திருக்கும்
தடம் பெரிய செண்பகப்பூ அதிலே சந்தனமும் கோங்கு புன்னை

அடர்ந்தடர்ந்த சோலையிலே அதிலே அண்ணரையுந்தான் தேடி
நான் தனித்து வழிவாரேன் அண்ணா தடமோ தெரியவில்லை
நான் மயிரால் உழக்கெண்ணெய் வார்த்து முழுகும் தலை
செடியால் தலைமயிரும் இப்போ சிக்குப்பட்டு போறதிப்போ
தூரும் துகிலுரிய பெரியண்ணா துள்ளி வழி வாரனிப்போ
நான் இருவருடன் பிறந்து அண்ணா ஒருவர் துணையில்லாமல்
நான் பெண் பிறந்த பேதையர்க்கு பெரிய துணை வரவேணும்
நான் சிறகு பறிகொடுத்த செங்குளத்து நாராய் போல்
நான் மயிரிழையைப் பலிகொடுத்த மாடப்புறா போல
நான் பிறப்பைப் பறிகொடுத்து புறப்பட்டேன் கானகத்தில்
நான் பிறவிதனை இழந்து நீங்கள் போன இடந்தான் தேடி
நீங்கள் பட்டஇடம் நான் தேடி பாவி இங்கே வாரனிப்போ
நீங்கள் இறந்தகளம் தேடி அண்ணா ஏங்கிவழி வாரனிப்போ
நீங்கள் மாண்டகளம் நான் தேடி வாரேன் ஒருத்தியுமாய்
நான் ஒருத்தி நடந்து அண்ணா ஊர்ந்துவழி வாரனிப்போ
அண்ணா ஆனை நெரிஞ்சி முள்ளு அடிவைக்கப் போவதில்லை
செப்பு நெறிஞ்சி முள்ளு என்னை சேதப்படுத்துதண்ணா



இண்டம் புதையல்லவோ அண்ணா இருண்டவனக்காடு
கோரிரண்டம் புதையல்லவோ கோர்த்திழுத்துக் குத்துதண்ணா
காரிண்டமுள்ளு மங்கே அண்ணா இருண்டவனக்காடு
கோரிரண்டம் புதையல்லவோ கோர்த்திழுத்துக் குத்துதண்ணா
பூப்பட்டால் கொப்பளிக்கும் பொன்னுந்திருமேனியிலே
காரிண்டமுள்ளு மங்கே அண்ணா கடித்தே இழுக்குதிப்போ
உலையிலிடும் மெழுகுபோல் அண்ணா உள்ளமெல்லாம் புண்ணாகி
இனம்பிரிந்த மானதுபோல் அண்ணா நான் ஏங்கி வழி வாரனிப்போ
நான் பெண்ணாய்ப் பிறந்ததற்கு அண்ணா மண்ணாய்ப் பிறந்தாலும்
மண்ணாய்ப் பிறந்து ஒரு மரமாய் முளைத்தேனில்லை
மல்லிகையாய்ப் பூத்திருந்தால் அந்த மகாதேவர்க் கொப்பிதமாய்
அந்தப்பலனும் இல்லை நான் ஆரணங்கு பெண் பிறந்து!
நான் பெண் பிறந்து பட்ட கதை அண்ணா பின்சொல்வார் மண்டலத்தில்
நான் வளநாட்டுக் கோட்டையிலே, அண்ணா நான், வாழுகின்ற நாளையிலே
என்கூட இருந்து விளையாட அண்ணா குயில்வேணுமென்றேதான்
என்பக்கமிருந்து விளையாட ஒரு பஞ்சவர்ணக்கிளி கேட்டேன்
என்று சொல்லிக் கேட்கையிலே அண்ணா எனக்கு நீ அப்போது
எந்த மலைக்கிளிதான் தங்கையரே இதமாக வார்த்தை சொல்லும்

தோகைமலைக் கிளிதான் துணையிருந்து பேசாது
பச்சைமலைக் கிளியானால் பக்கமிருந்து பேசாது
கொல்லி மலைக்கிளியானால் அது குரல் மயங்கி வார்த்தை சொல்லும்
வீரமலைக்கிளியானால் தங்கையரே விதமாக வார்த்தை சொல்லும்
என்று சொல்லி அண்ணாவே இதமாக வார்த்தை சொன்னாய்

நீ வீரமலை என்று சொன்ன சொல்ல விருப்பமுடன் கேட்டிருப்பேன்
இப்போ வீரமலை பார்க்க விதித்தாரோ என் தலையில்!
ஆதி சிவன் மாயவரும் அண்ணா அன்று எழுதிவிட்ட
எழுத்துப் படிக்கல்லவோ அண்ணா எனக்கு மூண்டுதிப்போ
என்று சொல்லித்தங்கையரும் இப்படியே தானுரைத்து

வீரமலைக்காடு விதமாக உள்புகுந்து
வழிமுழுதும் கண் கலங்கி வாராளே நல்ல தங்கை
வெண்முடியைத்தான் பார்த்து உத்தமி விதமாகத்தான் புலம்பி
ஆங்காரச் சத்தமிட்டு உத்தமி அருங்கானகம் புகுந்தாள்
ஓங்காரச் சத்தமிட்டு உத்தமியாள் தான் நடந்தாள்

நல்ல தங்கை குரல் கேட்டு வீரமலை நல்லதொரு பட்சியெல்லாம்
உத்தமியாள் குரல் கேட்டு பறவை இரை எடுக்காது
ஆடுகளும் மேயாதாம் அரவம் இரைதீண்டாதாம்
மாடு புல்லுமேயாதாம் உத்தமியாள் குரல் கேட்டு மரங்கள் இலையாடாதாம்
பட்சிஇரை எடுக்காது பசுங்கன்று ஊட்டாது!

மரங்கள் இலையாடாது வந்து மனுப்பேசாது
பட்டமரம் அத்தனையும் பாலாய்ச்சொரிந்திடுமாம்
உளுத்தமரம் அத்தனையும் ஓங்கித்தழைத்திடுமாம்
பூத்தமரம் அத்தனையும் உத்தமி புலம்பறதுதான் கேட்டு



பூத்தமரம் அத்தனையும் பூஉதிர்ந்து கேட்டிடுமாம்
காய்த்தமரம் அத்தனையும் பிறவியுட காவியத்தைக் கேட்டாலே
தாய்த்தமரம் அத்தனையும் காயுதிர்ந்தே போய்விடுமாம்
பழுத்தமரம் அத்தனையும் தங்காள் பழமொழியைக் கேட்டாலே
பழுத்தமரம் அத்தனையும் பழம் உதிர்ந்தே போய்விடுமாம்

மண்ணும் மரம்தழைய வாய்விட்டு அழுதிடுமாம்
காராம்பசுவுடைய கன்றும் பால் குடியாது
அதுவும் அழுதிடுமாம் ஆகாயம் பார்த்திடுமாம்
அப்படி அண்ணரைத்தேடி உத்தமி அழுது புலம்பி வாராள்
தங்காள் புலம்பி உத்தமிதான் வருகும் வேளையிலே

அந்த நல்ல வேளையிலே ஆயி பெரியக்காண்டி
மாதவசு முடிதீர தனக்கு வெகுகாலம் செல்லுமென்று
அருந்தவசு முடிதீர தனக்கு அநேக நாளாச்சுதென்று
இந்த தவசை விட்டு இனி எழுந்திருக்க வேணுமென்று
வனத்தில் படர்ந்த சடையை வகையாயிழுக்கையிலே

மாசடையில் வாழ்ந்ததெல்லாம் அந்த வானரங்கள் சத்தமிடும்
வனங்கள் நெறு நெறென அந்த வானரங்கள் சத்தமிட
அந்த நல்ல வேளையிலே தங்கம் அருவனத்தைப் பார்க்கவாராள்
அதிலே ஆந்தை அலறுதம்மா அந்த வனத்தில் அரும்பாம்புசீறுதம்மா
ஆந்தை என்று பாராமல் அந்த வனந்தான் பார்த்து

குறிஞ்சிவனம் பார்க்க உத்தமி கொடியாள் புலம்பி வாராள்
(அங்கே) கூகைகுளறுதம்மா கொடும்பாம்பு சீறுதம்மா
கூகை என்றும் பாராமல் குறிஞ்சிவனம்தான் பார்த்து
மூங்கில்வனம் பார்க்க உத்தமி மிதித்தேறி வாராளே
(அதிலே) மூங்கில் நெறுநெறுங்க முதுகரடி அபயமிட

எண்ணாது மெண்ணியே என்ன சொல்வாள் நல்ல தங்கம்
(என்னைப்போல்) கொள்ளை கொடுத்தே நீ குடி
சேதப்பட்டாயோ

அண்ணனையும் பறி கொடுத்து அழுதே புலம்பினையோ?
கொடியாள் புலம்புகையில் முதுகரடி கூடப்புலம்பிடுமாம்
தங்கை புலம்புகையில் கரடி தானும் புலம்பிடுமாம்

அந்த மொழி சொல்லி உத்தமி அழுது புலம்பியேதான்
தங்கை புலம்புறது பெரியக்காண்டிக்கு தாழ்ந்த செவி
கேட்டுதப்போ

கொடியாள் புலம்புறது பெரியகாண்டிக்கு குறிப்பாக
கேட்டுதப்போ

எண்ணாதுமெண்னி ஈஸ்வரியாள் ஏது சொல்வாள்
இன்னாள் இது காலம் (சிவசிவா) இந்தமலை
வெண்முடியில்

இருந்தேன் தவிசிலே தான் எனக்கு ஈடேற்றம்
வேணுமென்று

தவசிருந்த நாள் முதலாய் மனிதக்குரல் சத்தமுமே
கேட்டதில்லை

இந்த மலைவனத்தில் சத்தமிட்டு மனிதர் வரக்காரியமேன்
வானத்து தேவர்களோ வையகத்து மானிடரோ
காட்டில் முனிவர்களோ கானகத்தில் பேயோதான்

ஆரோ தெரியவில்லை இந்த அருவனத்தில் புலம்புறவள்
தவசு முடிதீருதென்று நான் தானிருக்கும் வேளையிலே
தவசைக் குலைத்திடவே சுவாமி தாடகையை விட்டாரோ
ஆராய்ந்து பார்த்து வர இதற்கு யாரை அனுப்பிடுவேன்
என்று மனதிலெண்ணி ஈஸ்வரிதான் அந்நேரம்

சித்தமுடையவள் தான் ஆயி சிவக்யானம் உள்ளவள்தான்
தன்னுடைய திருஷ்டியினால் திருமனது தானுதிக்க
மலை வனத்தில் வாழுகின்ற மந்தியண்ணன் ஓடி வந்து



தாயார்பாதம் சரணமென்று பாதாரம் தான் வணங்கி
அட்டம் பணிந்து அடி வணங்கி நிற்கையிலே

## பெரியக்காண்டி தங்கையைக் கொல்ல மந்தியை அனுப்புதல்

கானகத்தில் வாழ்கிறவன் அடாகனி பொறுக்கும் மந்தி
அண்ணா
யாரோ தெரியவில்லை இந்த அருவனத்தில் புலம்புறவள்
அது யாரென்று நீ பார்த்து அரை நொடியில் வரவேணும்
மலை வனத்தில் வாழுகின்ற மந்தியைத்தான் ஏவிவிட்டாள்
வாங்கோபம் சினத்துடனே வாரானே மந்தி அண்ணன்

தங்கை புலம்புறது மந்திக்கு தாழ்ந்த செவி கேட்குதப்போ
தன் மனது தானிரங்கி மந்தி தானுமப்போ ஏது சொல்வான்
(சிவ-சிவா) எப்பாவம் செய்தாலும் நமக்கு இப்பாவம் ஆகாது
பெண்பாவம் கொன்றால் நமக்கு பிழை தீர நாட்செல்லுமே
என்று தன் மனது தானிரங்கி தானுமந்த நாழிகைக்கு

குலைமுறித்து வழி தூர்த்து உத்தமி கூடப்புலம்பி வாரான்
ஏவி விட்ட தூதாளும் இன்னும் வரக் காணோமென்று
வருவான் வருவான் என்று ஆயி வெகுநேரம் பார்த்திருந்து
ஏவிவிட்ட தூதாளும் இவனும் அவளோட சேர்ந்ததுவே

## பெரியக்காண்டி வேங்கையை அனுப்புதல்

யாரை அனுப்ப இனி ஆராய்ந்து பார்த்து வாரார்
வீரமலை வனம் வாழுகிற வேங்கை வரிப்புலியை
இனத்தார் அறியாத வனத்து மிருகமதை
வனத்து மிருகத்தை தாயார் வரவழைத்து ஏவி விட்டார்
வாங்கோபம் சினத்துடனே வருகுது பெருவேங்கை

தங்கை புலம்புறது வேங்கைக்குத் தாழ்ந்த செவிதான் கேட்டு
கொடியாள் புலம்புறது வேங்கைக்கு குளிர்ந்த செவிதான்
கேட்டு

(சிவ சிவா) எப்பாவம் செய்தாலும் நமக்கு இப்பாவம் ஆகாது

பெண்பாவம் கொள்ளையிட்டால் பிழைதீர நாள் செல்லுமே
தன் மனது தானிரங்கி தானுமந்த நாழிகைக்கு
வேங்கை புலம்புதம்மா! தங்கைபடும் வேதனையைக் கண்டவுடன்

காண்டாமிருகமது உத்தமிக்குக் கடக்கத் துணை வருதே

வனத்து மிருகமது தங்கை கூட வருகிறது தானுங்கண்டு
கண்டு மனங் கலங்கி உத்தமி காரிழையாள்* என்ன சொல்வாள்

வனத்து மிருகமெல்லாம் நமக்கு வழித் துணையாச்சு
அப்போ மனதிலெண்ணி உத்தமி அழுது புலம்புகிறாள்
ஏவி விட்ட வேங்கையது அவளை இன்னும் ஆகாரம் கொள்ளவில்லை

ஒரு விசைக்கொரு விசை தான் பெண்குரல் ஓங்காரமா குதிப்போ

என்று மனதிலெண்ணி பெரியக்காண்டி ஈஸ்வரிதான் அந்நேரம்

## பெரியக்காண்டி நாகப்பாம்பை அனுப்புதல்

குஞ்சு சடையிலே தான் நாகம் குடியிருந்து வாழ்கிறது
ஐந்து தலைநாகத்தை தாயார் அரவத்தை ஏவிவிட்டாள்
வாங்கோபம் சினத்துடனே வருகுது நாகமது
தங்கை புலம்புறது நாகத்திற்கு தாழ்ந்த செவி கேட்குதிப்போ
சிவ சிவா எப்பாவம் செய்தாலும் இப்பாவமாகாது

தன்மனது தானிரங்கி தானும் அரவமப்போ
பெண்பாவம் கொள்ளையிட்டால் பிழைதீர நாள் செல்லுமென்று

* காரிகையாள்



ஐந்து படம் விரித்து உத்தமிக்கு அரவம் குடை பிடிக்க
நாகம் குடை பிடிக்க நல்ல தங்கை புலம்பிவாராள்
ஏவி விட்டதூதாளும் அவர்கள் இன்னும் வரக்காணோமென்று

யாரை அனுப்பினாலும் எல்லாம் அவளோட சேர்ந்திட்டுதே
ஒருவிசைக்கொரு விசைதான் பெண்குரல் ஓங்காரமாகுதிப்போ
சத்தம் அடக்கவே தான் யானையைத் தானனுப்பவேணுமென்று

## பெரியக்காண்டி தங்கையைக் கொல்ல யானையை அனுப்புதல்

மத்தகத்து வெள்ளானை அந்த மதகரியைத் தானழைத்து
அஞ்சாமதயானை அதை அரியமத மேற்றி
ஏவி விட்டாளப்போது ஏற்றமத யானையைத்தான்
யானை மதமேறி அப்போ வருகுதிப்போ
வனங்கள் நெறு நெறுங்க வருகுதே வெள்ளானை

ஒரு மரத்தைப் பிடுங்கியேதான் ஒரு மரத்திலே அடித்து
மறுமரத்தைப் பிடுங்கிக் கொண்டு யானை பந்தாடிக் கொண்டுமப்போ
வாங்கோபம் சினத்துடனே வருகுதே வெள்ளானை
தங்கை புலம்புறது வெள்ளானைக்கு தாழ்ந்த செவிகேட்குதப்போ
சிவசிவா எப்பாவம் செய்தாலும் நமக்கு இப்பாவமாகாது

பெண்பாவம் கொள்ளையிட்டால் நமக்கு பிழைதீர நாள் செல்லுமே

தன்மனது தானிரங்கி தானுமந்த வெள்ளானை
நெல்லி மரம் பிடுங்கி உத்தமிக்கு நிழலும் பிடித்திடுமாம்
யானை நிழல் பிடிக்க உத்தமி அழுது புலம்பி வாராள்
ஏவி விட்ட தூதாளும் ஆயி இன்னம் வரக்காணமென்று
என்று மனதிலெண்ணி மகாமுனியை இனி அனுப்புமென்று சொல்லி

### பெரியக்காண்டி அம்மன் தங்கையைக் கொல்ல வீரமகாமுனியை அனுப்புதல்

மட்டுக்கடங்காத மகாமுனியைத் தானழைத்தாள்
அருஞ்சுனையில் வாழுகின்ற அண்ணன் மகாமுனிதான்
இருந்த சுனையை விட்டு மகாமுனி எழுந்திருந்து முன்னே வந்து
தாயாரின் பாதம் சரணமென்று பணிவிடைகள் செய்கையிலே
மகாமுனியைத்தான் பார்த்து முத்தான வாய்திறந்து ஏதுசொல்வாள்

மலையில் பிறந்தவன் நீ! வல்லமைகள் கொண்டவன் நீ
மலையில் இருந்து நீ வாழ்ந்தாயே வெகு காலம்
இந்த மலையிலுந்தான் மானுடம் இனி புலம்பக்கண்டதுண்டா?
மனுவில்லாக் கானகத்தில் இப்போ மனுப்புலக்க* மானதென்ன
இது யாரோ எவரோ இதை ஆராய்ந்து பார்க்க வேணும்

மானிட சீவன் மற்றொருவர் ஆனாலும்
அடித்துப் பிடித்து நீ அவர்களை ஆகாரம் செய்துவிடு
மகாமுனிக்கு வார்த்தை சொல்லி தாயார் வகையாய் அனுப்பி வைத்தார்
மட்டுக்கடங்காத மகாமுனிதான் அந்நேரம்
இழுக்க வொண்ணா சங்கிலிகள்எடுக்க வொண்ணா பார்த்துவிட்டு

பார்த்துவிட்டுத் தடியெடுத்து படர்ந்தமலை சோதிக்கவே
வாங்கோபம் சினத்துடனே வீரமகாமுனி வாரான் வழி எதிரே

* புழுக்கம்



தங்கை புலம்பறது வீரமகாமுனிக்கு தாழ்ந்த செவி கேட்குதப்போ
தன் மனது தானிரங்கி வீரமகாமுனி தானுமப்போ ஏது சொல்வார்
சிவசிவா எப்பாவம் செய்தாலும் இப்பாவமாகாது
பெண்பாவம் கொள்ளையிட்டால் நமக்கு பிழைதீர நாள் செல்லுமே
குலைமுறித்து வீசியேதான் வழி கூட்டிப்பெருக்கி வாரான்

இருந்திருந்து மனம் சலித்து என்ன சொல்வாள் ஈஸ்வரிதான்
யாரை அனுப்பினாலும் எல்லாம் அவளோடே சேர்ந்திட்டுதே
அழுகை தணியவில்லை இன்னும் அழுத குரல் ஓயவில்லை
ஒரு விசைக்கொருவிசை தான் பெண்குரல் ஓங்கார மாகுதிப்போ
ஆரை அனுப்பிடுவோம் அதை ஆராய்ந்து பார்த்துவர
எவரை அனுப்பினாலும் எல்லாம் அவளோட சேர்ந்திடுதே

### பெரியக்காண்டி அம்மான் தெய்வ கன்னிகளை அனுப்பிப் பார்த்துவரச்சொல்வது

கன்னிகளை ஏவி விட்டாள் பார்த்து வந்து காரணத்தைச் சொல்வாரென்று
கைலாசம் கன்னிகளை தாயார் கன்னிகளைத்தானழைத்தார்
தாயார் அதட்டி அழைக்கையிலே அவர்களுமே ஓடிவந்து
ஒருநாளும் அழைக்காத தாயார் இப்போது ஓங்கி அழைத்ததென்ன?
அந்த மொழிகள் சொல்ல தாயார் அப்போது ஏதுசொல்வார்

இன்னாள் இதுகாலம் இந்த மலைவெண் முடியில் இருந்தேன் தவசிலே தான்
தவசிருந்த நாள் முதலாய் மனிதக்குரல் சத்தமது நானறியேன்
மனிதரில்லாக்கானகத்தே இப்போ மனிதப்புழக்க மாவதென்ன?

வனத்தில் புலம்பறவள் வையகத்தில் மானிடமோ
காட்டில் ரிஷியோதான் கானகத்துப் பேயோதான்
ஆராய்ந்து பார்த்து நீங்கள் அரைநொடியில் திரும்பவேணும்
கன்னிகளை ஏவிவிட்டாள் இந்தக் காரணங்கள் பார்த்துவர
கன்னிகளும் வந்து கானகத்தில் பார்க்கையிலே

நம்மில் பெரியவள்தான் நமைமிகுந்தாள் வாராளிங்கே
ஈஸ்வரிக்கு பெரியவள்தான் இம்மலைக்கு வாராளிப்போ
இந்த நல்ல காரணத்தை நம் ஈஸ்வரிக்குச் சொல்வமென்று
ஏழுபேர் கன்னிகளும் இணை சேர்ந்து ஓடி வந்து
என்தாயே ஈஸ்வரியே ஒரு வார்த்தை சொல்லக் கேளுமம்மா

வனத்தில் புலம்பறவள் மானிட சீவனல்ல
மானிட சீவனென்று அவளை மதிக்கவும் கூடாது
உச்சிப்பிறைப் பொலிவும் அவள் உடம்பெல்லாம்
தங்கநிறம்
அழகுத் திரு வடிவும் ஆதி பரமேஸ்வரிக்கு ஒப்பிடலாம்
கிழக்கெழுந்த சூரியன் போல் வடக்கு முகம் வாராள் காண்

உன்னில் பெரியவள் தான் இம்மலைக்கு வாராளிங்கே
அந்த மொழிகள் சொல்ல தாயார் அப்போது ஏதுசொல்வாள்
நம்மில் பெரியவளா? கன்னிகளே நானறிய வேணுமினி
என்னில் பெரியவளா? தெய்வகன்னிகளே நான் எதிர்
கொண்டு போகணுமே
இருந்ததவசு விட்டு தாயார் எழுந்தருள வேணுமென்று

வாகெடுத்த இளஞ்சடையை தாயார் வாரிமுடித்தாளப்போ
கோந்தை இளஞ்சடையை தாயார் கூட்டி முடித்தாளப்போ
கூட்டி முடிந்த சடை தாயார்க்கு ஒரு கூந்தற்பனை நீளம்
வாரி முடிந்த சடை அதுமலையின் குமிடது* போல்
சடையை முடித்து வைத்து ஆயி சன்யாச மாத்திவைத்து
வாருமினி கன்னியென்று வரவழைத்தாள் கன்னிகளை

* குவடு



கன்னிகளைத் தானழைத்து தன்னுடகாரணத்தைச்
சொல்லுகிறாள்
வெகுநாள் தவசிருந்து எனக்கு வீரியங்கள் பத்தவில்லை
வெகுநாள் தவசிருந்து எருந்தருள வல்லமை தான்
பத்தலையே
ஏழுபேர் கன்னிகளும் நீங்கள் எனக்கு வந்து கை கொடுங்கள்
அந்த மொழிகள் சொல்ல கன்னியர்கள் அக்காமாரோடு
வந்து

ஏழு பேர் கன்னிகளும் தாயார்க்கு இருபுறமும் சூழ்ந்து
நின்று

இந்தா தாயே என்று கன்னியர்கள்
இயல்பாகக்கைகொடுத்தார்
கைலாகு மெய்லாகு தாயார் காலூன்றி எழுந்திருந்தாள்
எட்டி அடி வைக்கமட்டும் தாயார்க்கு இருபுறம்தோள்
கொடுத்து
தூக்கி அடிவைக்கமட்டும் சுற்றி வந்து கைகொடுத்து

கைலாகுமேலே தாயார் கடுகி வழி நடந்தாள்
தண்டை கலகலவெனத் தாயார் சதங்கை மணிசத்தமிட
கச்சை மணி கலகலவெனத் தாயார் கால் சிலம்பு ஓசையிட
பிரம்பு ஒருகையிலே தாயார்க்கு பிரப்பம் பொந்திகோல்
ஒருகையிலே
தண்டு ஒரு கையிலே தாயார்க்கு திருநீற்றுப்பை ஒரு
கையிலே

பிரப்பங்கோல் தனையூன்றி தாயார் புறப்பட்டாள்
கானகத்தே
ஏழு பேர் கன்னிகளும் தாயார்க்கு இருபுறமும் சூழ்ந்துவர
கன்னியர்கள் சூழ்ந்துவர வீரமலைக்கானகத்தில் வாரபோது

## பெரியக்காண்டி அம்மன் தங்கையைக் காணுதல்

ஏந்திய திருக்கரகம் உத்தமி ஓங்கியது பூங்குலையும்
கரகம் தனை ஏந்தி காரிழையாள் வருவதைத்தான்
கண்டார்கள் கண்ணாலே காரிழையாள் வருகிறதை
எதிராக வந்து நின்று ஈஸ்வரிதான் ஏது சொல்வாள்
வனத்து ரிஷியோ (வாரவள்தான்) வையகத்து மானிடமோ

காட்டு ரிஷியோ நீ கானகத்துப்பேயோதான்
யாரடி வாரவள் தான் அங்கே அப்புறமாய் நில்லுமென்று
உன்னுடைய ஆவி பறக்குமினி அகல நின்று வார்த்தை சொல்லும்

அந்தமொழிகள் சொல்ல உத்தமி அப்போ மனங்கலங்கி
செங்கண் நிறம் குழைந்து சிவந்த முகம் வேறாகி

கண்கள் நிறம் குழைந்து உத்தமி கதித்தமுகம்தான் தளும்பி
நில்லென்ற சொல்கேட்டு உத்தமி நின்றாள் நிலமரமாய்
வைத்த அடி பெயராமல் உத்தமி மரம்போல நின்றுவிட்டாள்
அப்போ மனந்துணிந்து அதுவார்த்தை ஏது சொல்வாள்
ஆயிநான் வனத்து மிருகமல்ல வையகத்துப் பேயுமல்ல

காட்டேரி அல்ல அம்மா நான் கானகத்துப்பேயுமல்ல
வையகத்து மனுவுமல்ல குன்றுடையான் வரத்தினால் பிறந்தவர்கள்
எங்கய்யர் வட்டாரம் பதிஆளும் வளநாட்டுக் காராளன்
பிள்ளையில்லை என்று சொல்லி குன்றுடையார் பெருங்கவலை யுண்டாகி
மைந்தனில்லையென்று சொல்லி தாயே மனக்கவலையுண்டாகி

பொன்னம் பலத்திலே எங்கய்யர் போயி வரம்வாங்கி
அப்படி வரத்தினால் பிறந்தவர்கள் எங்களண்ணர் வாள்வீரர் தாளிருவர்



பொன்னர் சங்கர் என்று சொல்லி எங்களண்ணர் புகழ்வீரர் காராளர்
இருவருடன் பிறந்தவள் தான் தாயே ஏந்திழையாள் நல்லதங்கம்
எங்களண்ணர் வேடுபடை பொருதி விடாச்ச களமாகி விட்டார்
விடாச்சகளம் பார்க்கவேதான் வீரமலை வனத்தில் புலம்பி வந்தேன்
மயிரதனைப்பறி கொடுத்த மான் கவரிமான் போல

சிறகு பறிகொடுத்த செங்காட்டு அன்னம்போல்
எங்களண்ணர் உயிரைப் பறிகொடுத்து உனக்கெதிரே வந்தேனிப்போ
பார்ப்பார வேஷம் தாயே பாங்கிவேசம் ஆனேனம்மா
குச்சிலியர் வேஷம் குறவேஷமானேனம்மா
என்னுடையதாய் மேனி தாயே தவசுமிகக் குலைந்து

பேய்பெற்ற பாலகன் போல் உனக்கெதிரே பேதையைப்போல் நிற்கிறேன் நான்
அந்த மொழிகள் சொல்லி உத்தமியாள் அப்போ மனங்கலங்கி
ஏங்கி அழுதாளே தாயார் ஈஸ்வரிக்கு முன்னே நின்று
அகல நின்று ஈஸ்வரியும் அண்டி மெல்லகிட்ட வந்து
வல்லவர் மகளே நீ உத்தமி வழியார் உடன் பிறப்போ

ஆரு பெற்ற மகளோ நீ அந்தரத்தில் வந்துவிட்டாய்
முக்காடு நீக்குமம்மா உத்தமி உன் முகவடிவு பார்க்கவேணும்
துயிலாடை நீக்குமம்மா உன் திருவடிவு பார்க்கிறேன் நான்
முன்னாக வந்து உத்தமியாள் முக அழகு பார்க்கையிலே
உச்சிப் பிறைபொலிவும் உத்தமிக்கு உடம்பெல்லாம் தங்கநிறம்
நெத்திப்பிறை அழகும்உத்தமிக்கு நிலாப்பிறைபோல மின்னுது

தங்கம்போல மேனி யெல்லாம் உத்தமிக்கு தகதக
என்றுமின்னும்
பொன்னிழையும் தங்க மேனி உத்தமி திரேகமெல்லாம்
மின்னுது
அழகுத் திருவடிவும் உத்தமிக்கு அளவறுக்கக்கூடாது
கண்ணீர் சொரிந்து தாயார் கடைக்கண்ணில் முத்துதிர்த்து
உத்தமியைத்தான் பார்த்து ஏது சொல்வாள் ஈஸ்வரியும்

அஞ்சிக் கலங்காதே உத்தமி அழவேண்டாம் சும்மாயிரு
எண்ணங்கலங்காதே உத்தமி யோசனைகள் செய்யாதே
இருவருடன் பிறந்தவளுக்கு உத்தமி ஏழு பிறப்பாச்சு
ஏழுபேர் கன்னியுடன் உத்தமி இணை சேர்ந்து
கொள்ளுகிறேன்
மஞ்சள் சுனையுமுண்டு மலைமேல் மாசுனையில்
தீர்த்தமுண்டு

சுனையிலே நீராடி உத்தமி உன் துகிலைக் களையுமம்மா
உன் அழுக்கைக் களையுமம்மா உத்தமி அழுக்கு நீராடுமினி
அந்த மொழிகள் சொல்ல உத்தமி அப்போ மனங்கலங்கி
மாளக் கொடுத்தாளுக்கு தாயே மகா சுனையில்
தீர்த்தமென்ன?
துக்கம் சுமந்தாளுக்கு தாயே சுனையிலே தீர்த்தமென்ன?

எங்களண்ணரைக் காணுமட்டும் எனக்கென்னம்மா தீர்த்தம்
இறந்தகளம் காணுமட்டும் அம்மா என் எரிநெருப்புத்
தணியாது
எரிநெருப்புத் தணியாமல் தாயே என் கவலை நீங்கிடுமோ!
என் அழுகை தணிவதில்லை தாயே நான் அழுதகுரல்
ஓய்வதில்லை
என் அண்ணன் படுகளத்தில் தாயே அக்கினியில்
நானிருப்பேன் (என்று)



முத்துப்போல் கண்ணீரை உத்தமி முகத்தோடே
சோரவிட்டாள்
பவளம் போல் கண்ணீரை உத்தமி பக்கமெல்லாம்
சோரவிட்டாள்
ஏங்கி அழுகிறாளே உத்தமி ஈஸ்வரிக்கு முன்னே நின்று
பார்க்க முடியாமல் பெரியக்காண்டி பார்க்க மனங்கூடாமல்
எண்ணி அழுகாதே தங்கமே! இளைத்து மனம் வாடாதே!

ஆண்டாண்டமுதாலும் உத்தமி உங்களண்ணர் மாண்ட களம்
காண்பாயா
அழுகை தணியுமம்மா உத்தமி உன் அழுதகுரல் ஓயுமம்மா
அந்த மொழி கேட்டு உத்தமி அழுகை தணிந்துமப்போ
அழுகை தணிந்த பின்பு உத்தமி அழுத குரல் ஓய்ந்த பின்பு
உத்தமியைத்தான் பார்த்து ஏது சொல்வாளீஸ்வரிதான்

## பெரியக்காண்டி அம்மான் தங்கையுடைய வரலாறு கேட்டல்

எந்தவூர் எவ்விடமோ அம்மா நீ இருக்கும் பதி எதுவோ?
உன் ஊரும் உன்பதியும் உத்தமியே சொல்லுமம்மா
அந்த மொழிகள் சொல்ல உத்தமி அப்போது ஏது சொல்வாள்
என்னூரும் என்பதியும் தாயே ஈஸ்வரியே கேளுமம்மா
(என் சீமை) மண்பறக்கும் மறவர் நெறி வளர்த்திருக்கும்
ஆனபதி

நெல்லி வளநாடு என்சீமை நெற் சூழ்ந்த கோநாடு
சித்தளந்தூரு சிறந்த நெல்லி வளநாடு
எல்லாம் சிறந்திருக்கும் என்னுடைய ராச்சியத்தில்
காலாறல்மடை திறந்தால் என் நாட்டில் காதவழி நீர் பாயும்
மச்சங்கள் துள்ளி விழும் என் நாட்டில் மகர மீன்சேல் பாயும்

கெண்டை மீன் துள்ளி விழும் என் நாட்டில் கெளிரி
விளையாடும்
அயல் நாட்டுப்புள்ளினங்கள் என் நாட்டில்
அழகாய்க்கனிகள் தின்னும்
என் நாட்டுக் கனிகள் தின்று அது இரு கரையும் சேல்பாயும்
சம்பா விளைந்திருக்கும் என் நாட்டில் சரிசேரு* கட்டி
நிற்கும்
நெல்லு விளைந்திருந்தால் நிறை சேறுகட்டி நிற்கும்

கரும்பு செந்நெல் உள்ள தெல்லாம் என் நாட்டில்
கணுவுக்கொரு முத்தீனும்
மாதமோ மூன்று மழை (என் நாட்டில்) வருஷமொரு
பொன்மாரி
நீதி தவறாது என் நாட்டில் நீதி முறை தப்பாது
கட்டின ஏர்க்கைந்து பணம் சிவசோழர் நாட்டில்
கடமைநிகுதி பண்ணி
கறந்து வைத்த பாலதனை காகமது தீண்டாது!

சிவசோழர் ராச்சியத்தில் காவல் கொண்டு ஆண்டிருந்தார்
நெல்லி வளநாட்டிலிருந்து சிவ சோழ ராச்சியம் நீதி உடன்
ஆண்டிருந்தார்
வளநாடு குடியிருந்து நாங்கள் வாழ்ந்தோம் சிலகாலம்
வாழ்ந்த நாள் தானிருந்து தாயே வாமலைக்கு
வந்தேனிப்போ
அந்த மொழிகள் சொல்ல தாயார் அப்போது ஏது சொல்வாள்

நாட்டு வளப்பமெல்லாம் உத்தமியே நடவளப்பம் கேட்டுக்
கொண்டேன்
உன் நாட்டில் என்னென்ன புஷ்பமுண்டு உத்தமியே
சொல்லுமம்மா
அந்த மொழிகள் சொல்ல உத்தமியாள் அப்போது ஏது
சொல்வாள்

* சேறு



என் நாட்டில் பூவர்க்கம் தாயே ஈஸ்வரியே கேளுமம்மா
அடுக்கரளி செவ்வரளி என் நாட்டில் ஆனமுல்லை
இருவாட்சி
கொத்தரளி கொடிமல்லிகை கொடி படர்ந்த செண்பகப்பூ
முல்லை இருவாட்சி தாயே முனை முறியாச் செண்பகப்பூ
மகிழம்பூ தென்றல் வீச வைய நெல்லி வளநாடு

பந்து பந்தாய்ப் பூத்திருக்கும் பவளமல்லிப் பூச்சரங்கள்
என் நாட்டில் பூவர்க்கம் தாயே உத்தமியாள்
சொன்னேனம்மா
பார்த்த இடத்திலெல்லாம் மரிக்கொழுந்துப் பாத்தி வயல்
வாசமுடன்
மருக்கொழுந்துப் பாத்தியிலே வயலுக்கு மாராப்புப்
போட்டிருக்கும்
வளநாடு பூப்பறிக்க வானவரும் வந்திடுவார்
அந்த மொழி கேட்டு தாயார் அப்போது ஏது சொல்வாள்

## தங்கை பெரியக்காண்டி அம்மனுக்கு தன்னுடைய தாய் தகப்பன் பேர் சொல்லுதல்

உன் தாய் தகப்பன் பேருநிலை உத்தமியே சொல்லுமம்மா
அந்த மொழிகள் சொல்ல உத்தமி அப்போது ஏது சொல்வாள்
எங்களய்யர் பேருநிலை தாயே உத்தமியே சொல்லுகிறேன்
சோளத்தாக் கவுண்டர் மகன் தாயே கோடையிடிக்கவுண்டர்
கோடையிடிக் கவுண்டர் மகன் தாயே கோளாத்தாக்கவுண்டர்

கோளாத்தாக் கவுண்டர் மகன் தாயே எங்கய்யர்
குன்றுடையார்
குன்றுடையார் பெற்ற மக்கள் (தாயே) எங்களண்ணர்
குமாரசங்கு நல்லபொன்னு
பொன்னர் சங்கருடன் பிறந்த தாயே பொற் கொடியாள்
நல்லதங்கம்

எங்களத்தை மலைக்கொழுந்தாள் தாயே அம்மா பேரு
நம்பெருமாள்
எங்களையீன்றெடுத்த தாயார் தாயே
இனியதொருதாமரையாள்
எங்களைப் பேரு கொண்ட மாதா தாயே பெரியதொரு
நாச்சியம்மாள்
எங்கள் அத்தை மக்கள் மூவரும் முத்திரைதான் பெற்றவர்கள்
சீரங்கராயருட தாய் தகப்பன் பேருநிலை தாயே உத்தமியே
சொன்னேனம்மா

அந்தமொழி சொல்லவேதான் தாயார் அப்போது ஏது
சொல்வாள்
உன்னைக்காதத்து வாழ்வு என்ற காதினால் கேட்டிருந்தேன்
உன்னை தூரத்து உறவு என்று என் செவியினால்
சேட்டிருந்தேன்
தூரத்து உறவுமற்று நல்ல தங்கம் என் தோளெதிரே
வந்திட்டாயோ
காதத்து வாழ்வுமற்று உத்தமி என் கண்ணெதிரே
வந்திட்டாயோ
உன்முடியை நோக்கியேதான் வீரமலை வெண்முடிக்கு
வந்திட்டாயோ
வெண்முடிக்கு வந்தபோதே உத்தமி என் முடியும்
தீர்ந்திட்டதே
என் முடியும் தீர்ந்தபின்பு நல்லதங்கம் உன்முடியும் தீர்ந்து
விடும்
அஞ்சிக் கலங்கவேண்டாம் உத்தமி ஆலோசனை செய்ய
வேண்டாம்
எண்ணங்கலங்கவேண்டாம் உத்தமி யோசனைகள் செய்ய
வேண்டாம்

அண்ணரைத்தேடி நீ உத்தமி அருவனத்தில் வந்தாயே
வீரமலைக்கானகத்தில் மானிடம் விடாச்சகளமானது தான்



பார்க்க முடியலையே என் தங்காள் பார்க்க
மனம்கூடலையே
கரிக்கட்டை தரித்தாப்போல மானிடம் கால்மாடு
தலைமாடும்
முண்டம் தரித்தாப்போல் உத்தமியே முன்பாடும் பின்பாடும்
கானகத்தில் மாண்ட ஜனம் உத்தமியே
கண்ணாலேபார்க்கவில்லை
வாய்த்தநரி வயிர் கிழிக்க உத்தமி வந்த நரி கவிபாட

குள்ளநரி குடல் பிடுங்க உத்தமி குறைப் பிணங்கள் கூத்தாட
நரி பிணம் பிடுங்குதடி உத்தமியே நாரப்பிணம் சூறையம்மா
கச்சியி னான் கனபூதம் உத்தமியே அது காத்திருந்து
பூசைகொள்ளும்
பிச்சையினால் பெரும்பூதம் அந்த வனத்தில் பிடித்தமுர்தம்
கொள்ளுதே
உதிரம் பறக்கிறதும் வீரமலை வனத்தில் உதிர் பிறந்து
கவிபாடும்

சுடலை பறக்கிறதும் உத்தமியே சுடலை பிரிந்து
கவிபாடும்
பார்க்க முடியவில்லை உத்தமியே பார்க்க
மனங்கூடவில்லை
அந்த சவத்திலே தான் உத்தமி உ ங்களண்ணரை எங்கே என்று
நான் காண்பேன்
அங்கம் தெரியுமா உங்களண்ணர் அடையாளம் காண்பாயா?
அங்க அடையாளமெல்லாம் உத்தமியே எனக்கு அறிவாகச்
சொல்லுமம்மா

அந்த மொழி கேட்ட உத்தமி அடையாளம் சொல்லுகிறாள்
எங்களண்ணர் பம்பையிளமயிரு தாயேபட்டமழை
தாங்குமம்மா
கோந்தையிளமயிரு எங்களண்ணருக்கு கோடைமழை
தாங்குமம்மா

தோகையிளமயிரும் எங்களண்ணருட தொப்பாரக்
கட்டழகும்
தொப்பார தோகையிலே அண்ணர் அடியில் நிற்பார்
சிலபேர்கள்
வட்டத்திரு நீறு எங்களண்ணருக்கு வாய்த்ததொரு
பல்லொளியும்
இட்டபொட்டுக் கல்சுளியும் இடையே காந்தப்
பொட்டழகும்
பல்லுப் பணம் பெறுமே எங்களண்ணர் பவளவாய் பொன்
பெறுமே

செக்கச்சிவப் பழகும் எங்களண்ணர் சிவந்த சந்திர
சூரியனைப் போலொளியும்
பட்டாலொருவரைப் போல் எங்களண்ணர் பாடாக
வீழ்வதில்லை
சென்றாலொருவரைப் போல் எங்களண்ணர்
சீவித்திருப்பதில்லை
வலது காலூணிவைத்து எங்களண்ணர் இடதுகால்
மண்டியிட்டு
மண்டி வைத்த காலூணி மார்பில் வைத்த கேடயத்தை
வடக்குமுகம் திரும்பி வைகுந்தம் பார்வையுடன்
கைலாசம் பார்த்த கண்ணாய் எங்களண்ணர் கல்லு மேல்
பள்ளி கொண்டு
கல்லுமேல் பள்ளிகொண்டு எங்களண்ணர்
கண்ணுறக்கமாயிருப்பார்
எங்களண்ணர் பட்டபடுகளத்தில் தாயே இன்னமுண்டு
அடையாளம்
பட்டமரம் பால்வடியும் தாயே கெட்டமரம் கிளையாடும்
கிளையுதிர்ந்த மரங்களெல்லாம் தாயே இளந்துளிரு
பாய்ந்தோடும்
காய்ந்த மரங்களெல்லாம் அண்ணர் படுகளத்தில் காய்த்துப்
பழுத்து நிற்கும்



பூக்கா மரங்களெல்லாம் தாயே பூத்துச் சொரிந்திருக்கும்
வாயு ராஜன் வீசி நிற்கும் மழைமேக ராஜன் தீர்த்தமிடும்
கட்டெறும்பு சுள்ளினங்கள் தாயே காக்காய் கழுகினங்கள்
காக்காய் கழுகினங்கள் அந்த கானகத்து வாகனங்கள்
ஈ இனங்கள் எறும்பினங்கள் அது எல்லாம் அணுகாது

மார்பிலிடும் புனுகு தாயே மணக்குமது காதவழி
சேர்ந்தணிந்த புனுகு தென்றல் வீசும் காதவழி
சிவசோழர் தான் கொடுத்த தாயே தெய்வப் புரவி நிற்கும்
நாலுக்கால் வெண்காலு தாயே அது நடையில் அலங்காரி
பஞ்சகல்யாணி அது தாயே பச்சை வர்ண நீலாவும்

பச்சை வர்ண நீலாவும் எங்களண்ணர் பக்கமே நிற்குமது
அது கவளமெடுக்காது எங்களண்ணர் படுகளத்தில் கந்தம்
பரியாது
கொட்டமேல் கொட்டெறிந்து படுகளத்தில் கொஞ்சி
விளையாடி நிற்கும்
இந்த அடையாளமெல்லாம் எங்களண்ணருக்குத்
தானுமுண்டு
அங்க அடையாளமெல்லாம் தாயே அறிவாகச்
சொன்னேனம்மா

எங்கள் அண்ணருட அடையாளம் இனிக்கண்டாயோ
அந்த மொழி சொல்ல தாயார் அப்போது ஏது சொல்வார்
உங்களண்ணர் அடையாளம் அறிவுடனே சொன்னாயே
நாங்கள்கண்டு சொன்னாலே எங்களுக்கு என்ன
உபகாரம்செய்வாய்
அந்த மொழி சொல்ல உத்தமியாள் அப்போது ஏது
சொல்வாள்

செய்யுமுபகாரம் தாயே நான் சொல்லக்கேளுமம்மா
மாண்டவர் எழுந்தருள அண்ணருக்கு சுவாமி வாக்கு
மனுச்செய்ததுண்டு
இறந்தவர் எழுந்தருள சுவாமி ஈடேற்றம் தந்ததுண்டு

மாண்டு எழுந்திருந்தால் தாயே எங்களுக்கு மண்டலத்தில்
பூஜையுண்டு
பூலோக மண்டலத்தில் தாயே எங்களுக்கு பூஜை
நடந்ததானால்
முந்தின பூஜை முதல் பூஜை உன்னுதம்மா
உலகத்தில் பூஜையெல்லாம் தாயே உன்னுடைய பூஜையது
இந்த உபகாரம் தாயே ஏந்திழையாள் செய்வேனம்மா

அந்த மொழிகள் சொல்ல தாயார் அழைத்தாளே கன்னிகளை
வாருமினித் தெய்வ கன்னியென்று வரவழைத்தாளன்னேரம்
கன்னிகளைத்தான் பார்த்து அவர்கள் கண்ட காரணத்தைக்
கேட்கையிலே
ஏழுபேர் கன்னிகளும் தாயார் பக்கம் இதமாக முன்னே வந்து
சொல்லுகிறாரப்போது சதுரகிரி சூழ்ந்த மலை தெய்வகன்னி

வீரமலைக் கானகத்தில் நாங்கள் விதமாய்க் கனி பறித்து
தேங்கனிகள் மாங்கனிகள் தாயே சிவந்த பலாக்கனிகள்
கானகமெல்லாம் பார்த்து தாயே கன்னியர்கள்
நாங்களுந்தான்
இன்பமான கனிகள் தேடி தாயே நாங்கள் இதமாய்
வரும்போது
வீரமலை தென்கிழக்கில் ஒருவன் விடாய்ச்சகளம் கண்டு
வந்தோம்

திருகுகள்ளி நுழைக்கடவு அந்த செப்பூலாஞ் செடிவனத்தில்
கனிபறிக்கப் போன இடத்தில் தாயே கண்டுவந்தோம்
அடையாளம்
அவர் உச்சிக்கிரீடமது தாயே உடம்பெல்லாம் தங்க நிறம்
அவர் மாண்டவரைப்போல் தாயே மல்லாக்காய்
விழவில்லை
அவர் வலது காலூன்றி வைத்து இடது கால் மண்டியிட்டு
மண்டியிட்டுக் காலூன்றி மார்பில் வைத்தகேடயமும்



வடக்குமுகம் பார்வையுமாய் அவர் மண்டியிட்ட
பாவனைபோல்
அவர் பக்கத்திலேயொரு தெய்வப்புரவியது
அது கவளம் எடுக்காமல் கவலையுடன் நிற்கிறது
இந்த பொன்னரியாள் சொன்னதுமே பொருத்தமாய்
இருக்குதம்மா
என்றுமே கன்னிகளும் இதமாகச் சொல்லையிலே

அந்த மொழி கேட்டு உத்தமி அப்போ மனங்கலங்கி
கையை நெறித்து உத்தமி இரு கண்ணோடறைந்தழுது
ஏங்கி அழுது தாயாருடன் என்ன சொல்வாள் உத்தமியும்
சொன்ன அடையாளமெல்லாம் தாயே சோதனையும்
மெய்யாச்சு
அந்த அடையாளமெல்லாம் தாயே
எங்களண்ணருக்குத்தானுமுண்டு

என்று சொல்லி உத்தமியாள் ஏங்கி அழுகையிலே
முத்தான வாய்திறந்து தாயார் உத்தரவு ஏது சொல்வாள்
அஞ்சிக்கலங்காதே நல்ல தங்கம் அழவேண்டாம் சும்மாயிரு
உங்களண்ணர் மாண்ட படுகளத்தை பார்ப்போமினி
உங்களண்ணர் சென்ற குலகளத்தை சென்றறிவோம்
சும்மாயிரு

அந்த மொழிகள் சொல்லி தாயார் அருவனத்தில்
போகவென்று
தன்மனது தானு மெண்ணி தாயார் தானுமந்த நாழிகைக்கு
சித்தமுடையவள் ஈஸ்வரி தன்னுடைய திருமணத்தில்
உத்திக்கவே
வாச்சிஉளி நாடாத பெரியகாண்டிக்கு வைரமணிப் பூந்தேரு
கொல்லன் உளிநாடாத தாயார்க்கு குறிஞ்சி நிலப்பூந்தேரு

அச்சில்லாத் திருத்தேரு தாயார்க்கு ஆகாசப் பூந்தேரு
மல்லிகை முல்லையது தாயார்க்கு மலரும் இருவாட்சி

கொத்தரளி கொடிமல்லிகை நல்ல கொடி படர்ந்த
செண்பகப்பூ
அப்படி புஷ்பம் அலங்கரித்து தாயார் பூந்தேரு நிற்குதங்கே
தேரும் அலங்கரித்து தாயார்க்கு திருத்தேரு நிற்கையிலே
ஆகாசப்பூந்தேரு தாயார் அந்திரத்தேர் மேலேறிக்கொண்டாள்
தேருடனேகூடதிறமுடைய கருப்பண்ணனும்

வாளெடுத்து கச்சைகட்டி வாது கருப்பண்ணன் வகையாக
அப்போது
தேர்ப்பாகனாக நல்ல கருப்பண்ணன் திறமுடனே
கூடவாரான்
செங்க மகாமுனியும் தீர்க்கமுடன் அப்போது
கண்டர் கோடாலியும் கனதுண்டு தடியெடுத்து
எடுக்க வொண்ணா புஸ்தகமும் இழுக்க ஒண்ணா
சங்கிலியும்

மந்திரக்கோல் தானெடுத்து மகாமுனியும் அப்போது
கன்னியர்கள்தான் கூடகானகத்தில் தான் வாரார்
தேரு மேலேறியேதான் கருப்பண்ணன் தேரைநடத்துகிறான்
அந்த அச்சில்லாத் திருத்தேரு அசைந்து குலுங்கியேதான்
தேரு குலுங்கியேதான் தாயார் திருத்தேர் நடக்குதப்போ

ஆகாசப் பூந்தேரு அது அருவனத்தில் வருகுதப்போ
ஏழுபேர் கன்னிகளும் தங்கையர்க்கு இருபுறமும் சூழ்ந்து வர
ஏந்திய திருக்கரகம் உத்தமி ஓங்கியது பூங்குலையும்
கரகந்தனை ஏந்தி அம்மாள் கன்னிமாருடன் தொடர்ந்தாள்
கன்னியர்கள் சூழ்ந்து தாயார் தேரு கானகத்தில் தான் வருதே

அந்த வனத்திலேதான் ஆயிஉட பூந்தேரு
நடந்து வருகையிலே நலமுடனே அப்போது
முன்னிருக்கும் மரம் செடிகளெல்லாம் அது தன்னாகத்தான்
விலகி
முன்னாகத்தான் விலகி அது பின்னாகத்தான் வளரும்



தாயார் தேரு வாரவழியிலே தான் மரங்களெல்லாம்
பூத்திருக்கும்
மல்லிகை முல்லை தாயார் வார வழியெல்லாம் பூத்திருக்கும்
சந்தனமும் கோங்கு புன்னை தயவுடனே செண்பகப்பூ
அந்த வனந் தாண்டி தேரு அடுத்த வனம் வருதே
பட்ட படுகளத்தை குமாரசங்கு பார குளகளத்தை

சென்ற களம்தேடி தாயார் தேரு வருகுதப்போ
மாண்டகளம் தேடி தாயார் மணித்தேர் வருகுதப்போ
தேருமேல் தானிருந்து தாயார் சென்ன களம் கண்டார்களே
பட்டகளம் பார்த்து தாயார் சங்கருட பாரக்களம் கண்டாரே
கண்டாள் படுகளத்தை பெரியக்காண்டி கண்கள்
விழிகொள்ளாமல்

கன்னியர்கள் கண்டு வந்து சொன்ன காரணமெல்லாம்
பார்த்து
சொன்ன குளகளத்தை தாயார் சுத்தி வலம் வந்து
முன்னாக வந்து நின்று தாயார் சங்கருட முகத்தழகு தான்
பார்த்து
மாண்டவர்கள் கிட்ட வந்தால் உத்தமி மனிதருக்கு
தீட்டல்லவா
சென்றார்கள் கிட்ட வந்தால் உத்தமி உங்களைச் சேர்ந்தவற்கு
தீட்டல்லவா
பின்னாக வந்துமப்போ பூத்த புன்னை மரத்தடியில்
பூந்தேரு நிறுத்தினாளே

## தங்கை அண்ணர் படுகளம்
## பார்த்து புலம்புதல்

அண்ணர்மேல் ஆவலுடன் உத்தமி அதி துருசா யோடிவந்து
வலமாகச் சுத்தி வந்து உத்தமி சங்கருட வாச்ச முகம் பார்த்து
ஐந்து கொத்து சல்லிசின்னண்ணருக்கு அடையாளம்
செம்பரிசை

செம்பரிசை சீறாவும் சின்னண்ணருக்கு சேர்ந்த சகலாத் தொழிவும்
அங்க அடையாளமெல்லாமல் உத்தமி அறிவுடனே தான் பார்த்து
சிவ சோழர் கொடுத்த (சின்னண்ணருக்கு) அந்த தெய்வப்புரவி நிற்கிறதை
பஞ்சகல்யாணியை உத்தமி பார்த்தாள் அடையாளம்
கண்டு மனங்கலங்கி அண்ணரைப் பார்த்து காரிழையாள்நல்லதங்கம்

ஏங்கி அழுதுமப்போ சின்னண்ணரைப் பார்த்து ஏது சொல்வாள் உத்தமியும்
அக்கு மணிக்கயிறு என் பிறவி சின்னண்ணா அது நல்ல பஞ்சு மெத்தை
ஐந்தடுக்கு பஞ்சு மெத்தை சின்னண்ணா உனக்கு அதுமேலே தூளிமெத்தை
பஞ்சு மெத்தை மேலிருக்க அண்ணா நீ மெத்தை அழுத்துதென்பாய்
மெத்தை அழுத்துதென்பாய் அண்ணா உன்னுடைய மேனி யெல்லாம் நோகு தென்பாய்

நித்திரையும் வல்லையென்று அண்ணா நிட்டூரம் சொல்லுவையே
பூமியிலே சவமிருந்தால் அண்ணா உன் மேனியிலே புழுதி அணையுமென்று
பாறைமேல் பட்டுவைத்து அண்ணா அதன்மேல் பாங்காக மண்டியிட்டு
கல்லுமேல் பள்ளிகொண்டு அண்ணா நீ கண்ணுறக்கம் ஆனாயோ?
மரத்திலே தொட்டில்கட்டி அண்ணா வளர்ப்பார்கள் வையகத்தில்
நம்ம தாயார் வயிற்றிலே தொட்டில் கட்டி வளர்ந்த சரீரமே



பொன்னாலே தொட்டி கட்டி அண்ணா போர்த்தி வளர்த்த மேனி
தங்கத்தால் தொட்டி கட்டி அண்ணா தடவி வளர்த்த மேனி
உன் தங்கத்திருமேனியிலே அண்ணா வீரமலைக் காட்டில் சருகு அணையவே தான்
உன் பொன்னுந் திருமேனியிலே வீரமலை வனத்தில் புழுதியணையவேதான்
இந்தச் சவமிருக்க அண்ணா எழுத்துமுண்டோமுன்னாலே

வீரமலை வனத்தில் வசமிருக்க அண்ணா விதியுமுண்டோ முன்னாலே
எதிர்த்துப்படைபொருதி அண்ணா உன்னோடு எதிர்த்தாட யாருமில்லை
மறித்துப் படை பொருதி அண்ணா உன்னை மடிக்கமாற்றா ரொருவனில்லை
மாற்றானுட அம்புமல்ல அண்ணா இது மாயனுட காரணந்தான்
எதிராளி அம்பு மல்ல சின்னண்ணா உலகளந்தார் அம்புமது

மன்னர் படுகளமோ அண்ணா இது மாயனுட போர்க்களமோ
இந்தச் சவமிருக்க அண்ணா எழுத்துமுண்டோ முன்னாளில்
அண்ணா பரிசை முறியலையே பாரவாள் சோரலையே
அண்ணா உன் மாலை குலையவில்லை அண்ணா உன் வடிவு முகம் வாடவில்லை
அண்ணா உன் சேலை குலையவில்லை அண்ணா உன் செங்குருதி காணவில்லை

மாலை குலையாமல் அண்ணா நீ மற்போரும் செய்யாமல்
மற்போரு செய்யாமே அண்ணா நீ மடிந்த களமானாயே
எம்பத்து வெள்ளானை கட்டுகிற சங்கிலியை (அண்ணா) கயிறு போல் அற்றுவிழ
வெள்ளானை கட்டும் சங்கிலியை விலங்கு தரித்து விட்டு

குதிரைமேல் கொண்டு அண்ணா வளநாட்டுக் கோட்டை
குதித்து வந்து
படைப்போரு செய்யாமே அண்ணா நீ படுகளமும் ஆனாயே
மாணிக்கம் பூண்டமேனி அண்ணர் படுகளத்தில் மண்ணில்
புரண்டழுது
பொன்னுந்திருமேனி அண்ணர் படுகளத்தில் புழுதி
புரண்டழுது
கோந்தை குலைத்து விட்டு உத்தமி படுகளத்தில்
கோவென்று அபயமிட்டு
பம்பை சுழட்டியே தான் உத்தமி படுகளத்தில் மண்டியிட்டு
கோந்தை கழன்று வர உத்தமி கொடி மயிரும் தான் பறக்க
அண்ணர் மேல் ஆவலுடன் உத்தமி அழுது புலம்புகையில்
பார்க்க முடியாமல் தாயார் பெரியக்காண்டி பார்க்க மனம்
கூடாமல்
சித்தமிரங்கியேதான் தாயார் திருவாக்கு ஏது சொல்வாள்

உத்தமியே நல்ல தங்கம் ஒரு வார்த்தை கேளுமம்மா
மாண்டாரு பக்கமிருந்து உத்தமியே ஆண்டாண்டழுதாலும்
எண்ணி எண்ணி அழுதாலும் நல்லதங்கம் இறந்த
உயிர்திரும்பிடுமா
இறந்தாரு பக்கமிருந்து உத்தமியே எண்ணி அழ வேண்டாம்
எண்ணி அழுதாலோ உங்களண்ணர் இறந்தவர்க்கு
மோட்சமில்லை

புலம்பி அழுகாதே உங்களண்ணர் புண்ணியர்க்கு
மோட்சமில்லை
தேம்பி அழுகாதே உங்களண்ணர் சென்றவர்க்கு
மோட்சமில்லை
ஆண்டாண்டழுகாதே உத்தமியே மாண்டவர்கள்
பக்கமிருந்து
எண்ணி அழுகாதே ஏந்திழையே சும்மாயிரு



அழுகை தணிந்துமப்போ உத்தமி அழுதகுரல் உபசரித்து
தனியுந்தணியுமம்மா உத்தமி தங்கத்திருமுகமே
அந்த மொழி கேட்டு உத்தமி அழுத குரல் ஓய்ந்தாளப்போ
அழுகை தணிந்த பின்பு உத்தமி அழுத குரல் ஓய்ந்த பின்பு
ஆயி பெரியக்காண்டி உத்தமியைப்பார்த்து
அப்போதுசொல்லுகிறாள்

மாண்டு எழுந்தருள உங்களண்ணருக்கு சுவாமி வாக்கு
மனுச்செய்தாலும்
மாண்ட உயிர் மீண்டும் உத்தமியே மலையில் மருந்து வகை
வேணுமம்மா
இறந்து எழுந்தருள உங்களண்ணருக்கு சுவாமி ஈடேற்றம்
தந்தாலும்
மருந்து தெரியுமா உங்களண்ணர் மாண்ட உயிர்
மீண்டழைக்க
ஓமம் வளர்க்க வேணும் ஓமசாஸ்திரங்கள் செய்யவேணும்

ஓமப்புகை வழியாய் உங்களண்ணர் உயிரை
அழைக்கவேணும்
அதற்கு வேதங்கள் சொல்லணுமே வேதசாஸ்திரங்கள்
செய்யணுமே
அஞ்சசெழுத்தின் பஞ்சாங்கம் உத்தமியே உனக்கு அறிவு
தெரியுமா
அந்த மொழிகள் சொல்ல உத்தமி அப்போது ஏது சொல்வாள்

## ஓமம் வளர்க்க பெரியக்காண்டி மந்தியை சுப்பிவகை கொண்டு வரச்சொல்லுதல்

பொன்னருடன் பிறந்த பேடைமயில் நல்ல தங்கம்
தாயாரைத்தான் பார்த்து தானுமப்போ ஏது சொல்வாள்
ஓமம் வளர்க்கவம்மா ஓம சாஸ்திரங்கள் நானறிவேன்
வேதங்கள் சொல்லுவேன் வேத சாஸ்திரங்கள் நானறிவேன்
ஐந்தெழுத்தின் பஞ்சாங்கம் எனக்கு அறிவு தெரியுமம்மா

இதற்கு செல்லும் தளவாடமெல்லாம் கொண்டுவர
ஆள்காணோம்
பெண்ணாய்ப் பிறந்தவள் தான்தாயே பேடைமயில் என்ன
செய்வேன்
அந்த மொழிகள் சொல்ல தாயார் அழைத்தாளே மந்திகளை
மலைவனத்தில் வாழுகின்ற மந்தியண்ணன் ஓடி வந்து
தாயாரின் பாதம் சரணமென்று மந்தியண்ணன் பாதாரம்
போற்றி செய்து

பாதாரந்தஞ்சமென்று பணிவுடனே நிற்கையிலே
அட்டம் பணிகள் செய்து மந்தியண்ணன் அடிவணங்கி
நிற்கையிலே
என்ன என்ன தளவாடம் உத்தமியே சொல்லுமம்மா
ஓமத் தளவாடம் உத்தமியே சொல்லுமம்மா
அத்தி அரசுவேணும் தாயே ஆலாஞ்சமந்து வேணும்

கானகத்தில் வாழுகின்ற அம்மா காரைகரம்பை தான்
வேணும்
காரை கரம்பை வேணும் தாயே கருங்காளி சுப்பி வேணும்
நாகலோகம் போன உயிர் இந்த நரகலோகம் வந்திறங்க
நரகலோகம் வந்திறங்க இதற்கு நாயுருவி சுப்பி வேணும்
பொன்னுலகம் போன உயிர் இந்த பூமியிலே வந்திறங்க

பூலோகம் வந்திறங்க அதற்கு *பொரசமரச்சுப்பி வேணும்
அந்த மொழிகள் சொல்ல தாயார் மந்தியிடம் அப்போது ஏது
சொல்வாள்
பொன்னரியாள் சொன்ன சுப்பி வகைகள் கொண்டு
சுப்பிவகைகள் கொண்டு மந்தியண்ணா துரிதாய்த்
திரும்புமடா
என்று சொல்லி மந்தியை ஈஸ்வரிதான் ஏவி விட்டாள்
அந்த மொழிகள் சொல்லி உத்தமியைப் பார்த்து தாயாரு ஏது
சொல்வாள்

* பூவரசமரம்



இதுதான் தளவாடமோ உத்தமியே இன்னமுண்டோ
தளவாடம்
அந்த மொழிகள் சொல்ல உத்தமி அப்போது ஏது சொல்வாள்
ஓமம் வளர்க்கவேணும் ஓம சாஸ்திரங்கள் செய்யவேணும்
ஓமத்தளவாடம் இன்னம் உத்தமியாள் சொல்லுகிறாள்
காராவின் நெய்வேணும் தாயே காவேரித் தீர்த்தம் வேணும்

காவேரித் தீர்த்தமம்மா அந்தக் கரையில் தர்ப்பைப்புல்
வேணும்
அந்த மொழிகள் சொல்ல தாயார் பெரியக்காண்டி அப்போது
ஏது சொல்வாள்
அம்மா காராவின் நெய்யானால் நாமிருக்கும் வனத்தில்
கடுந்தூரம் கிட்டாது
காவேரித் தீர்த்தம் நாமிருக்கும் மலையில் கடும் தூரம்
கிட்டாது
நம்ம மலையில் மஞ்சள் சுனைநீரும் வாமலையில்
தெர்ப்பைப்புல்லும்

குறிஞ்சிவனக் கொம்புத் தேனும் உங்களண்ணருக்கு
கூடாதோ ஓமத்துக்கு
அந்த மொழி சொல்ல உத்தமி அப்போது சொல்லுகிறாள்
ஈக்கூட்டும் தேனுமது தாயே எச்சில் அணைகிறதே
எச்சில் அணைகிறதை தாயே ஓமம் வளர்க்கலாமா
அந்த மொழிகள் சொல்ல தாயார் அப்போது ஏது சொல்வாள்

ஈக்கூட்டும் தேனுமது தாயே எச்சம் என்று சொன்னதினால்
தவளை குடிக்கிறது காவேரித்தீர்த்தம் தண்ணீரும் எச்சமது
மச்சங்கள் வாழ்கிறது அதிலே மலஜலம் விடுகிறது
காராவின் பாலிலே தான் அதிலே கன்றின் வாய் வைக்கிறது
சுத்தங்கள் பார்த்தாயானால் அதிலே குற்றங்கள் மெத்த
மெத்த

மஞ்சள் சுனை நீரும் வாமலையில் தர்ப்பைப்புல்லும்
குறிஞ்சிவனக்கொம்புத்தேனும் உங்களண்ணருக்குக்
கூட்டலாம் ஓமத்துக்கு

அந்த மொழிகள் சொல்ல உத்தமி அப்போது ஏது சொல்வாள்
அந்த தளவாடம் தாயே கொண்டுவர ஆள் காணேன்
அந்த மொழி சொன்ன பின்பு தாயார் அழைத்தாளே
கன்னிகளை
கன்னிகளைத்தானழைத்து தாயார் காரணங்கள்
சொல்லுகிறாள்
மஞ்சள் சுனை நீரும் நம்ம வாமலையில் தர்ப்பைப்புல்லும்
குறிஞ்சிவனக் கொம்புத்தேனும் தெய்வ கன்னி கொண்டுவர
வேணுமிப்போ
அந்த மொழிகள் சொல்லி தாயார் அனுப்பி வைத்தாள்
கன்னிகளை
ஏழுபேர் கன்னியர்கள் தங்கைமார் இணை சேர வழி நடந்து
திருஞ்சி குறிஞ்சிவனம் அது தென்றலுலாவும் சோலைவனம்
கூவனாம் பள்ளம் பார்த்து அந்தக் குறிஞ்சிவனம்
பார்க்கையிலே
அதிலே யாருக்கும் எட்டாது அருங்கொம்பில் சிறு தேனும்
தாழ்ப்பணிந்து அது தெய்வ கன்னிமார்கள் தங்கள் கையில்
சேர்ந்திட்டுதே
குழை முறித்து ஈகலைத்து அந்தக் கொம்புத் தேன் தான்
பறித்து
அலுங்காமல் தானெடுத்து கன்னியர்கள் அடிமடியில்
வரிந்துகட்டி
மஞ்சள் சுனை நீரும் வாமலையில் தர்ப்பைப் புல்லும்
குறிஞ்சி வனத்தேனை அதுவெல்லாம் கொண்டுவந்து
முன்னே வைத்தார்
இதுதான் தளவாடமோ உங்களண்ணருக்கு இன்ன முண்டோ
தளவாடம்



## பெரியக்காண்டி கன்னிகளை பொன்னூசி பொன்சரடு வாங்கிவர தெய்வலோகம் அனுப்புதல்

அந்த நல்ல வார்த்தை சொல்ல உத்தமி அப்போது
ஏதுசொல்வாள்
நெற்றிலே பட்ட அம்பு எங்களண்ணருக்கு நேராகப்
பாய்ந்ததைத்தான்
அதை கட்டியிலை பிடித்து அண்ணருக்குக் காயம்
பொருந்தணுமே
பொன்னூசி பொன்சரடு சாமியுடகாயம்
பொருந்தவரம்வாங்கணுமே
வாடாத்திருமாலை ஈஸ்வரனார் வாங்கழுத்தில் சூடினது
சிவனுடைய மாலையை எங்களண்ணருட
திருக்கழுத்தில்பூட்டினார்
சிவலோகம் போன உயிர் எங்களண்ணருக்குத் திரும்பி
வருகுமினி
இந்த வாக்கு மனுவையெல்லாம் வாங்கிவர ஆள் காணோம்
அந்த நல்ல வார்த்தை சொல்ல தாயார் அழைத்தாளே
கன்னிகளை
வாருமினித் தெய்வகன்னியென்று வரவழைத்துக்
கன்னிகளை
அம்மா தெய்வலோகம் போயறிந்து சுவாமியுட சீர்பாதந்தான்
பணிந்து
பொன்னரியாளண்ணருக்கு இலைபிடிக்க பொன்னூசி
பொன்சரடு
வாடாத் திருமாலை சுவாமியுட வாங்கழுத்தில் சூடினது
மாண்டவர் எழுந்தருள சுவாமியுட வாக்கு மனுத்தான்
வாங்கி
இறந்தவர்கள் எழுந்தருள சுவாமியுட ஈடேற்றம் தான் வாங்கி
வாக்கு மனுவாங்கி தெய்வகன்னிவாங்கள் அரை நொடியில்
கைலாச கன்னிகளை தாயார் பெரியக்காள் கன்னிகளை ஏவி
விட்டாள்

ஏழுபேர் கன்னிகளும் இணை சேர்ந்து கூட்டமிட்டு
பொழுது முகம் காணாத கன்னியர்கள் பூஞ்சுனையில் நீராடி
ஞாயிறு அறியாத கன்னியர்கள் நற்சுனையில் நீராடி
மஞ்சள் சுனையில் கன்னியர்கள் மகா சுனையில் நீராடி
சுனையில் நீராடியேதான் கன்னியர்கள் துகிலாடை
கொய்துடுத்தி

குலுக்கி சிணுக்கறுத்து கன்னியர்கள் கோதி மயிர்முடித்து
கொண்டைக்குக் கொப்பி வைத்து கன்னியர்கள் கூந்தலிலே
பூத்தொடுத்து
பட்டுடுத்தி கன்னியர்கள் பனுதிகளைத் தான் பூட்டி
குலுங்கப் பணிபூண்டு கன்னியர்கள் கொந்தளம்
பொன்னோலையிட்டு
குச்சிலியக்குழந்தை போல தெய்வகன்னி கூடிவழி நடந்தது
பார்ப்பாரக் குழந்தை போலே தெய்வகன்னியர்கள்
பரலோகம் போகையிலே

## கன்னியர்கள் தேவலோகம் போகுதல்

நூலேணி வழியாக தெய்வகன்னி பொன்னேணி மேலேறி
பொன்னேணிமேலேறி தெய்வகன்னி பொன்னுலகம்
போய்ச் சேர்ந்தாள்
பொன்னுலகம் போனவர்கள் சுவாமியுட பொற்பாதம்
கண்டறிய
வாரார்கள் கன்னியர்கள் சுவாமியை வணங்கிப்பணி
செய்வமென்று
அந்த நல்ல வேளையிலே பரமேஸ்வரனார் அப்போ
தேவபூஜை

வேங்கைப் புலித்தோலும் சுவாமி வெண்புலித்தோல்
மேலிருந்து
ஆசனத்தின் மேலிருந்து சுவாமி அரிபூஜை (குருபூஜை
சிவபூஜை) செய்கையிலே



தீபதூபம் ஒரு கையிலே சுவாமி பூஜை மணி ஒரு கையிலே
திருச்சங்குமொரு கையிலே சுவாமி ஜெயகண்டி ஒரு
கையிலே
தீப தூபப்பெரும் புகையிலே சுவாமி திருக்கையில் மணி
சுழல
பூமாரி மணி முழக்கி பரமேஸ்வரனார் பூஜை
மிகச்செய்கிறார்
அந்தநல்ல வேளையிலே தெய்வகன்னிகள்
அப்போதுசொல்லுகிறார்

அம்மா சிவபூஜை வேளையிலே சுவாமி சீர்பாதம் சென்றறிய
ஏழுபேர் கன்னிகளும் இணைசேர்ந்து தான் மறைவாய்
பூஜை முடியட்டும் கன்னிகள் பொன் தூண் மறைவாக
நிற்குமந்த வேளையிலே ஈஸ்வரனார் நேர்மையுடன்
அப்போது
அரிபூஜை குருபூஜை ஈஸ்வரனார் ஆனபூஜை முடிந்தபின்பு

வெள்ளித்தூணோடே சுவாமி வீரக்கொலு விருந்தார்
பொன்தூண் மறைவிலே நின்று கன்னியர்கள் சுவாமி
பொற்பாதம் சரணமென்று
அட்டம் பணிகள் செய்து சுவாமியை அடிவணங்கித்
தெண்டனிட்டு
தெண்டனிட்டு நிற்கையிலே சுவாமி தெய்வ கன்னியர்க்கு
ஏதுசொல்வார்
நீங்கள் தெய்வலோகமிருந்து பூலோகம் போனவர்கள்

அந்த பூலோகம் தன்னிலே புதுமைகள் உண்டோதான்
அப்போது கன்னியர்கள் அரனார்க்கு ஏதுசொல்வார்
சுவாமி பொன்னர் என்றும் சங்கரென்றும் பேர்பெரிய
ராஜாக்கள்
அவர்கள் வாங்காப் படைபொருதி நாங்களிருக்கும்
வாமலையில் மடிந்தார்கள்
மாண்டவர்கள் எழுந்தருள சுவாமிவாக்கு மனுக்
கேட்கவந்தோம்

அப்போது ஈஸ்வரனார் தெய்வக் கன்னியர்க்கு ஏதுசொல்வார்
மாண்டவர்கள் எழுந்தருள நீங்கள் வையகத்தில்
கண்டதுண்டா?
இறந்தவர்கள் எழுந்தருள நீங்கள் இவ்வுலகில்
கண்டதுண்டா?
மாண்டவர்கள் எழுந்திருந்தால் வையங்கள் கொள்ளுமா?
என்று பரமேஸ்வரனார் இதுவார்த்தை கேட்கையிலே

அப்போ தெய்வகன்னியர்கள் சுவாமியிடம் அக்காமார்ஏது
சொல்வார்
மண்டலங்கள் பூஜைகொள்ள சுவாமியுட வாக்கு மனுகேட்க
வேணுமென்று
உலகங்களை பூஜைகொள்ள சுவாமியுட உத்தரவு
வேணுமென்று
பாசுவத ஊசிமுனையில் தாயார் பாரத்தவசு செய்து
சித்தம் இரங்கி சுவாமி அன்னைக்கு திருவாக்கு செய்ததுதான்

வண்ணச்சுருளெழுதி சுவாமி அன்னைக்கு வரவிட்ட
உத்தரம்தான்
அந்த நல்ல உத்திரமும் எங்கள் தாயாரு அடிமடியில்
இருக்குதது
பொன்னர் சங்கர்தான் பிறந்து படைப்போரு செய்திடுவார்
வாங்காப்படை பொருதியவர்கள் மடிந்த களமாகிடுவார்
பொன்னர் சங்கர் உடன்பிறந்த பொற்கொடியாள்
நல்லதங்கை

அண்ணன்மார் தமைத்தேடி அம்மலைக்குத்தான் வருவாள்
வீரமலைதேடி அந்த வெண்முடிக்குத் தான் வருவாள்
வெண்முடிக்கு வந்தபோது உங்களுக்கு வீரசொர்க்கம்
உண்டாகுதென்று
பொன்னரியாளங்கே வர பூலோகம் பூஜைக்கிடமாகு
தென்றும்
அந்த வாக்கு மனுப்படிக்கு அன்றைக்கு வரவிட்ட உத்தரவு



அன்று தந்த வாக்கு இன்றைக்கு அபத்தமாய்
போச்சுதென்றால்
தெய்வலோகம் விட்டு நாங்கள் பூலோகம் போவதில்லை
மகாதேவர் முன்னே நின்று தெய்வகன்னிகள் வழக்குரைத்து
நிற்கையிலே
வழக்குகள் தானுரைத்து கன்னியர்கள் வாக்கு
மனுகேட்கையிலே
சித்தம் திரும்பியே தான் சுவாமி சிவனார் மனந்திரும்பி
தெய்வ கன்னிகளை யழைத்து ஈஸ்வரனார் திருவாக்குச்
சொல்லுகிறார்

## மாண்டவர்கள் எழுந்திருக்க சுவாமி வரம் கொடுத்தல்

மாண்டவர்கள் எழுந்தருள தெய்வகன்னி வாக்கு
மனுத்தந்தேனிப்போ
இறந்தவர்கள் எழுந்தருள குமாரசங்கருக்கு ஈடேற்றம்
தந்தேனினி
நெற்றியிலே பட்ட அம்பு குமாரசங்கருக்கு நேராகப்
பாய்ந்ததது
கட்டியிலை பிடித்து குமாரசங்கருக்கு
காயம்பொருந்தவேதான்
பொன்னூசி பொன்சரடு ஈஸ்வரனார் பொருந்த
வரங்கொடுத்தார்

வாடாத்திருமாலை சுவாமியுட வாங்கழுத்தில் சூடினது
வாக்கு மனுக்கொடுத்து மகாதேவர் மாலையுடன் தான்
கொடுத்தார்
அந்த வாக்கு மனுவையெல்லாம் தெய்வகன்னி வாங்கி
மடியில் வைத்து
சுவாமி பாதஞ்சரணமென்று கைலாச கன்னிகள் பாதாரம்
போற்றி செய்து
வாக்கு மனுவாங்கி தெய்வகன்னிகள் வாரார்கள் பூலோகம்

பொன்னேணி வழியாக தெய்வகன்னிகள் நூலேணி
வந்திறங்கி
நூலேணி வழியாக கன்னியர்கள் பூலோகம் வந்திறங்கி
பட்ட படுகளத்தில் குமாரசங்கருட பாரக்குலகளத்தில்
சென்ன குலகளத்தில் தெய்வகன்னிகள் சேரவே வந்து நின்று
அண்ணருட தங்கையரைக் கன்னியர்கள் அருகில்
வரவழைத்து

வாக்கு மனுவையெல்லாம் நல்லதங்கம் வாங்கிவந்தோம்
உத்தமியே
அந்த மொழிகள் சொல்ல உத்தமி அப்போ மனங்குளிர்ந்து
சிவனைத் தொழுது ஸ்ரீராமரைத்தானினைந்து
வாக்கு மனுவையெல்லாம் உத்தமி வாங்கி மடியில் வைத்து
நெற்றியிலே பட்ட அம்பு சங்கருக்கு நேராகப் பாய்ந்த
தைத்தான்

கட்டியிலை பிடித்து உத்தமியாள் காயம் பொருதுகிறாள்
பொன்னூசி பொன்சரடு கோர்த்து பொருதுகிறாள் காயத்தை
கட்டியிலை பிடித்து அண்ணருக்கு காயம் பொருதியேதான்
சுவாமியுட வாடாத் திருமாலை சங்கருட வாங்கழுத்தில்
சூடியேதான்
சுவாமியுட அரளிப்பூமாலையிட சங்கருக்கு ஆபரண
மாலையாச்சு

மாலைப் பொலிவழகும் சங்கருட மார்பின் திருவழகும்
சேலை கட்டும் சீரழகும் சங்கருட சீரான கட்டழகும்
மாலை சுத்தம் திருக்கழுத்தில் மாணிக்கமாலை மார்பில்
துலங்குதப்போ
அரக்குதிரு மேனியிலே சங்கருக்கு அழுத்தினது சீராவும்
முன்னழகும் பின்னழகும் சங்கருட முகத்தின் திருவழகும்

அழகும் திருவடிவும் ஆதிபரமேஸ்வரர்க்கு ஒப்பிடலாம்
கிழக்கெழுந்த சூரியன் போல் சங்கர் வடக்கு முகம்
பார்வையுமாய்
பள்ளிகொண்ட பாவனையை சங்கரைப் பார்க்க முடியாதே



## தங்கை அண்ணரை எழுப்ப ஓமம் வளர்த்தல்

தன் கோத்திரத்துக்குள்ள உத்தமி சாஸ்திரங்கள் செய்வதற்கு
நாலு மூலை கோட்டையிட்டு நாலு கொத்தளங்கள் தான்
வளைத்து
நாலுமூலை கோட்டைக்கு தாலு தலைவாசல் விட்டு
நாலு தலைவாசலுக்கு உத்தமி நாலுகும்பம் தரித்து வைத்து
பதினாறு திக்குக்கும் உத்தமி பாங்காய் கலசம் வைத்து

எந்தத் தலைவாசலிலே சிவசிவ நான் ஓமம் வளர்ப்பதினி
மேற்கு தலைவாசல் கைலாச வாசல் மேட்டு வாசல் தானாச்சு
தெற்கு தலைவாசல் கைலாசம் சொர்க்க வாசல் தானாச்சு
கிழக்கு தலைவாசல் சுவாமியுட கொலுவிருக்கும் வாசலது
வடக்கு தலைவாசல் மாயன் பதியிருக்கும் வாசலது

எந்தத் தலைவாசலிலே சின்னண்ணருக்கு ஓமம்
வளர்த்திடுவேன்
என்று மனதிலெண்ணி உத்தமியாள் நல்ல தங்கை
நாலுமூலை கோட்டைக்குள்ளே அது நடுவே
அரண்மனையும்
அரண்மனையுந்தான் வளைத்து அதன் முன்னே
ஆசாரமேடையிட்டு
பெரியண்ணர் தருமரிருந்து இது சமாதானம் பேசுமிடம்

சின்னண்ணர் வீமர் இருந்து இது வீரியங்கள் பேசுமிடம்
அத்தை மக்கள் மூவரும் இதுசுத்தி கொலுவிருக்குமிடம்
அவர்கள் கொலுவிருக்குமது இது ஆசார மேடையென்று
அக்கினியை உண்டுபண்ணி உத்தமி யாகம் நிறைவேற்ற
சுப்பிவகை போட்டு துரிதாக அக்கினியை உண்டுபண்ணி

அக்கினியை உண்டுபண்ணி உத்தமி அதன்மேலே தேன்
சொரிந்து
பஞ்சாங்கம் ஓதி உத்தமியாள் பரமனை அடிதொழுது
நெஞ்சார அஞ்செழுத்தை உத்தமி நீதிபடவே நினைத்து

ஓமம் வளர்த்துகிறாள் பொன்னருடன் பிறந்த உத்தமியாள் நல்லதங்கம்
ஓமப்புகை தணலும் உத்தமி வளர்க்கிறது ஓங்கிவளருதப்போ
மண்ணுக்கும் விண்ணுக்கும் அது மழைக்கால் விழுந்தாப்போல
கம்முது மேகமெங்கும் கருக்குது வான மெங்கும்
அதிருது லோகமெங்கும் அண்டமெங்கும் ஊடுருவ

ஓமப்புகை வளர்த்து உலகமெங்கும் தான் மறைக்க
உயர்ந்த பருவதம் போல் ஓமம் ஓங்கிக் கொழுந்துவிட
ஓமம் வளர்த்தாளே உத்தமி உலகமெங்கும் கம்மும்படி
ஓங்கி வளர்ந்து எமலோகம் பரலோகம் ஒன்றாக நிற்குதது
தெய்வலோக மெல்லாம் திசைகெட்டு மெய்மறந்து

ஒருவர் முகம் ஒருவருக்கு ஒன்றுந்தெரியாமல்
சிந்தை கெட்டு மெய்மறந்து தெய்வசபை குலைந்து
ஆதிசிவன் மாயவரும் அன்பான தேவர்களும்
இந்த அதிசயத்தை ஏதென்று நாமறிவோம்
நாலு உலகம் தானறியும் நாரதரைத் தானழைத்து

ஏது புதுமையென்று ஈஸ்வரனார் தான் கேட்க
அப்போது நாரதரும் ஆராய்ந்து தான் பார்த்து
அதிசயங்கள் ஒன்றுமில்லை அரனாரே நீர் கேளும்
கம்மல் விழுகிறதும் கருக்கல் வந்து கட்டுகிறதும்
புனல்கள் கவிகிறதும் புகைச்சல் வந்து மூடுகிறதும்

பூலோகம் தன்னில் புகழ் பெரிய காராளன்
நெல்லி வளநாடு நெற்சூழ்ந்த கோனாடு
சிற்றாளைப்பட்டிணத்தில் சேர்ந்த நெல்லி வளநாட்டில்
குன்றுடையா னென்றொருவன் குலக்கொழுந்து காராளன்
வளநாட்டுக் காராளன் மைந்தனில்லை யென்று சொல்லி

பொன்னம்பலத்தில் அவன் பேரு பெற்று வந்தவனும்
வயது பதினாறாய் வாங்கி வந்தான் இரண்டு மைந்தர்



வயது பதினாறாகி மாண்டார்கள் கானகத்தில்
பொன்னர் சங்கருடன் பிறந்த பொற்கொடியாள் நல்லதங்கம்
பட்டபடுகளத்தை பார்த்தெழுப்ப வேணுமென்று
ஓமம் வளர்த்திட்ட உற்ற புகை என்று சொன்னார்
அந்தச் சேதி கேட்டு ஆதி சிவன் மாயவரும்

## படுகளம் பார்க்க மாயவர் வருதல்

ஓமப்புகை வழியாய் மாயன் இறங்கியே வாராரே
நரைத்த கிழவரைப் போல் சுவாமி நாமமிட்ட தாதனைப்போல்
பஞ்சாங்க வேதியன்போல் சுவாமி பார்ப்பனரைப் போலேவாரார்
திண்டுதனையூன்றி சீரான புத்தகத்தைக் கைப்பிடித்து
பஞ்சாங்கம் கொண்டு பார்ப்பாரும் தானும் வந்து

உத்தமியைத்தான் பார்த்து ஏது சொல்வார் புரோகிதனார்
ஓமமும் சாஸ்திரமும் உனக்கேது உத்தமியே
வேதமும் சாஸ்திரமும் வேதியற்கு அல்லாமல்
உனக்கு ஓமப்புகை ஏது உத்தமியே நல்லதங்கம்
வந்த பிராமணனார் வகையாகக் கேட்கையிலே

கண்டுமனங் கலங்கி காரிகையாள் எழுந்திருந்தாள்
சித்தமிரங்கியே வந்த பிராமணனார் திருவாக்கு ஏது சொல்வார்
ஓமம் நடத்துமினி ஓம சாஸ்திரங்கள் செய்யுமம்மா
ஓமத்துகுண்டானது வேதியர்க்கு உள்ள விலை முன்னே வையும்
வேதங்கள் சொல்லி வேத சாஸ்திரங்கள் செய்தபின்பு

வேதத்துக்குண்டானது வேதியர்க்கு முன்னே வையும்
அந்த மொழி கேட்க உத்தமி அப்போ மனங்குளிர்ந்து
ஓமம் வளர்த்துகிறாள் உத்தமியாள் நல்ல தங்கம்
வேதங்கள் சொல்லி வேதசாஸ்திரமும் செய்த பின்பு

வேதத்துக்குண்டான வேதியர்க்கு விலையும்
கொடுத்தாளப்போ
ஓமத்துக்குண்டான வேதியர்க்கு உள்ள விலை முன்னே
வைத்தாள்
வாள்வீரர் படுகளத்தில் இன்னும் மாணிக்கம் பிச்சையுண்டு
தார்வேந்தர் படுகளத்தில் எனக்கு தங்கமும் பிச்சையுண்டு
வந்த பிராமணனார் அப்போ வழக்காடி நிற்கையிலே

பூண்ட பனுதியிலே உத்தமி புதுப்பனுதி பார்த்தெடுத்து
வாள்வீரர் படுகளத்தில் தங்கை மாணிக்கம் பிச்சையிட்டாள்
தார்வேந்தர் படுகளத்தில் உத்தமி தங்கமும் பிச்சையிட்டாள்
சித்தம் திரும்பியேதான் அய்யர் திருவாக்கு ஏது சொல்வார்
பொன்னிட்ட கையினாலே உங்களண்ணர் புண்ணியனார்
எழுந்திருப்பார்

தங்கமிட்ட கையினாலே உங்களண்ணர் சங்கரனார்
எழுந்திருப்பார்
அந்த நல்லவார்த்தை சொல்லி வந்த பிராமணனார்
வந்த பிராமணனார் அவர் மாயமாய் ஏகி விட்டார்
உத்தமியாள் தானும் இந்தக் காரணத்தை ஊடுருவித்தான்
பார்த்து
வந்த பிராமணனார் அவர் மாயமாய்ப் போனதென்ன?

பரமசிவனாரோ சுவாமி பாருலகை அளந்தவரோ?
யாரென்று எண்ணியே உத்தமி அளவறுத்துப் பார்க்கையிலே
உலகளந்தார் வந்து நம்ம இந்தக் காரணத்தைச்
செய்தாரென்று
மாயன் பெருமாள் நம்மை மனது சோதிக்க வந்தாரிப்போ
மனது சோதித்த பின்பு மாயன் வாக்குமனுச் செய்வாரினி

வாக்குப்படியேதான் சுவாமி மனுவு நடக்குமினி
தன்னுடைய கோத்திரத்துக்குள்ள சாஸ்திரமெல்லாம் முடிந்து
பானக்கம் ஒரு கரகம் அது பசியாற வேணுமென்று



ஏலம் பொடி செய்து அண்ணருக்கு இளநீருகண் திறந்து
தாகத்துக்கொரு கரகம் அண்ணருக்கு மஞ்சள்சுனை நீரு
முன்னே வைத்து
அண்ணரைப் பார்த்து உத்தமி அப்போது ஏது சொல்வாள்
ஓமம் வளர்த்தேநான் ஓம சாஸ்திரங்கள் செய்தேன் அண்ணா
நம் கோத்திரத்துக்குண்டான சாஸ்திர மெல்லாம் முடித்தேன்

பானக்கமும் தண்ணீரும் உனக்கு அண்ணா பசியாற
முன்னேவைத்தேன்
என் ஆபத்துக்கு எழுந்திருந்து சின்னண்ணா அள்ளி விடாய்
தீருமண்ணா
தென்னிலங்கை ராவணனை ராமர்சாமி செய்தது
பாரதங்கள்
பண்டுபட்ட பாரதங்கள் ஆதி நாளையிலே
பாரதங்கள்கேட்கிலையே
வாலியும் சுக்ரீவனும் அவனுடைய வானரங்கள்
அத்தனையும்

மாண்டகளம் வந்து நின்று வாலியை மாயவனும்
வந்தெழுப்பி
மலையின் வகைமூலிகையை வாலனுக்கு மருந்துவகை
தானுஞ் சொல்லி
நிமிஷத்தில் கொண்டாவென்று நீலமேகன் தானுஞ் சொல்ல
மருந்தை மறந்துமவன் வாலான் மருந்து வகை தெரியாமல்
வாலால் திறைவளைத்து மருந்து மலையைப் பிடுங்கி வந்து

மலையைப் பிடுங்கி வந்து கார்த்துவாகு* பார்த்து
வைக்கலையா?
(மருந்து) மரங்களுடன் மரம் உரசி அந்த வாடை தணல் வீசி
வாடை தணல்வீசி வானரங்கள் மாண்ட உயிர் மீட்கலையா
மாயனுட காரணம் தான் அண்ணா மனுவு நடக்குமிப்போ
பத்திலொரு பங்கு சுவாமி வாக்கு பழுதொரு நாள் போகாது

* காற்று வாகு

வாக்குப்படியே தான் மாயன் வரவரழைப்பார் உன் உயிரை
வானுலகம் போன உயிர் அண்ணா மார்மூண்டு நீ திரும்பி
சிவலோகம் போன உயிர் அண்ணா திரும்பி நீ வாருமண்ணா
அந்த மொழிகள் சொல்லி உத்தமி ஆடை விரித்தெடுத்து
உடுத்தினாள் நற்றுயிலை யிட்டாளே முக்காடு

இட்டதொரு முக்காடு தன்னுடைய திரேகம் தெரியாமல்
போட்டதொரு முக்காடு தன்னுடைய புறவடிவு தெரியாமல்
சந்திரனார் தெரியாமல் உத்தமி தலைநிறைய முக்காடு
சூரியனார் தெரியாமல் உத்தமி துகிலால் திரைவளைத்து
எடுத்தாள் கரகத்தை உத்தமி கையில் ஏந்தினாள் வேப்பங்குழை

ஏந்தியதிருக்கரகம் உத்தமி ஓங்கியது பூங்குழையும்
கரகம்தனை ஏந்தி உத்தமி காரிழையாள் நல்ல தங்கம்
பட்டபடுகளத்தை அண்ணருட பாரக் குளகளத்தை
சென்ன குளகளத்தை உத்தமி சுற்றி வந்து மூன்று தரம்
சிவனை நினைத்து உத்தமி ஸ்ரீராமரைத் தானினைத்து

எழுதும் பிரமனைத்தான் உத்தமி ஈஸ்வரரைத் தானினைந்து
பேர்கொடுத்த பொன்னம்பல சுவாமி பொசிவாசி ஐயரையும்
சன்யாசி ஐயரைத் தவங்கொடுத்த புண்ணியரைத் தானினைந்து
எடுத்தாள் கரகத்தை உத்தமி ஏந்தினாள் தீர்த்தத்தை
தீர்த்தத்தைவாரியேதான் நாலு திசை பார்த்து விட்டெறிந்தாள்

## படுகளம் எழுப்ப தங்கை ஓமதீர்த்தம் வீசுதல்

வாரியே தீர்த்தத்தை குமாரசங்கு வாள்வீரர் மேல் எறிந்தாள்
சித்த மிரங்கியே தான் பரமசிவனாரும் காட்சி தந்தார்
மாயனுட காரணத்தால் சங்கர் உயிர் மார்மூண்டு தான் வருதே
சிவலோகம் போன உயிர் சங்கருக்கு திரும்பியங்கே வந்திட்டுதே



கைலாசம்போன உயிர் குமாரசங்கருக்கு கூடுவந்து சேர்ந்திட்டுதே
அங்கம் பதைக்குதப்போ குமாரசங்கர்மேனி அனல்காற்று வீசுதப்போ
கண்கள் விழிதிறந்து மெல்லக் காலுதைஞ்சு கொள்ளுதது
துங்கமதயானையைப் போல் குமாரசங்கு தூசிபரிமூண்டு
கதித்த மதயானையைப்போல் குமாரசங்கு காலூன்றி எழுந்திருந்தார்

ஆக்கரித்து சத்தமிட்டு குமாரசங்கு அறுபதடி பின்குதித்து
வட்டமிட்டு பவனி கொண்டு தன்னுடைய மந்திரவாள் தும்புவிட்டு
மெல்லியவாள் தும்புவிட்டு உத்தமியைப் பார்த்து வீரியவாள் ஏது சொல்வார்
அண்ணன்மார் தேவிகளை நீ அழைத்துமே வாராமல்
வாள்வீரர் தேவிகளை நீ வைத்துவரக் காரியமேன்

போர் மன்னர் தேவிகளை நீ பிரிந்து விட்டு வந்ததுமேன்
வைத்து நீ வந்ததற்கு உன்னை வாளுக்கிரையிடுவேன்
விட்டு வைத்து வந்ததற்கு வெட்டிடுவேன் உன்னையுந்தான்
மெல்லியவாள்தும்புவிட்டு குமாரசங்கு வெட்டுகிறேன் என்றுசொல்ல
அப்போ மனங்கலங்கி உத்தமி அண்ணர் முகம் தான் பார்த்து

ஒக்கப்பிறக்கலையா அண்ணா ஒரு முலைப்பாலுண்கலையா
கூடப்பிறக்கலையா அண்ணா உன்னோட கூட்டுப்பாலுண்கலையா
கூடப்பிறக்க அண்ணா ஒரு கோடி காலம் செல்லுமினி
ஒக்கப்பிறக்க அண்ணா ஒரு கோடி காலம் செல்லும்
பெண்பாவம் பொல்லாது அண்ணா புண்ணியனே வெட்டாதே
அஞ்சி ஒடுங்கி உத்தமி அது வார்த்தை சொல்லையிலே

## பொன்னம்பலசுவாமி தம்பி படுகளத்தைக் காண வருதல்

வெட்டிக் கெலித்தேதான் பொன்னம்பலசுவாமி
வேடுபடைசங்கரித்து
பதினெட்டு நாட்டையெல்லாம் தம்பிபலிக்கும் கருவறுத்து
குடைமேல்குடையழகர் பொன்னம்பலசுவாமி
கொப்பழகுநல்ல பொன்னு
குதிரைமேல் இருந்தவர் தான் பொன்னர் குதித்திறங்கி
ஓடிவந்து
தங்கையைப் பின்னே விட்டு பொன்னர்தானெதிரே
முன்னேவந்து
தட்டிச்சிலம்பமிட்டார் பொன்னர் தார்வேந்தர் தம்பியர்க்கு
கூடிச்சிலம்பமிட்டார் குமாரசங்கு அண்ணருடன்
கட்டிப்பிடித்துமப்போ தம்பியரைக் கண்ணோடே
சேர்த்தணைத்து
கட்டிப்பிடித்து தம்பியரைத்தானமரும் என்று சொல்லி
தங்கையரைத்தான் பார்த்து பொன்னர் தானுமப்போ
ஏதுசொல்வார்
வாள்வீரர் தேவிகளை அம்மா நீ வைத்து வரலாமா
போர் மன்னர் தேவிகளை அம்மா நீ பிரிந்து
விட்டுவந்ததென்ன
அந்த மொழி கேட்டு உத்தமி அப்போது ஏது சொல்வாள்
வாரும் வாருமென்று உங்கள்தேவிகளை
வருந்திஅழைத்தேனண்ணா
வரமாட்டேன் என்றுசொல்லி என்னுடன்
வஞ்சனைகள்செய்தார்கள்
அக்கினிக்கு பூஜை செய்து உங்கள் தேவிகளை அனுப்பி
வைத்து வந்தேனண்ணா
கானலுக்கு பூஜை செய்து உங்கள் தேவிகளைக் கடத்தி வழி
வந்தேனண்ணா



நீர்க்கடனும் தீக்கடனும் உங்கள் தேவியர்க்கு நீர்ணயமும்
தீர்த்துவந்தேன்
மைந்தனில்லாத சொத்து அவர்கள் மனையிடத்தே
சேர்த்துவந்தேன்
பிள்ளையில்லாத சொத்து அவர்கள் பிறந்திடத்தே சேர்த்து
வந்தேன்
பூஜை புனக்காரம் அவர்கள் பிறந்திடத்தே சொல்லி வந்தேன்
வைத்துவந்தேனென்று சொல்லி அண்ணா மனதிலே
எண்ணாதே
விட்டு வந்தேனென்று சொல்லி அண்ணா விசனங்கள்
எண்ண வேண்டாம்
அந்தமொழி சொல்ல தங்கையைப்பார்த்து அப்போது
ஏதுசொல்வார்
உற்ற துணையில்லாமல் தங்கையரே ஒருத்தி வழி வரலாமா?
மனிதர் துணையில்லாமல் உத்தமி வனத்தில் வரலாமா?
என்று சொல்லி அண்ணர் இயல்புடனே தான் கேட்க
பொன்னருடன் பிறந்த பேடைமயில் தங்கையரும்
பெரியக்காண்டி துணை கொண்டு பெரியண்ணா நானும்
வந்தேன்
ஏழுபேர் கன்னியர்கள் எனக்குத் துணை வந்தார்கள்
கானகத்தில் வந்து அண்ணர் படுகளைத்தைக்
கண்டேனண்ணா
நம்ம கோத்திரத்துக்குண்டான சாஸ்திரமெல்லாம் முடித்து
யாகம் நிறைவேற்றி அண்ணர் உயிரை வரவழைத்து
மாயனுட காரணந்தான் அண்ணா மாண்ட உயிர்
மீண்டழைத்து
உலகளந்தார் காரணந்தான் எழுப்பினேன் அண்ணரைத்தான்
அந்த மொழிகள் சொல்ல பொன்னர் அப்போ
மனங்குளிர்ந்து

தம்பியரைத்தான் பார்த்து தார்வேந்தர் ஏது சொல்வார்
வாராய் இளவரசே வாள்வீரா தம்பிசங்கு
வெற்றி மதயானை அடா வீரியனே தம்பி சங்கு
பொன்னம்பலத்திலே அந்த பேர் பெரிய சன்னதியில்
சன்யாசி கோவிலிலே தாயார் தவமிருந்து வரம்
வாங்கையிலே
மைந்தன் வரம் கேட்டு சன்யாசியரை
வாக்குமனுக்கேட்கையிலே
என்றும் பதினாறு என்று தாயார் ஈடேற்றம் கேட்காமல்
வயது பதினாறு என்று வாங்கினார் ஆனவரம்
பதினாறு போதுமென்று தாயார் பாலன் வரம் வாங்கி
வந்தார்
பதினாறு முடிந்துதடா தம்பிசங்கு பாருலகில் இருக்கலாமா
மாண்டவர்கள் எழுந்திருந்தால் இந்த மண்டலங்கள்
கொள்ளுமா
இறந்தவர் எழுந்திருந்தால் இந்த எல்லை இடங்கொள்ளுமா
இருந்த நாள் போதுமினி மாயனுடபதவி வைகுந்தம்
சேர்ந்திடுவோம்
இங்கிருந்த பாவனையாய் நாம் அங்கேயும் நாமிருப்போம்
சோளி சதுரங்கம் மாயன் பக்கம் சொக்கட்டான்
விளையாடுவோம்
சதுரங்கம் ஆடிடுவோம் மாயன் பதவியில் சரியாக
நாமிருப்போம்
இங்கேயிருந்தாற்போல் தம்பி சங்கு அங்கேயும்
நாமிருப்போம்
அண்ணர் வரமாட்டாரென்று தம்பி மனதிலே எண்ணாதே
இருந்திடுவார் என்றுசொல்லி தம்பியோசனைகள்
செய்யவேண்டாம்
முன்போக பின்வாரேன் தம்பி முன்னே நடவுமடா
வருகிறார் அண்ணரென்று மாயன் பக்கலிலே வார்த்தை
சொல்லும்



இதோ வாரார் என்று சொல்லி தம்பி எனக்கு இடம்பார்த்து
வைத்திரடா
அந்தமொழிகள் சொல்லி பொன்னர் அணுகியே கிட்டவந்து
நெற்றியிலே பட்ட அம்பு சங்கருக்கு நேராகப்
பாய்ந்ததைத்தான்
கட்டியிலை பிடித்து உத்தமியாள் காயம் பொருத்தினதை
பொன்னூசி பொன்சரடு கொண்டு உத்தமியாள் பொருத்தின
காயமதை
பத்தியிலை பறித்தார் பாரமுடி நல்ல பொன்னர்
பண்டு பட்ட படுகளம் தான் மருக பாடாகச் சாய்ந்து
விட்டார்
கதித்தமத யானையைப்போல் சங்கர் கண்ணுறக்கமாகி
விட்டார்
அண்ணா முகம் பார்த்து உத்தமி அழுது முறைகள் செய்து
ஏங்கி அழுது அண்ணரைப் பார்த்து என்ன சொல்வாள்
நல்லதங்கம்
அண்ணா நான் பட்டகதை சொல்வ மென்றால் எனக்கு
பகலும் இரவாகும்
அண்ணா நான் பட்டும் பலனில்லாமல் சின்னண்ணரை
படுகளம் செய்துவிட்டாய்
முன்னாள் வனத்தில் அண்ணா முப்பலிகள் தானுமுண்டோ
தாயாதி பலிபோல சின்னண்ணரை சதிகேடு செய்து
விட்டாய்
அந்தமொழிகள் சொல்லி உத்தமி அடித்தடித்து தான் விழுந்து
மாணிக்கம் பூண்ட மேனி அண்ணர் படுகளத்தில் மண்ணில்
புரண்டழுது
பொன்னுத்திருமேனி யேல்லாம் உத்தமி புழுதி புரண்டழுது
கோந்தை குலைத்து விட்டு உத்தமி கொடியாள்
புலம்புகையில்

தங்கையரைத்தான் பார்த்து பொன்னர்தானுமப்போது ஏதுசொல்வார்
முன்னும் பழிகாரன் உங்கள் சின்னண்ணருக்கு முதல் நாளும் தாயாதிதான்
தாயாதி தன் பலிதான் உங்கள் சின்னண்ணரைத்தான் முடித்துக் கொண்டேன்
உங்கள் பெரியண்ணருட ஆக்கிரமத்தை உத்தமியே பாருமம்மா
அந்த மொழிகள் சொல்லிபொன்னம்பல சுவாமி ஆயுதமெல்லாம் எடுத்து

## பொன்னர் மடிய வாள் மேல் விழப்போதல்

பதினெட்டு ஆயுதமும் வாங்கிப் பொன்னர் பார்க்கின்ற வேளையிலே
பதினெட்டு ஆயுதம் பொன்னருக்கு பழுது பட்டுப் போயிருக்க
பழுது பட்டவர்கள்மேல் விழுந்தால் நமக்கு பரமகதியில்லையென்று
தம்பி சங்கர் சீராவைப்பொன்னர் தானெடுத்துப் பார்க்கையிலே
பழுதொன்றும் இல்லாமல் ஆயுதம் பளீரென்று சோதி மின்னும்
பழுதில்லாவாள் விழுந்து இறந்தால் பரமகதி தானுமுண்டு
தம்பியுட சீராவை பொன்னர் தானும் நிறுத்துகிறார்
அலகு நிறுத்தி வைத்து பொன்னர் அதன் மேலே தான் குதிக்க
வாள்மேல் குதித்து இனி மடிந்த களமாகிடுவோம்
என்று மனதிலெண்ணி பொன்னர் ஈஸ்வரரைத் தானினைத்து
மாயன் பெருமாளை நினைத்து மாண்டுவிடப் போகையிலே
மாண்டிடுவோம் என்று பொன்னர் மாயன் துதி செய்கையிலே



## பொன்னர் மடிந்திடுவார் என்று மாயவன் வருதல்

வல்லான தன்னுயிரை பொன்னர் வாள்முனையில் மாய்க்கிறாரென்று
வைகுந்தம் பதியிருக்கும் மாயவனார் ஓடி வந்து
அந்த அலகு மரபுவைத்து மாயன் அப்போது நிற்கையிலே
அவர் வட்டமிட்டு பவனிகொண்டு பொன்னர் அறுபதடி பின்குதித்து
வட்டமிட்டு விளையாடி பொன்னர் வாள் மேல் குதிக்க வருகையிலே
உக்கிரமாய்வாரதுகண்டு மாயன் முனைவாளை சாய்த்தாரப்போ
வாள்முனை சாயுதென்று பொன்னர் மார்புக்கு நேராகவந்து
ஆக்கரித்து குலவையிட்டு பொன்னர் அதட்டிக் குதிக்கையிலே
ஆக்கரித்துத் தாண்டையிலே ஆயன் அடிவாளைத் தட்டிவிட்டார்
வாளும் வளைந்ததப்போ பொன்னர் மண்டியிட்டுப் போய்விழுந்தார்
வாளும் வளைந்தபின்பு நாம் இந்த மண்டலத்தில் இருக்கலாமா
என்று மனதிலெண்ணி பொன்னர் ஊடுருவத் தான்பார்த்து
இறந்து போற சீவனுக்கு இனி எண்ணி எண்ணிப் பார்க்கலாமா
மந்திரவாள் தானெடுத்து அதை வகையாய் நிறுத்தி வைத்து
வாள்மேல் குதிக்கவேதான் பொன்னர் மனது துணிந்துமப்போ
வாள்மேலேதான் குதிக்க பொன்னர் வருகிறார் முன்னாக
வானுலகம்போன உயிர் சங்கரை திரும்பி வரவழைத்தார்
கைலாசம்போன உயிர் சங்கரை கையோடு தானழைத்தார்
குமாரசங்கர் தன்னுயிரை மாயன் கூட்டிப் படைத்தாரப்போ

அங்கம் பதைக்குதப்போ சங்கர் மேனி அனல்காந்தல்
வீசுதப்போ

கண்கள் விழிதிறந்து சங்கர்மெல்ல காலுதைத்துக்
கொள்ளுகிறார்

## சங்கர் எழுந்திருத்தல்

கண்டாரே கண்ணாலேதான் பொன்னர் கனத்தமுடி
வேந்தரசர்

வலமாகச் சுத்திவந்து சங்கருட வாய்த்த முகம்
பார்க்கையிலே

துங்கமதயானைபோல குமாரசங்கு தூசிபரிமுண்டு
கனத்தமத யானைபோல சங்கர் காலூன்றி எழுந்திருந்தார்
கட்டித்தழுவியேதான் சங்கரை கண்ணோடே சேர்த்தணைத்து

கட்டிப்பிடித்தேதான் பொன்னர் தம்பியரைப் பார்த்துமப்போ
மதியம் வந்த சூரியனை சுவாமியை மழைமேகம்
சூழ்ந்தாப்போல்

விதிகள் வந்து சூழ்ந்ததினால் காரணத்தை விலக்கிடவும்
கூடுமா

என்செய்வேன் தம்பியரே ஈஸ்வரனார் தன்செயலுக்கு
அந்தமொழிகள் சொல்லி பொன்னர் அழைத்தாரே
தங்கையரை

வாராய் இளவரசி உத்தமி வாள்வீரன் தங்கையரே
வெள்ளாளன் உடன்பிறந்த உத்தமிவேதப் பிராமணியே
உத்தமாபத்தினியே அம்மா ஒருசொல்லு வாசகியே
வெற்றிமன்னன் பறைநகுலன் அந்தவீரபாகு சாம்பானை

அவனை எழுப்புமென்று பொன்னர் அப்பனைகள் செய்த
பின்பு

அந்தமொழி கேட்டு உத்தமி அதிதுரிதா யோடிவந்து
வெற்றிமன்னன் பறைநகுலன் அவனுடவிடாச்சகளம்
வந்துமப்போ



பறைச்சி பெற்ற பாலகனே நீ பரலோகம் சேர்ந்தையடா
வெற்றிமன்னா பறைநகுலா நீ விடாய்ச்சகுளம் ஆனாயடா
முந்திப்பிறந்தவண்டா முதல்நாளையிலே
சங்கத்தைவென்றவண்டா
சனத்தில் பெரியவண்டா நீ சாஸ்திரத்தில் வல்லவண்டா
உன் அலகைப் பறிக்கவடா ஆள் ஒருவரைக் காணேனடா

அலகுநழுவியேதான் உன் அங்கம் பொருதவேணும்
உன்வாளைப் பறிக்கவடா மனிதரொருவரைக் காணேனடா
சிவனை நினைத்துமப்போ ஸ்ரீ ராமரைத் தானினைத்து
பேர் கொடுத்த பொன்னம்பல சுவாமி பொசிவாசி ஐயாவே
பொசிவாசி ஐயாவே புண்ணியரைத் தானினைத்து

## வீர சாம்புவனை எழுப்புதல்

எடுத்தாள் திருக்கரகம் உத்தமி ஏந்தினாள் தீர்த்தமதை
தீர்த்தத்தை வாரி நாலுதிசைபார்த்து விட்டெறிந்தாள்
வாரியே தீர்த்தத்தை வீரபாகுமேல் விட்டெறிந்தாள்
சித்தமிரங்கியேதான் சுவாமி சிவனாரும் காட்சி தந்தார்
வானுலகம்போன உயிர் வீரபாகுக்கு மார்மூண்டு
தான்திரும்பி

சிவலோகம் போன உயிர் வீரபாகு திரும்பியே வந்திட்டுதே
அங்கம் பதைக்குதப்போ வீரபாகு மேல்பட்ட அலகு
நழுவுதப்போ
அலகு நழுவியேதான் வீரபாகு அங்கம் பொருதுதப்போ
கண்கள் விழிதிறந்து வீரபாகு காலுதைத்துக் கொண்டேதான்
ஆக்கரித்துச் சத்தமிட்டு வீரபாகு அதட்டி எழுந்திருந்து

அட்டமிட்டு பவனிகொண்டு வீரபாகு அறுபதடி பின்குதித்து
வட்டமிட்டு ஓடிவந்து பெரியாண்டவர்க்கு
வாகுடனேதெண்டனிட்டு
அட்டம் பணிகள் செய்து சாம்பான் அடிவணங்கி
நிற்கையிலே

அடாவெற்றிமன்னா பறைநகுலா வீரபாகு சாம்புவனே
அத்தைமக்கள் படுங்களந்தான் அடையாளம் கண்டதுண்டா
அந்தமொழிகள் சொல்ல வீரபாகு அப்போது ஏது
சொல்வான்
அத்தைபிள்ளை படுகளந்தான் சுவாமி அடையாளம்
கண்டுவந்தேன்
அணிஅணியாப் போர் செய்து வேடுதளம்
அத்தனையும்தான்மடிந்து

வேடுபடைசங்கரித்து வெற்றிகொண்டு வாரபோது
மலையாவி தணல்வீசி அத்தைபிள்ளை சேனை மயக்கமாய்ப்
போச்சுதப்போ
தண்ணீர் தண்ணீர் என்பாரும் தாகவாட்டம் ஆவாரும்
மேனிமயங்குவாரும் மெய்வாட்டம் ஆவாரும்
அந்தநல்ல வேளையிலே அவ்வனத்தில் தானுமப்போ

மலையுரம்புபோல சுவாமி வந்தது நச்சுநீரும்
நச்சுநீர் வாரியுண்டு அத்தைபிள்ளை சேனை நல்லுயிரும்
மாண்டு விட்டார்
படர்ந்தது ஆலமரம் சுவாமி இருண்டது சோலையிலே
குடைவேலமரத்தடியில் எதிரில்லாப்பெருமாள் கூடாரம்
கண்டுவந்தேன்
கதித்தது ஆலமரம் அதன் அடியில் கண்டுவந்தேன்
அடையாளம்
அந்த அடையாளமெல்லாம் வீரபாகு
ஆண்டவர்க்குச்சொன்னபின்பு

## வீர சாம்புவன் மடிதல்

வேர்த்து விறுவிறுத்து வீரபாகு மேனியெல்லாம்
தானொடுங்கி
கண்கள் விழிசொருகி வீரபாகு கால்கள் தடுமாறி
மயக்கங்கள் ஆகியேதான் வீரபாகு மண்டியிட்டுத்தான்
விழுந்தான்



பண்டறிந்த படுகளமாய் வீரபாகு பாடாகச் சாய்ந்துவிட்டான்
கண்டுமனதிலெண்ணி பொன்னர் இந்தக் காரணத்துக்கென்ன
செய்வேன்
மாண்டு போனதைப்பார்த்து நாம் மனதிலெண்ணப்
போதாது
அத்தைபிள்ளை படுகளத்தை அவரையினிப் பார்க்கவேணும்
மணப்பாறை சந்துவழி குதிரைவிட்டு வாரார் இருவருமாய்

அண்ணருடன் பிறந்த உத்தமி அண்ணருடன் பின்வாராள்
வாரவழி தடங்கள் வீரமலை வனங்கள் செடிகளெல்லாம்
பார்த்த இடங்களெல்லாம் படைக்காடும் சவக்காடும்
பார்த்து மனதிலெண்ணி இது பார்த்ததொரு ரணகளமாய்
கண்ணாலேதான் பார்த்து பொன்னர் மாயனுட காரணந்தான்
அத்தனையும்

என்று மனதிலெண்ணி பொன்னர் குதிரைவிட்டு இறங்கி
நடந்துவாரார்
கட்டியங்கூறுபவர் கவிவாணர் மாண்டதெல்லாம்
வெள்ளித்தடிக்காரர் விருது மன்னர் மாண்டதெல்லாம்
போட்டமண்டி வாங்காத பொந்திலியர் மாண்டதெல்லாம்
படைக்குத்தலைவர்களும் பட்டாணி ராவுத்தமார்

ஆனைபடை சேனைதளம் அத்தனையும் மாண்டதைத்தான்
பார்த்து மனதிலெண்ணி சுவாமி பரமனுட காரணந்தான்
மனதிலேதான் எண்ணியப்போ மூவரும் வருகுமந்த
வேளையிலே
பச்சைக்குடைவிருதும் மைத்துனரைப்பத்தி வந்த
ராணுவமும்
அத்தைபிள்ளை படுகளத்தை பொன்னர்
அடையாளம்கண்டாரப்போ

உத்தமியைத்தான் பார்த்து ஏதுசொல்வார் அண்ணருந்தான்
வாராயிளவரசி அம்மா வாள்வீரன் தங்கையரே
அத்தைபிள்ளை மைத்துனரை அவரை எழுப்புமம்மா

அந்தமொழிகள் சொல்ல அத்தை மக்கள் படுகளத்தைப் பார்க்கவந்தார்
வலமாகச்சுத்திவந்து மைத்துனரை வாய்த்தமுகம்தான் பார்த்து

## அத்தை பிள்ளையை தங்கை எழுப்புதல்

நல்லத்தை புத்திரரே நீங்கள் நாடுபதம் பெற்றவர்கள்
செல்லத்தை புத்திரரே நீங்கள் சீமைபதம் பார்த்தவர்கள்
இன்னாள் இதுகாலம் உங்களை ஏறிட்டுப் பார்த்ததில்லை
ஏறிட்டுப் பார்த்ததில்லை உங்களை எதிர்த்து விழித்ததில்லை
சிவசோழ ராஜாவுடன் எங்கள் சின்னண்ணரும் பெரியண்ணரும்

காவல்கொண்டு அவர் சீமைகூட்டியே வாரபோது
கரிகாலர் சிவசோழர் சீமை அண்ணர் காவல்கொண்டு வாரபோது

அப்போ மணவறைப் பந்தலிலே என்னத்தா பெருமாளே
நீங்கள் வலமாக நிற்கையிலே வந்துமே நான்தானும்
அப்போ பந்தவெளிச்சத்திலே பார்த்ததுண்டு உங்கள்முகம்

அன்றுகண்ட திருமுகமும் அந்த அழகு குறையவில்லை
அன்றுமுதல் இன்றுவரை உங்களை அண்ணாந்து பார்த்ததில்லை

இனி அயலாரு மக்களுக்கு யாரழுகப் போவார்கள்
இனி ஊராரு மக்களுக்கு யார் அழுகப் போவார்கள்
மணவறைப்பந்தலிலே நீங்கள் மாலையிட்டுக் கொண்டிருந்தால்

உங்கள் கால்பணத்து மங்கலியம் என் கழுத்திலே பூண்டிருந்தால்

பொன்னுந் திருமேனியிலே உங்கள் படுகளத்தில் புழுதி புரண்டழுவேன்
பம்பைசுழட்டிவிட்டு உங்கள் படுகளத்தில் நான் அழுவேன்



மாணிக்கம்பூண்டமேனி உங்கள் படுகளத்தில் மண்ணில் புரண்டழுவேன்
கோந்தைகுலைத்துவிட்டு உங்கள் கொலைக்களத்தில்வீழ்ந்தழுவேன்
அயலாரு மக்களுக்கு நான் அழுகிறது நீதமல்ல
பாணம்படவுமில்லை உங்களுக்கு மறுகாயம் தானுமில்லை
அம்பு படவுமில்லை அத்தான் உங்களுக்கு அரைக்காயம் தானுமில்லை

கண்கள் படவுமில்லை உங்கள் மேனியில் காயங்கள் தைக்கவில்லை
மாலைகுலையவில்லை உங்கள் வாச்சமுகம் வாடவில்லை
மலையாவி தணல்வீசி மயக்கங்கள் ஆகியேதான்
நச்சுநீர் வாரியுண்டு மைத்துனரே நல்லுயிர் மாண்டீர்கள்
அனந்தல்வந்து கண்ணசந்து மைத்துனரே அநேகநேரம் சென்றாற்போல்

நித்திரை வந்து கண்ணசந்து நெடுநேரம் சென்றாற்போல்
தூங்கி எழுந்திருந்து ஒரு சொப்பனமும் கண்டாற்போல்
சேரஎழுந்திருங்கள் மூவரும் செல்லத்தை புத்திரரே
என்று சிவனைத்தொழுது ஸ்ரீராமரைத் தானினைந்து
பேர்கொடுத்த பொன்னம்பல சுவாமி பொசிவாசி ஐயரை

சன்யாசி ஐயரைத் தவங்கொடுத்த புண்ணியரைத் தானினைந்து
எடுத்தாள் திருக்கரகம் உத்தமி ஏந்தினாள் மகாதீர்த்தம்
தீர்த்தத்தை வாரியேதான் நாலுதிசை பார்த்து விட்டெறிந்தாள்
வாரியேதீர்த்தத்தை அத்தைமக்கள் வாள்வீரர் மேல் எறிந்தாள்
சித்தம் இறங்கியேதான் சுவாமி சிவனாரும் காட்சிதந்தார்

வானுலகம் போன உயிர் மாயனுட காரணத்தால்
சிவலோகம் போன உயிர்மூவருக்கும் திரும்பியே வந்திட்டது
கைலாசம் போனஉயிர் மைத்துனர்க்கும் கூடுவந்து சேர்ந்திட்டது

அங்கம் பதைபதைத்து மைத்துனர் மேனி அனல்காந்தல்
வீசுதப்போ
மேனிவெதும்பியேதான் மூவருக்கும் வெதுப்பங்கள் தானாகி
நித்திரை வந்துமப்போ அத்தைமக்கள் நினைவு
தடுமாறினாப்போல்
சொப்பனங்கண்டவர்போல் அத்தைமக்கள் துடியாய்
எழுந்திருந்தார்
சேரவே கச்சைகட்டி அத்தைமக்கள் சீராவைத் தானெடுத்து
அப்போ ஆக்கரித்துக் குலவையிட்டு அவர்கள் அறுபதடிபின்
குதித்து
வட்டமிட்டுவிளையாடி பெரியாண்டவர்க்கு வணங்கிப்
பணிகள் செய்து
கட்டித் தழுவியேதான் பெரியாண்டவர் முன்னே
கடைக்கண்ணில் நீர்சொரிந்து
மதியம்வந்த சூரியனைமழை மேகம் சூழ்ந்தாப்போல்
விதிகள்வந்து சூழ்ந்த தென்றால் மைத்துனரே
விலக்கமுடியுமா?

என் செய்வோம் மைத்துனரே நாம் ஈஸ்வரனார் செயலுக்கு
இந்தநல்ல காரணங்கள் சுவாமி நமக்குஇட்டபடி போகுமா
மைத்துனரைத்தான்பார்த்து பொன்னர்வந்த
காரணமெல்லாம்பேசி
பொன்னம்பலசுவாமி மைத்துனர்க்குஎன்னசொல்வார்
ஆண்டவனார்
எங்களையர் குன்றுடையார் தாயார் பெரியநாச்சியாரும்

பொன்னம்பலத்திலே சுவாமி பொருந்தி வரங்கேட்கையிலே
புத்திரசந்தானவரம் அவர்கள் புகழுடனே கேட்கையிலே
நமக்கு என்றும் பதினாறு என்று ஈடேற்றம் கேட்காமல்
வயது நூறு என்று சுவாமியிடம் வாக்கு வரங்கேட்காமல்
பதினாறு போதுமென்று தாயார் பெரியநாச்சி பாலன்வரம்
வாங்கினார்



நமக்கு வயது துலைந்திட்டுது நாம்வந்த கெடுவாச்சு
இனிநாம் மாயனுடபக்கத்திலே வைகுந்தஞ் சேர்ந்திடுவோம்
இருந்த நாள் போதுமினி ஈஸ்வரர் பாதம் சேர்ந்திடுவோம்
இது ஆறாநெருப்போ அவியாத செந்தணலோ
அத்தைமக்கள் மூவரும் நீங்கள் முத்திரைதான் பெற்றவர்கள்

சீரங்க ராயருட நீங்கள் திருநாமம் பெற்றவர்கள்
உங்கள் திருநாமம் பேரு சொல்ல ஒரு மானிடவர்
தானுமில்லை
வாருங்காண் மைத்துனரே வார்த்தை சொல்லக்கேளுமினி
அந்தமொழிகள் சொல்ல மைத்துனர் அப்போது
சொல்லுகிறார்
மாதாகுருவல்லவோ உங்கள் தங்கை மந்திரியும்
அவளல்லவோ

தாதாகுருவல்லவோ உங்கள் தங்கை தந்திரியும்
அவளல்லவோ
ஆதிநாளையிலே வாரதைத்தான் முன்னாலே சொல்கிறவள்
அவளை அழைத்து நீர் ஆலோசனை கேளுமென்றார்
எதிரில்லாப் பெருமாள் இந்தவகை சொன்னபின்பு
உத்தமியைத்தானழைத்து ஏது சொல்வார் நல்லபொன்னு

வாராயிளவரசி அம்மா வாள்வீரன் தங்கையரே
வெள்ளேடுவாசிக்கும் அம்மா
வெள்ளாளன்குடிப்பிறந்தவளே
உத்தமாபத்தினியே அம்மா ஒரு சொல்லுவாசகியே
அனலில் பிறந்தவளே என் உத்தமி ஆகாசகேசரியே
பாஞ்சாலன்தன் மகளே அம்மா பத்தினி துரோபதையே

வேதப்பிராமணியே வெள்ளாளன் தங்கையரே
வாழ்ந்தநாள் போதுமம்மாநாம் வைகுந்தஞ் சேரவேணும்
இருந்தநாள் போதுமம்மாநாம் ஈஸ்வரர்பாதம் சேரவேணும்
அத்தைமக்கள் மூவரும் அவர்கள் முத்திரைதான்
பெற்றவர்கள்

சீரங்கராயருட அவர்கள் திருநாமம் பெற்றவர்கள்
அவர்கள் திருநாமம் பேருசொல்ல சீமையிலே மானிடவர்
காணோமினி
ஆறாநெருப்பே என்உத்தமி அவியாதசெந்தணலே
அம்மாதிருக்கரகம் சிரசில்வைத்து நம்மதிருநாமம்
பேருசொல்ல
வையகங்கள் தானறிய நம்மைவைத்து நடத்தவேதான்

உலகங்கள் தானறிய நம்மைஎடுத்து நடத்தவேதான்
இந்தநல்ல சீமையிலே அம்மாஒரு மானிடவர் காணோமினி
யாரை அழைத்துத்தான் அம்மா அதிகபாரம் தலையில்
வைப்போம்
எவரை அழைப்போமினி இந்தபாரம் தலையில் வைக்க
அந்தமொழிகேட்டு அண்ணரைப் பார்த்து அப்போதுஏது
சொல்வாள்

ஆரை அழைத்தாலும் நம்மனதுபடிஆன
பிள்ளையாருமில்லை
எவரை அழைத்தாலும் நம்குணமறிந்து
ஏற்றபிள்ளையாருமில்லை
எழுவக்கரியானென்று வீரமலைவனத்தில் இருக்கிறான்
வலைப்பிறவி

## தங்கை எழுவக்கரியானை அழைக்கச் சொல்லுதல்

காட்டுக்கனி பறித்து அந்த கானகத்தில் குடியிருப்பு
கன்னிகளைக் கொண்டாடி அவன் அந்த கானகத்தில்
குடியிருப்பு
தொட்டிலிலும் பிள்ளையவன் அண்ணா அவன்
தொடையில் குழந்தை அவன்
நமக்குமடியில் குழந்தை அவன்
அண்ணாவாளேறுஞ்சேவகனே
அவனை அழைத்து அண்ணா இந்த அதிகபாரம் தலையில்
வைப்போம்



கடைச்சீட்டு காகிதமும் வீரப்பூர்வலையனுக்கு
கண்டெழுதிப் போடுமினி
வீரப்பூர் ஆதிக்க மென்று விளங்கி அதுவும்பெருக
அவன்வந்தால் கூட்டிவா வராதபோனால்மடிபிடித்துக்
கொண்டுவா
இந்தப்படி ஓலை எழுதி உத்தரவு அனுப்புமண்ணா
அந்த மொழிகள் சொல்ல பொன்னர் அப்போ மனந்திரும்பி

சேமக்குருத்தோலை சுவாமி சேர்த்தெடுத்தார் வெள்ளேடு
வண்ணச்சுருளோலை எழுவக் கரியானுக்கு வாசகம்
எழுதுகிறார்
தன்னுடைய பேருந்திருநாமம் (வலைப்பிறவிக்கு)
தான்கண்டு எழுதுகிறார்
வந்தால் அழைத்துவா வராதபோனால் மடிபிடித்துக்
கொண்டுவா
கடைச்சீட்டும் காகிதமும் பொன்னர் கண்டெழுதிவிட்டாரே

அந்தமாயச்சுருளோலை எழுவக்கரியான் மடியில்
விழுந்ததப்போ
அந்தசெந்திருக்கும் காகிதமும் சீட்டுமிகப் பிரித்து
ஓலைச் சுருள்வாங்கி எழுவக்கரியான் உள்கருத்தைத்தான்
பார்த்து
அப்போ அவனுக்கு கால்நடுங்கி கைநடுங்கி கண்கள்
வெறிதாக்கி
அஞ்சிப்பயந்தேதான் அவன் அதிதுரிதாய் ஓடிவந்து

சுவாமிபாதஞ்சரணமென்று பொன்னர் பாதாரந்தான்
வணங்கி
அட்டம்பணிகள் செய்து அடிவணங்கி தெண்டனிட்டு
வாய்பொத்திகைகட்டி பொன்னர் முன்னே வகையாக
முன்னேநின்று
என்னை அழைத்ததென்ன சுவாமி எந்தனுக்குபுத்தி என்ன
ஒன்றால் குறைச்சலில்லை வீரப்பூர் வலைப்பிறவி
ஒருநாளும் தாழ்வுமில்லை

வாழ்ந்தநாள் போதுமென்று நாங்கள் வைகுந்தம்
சேருகிறோம்
இருந்தநாள்போதுமென்று ஈஸ்வரர் பாதம்
போய்ச்சேருகிறோம்
வைத்து நடத்தவேதான் நீ எனக்குக் குழந்தையடா
மைந்தன் என்று சொல்லி வரவழைத்தேன் நானும் உனை
இந்தக்கரம் சிரசில்வைத்து திருநாமம் பேருசொல்லி

வீரப்பூர் ஆதிக்கமென்று என்றைக்கும் விளங்கப்பதிலிருந்து
எங்களுடபேரு சொல்லி எங்களையும் கொண்டாடு
அந்த மொழிகள்சொல்ல எழுவக்கரியான் அப்போது
ஏதுசொல்வான்
அதிகபாரம் நான் சுமக்க சுவாமி அடியேனால் ஆகாது
வாயெச்சில் கையெச்சில் சுவாமி திரேகமெல்லாம் எச்சில்

பக்களச்சில் பழுவும்எச்சில் சுவாமி பதினாறுரூபம் எச்சில்
எச்சில்எச்சில் என்திரேகமெல்லாம் இன்பதுன்ப
மெத்தமெத்த
சுவாமிஇது ஆறாநெருப்போ அவியாத செந்தணலோ
எச்சில் இளந்தீட்டு சுவாமி இது ஏற்காது உங்களுக்கு
அந்தநல்ல வார்த்தை சொல்ல பொன்னர்அப்போது
ஏதுசொல்வார்

என்பாரம் நீ சுமக்க எனக்கு ஏற்ற பிள்ளை நீ தாண்டா
மைந்தன் இல்லாதவர்க்கு எங்களுக்கு மைந்தன்
குழந்தையடா
தொட்டிலும்பிள்ளை முந்தினது எனக்கு தோளிருக்கும்
பிள்ளையடா
செய்யாத குற்றமடா ஒருசெய்யத் தாழ்வு வந்தாலும்
ஆறுகுற்றம்நூறுபிழை வீரப்பூர்வலைப் பிறவி அடிதப்பி
இருந்தாலும்



துகுற்றம் செய்தாலும் நாங்கள் எல்லாம்
பொறுத்துக்கொள்வோம்
கொண்டுமனம் பொறுத்துக்கொள்ளுகிறோம் என்று
பொன்னர்
திங்களொருகிழமை வந்தால் எனக்கு தெய்வபூஜை
செய்யவேணும்

சுக்கிரவார நாள்தேடி வருஷம் ஒருகிழமை தெய்வபூஜை
செய்யுமடா
தெய்வபூஜை வேளையிலே உன்னைக்கண்டு
நான்போறேனடா
அந்தவகை சொல்ல எழுவக்கரியான் அடிவணங்கித்
தெண்டனிட்டு

## எழுவக்கரியானுக்கு விடை கொடுத்து அனுப்புதல்

வாய் பொத்தி கைகட்டி எழுவக்கரியான் வகையுடனே
நிற்கையிலே
வேண்டிவிடை கொடுத்து எழுவக்கரியானுக்கு
வெண்ணீறுந்தான் கொடுத்தார்
வாழ்த்தி விடைகொடுத்து எழுவக்கரியானுக்கு
உத்தமிவைத்தாள் அதிகபாரம்
அதிகபாரம் தலையில் வைத்து எழுவக்கரியானை
அனுப்பிவைத்தார் ஆண்டவரும்
அப்போ குந்திமாதேவி மக்கள் குலவீரர் ஐவருமாய்

பாண்டுராஜன் மக்கள் இவர்கள் பஞ்சவர்கள் ஐவருமாய்
ஐவரும்சேர நின்று சுவாமிக்கு அர்ச்சனையும் செய்தார்கள்
சிவனைத்தொழுது ஸ்ரீராமரைத் தானினைந்து
சிவலோகம் நாங்கள் வந்து சுவாமி தெரிசினைகள்
காணவேதான்
பொன்னுலகம் நாங்கள்வந்து சுவாமியுட பொற்பாதம்
காணவேதான்
எங்களுக்குச்சுவாமி இப்போ ஈடேற்றம் தரவேணும்

ஐவரும்சேர நின்றுஇவர்கள் அர்ச்சனையும் செய்கையிலே
ஐவரும்சேர நின்றுசுவாமியை அடிவணங்கி நிற்கையிலே
அப்போ ஆதிபரமேஸ்வரனார் ஆயனைத்தானினைந்து
மாயனைத் தானினைந்து மகாதேவர் சொல்லுகிறார்
குன்றுடையாக் கவுண்டனொடு பெரிய நாச்சி குழந்தை வரங் கேட்கையிலே

பஞ்சவர்கள் ஐவரையும் பாலன்வரம் பாக்கியம் தந்தோமே
பதினாறு வயதுக்கு பஞ்சவர்கள் பாருலகம் ஆண்டிருந்தார்
அவர்களுக்கு வயது முடிந்திட்டுது வார கெடுவாச்சு
சித்தம் திரும்பி பரமேஸ்வரனார் திருவாக்குச் செய்தபின்பு
பஞ்சவர்சகாயன் சுவாமி பாருலகை அளந்தவர்தான்

ஓரடியாய் புவியளந்த உலகளந்த மாயவர்தான்
பாருலகில் மன்னவரை பஞ்சவர்கள் ஐவரையும்
சிலைவீரரைவரையும் சுவாமி சிவலோகம் சேர்க்கவேதான்
சிலைவளைத்து வில்லெடுத்து சுவாமி செகந்தனிலே ஊன்றி வைத்தார்

## ஐவரும் வைகுந்தம் சேருதல்

மாயனுட அட்சரந்தான் அது மழைக்கால் விழுந்தாப் போல்
பொன்னுலகம் பூலோகத்துக்கும் ஒரு பொன்சுடராய் வந்திறங்கி
ரகுராமர் அட்சரந்தான் ஒரு ஆணிப் பொன்னேணியுமாய்
பொன்னேணி பொன்படியாம் ஒரு பொன் சுடராய்வந்திறங்கும்
ஸ்ரீராமர் அட்சரந்தான் ஒரு சுடர்வழியாய் வந்திறங்கி

கைலாசமாம் வீரமலைக்கும் மாயனுட காரணத்தால் வந்திறங்கி
ஐவரும் சேர்ந்து பொன்னுலகம் அப்போது வாரார்கள்
அப்போ வைகுந்த நாதருமே ஐவரையும் வைகுந்தம் சேரவென்று



பரமேஸ்வரனாரும் ஐவரையும் பார்த்து மகிழ்ந்தார்கள்
அந்த மொழி கேட்டு ஆதிமகா விஷ்ணுவுந்தான்
பொன்னேணி வழியாக போகிறார் பஞ்சவர்கள்
தெய்வலோகத்திலே சேர்ந்தார்கள் ஐவருந்தான்
சொர்க்க லோகம் தானும் ஐவர் சுகமுடனே சேர்ந்தார்கள்

சுவாமியுட பொற்பாதம் ஐவரும் தயவுடனே போய்ச் சேர்ந்தார்

வைகுந்த லோகத்திலே ஐவரும் வகையுடனே தானிருக்க
பெரிய மலை மாதாவும் பிரியமுடன் அப்போது
ஆதி சிவன் மாயவரை அன்புடனே தான் நினைந்து
ஆதி முதல் நாளையிலே அன்று கொடுத்த வரம்

பொன்னாண்டார் தன்னாலே பூஜைக்கிடமாகுமென்று
வாக்கு மனுக்கொடுத்தீர் வையகத்தில் பூஜை கொள்ள
சொன்னது மெய்யானால் சோதனைகள் அப்போது
வரம்கொடுக்க வேணுமென்று ஈஸ்வரி வணங்கிப்பணி செய்தாள்

அப்போது ஈஸ்வரரும் ஆயரையும் தானழைத்து

வைகுந்த ராமரை வகையுடனே தான்பார்த்து
சொல்லுகிறாரப்போது சுகமுடனே ஈஸ்வரரும்
பஞ்சவர்கள் தன்னாலே ஈஸ்வரி பாருலகமெல்லாம் பூஜை கொள்ள

மன்னவர்கள் தன்னாலே மண்டலமெல்லாம் பூஜையிட
பொன்னர் சங்கர் தன்னாலே பூஜைக்கிடமாகுமென்று

வாக்கு மனுப்படிக்கு வன்மையுள்ள பஞ்சவரை
வீரமலைக்குடையாளில் வீற்றிருக்கும் மாதாவிடம்
பஞ்சவர்கள் ஐவரையும் பத்தினி துரோபதையும்
அனுப்பிவையுமென்று ஆதிசிவன் தானுஞ்சொல்ல
அப்போது மாயவனார் ஐவரையும் தானழைத்து

பத்தினி துரோபதையை பாங்குடனே தானழைத்து
வாருமினிப் பஞ்சவரே என்று வகையுடனே தானழைத்து
வீரமலைக்குடையாளுக்கு நீங்கள் விதமுடனே
தானும்போய்
ஈஸ்வரியாள் தன்னிடத்தில் இதமுடனே நீங்களுந்தான்
பூலோகமண்டலத்தில் பூஜை மிக வாங்குமென்றார்

அனுப்பி வைத்தார் மாயவனார் ஐவரையுந்தானுமப்போ
மன்னர்கள் ஐவரும் மாயவரை தெண்டனிட்டு
பத்தினி துரோபதையும் பாங்குடனே தெண்டனிட்டு
பொன்னுலகம் விட்டிறங்கி பூவுலகம் வந்தார்கள்

### பூசை வாங்க ஐவரும் பூலோகம் வருதல்

வீரப்பூர் குடையாளில் விதமுடனே ஐவர்களும்
வந்தார்கள் பூலோகம் வகையான ஐவர்களும்
பஞ்சவர்கள் தானும் பண்புடனே அப்போது
குந்தி மாதேவி மக்கள் குலவீரர் பஞ்சவர்கள்
பாஞ்சால ராஜன் மகள் பத்தினி துரோபதையும்

வீரப்பூர் குடையாளில் விதமுடனே தானிருந்தார்
இந்தப்படி தானும் இதமுடனே வீற்றிருந்து
பொறுமை பொறுத்த பொன்னம்பல சுவாமி
சின்னண்ணர் வாள்வீரர் சிறுபுலி குமாரசங்கு
நல்லதங்கை உத்தமியும் நன்றாகத் தானிருக்க

அத்தைபிள்ளை மைத்துனரும் அவர் தம்பி இருவர்களும்
மலையுடனே தான் பிறந்த மந்திர மகாமுனியும்
வெற்றிமன்னன் பறைநகுலன் வீரபாகு சாம்பானும்
ஒண்டிக் கருப்பண்ணனும் உற்றபடைத் தளமும்
எல்லோரும் தான் கூடி நாம் இந்தமலை தனிலே

இருந்துமிங்கே வாழ்ந்தோ மென்றால் ஏற்காது என்று
சொல்லி
பொந்திப்பசி தீர போய் அங்கே மாதாவை



கேட்டு வருவோமென்று கிருபையுடன் எழுந்திருந்து
எல்லோரும் சேர்ந்து மாதாவிடம் இதமாகத் தான்போய்
முக்கால் வலம் வந்து மூவிருகால் தெண்டனிட்டு
காராளர் பொன்னர் சங்கர் கைகட்டி வாய்பொத்தி
கூடவந்த படைத்தளத்தை குலைகாரர் தான்பார்த்து

ஒரு பக்கமாக ஒதுங்கி நில்லுமென்று சொல்லி
காராளர் பொன்னர் சங்கர் கைதனிலே வாளெடுத்து
இருவ ரெண்டுபேரும் எதிர்த்து விளையாடலுற்றார்
இடதுகையில் கேடயமும் இடுக்கியவர் தம்பிசங்கர்
நத்தி நடையிட்டு தானிருவர் தான் பார்த்து

வளநாட்டுக் கோட்டையிலே மற்பொருது நின்றாப்போல்
இருவரும் மல்பொருதி எதிர்த்து விளையாடி
இடசாரி பாய்ந்து வலசாரி சுத்திவந்து
மாதாவைத்தானும் மற்றொரு கால் தெண்டனிட்டு
எந்தாயே மாதாவே எனக்கு வரந் தந்தவளே

சித்தன் மகளே நீ சிவனார் சுடர்மணியே
வரத்தால் மிகுந்தவளே மகாதவசுக் குடையவளே
சடையால் பெருத்தவளே சன்யாச மானவளே
நீ உடுத்தும் புலித்தோலும் உள்ளாடை ஆசனமும்
போற்றும் புலித்தோலும் புள்ளிமான் ஆசனமும்

காவியுடையவளே கங்காளன் ரூபியம்மா
குஞ்சிச்சடையுள்ளவளே கோகிலமே மாதாவே
நாகமீன்ற கன்னியரே நாயகியே மாதாவே
வீரமலை வெண்முடியில் வீற்றிருக்கும் உத்தமியே
நாங்கள் வளநாட்டை விட்டு வனத்தில் வந்து மாண்டபின்பு

இத்தனை நாளும் இருந்தோம் பரிவாரமாய்
அந்த ஆதிசிவனார் அரனாரும் சொன்னபடி
உந்தன்கைதனிலே ஒப்புவித்தார் கண்டாயே
அன்று முதல் கொண்டு என் ஆனைபடை சேனைகளும்

நம் வெண்முடியைக் காத்திருக்கும் வீரமகா முனியும்
தவசடியை காத்திருக்கும் தந்தன் கருப்பண்ணனும்
இத்தனை பேர்களும் தான் இந்த மலைதனிலே
காய்கனிகள் நாங்கள் தின்று காத்திருந்தோம் மாதாவே
இனி காய்கனிகள் சிக்காது கானகத்தில் உத்தமியே

இன்று முதல் கொண்டு இனி ஆகாரம் இல்லாமல்
எரியுதம்மா மாதாவே எங்களுட வயிறுமிப்போ
பொறுக்க முடியாது பொத்தி பசி மெத்தவம்மா
இப்படித்தான் உன்னருகில் இருந்தோமே யாமாகில்
எங்கள் பசியாறுமோ தான் எங்களை யாரென்று தானறிவார்?

மலை மேலே நாமிருந்தால் மானிடவர் அறிவாரோ
என்று பொன்னர் சங்கருந்தான் எடுத்துரைக்கத் தான் கேட்டு
மாதாவும் அப்போது மனமகிழ்ந்து ஏது சொல்வாள்
தம்பியடா வாள்வீரா சதுரமுடி பொன்னாண்டா
நீங்கள் பட்டதொரு நாள் முதலாய்
பராமரிப்பாரொருவரில்லை

நீங்கள் சென்றதொரு நாள்முதலாய்
சேர்த்தணைப்பார்யாருமில்லை
நீங்கள் மாண்டதொரு நாள்முதலாய் உங்களை மனிதர்
நினைப்பதில்லை
தாகம் தணிப்பாரில்லை தண்ணீர் விடாய் தீர்ப்பாரில்லை
என்றுசொல்லி வந்தாய் உன்திறத்தை விட்டு விட்டு
இப்பவே நீர்தானும் இந்த மலை விட்டிறங்கி

வீரப்பூர் வாழும் மேவளக்க வார் குளத்தில்
கம்பைய நாயக்கனென்று கனமாக பேர்படைத்து
அரசுதனை ஆளுகிறான் அவனருகே தான் போய்
இரைக்கோலும் கம்பளந்தான் இருக்குமந்த ஊர் போய்
அவர் படுத்திருக்கும் வீடுதனில் பாங்குடனே உள்புகுந்து

சொப்பனம் உண்டு பண்ணி சோதனையாய்த் தான் நடத்தி
பண்ணிவைத்துப் பூஜை பாங்குடனே வாங்குமென்றாள்



## பொன்னர் சங்கர் பூசைவாங்க கம்பைய்யனிடம் வருதல்

என் தாயே மாதாவே எமக்கு இது போதுமென்று சொல்லி
அட்டம் பணிந்து அடிவணங்கித் தண்டனிட்டு
உத்தரவு வாங்கி ஓடிவந்தார் பொன்னர் சங்கர்
வீரமகாமுனியை முன்னே நடவுமென்றார்
கம்பைய நாயக்கன் முன்னே கடுகியே தானும்போய்

அரட்டியும் சொப்பனமும் ஆர்ப்பாட்டம் பண்ணிவைத்து
பூஜையும் வாங்குமென்று புகழ்பெரிய ஈஸ்வரியும்
வாக்கு மனுக்கொடுத்தாள் வன்மையுடனிப்போது
போய் வருவோம் என்று பொன்னம்பல சுவாமி
அங்கி நிசாரு தொட்டு அதன் மேலே கச்சைகட்டி

கச்சை வரிந்து கட்டி கருங்கச்சை சுங்குவிட்டு
சந்திரகாவி உருமாலை தலைநிறையத் தானுங்கட்டி
ஆபரணம் தானணிந்து அழகு சமுதாடு தான் சொருகி
இடதுகையில் கேடயமும் வலதுகையில் வாளெடுத்து
பொற்புரவி மேலே பொன்னர் சங்கர் தானேறி

மகாமுனிவர் தானும் வகையுடனே அப்போது
காவியுடை அணிந்து கனத்த சடைதான் போட்டு
மேலெல்லாம் சாம்பல் மெய் நிறையத் தானணிந்து
கண்டர் கோடாலியைக் கைதனிலே தானெடுத்து
வளைதடியும் சக்கரமும் வாய்த்ததடி தோளில் வைத்து

மூவரும் தானடந்து மூர்க்கமுடன் தான் கூடி
சாம்புவனை முன்னடத்தி சுவாமியவர் பின் நடந்தார்
கம்பைய நாய்க்கன் கருத்தில் அவர்தானும்
ஆதேசமாக அன்பாகக் காணலுற்றார்
மங்கையரும் தானும் மணிமெத்தை மேல்படுத்து

தூங்குகிற வேலையிலே அவர் சொப்பனமுங் கண்டாரே
ஆசார வாசலிலே அவர் தளங்கள் தான் சூழ
எல்லவருங்கூடி இருக்கும் சபைதனிலே

வீரமலைமேலிருந்து மின்னல் பறந்தாப்போல்
மனவேகங் கொண்டு வருகுது குதிரை ரெண்டு
சோடி குதிரை கொண்டு துலங்கு பட்டாணியைப் போல்
வாய் வேகங்கொண்டு வல்லையங்கள் தானெறிந்து
வாரவனைக் கண்டு மயங்கியவன் கம்பையனும்

கண்டு பயந்து கம்பையனுந் தானோடி
அவர் மெத்தப்பயந்து மிரண்டுவங்கே ஓடுகையில்
வீரமகாமுனியையும் மின்னல் பறந்தாப்போல்
பின்னாலே தான் தொடர்ந்தார் பித்தனைப்போல அவர்
பத்திப்பிடித்திழுத்து பல் கடித்து ஆக்கரித்து

உருட்டி விழி விழித்து உலாவியர் தான் வளர்ந்து
அண்டரண்ட மூடுருக அண்டகோளத்தை முட்ட
ஓங்கி வளர்ந்து அவர் ஒரு கையிலே தெண்டோங்க
இரும்பு தெண்டாயுதத்தை எடுத்துமங்கே ஓங்கி நிற்க
கண்டு பயந்து கம்பையனும் கால்கள் நடுநடுங்கி

வாயும் தடுமாற வாய்த்த உடல் நடுங்க
உடல் நடுக்கம் பாய்ந்து உளறியவன் வாய் வறண்டு
கட்டிப்பிடித்து அவர் கையுதறக் காலுதற
சேர்த்துப் பிடித்துமவர் தேவியின் மேல்தான் விழுந்தார்
அரண்டு அவள் மேல் விழுக அவர்தேவி தானெழுந்து

அஞ்சாதே என்று அடைவாக நெஞ்சுதட்டி
அரண்டு எழுந்திருந்து அவர் தேவிதனைப் பார்த்து
மங்கையரே பெண்ணங்கே வார்த்தையது கேளுமடி
இத்தனை நாளும் இது காலம் நாமிருந்தோம்
இந்தப்படி சொப்பனங்கள் இனிக்கண்டு பயந்ததில்லை

ஆனாலும் இப்போ அதிசயமாய்க் கண்டேன் நான்
சொப்பனம் கண்டதினி சொல்லுவீர் மன்னவரே
சொல்லுகிறேன் தேவியரே சொப்பனத்தை நீர் கேளும்
நம்ம வீரமலை மேலிருந்து மிரண்ட சிங்கம் போலே தான்
மனவேகங் கொண்டுமேதான் வந்தது குதிரை ரெண்டு



புரவியின் பேரில் புகழ்வீரர் ராஜாக்கள்
பதினெட்டு ஆயுதமும் பாங்குடனே தானணிந்து
வல்லையங்கள் கைபிடித்து வகையாகத் தானெறிந்து
எறிந்து துடர்ந்தார் என் பேரில் வாளெடுத்து
நான் பயந்து எழுந்திருந்து பாங்காக ஓடிவந்து

பின்னொருவன் ஓடிவந்து பின்படியாய் தான் பிடித்து
சடையு முடியுமுடனே தானொருவன் ஓடிவந்து
ஆகாசம் பூமிமட்டும் அன்பாகத் தானெழுந்து
ஓங்கி அடித்தான் உத்தமியே நான் பயந்து
பதறி எழுந்திருந்தேன் பைங்கிளியே நான்தானும்

அந்த மொழிகேட்டு அவள் தேவி ஏது சொல்வாள்
என்ன இருந்தாலும் ஏர்க்கோலுப் பொம்மணலும்
ஆதி ரெகுராமர் ஐயர் இருக்கு மட்டும்
மற்றுமொரு தெய்வம் வருமோ தான் நம்மிடத்தே
என்று தேறுதலைச் சொல்லி தேன் மொழியாள்
வீற்றிருந்தாள்

காராளர் பொன்னர் சங்கர் காதிலது கேட்டு
ஆகட்டு மென்று சொல்லி அப்புறமே தானும் வந்து
சாம்புவனைத் தானழைத்து சின்னாண்டார் தயவுடனே
ஏது சொல்வார்
இவன் லாயமதில் புகுந்து நல்லதொரு புரவி யெல்லாம்
கழுத்தறுத்துக் காவல் கொண்டு கடுகியிங்கே வாருமென்று

அப்படியே நல்லதென்று ஆனதொரு சாம்பானும்
குதிரையைக் கழுத்தறுத்து குலகாரன் காவல்கொண்டு
கடிய புரவியெல்லாம் காணம்புல் தின்னாமல்
பண்ணிவைத்து சாம்பானும் பாதம் பணிந்து நின்றான்
நல்லதென்று காராளர் நல்ல முனியைத்தான் கூட்டி

வந்து மலைதனிலே வாகாக வீற்றிருந்தார்
பொழுது விடிந்தவுடன் நாய்க்கன் பொட்டெனவே
தானெழுந்து

## குதிரைலாய கொண்டப்பன் நாய்க்கரிடம் முறையிடுதல்

தந்தமது சுத்தி பண்ணி கம்பையன் தயவாக வாயலம்பி
நாமம் தீர்த்தம் சேர்வை நன்றாய் முடித்துக் கொண்டு
ஆசார வாசல் அன்புடனே வந்து இருந்து
காரியக்காரர்களும் கனத்த பிரதானிகளும்
எல்லவரும் கூடி இருக்குமந்த வேளையிலே

குதிரை லாயம் காவல் செய்யும் கொண்டப்பன் வந்து நின்று
நம்ம லாயத்து குதிரையெல்லாம் நலமாக இப்போது
காணமும் புல்லும் கடுகியே தின்பதில்லை
போட்ட புல் போட்டதுபோல் புரண்டு கிடக்குமங்கே
என்று சொல்லிகொண்டப்பன் இதமாயுரைத்து விட்டான்

அப்போது கம்பையனும் அவர் முகத்தைத் தான்பார்த்து
இது என்ன காரணமாய் இருக்குதென்று தானுரைத்து
ஒரு நாளுமில்லாத சொப்பனமுங் கண்டேனான்
சொல்லி முடியாது நான் சொப்பனமே கண்டதுதான்
இப்பக் குதிரைகளெல்லாம் குறுகுறுத்து நிற்கிறது

இது என்ன காரணமாய் இருக்குதென்று கம்பையனும்
இரைக்கோலுக் கம்பளத்தார் எக்கிலியத் தொட்டியரை
புதுவாடி தனிலிருக்கும் பொம்மண நாய்க்கரையும்
சரக்கோடங்கி நாய்க்கரைத் தயவாய் வரவழைத்து
கம்பளத்தாரெல்லோரையும் களரியங்கே தான்கூட்டி

பார்த்துமங்கே கம்பளத்தார் பல்லோர்கள் தான்கூட்டி
சோதித்துப் பார்த்து துரை மகனைத்தான் பார்த்து
இந்த வீரமலை வெண்முடியில் மெய்யாக வீற்றிருக்கும்
அரியக்காள் பெரியக்காள் ஆண்மாருடைய கன்னி
அந்த கம்பளத்து தெய்வ கன்னி அந்த கன்னிமுடி மாதாவும்
காராளர் பொன்னர் சங்கர் காரணமாய்ப் பட்டவர்கள்



அவர் ஆனைபடைசேனை அத்தை பிள்ளை மூவருமாய்
அவர் பட்டதொருநாள் முதலாய் பராமரிப்போர்
யாருமில்லை

வந்தார்கள் உன்னிடத்தில் வாய்ந்ததொரு காராளர்
குதிரை மேலேறியே தான் உன்னை மிரட்டி தொடர்ந்ததுவும்
அவர் குற்றம் அல்லாமல் பின்னொருவர் குற்றமில்லை

அவருக்கு என்ன குற்றம் செய்தேன் என்னருகில் வாரதற்கு
அப்போது கோடங்கி அடைவுடனே ஏதுரைப்பான்
உன் ஆசார வாசலிலே அடைவுடனே பந்தலிட்டு
மேல் கட்டுகட்டி விதமுடனே தூக்கிவைத்து
வாழைக்கரும்புடனே மாவிலையுந்தோரணமும்

கட்டியலங்கரித்து காவலர்கள் எல்லோரும்
வைகையிலே நீராடி வந்ததுமே யெல்லோரும்
ஏழடுக்குத் திருக்கரகம் ஏந்தியே முன்னே வைத்து
பெரியமலை மாதாவை பிரபலமாயுண்டு பண்ணி
நல்லதங்கை உத்தமியை நடுவே தனைநிறுத்தி

ஒற்றைத் திருக்கரகம் ஓங்கியே முன்னே வைத்து
அந்தக்காராளர் இருவரையும் காரணமாய் உண்டு பண்ணி
வீரமகா முனியும் விதமாக முன்னே வைத்து
பெரியமலை மாதாவை பிரபலமாயுண்டு பண்ணி
நல்லதங்கை உத்தமியை நடுவே தனைநிறுத்தி

ஒற்றைத் திருக்கரகம் ஓங்கியே முன்னே வைத்து
அந்தக்காராளர் இருவரையும் காரணமாய் உண்டு பண்ணி
வீரமகா முனியும் விதமாக முன்னே வைத்து
தவசடி காத்திருக்கும் தந்தன் கருப்பனையும்
கடிங்காலுச் சாம்புவனைக் கடக்கவே யுண்டுபண்ணி

அவர்பக்தி படர்ந்திருக்கும் பக்கமெங்கும் சூழ்ந்திருக்கும்
இந்தப்படியாக இதமாக உண்டு பண்ணி
ஆடு பன்றி கோழியது அலங்கரித்து முப்பூஜை

உன் சீமையுள்ள மட்டும் செலுத்தியே தந்தாயானால்
உன் லாயத்துக் குதிரை எல்லாம் நன்றாய் எழுந்திருக்கும்
உத்தன் அரண்மனைக்கும் ஒரு தீங்கும் வாராது
என்று சொல்லி கோடங்கி எடுத்துரைத்தானப்போது
கம்பைய நாய்க்கருந்தான் காரியமாய்த்தான் கேட்டு

கோடங்கி சொன்னகுறி தப்பாது என்று சொல்லி
காரியிப்பேர் மந்திரியை கடுகியே வரவழைத்து
ஊருக்கு ஊரு நீங்கள் உத்தரவு தானனுப்பி
சீக்கிரம் வருக வென்று சேவகரைத் தானனுப்பி
ஊருக்கு ஊரு நீங்கள் உகந்திருக்கும் நாட்டாரை

சீமைக்குச் சீமை சிறந்த குடி அத்தனையும்
கம்பைய நாயக்கர் கனத்ததொரு சீமையெல்லாம்
ஓலை கொடுத்துமங்கே ஓட விட்டார் தூதுவனை
சேவகருந் தானோடி தென்னியனார் சீமையெல்லாம்
ஓலைதனைக் கொண்டுபோய் உடனே அவர் கூட்டி வந்து

வந்து குவித்தார்கள் மகா சேனையுள்ள தெல்லாம்
கம்பைய நாய்க்கர் அவர்களை கண்ணாலே தான் பார்த்து
நாட்டாரைத்தான் பார்த்து நாய்க்கரவர் ஏதுரைப்பார்

## கம்பைய்யன் பெரியக்காண்டி அம்மனுக்கும் பொன்னர் சங்கருக்கும் பூஜை செய்தல்

கேளுங்கள் நாட்டாரே நீங்கள் கிருபையுடனிப்போது
வீரமலை வெண்முடியில் வீற்றிருக்கும் மாதாவும்
காராளர் பொன்னர் சங்கர் கன்னி ஒரு பெண்ணாளும்
அத்தை பிள்ளை மூவருமாய் ஆனைபடை சேனையுடன்
மந்திர மகாமுனியும் மலைக்காவலுடையவனும்

அவர் பந்தி தளத்துடனே பாங்காக இப்போது
நாளை திங்கள் கிழமை சீமையிலுள்ளோரும்
புதுப்பானை தானெடுத்து பொய்கையிலே நீராடி



ஏழடுக்கு திருக்கரகம் இதமாக உண்டுபண்ணி
மாதாவை உண்டு பண்ணி மண்டபத்தில் உள்ளே வைத்து
தங்கை பிறவியர்க்கு தனிக்கரம் உண்டு பண்ணி
மாதாவிருக்கும் வடபுறம் தானும் வைத்து
அண்ணன்மாரிருவரையும் அத்தை பிள்ளை மூவரையும்

வீரமகாமுனியும் விதமாக உண்டு பண்ணி
சாம்பான் ஒருவனையும் தனியாக வெளியில் வைத்து
பூஜைகள் நடத்துமென்று புகழ்வீரர் தானுரைக்க
நல்லதென்று நாட்டாரும் நலமுடனே தான் பணிந்து
அவரவர் ஊருக்கு அன்பாகத் தானடைந்தார்

நாட்டார்கள் போன பின்பு நாய்க்கர் அவர் தானும்
ஆசார வாசலிலே அனைவோரும் தான் கூடி
வீதிக்கு வீதி வெற்றித் தமுக்கடித்து
நாளை திங்கள் கிழமை தெய்வபூஜை செய்வோமென்று
ஊரிலுள்ள பேர்களெல்லாம் உத்தமர்கள் தான் கூடி

ஆசாரவாசல் முன்னே அன்பாயிடம் பார்த்து
நாட்டினார் பந்தல் நாய்க்கர் அவர் தானும்
பந்தலும் போட்டு பட்டுமேல் கட்டுக்கட்டி
வாழை கரும்புடனே மாவிலையுந் தோரணமும்
சிங்காரஞ் செய்து சிறப்பாய் அலங்கரித்து

பூவால் அலங்கரித்து பூச்சரங்கள் தொங்கவிட்டு
பட்டணத்தில் உள்ளவரை பாங்காய் வரவழைத்து
வைகை தலைமுழுகி வாருமென்று தானழைத்து
கரகம் எடுக்க காரியப்பேர் வேணுமென்று
ஆரை அழைப்போமென்று ஆலோசனைகள் புரிந்து
கம்பைய நாய்க்கர் காதிலது கேட்டு

## பெரியக்காண்டிக்குப் பூஜை செய்ய எழுவக்கரியானை அழைத்தல்

நம்ம ஊழியத்துக்காரன் உக்கிராணந்தான் காக்கும்
அம்பலக்காரன் வீரமலை ஆன பிள்ளை கண்டாயே
எழுவக்கரியானும் இதமான பிள்ளை கண்டாய்
மாதாவுக்கேற்ற பிள்ளை மன்னன் அவனிருந்து
ஆலோசனை ஏது என்று அலகுரைத்தார் நாய்க்கருமே

நல்லதென்று சொல்லி நாட்டார்களப்போது
எழுவக்கரியானை இதமாகக் கூட்டி வந்து
நீ கங்கை தலை முழுகி கிருபையுடனிப் போது
வாருமென்று சொல்லி வகையாய் அனுப்பிவைத்தார்
வைகை தலைமுழுகி எழுவக்கரியான் வந்தானே அப்போது

அவனுக்கு கட்டுகளுமுள்ள தெல்லாம் கனமாகத் தானணிந்து
ஆபரணம் பூட்டி அழகுபெறத்தானணிந்து
காவியுடை உடுத்தி கழுத்தில் உத்ராட்ச மாலையணிந்து
சாந்து புனுகு சவ்வாது மிகப்பூசி
மல்லிகை ஆரம் வீரப்பூரானுக்கு மாராடி தான் போட்டு

முல்லை மலர்ச்சரத்தை வீரமலைக்கு முடிமேலே தான் சொருகி
கரகத்தில் நீர் மொண்டு கரைமேலே தானும் வைத்து
கரகந்தனை செப்பனிட்டு கனத்த மலர் பூவுகளும்
பூமாலை கொண்டு வந்து பொற்கரகம் தானணிந்து
மருவு மருக்கொழுந்து வாசமுள்ள செண்பகப்பூ

மண்டபத்துக்குள்ளாக எழுவக்கரியானுக்கு வாழையிலை போட்டு
மாதா கரகந்தனை எழுவக்கரியானுக்கு வாழையிலை போட்டு



மாதா கரகந்தனை எழுவக்கரியான் வகையாகத் தானெடுத்து
வாழையிலை மேலே வைத்தான் மன்னவர்கள் பார்த்திருக்க
தங்காள் கரகம் தனிக்கரகம் செப்பனிட்டு
வலதுபுறம் வைத்தான் எழுவக்கரியான் மன்னவனும் அப்போது
அண்ணர் இருவரையும் அத்தைபிள்ளை மூவரையும்

தங்கைக்கு வலது புறம் தயவாக உண்டு பண்ணி
ஐவருக்கும் வலது புறம் அடைவாகத் தானிருத்தி
தவச நிலைகாக்க வந்த தந்தன் தனிக்கருப்பன்
வீரமகா முனியும் முன்னடிக் கருப்பண்ணனும்
மாதா கொலுவிருக்கும் வலது புறம் தானிருத்தி

மண்டபத்துக்கப்பாலே வகையாகத் திண்ணையிட்டு
கடிங்காலுச் சாம்புவனைக் கடக்கவே உண்டு பண்ணி
பச்சிலையும் பாக்கும் பாங்குடனே முன்னே வைத்து
தேங்காய் பழமும் திறமுடனே உடைத்து வைத்து
செங்கரும்பு ரஸ்தாளி சீராய் நறுக்கி வைத்து

செவ்விளநீர் ஆயிரமும் சீவி நறுக்கி வைத்து
திறமாகத் தானும் திட்டமுடன் முன்னே வைத்து
கைகாலும் சுத்தி செய்து கைகட்டி நின்று கொண்டு
கம்பைய நாய்க்கனும் கை முசஞ்சு தெண்டனிட்டு
ஏறிட்டுப் பார்த்து ஏது சொல்வார் கம்பையனும்

அஞ்சாதே எழுவக்கரியான் அம்பலக்காரா இப்போது
மாதாவைத் தானும் மனதில் நினைத்து மிக
தூபதீபம் எடுத்து திறமாய் பெரியக்காளுக்கு
கொடுமடா தீபமென்று நாயக்கர் குணமுடனே தானுரைக்க
நல்லதென்று எழுவக்கரியான் நாடிமிக நடந்து

மண்டபத்துக்குள்ளாக எழுவக்கரியான் மன்னவனும் தானும் வந்து
பெரியமலை மாதாவைப் போற்றி அடிவணங்கி

இடது கையில் மணியெடுத்து வலது கையில் தீபமது
எடுத்து வெளியில் வந்தான் எல்லவரும் தான் சூழ
வீரமலைத்திசை நோக்கி விரும்பி அவன் பார்த்து
ஒடுங்கி வணங்கி ஒடுக்கமுடன் நின்றுகொண்டு
தீபதூபம் புகை கொடுக்க தீரன் அவன்மேலே

அந்த நல்லவேளையிலே அக்காண்டி மாதாவும்
மாயமாய் அவன் பேரில் மாதாவும் வந்திடவே
கண்கள் பொறி பறக்க கடகடவென்று நீரோட
மருளுமுகங்கொண்டுமங்கே மண்டபத்தில் தான் புகுந்து
முன்னே ஒரு நாள் முகம் பழகிக்கொண்டாப்போல்

தீபதூபம் தான்கொடுத்தான் தேவி பெரியக்காளுக்கு
தங்காள் பிறவியர்க்கு தான் வணங்கியே கொடுத்து
அண்ணரிருவருக்கும் அத்தை பிள்ளை மூவருக்கும்
வீரமகாமுனிக்கும் வெற்றியுடன் தான்கொடுத்து
தனிக்கருப் பண்ணனுக்கும் தான் வணங்கியே கொடுத்து

வெளியிலே வந்து நின்று எழுவக்கரியான் விதமாக அப்போது
கடிகங்காளைச்சாம்புவனைக் கருத்தில் மிக நினைத்து
கடக்க நின்று தூபம் கட்டினான் அப்போது
ஆலாத்தி தீபம் அனைவருக்கும் தான் கொடுத்து
ஏந்தியே எல்லோர்க்கும் இதமுடனே தான் கொடுத்தான்

திருநீறு தான் கொடுத்தான் திரண்டசபை அத்தனைக்கும்
அந்த நல்ல வேளையிலே எழுவக்கரியான் அதட்டிக்குலவையிட்டு
ஆக்கரித்துப் பல்கடித்து அதட்டி அவன் அப்போது
கரகத்தின் முன்னாலே கட்டழகன் மண்டியிட்டு
திருமுடிமேல் தூக்கிவைத்து தீர்க்கமுடன் நின்று கொண்டு

திருநீறு கையிலெடுத்து திருக்கரம் மேல் போட்டு
வீரப்பூர் தானோக்கி மாதாவை விரும்பியவன் நடந்து
தங்காள் கரகம் தனிக்கரகம் பின்னே வர



மாதா கரகம் வகையாக உள்ளே வைத்து
தெய்வ நிலையுண்டு பண்ணி சேரயிலை போட்டு
பொங்கல் நைவேத்தியம் போதவே தானும் வைத்து
தேங்காய் பழமும்திறமாக முன்னே வைத்து
தீபதூபம் தான்கொடுத்து தேவி பெரியக்காளுக்கு

மாதாவும் தங்கையரும் மற்றுமுள்ள தேவதைக்கும்
கொடுத்தானே தீபதூபம் குணமுடனே அப்போது
அண்ணமாரிருவருக்கும் அவர் மைத்துனர் மூவருக்கும்
வீரமகா முனிக்கும் முன்னடிக் கருப்பனுக்கும்
கடிங்காலுச் சாம்பானுக்கும் கனமாகவே கொடுத்து

கற்பூர தீபாராதனை கடுகியே தான் கொடுத்து
எல்லவர்க்கும் தானும் ஏந்தி மிகக் கொடுத்து
தீபதூபம் கொடுக்கையிலே கோடையிடி குமாரசங்கு
ஆவேசம் வந்து அதட்டி அவர் பாய்ந்து
பார்க்க வந்த பேர் மேலே பற்கடித்து குலவையிட்டு

அண்ணரிவருந்தான் அதிர்ந்து விளையாடையிலே
வீரமகாமுனியும் முன்னடிக்கருப்பண்ணனும்
எல்லாரும் வந்து இதமாய் விளையாடி
கம்பைய நாய்க்கரை கதறி அவர் பார்த்து
நான் பட்டதொரு நாள் முதலாய் பாராமல் நீயிருந்து

நான் இறந்ததொரு நாள் முதலாய் ஏறிட்டுப்பார்க்கவில்லை
பல் கடித்து தம்பி சங்கர் பார்வையிட்டுத் தான் பார்த்து
கம்பைய நாய்க்கரும் கனத்த பிரதானிகளும்
கைகால் நடுங்கி கடகடவென்று தானுதறி
கைகட்டி முன்னே நின்று காத்திருக்கும் வேளையிலே

மாதா கரகத்தை எழுவக்கரியான் வகையாகக் கையிலெடுத்து
திருமுடி மேலே வைத்து தீரனவன் தானாடி
விபூதிதனை எடுத்து விட்டெறிந்து மாதாவும்
விளையாடி பந்தெறிந்து வேண்டியவள் பூப்பறிந்து

பூப்பறித்து மாதாவும் பொற்கரகம். கையிலேந்தி
பூப்பந்தலுக்குள்ளே வைத்தாள் எழுவக்கரியான் புகழாக
அப்போது
எல்லோருக்கும் விபூதி எடுத்துமங்கு கை கொடுத்தான்
சந்தோஷமாகி தங்கள் மனை போனார்கள்
அந்த நாள் சென்று மற்றா நாளப்போது

ஊருச்சனங்கள் உத்தமர்கள் எல்லோரும்
வீட்டுக்கொரு பொங்கல் உகந்ததொருதுள்ளு குட்டி
எல்லோரும் கொண்டு வந்து ஏற்கையுடன் அண்ணனுக்கு
கோவிலுக்கு முன்பாகக்கொண்டு வந்து வைத்தார்கள்
அரண்மனைப் பொங்கலென்று ஆயிரம் பானை பொங்கல்

ஆயிரம் துள்ளு குட்டி அந்தச்சனம் கொண்டு வந்து
வெட்டி வைத்துக் கம்பையனும் வேடிக்கையாக நின்று
பள்ளயமும் போட்டு பாங்காய் அடசல் என்று
ஏகமாய்த் தான் குவித்து இருக்கும் தறுவாயில்
தூபதீபம் தான் கொடுத்தான் தோகைமலைக் கன்னியர்க்கு

வைகைமலை மாதாவும் வகையாய் மனமகிழ்ந்து
ஆனந்தமாக அவள் பேரில் தான் பாய்ந்து
வெண்முடியை விட்டுமந்த வீரமலை தன்னருகில்
இருந்து விளையாடி எல்லோரும் வீற்றிருக்க
கும்மி அடித்துமப்போ கூட விளையாடி

பூப்பறித்து மாதாவும். பொற்கொடியாள் நிற்கையிலே
பொறுமை பொறுத்த பொன்னம்பல சுவாமி
நெல்லி வளநாட்டான் நெற்சூழ்ந்த கோனாட்டான்
காராளர் பொன்னருமே கடகடவென்று அப்போது
அப்போது எழுவக்கரியான் மேல் பாய்ந்து பொன்னர்
இதமாய் விளையாடி

வீரியனும் அப்போ விதமாய்க் குலவையிட்டு
பந்தலை விட்டு பொன்னர் பாங்காய் வெளியில் வந்து



சாரியது பாய்ந்து பொன்னம்பல சுவாமி விளையாடி
தங்கி நின்று பொன்னர் சனங்களை தான் பார்த்து
பற்கடித்து தம்பி சங்கர் அண்ணரைப் பார்வையிட்டு தான்
பார்த்து
கோபித்துக் கண் சிவந்து குலவையிட்டுத் தான் பார்த்து
ஆணழகன் தம்பி சங்கர் அங்கமெல்லாந் தானொடுங்கி

மேநாடு பார்த்து மீண்டுமவர் பற்கடித்து
அண்ணருந் தம்பியரும் அதிர்ந்து விளையாடி
சிலம்பம் பொருதி நின்றார் சீர் வேந்தர் காராளர்
அதட்டி அவர் தம்பி சங்கர் ஆக்கரித்து நிற்கையிலே
பார்க்க வந்த ஜனங்களெல்லாம் பாங்காய்த் தலைவிரித்து

வீரமகா முனியும் வெண்முடிக் கருப்பண்ணனும்
எல்லோரும் சன்னத்தமாய் இதமாய் விளையாடையிலே
தாட்டிமையாய் தம்பி சங்கர் சகலோரும் தானறிய
வாழை மரம் வெட்டி விட்டு வாய்த்ததொரு தம்பி சங்கர்
கம்பைய நாய்க்கர் கண்ணாலே பார்த்திருக்க

மேலெல்லாம் தான் நடுங்க விழுந்து விட்டார் பாடாக
தம்பி விழுந்திடவே சதுரமுடி பொன்னாண்டர்
மெய்மறந்து விட்டார் வேப்பங்குழை மேல் போட்டார்
கௌசனையைத் தான் போர்த்து கண்ணீர்தனைச் சொரிய
தம்பி தலைமாட்டில் தார்வேந்தர் வீற்றிருந்தார்

அண்ணன்மார் வீற்றிருக்க அம்பலக்காரன் தேவியின் மேல்
அண்ணருடன் பிறந்த அருக்காணி நல்லதங்கை
தலைவிரித்தே தான் புலம்பி தங்கையுமே வந்திடவே
வந்துமங்கே தங்கையரும் அண்ணரை வகையாகச்
சுத்திவந்து
ஒற்றைக் கரகம் தங்கை ஒரு கையிலே தானெடுத்து

வேப்பங்குழை பிடித்து வீசி விளையாடி
கரகத்து நீர் தெளித்து கையில் குழை வீசி நிற்க

மூன்றே முக்கால் நாழிகை மெய்குழலாள் தான் புலம்ப
களையாற்றி நிற்கையிலே தம்பி சங்கர் கால்விரலைத்
தானாட்ட
உள்ளம் பதறியங்கே தம்பி சங்கர் உடம்பு கடகடவென்று
உருண்டு புரண்டு சங்கர் உருட்டி மிக விழித்து
பல்கடித்து தம்பி சங்கர் பார்க்குமந்த வேளையிலே

பொன்னம்பல சுவாமி போதக்குலவையிட்டு
மார்போட தானணைத்து தம்பி சங்கு மயக்கமது தீர
பானக்கம் தான் கொடுத்து பண்பாயிளைப்பாற்றி
தேக்கந்தெளிந்து திரள் வீரன் தம்பி சங்கர்
கம்பைய நாய்க்கரைக் கடைக்கண்ணால் தான் பார்த்து

மிரண்டு எழுந்திருந்து மேனாடுதிசை தானோக்கி
அண்ணர் முகம் பார்த்து ஆக்கரித்து மண்டியிட்டு
இருவரும் அப்போது எதிர்த்து விளையாடி
படுகளம் காத்திருந்த பாரமுடி அண்ணருக்கு
திருஷ்டிக் குட்டி காவல் சீக்கிரமாய்த் தான் கொடுத்து

தீர்த்தம் மிக ஆடி திருநீறு தான் அணிந்து
மாதாவைப் பார்த்து மண்டியிட்டுக் கொக்கரித்து
கம்பைய நாய்க்கரைக் கண்ணாலேதான் பார்த்து
வலது கையைத் தான் பிடித்து வகையாக மண்டியிட்டு
ஏறிட்டுப் பார்த்தாரே எதிரில் நின்று நாய்க்கரைத்தான்

## கம்பையனுக்கு புத்திர வரம் கொடுத்தல்

அடா புத்திரனும் இல்லாமல் போத மனஞ்சலித்து
பட்டமதனை ஆள பாலன் இல்லையென்று சொல்லி
மெத்தச் சலித்து நீ மேனியெல்லாம் புண்ணாகி
நிற்கிறாயிப்போது நினைவு வேறாகவுந்தான்
மெத்த மனமகிழ்ந்து நாய்க்கர் விரும்பி அவர் தொழுது



சின்னண்ணர் வாள்வீரர் சிறுபுலி குமாரசங்கு
மடிபிடித்துத் தானெழுந்து மண்டியிட்டுத் தான் பார்த்து
வீரமலை வெண்முடியில் விரும்பியே காத்திருந்தோம்
வீற்றிருந்து மாதாவை விரும்பியே கூட்டி வந்தோம்
உன்னருகில் பூஜை உகந்துடனே தான் வாங்கி

வந்தேன் நான் உன்னிடத்தில் வையகங்கள் தானறிய
இப்போ பூஜை மிகக்கொடுத்தாய் எங்கள் பொந்தி பசிதீர
காவல் மிகக்கொடுத்து காத்து நின்ற மன்னனுக்கு
எங்கள் மாதா அறிய மைந்தன் தந்தேன் உந்தனுக்கு
அஞ்சாதே கம்பையனே அரசுதனை ஆள்வதற்கு

புத்திர சந்தானம் போதமிகக் கொடுத்தேன்
என்று சொல்லி தம்பி சங்கர் எல்லோரும் தானறிய
புத்திர சந்தான வரம் போதமிகக் கொடுத்தார்
எல்லோருமறிய இதமாகக் கைபோட்டு
உன் தேசமெல்லாம் உகந்தெனக்கு பூஜைசெய்ய

பண்ணிவைத்துக் கொடுத்தாயானால் பாலனுண்டு
உந்தனுக்கு
எதுக்கும் நீ அஞ்சாதே என்று சொல்லி காராளர்
சன்னத்தங்கள் நின்று தயவாக எல்லோரும்
பூஜை முடிந்து புகழ் பெரிய நாய்க்கருமே
அரண்மனைக்குப் போய் அன்பாக வீற்றிருந்தார்

இப்படிக்குத்தானும் இருக்குமந்த நாளையிலே
நாய்க்கரும் பிரதானிகளும் நலமாக வீற்றிருந்தார்
காராளர் பொன்னர் சங்கர் காரணமாய்ப்பட்டவர் தான்
அன்றொருநாள் பூஜையிலே ஆனபலன் தந்தாரென்று
நம்முடைய சீமையெல்லாம் அவருக்கும் நலமான பூசை
செய்தான்

பட்டந்தனை ஆள்வதற்கு பாலன் வரந்தாரோ மென்றார்
ஆகையினாலிப்போது நாம் ஆண்டதொரு சீமையெல்லாம்

நாளை திங்கள் கிழமையிலே தீரனுக்குப் பூசையிட
பண்ணிவைத்துத் தன் பதியை பாங்காக இப்போது
நம்ம சீமையிலுள்ள சிறந்தகுடி அத்தனையும்
வரவழையுமென்று வாக்காக சொல்லிடவே
நல்லதென்று பிரதானி நலமாக ஓலைவிட்டார்

ஓலைதனைப்பார்த்து ஊரிலுள்ள நாட்டார்கள்
வீரப்பூர் வந்து வேந்தன் துரை கம்பையனை
கண்டு மிகத்தொழுது கருத்துடனே நிற்கையிலே
கம்பைய நாய்க்கர் கருத்துடனே தான்பார்த்து
சந்தோஷமாக தயவாக ஏது சொல்வார்

வாருங்கள் நாட்டாரே வார்த்தை சொல்லக் கேளுமென்று
காராளர் பொன்னர் சங்கர் காரணமாய்ப்பட்டவகை
நம்ம ஊருக்கு ஊரு உகந்து படைகள் வென்று
நாய்க்கர் உரைக்க நல்ல குடி மன்னவரும்
நாய்க்கரைத்தான் தொழுது நலமாக ஏது சொல்வார்

எந்த விதமாக நாம் படைப்போம் ராஜாவே
அப்போது நாய்க்கர் அவர்களைத் தான் பார்த்து
உங்கள் மனை சுத்தி பண்ணி உத்தமரே நீராடி
உங்கள் மனை தனிலே உயர்ந்ததொரு திண்ணையிட்டு
பந்தலது போட்டு பாங்காய் அலங்கரித்து

வாழைகமுகு வகுப்பாகக் கட்டிவைத்து
பச்சிலையும் தோரணமும் பாங்காகக் கட்டிவைத்து
திங்கள்கிழமை சிவகெங்கை நீராடி
ஏழுடுக்குத் திருக்கரம் இதமாக முன்னே வைத்து
மாதா கரகம் வலது புறம் முன்னே வைத்து

பட்டதொரு காராளர் படை முகத்து வன்னியரை
வலதுபுறமாக வைத்து இலை போட்டு
மந்திர மகாமுனியை வலமாக முன்னே வைத்து
தந்திரமான தனிக்கருப்பண்ணனை பின்னே வைத்து
கட்டவர்க்கம் சோடனையாய் கனமாக முன்னே வைத்து



காராளர் இருவரையும் கைகொடுத்து வாங்களென்று
எல்லோருக்கும் புத்தி இதமாகத் தானுரைத்து
திங்கள்கிழமை நீங்கள் திறமாகச் செய்யுமென்று
உத்தரவு செய்து உடனே அனுப்பி வைத்தான்
நல்லதென்று ஊராரும் நலமாக ஊர் சேர்ந்தார்

ஊருக்கு ஊரு ஓடி முரசறைந்து
நாய்க்கர் சொல் தப்பாமல் நன்றாய் முரசறைந்தார்
ஊருக்குப் பிரத்தியேகமாய் உத்தமர்கள் பந்தலிட்டு
பந்தல் விளக்கி பாவாடை தானுங்கட்டி
பச்சிலையும் தோரணமும் பாங்காகத்தான் துலங்க

கட்டியலங்கரித்து காராளரைத்தான் நினைத்து
கங்கை தலைமுழுகி கீர்த்தியுடனப்போது
நீராடிப் பட்டுடுத்தி நெற்றியிலே நீறணிந்து
மாதா திருக்கரகம் வகையுடனே முன்னே வைத்து
ஏந்திய திருக்கரகம் இதமுடனே முன்னே வைத்து

பூவால் அலங்கரித்து பொற்கொடியாள் திருக்கரகம்
மருவும் மரிக்கொழுந்தும் வாய்த்த முல்லை மல்லிகையும்
கனமாகச் சூடி கரகத்தை முன்னே வைத்து
வலதுபுறமாக வாளாணி சங்கருக்கு
வீரமகாமுனியை விரும்பியங்கே தானும் வைத்து

தங்கை கரகம் தனிக்கரகம் தானும் வைத்து
தேங்காய் பழமும் திறவாக முன்னே வைத்து
செங்கரும்பு ரஸ்தாளி சீவி நறுக்கி வைத்து
செவ்விளநீர் கண் திறந்து திறமாக முன்னே வைத்து
பூம்பாளை கொண்டுவந்து பொற்கரகம் தன்னில் வைத்து

சாம்பிராணித் தூபம் கம கமவெனத்தான் போட்டு
வீரமலையை வெண்முடியைத் தானோக்கி
தீபதூபம் தான் கொடுத்து தேவியவள் மாதாவுக்கு
அதட்டிக் குலவையிட்டு மாதா ஆதேசமாய்ப் பாய்ந்து
சித்தன் மகளும் தேவி மனங்குளிர்ந்து

கரகம் தனை எடுத்து கைலாச லாடமுனி
திருமுடி மேலே வைத்து தேவி தனை நடக்க
நாட்டார் நடந்துமங்கே நாடி நடந்துவர
தேங்கி நின்று மாதாவும் தேம்பி மிக அழுது
ஏறிட்டுப் பார்த்தாளே எதிரில் நின்றநாட்டாரை

அப்போது பொன்னர் சங்கர் அவள்மேலே தான் பாய்ந்து
அதட்டியே பல் கடித்து ஆர்ப்பரித்துத் தான் பார்த்து
மாதாவைப்பார்த்து மந்திரவாள் கைவாங்கி
அண்ணருந்தம்பியரும் அண்டி விளையாடி
சிலம்பம் பொருதி சினந்து விளையாடி

மாதாவைக் கூட்டி வந்து மண்டபத்தில் தானும் வைத்து
ஊரார்கள் கூட்டி உற்ற மக்கள் பூசையிட்டு
ஊருக்கு ஊரு உத்தமர்கள் பூசையிட்டார்
சீமைக்குச் சீமை சிறப்பாக பூசையிட்டார்
வீட்டுக்கொரு பொங்கல் விதமாகத்தானும் வைத்து

பாளைக்கொரு துள்ளு குட்டி பாங்காகத்தானும் வெட்டி
ஆடு பன்றி கோழி அலங்கரித்தார் முப்பூஜை
பூஜை மிகப்போட்டு பொங்கலுடன் வீற்றிருந்தார்
கம்பையனும் பூஜை செய்து கனத்த மனுத்தான் வாங்கி
பட்டம் தனை ஆள்வதற்கு பாலன் வரங்கொடுத்தார்

இப்படியாக இவர்கள் இருந்தார்கள்
இந்தக் கதையதனை எழுதிப்படித்தவர்கள்
இன்னுமே சொல்லுமென்று இயல்பாகக் கேட்டவர்கள்
பெரியக்காண்டி தன்னருளால் பிரபலமாய் வாழ்ந்திருப்பார்
பொன்னர் சங்கர் கிருபையினால் புகழுடனே
வாழ்ந்திருப்பார்

ஈஸ்வரனார் கிருபையினால் இயல்பாக வாழ்ந்திருப்பார்
ஆல்போல் தழைத்து அருகதுபோல் வேரூன்றி
மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பார்
வாழிமிக வாழி வையகமும் வாழியவே!





# பெரியக்காண்டி அம்மன் ஊஞ்சல்

## (கொளாநல்லி செம்மடைக் கோவிலில் பாடப்படுவது)

பூவுலகில் கொங்கினில்நா லாறுநாட்டில்
புகழ்பெறுமேல் பூந்துரைசை நாட்டில் ஓங்கும்
தேவுலகுக் கிணைமாரி பொழியும் பாங்கில்
செம்மடையில் வில்வவன மதிலே ஓங்கி
மூவுலகோர்க் கமுதளிகா வேரி சூழும்
முத்துமணி சோபனமே தமிழில் பாடப்
பாவுலகம் போற்றிடுமைங் கரனார் தாளே
பணிகின்றோம்! காத்தருள்க! தும்பிக் கையோன்!

பெருமைசென்னி கனககிரி கால்கள் நாட்டி
பிரபலமாய்ச் சிவகிரியாம் விட்டம்போட்டு
பொறுமையுடன் சராசரங்கள் கொடுங்கை சேர்த்து
பொன்னி பவா னிப்புனல் சங்கிலிகள் பூட்டி
கருணையருள் மெய்ஞானப் பலகை மாட்டி
கச்சிதமாய் அலங்கரிக்கும் உண்மை சேர்த்து
அருமை வளர் செம்மடைவில் வனத்தி லோங்கும்
அன்னைபெரி யக்காண்டி ஆடீரூஞ்சல்!

கருவீர மலைகொளா நிலையோ டுற்ற
கடாட்சமுறு செம்மடைமோ ழீயப் பள்ளி
மருவளர்கொ ளாநிலையில் அருட்செங் கோலில்
வரமருளும் தாயாவாள் மகிமைக் காரி

அருமை மிகு பாதமலர் அடியார் போற்ற
அழகுதமிழ் வாணரெலாம் பாடிப் போற்ற
இருமைக்கும் செல்வமளித் தெம்மைக் காக்கும்
எழில் பெரியக் காண்டி அம்மன் ஆடீரூஞ்சல்!

சுதந்திரமாய்ச் சிரசினில்கி ரீடம் மின்ன
சுட்டிகையும் தொடுவளையல் தோடும் மின்ன
சந்திரவட்ட டத்திலகம் நெற்றி மின்ன
தாழ்வடம்பொன் காசுமணி தானும் மின்ன
கந்தரத்தில் சரப்பளியோடு அட்டி மின்ன
கனகமணி மாலைமுத்து கனிந்து மின்ன
அந்தரிபு ரந்தரியம் பிகைமா சக்தி
அன்னைபெரி யக்காண்டி ஆடீரூஞ்சல்!

மேன்மைமிகு மூக்குத்தி துலங்கி யாட
விளங்கிடுகா தோலைகரு மணிக ளாட
வன்மையுயர் கவசகுண்ட லங்க ளாட
மல்லிமுல்லை இருவாட்சி மாலை யாட
சென்மமுறு தொடுவளையல் கையில் ஆட
திகழ்மருங்கில் பட்டாடை மின்னல் ஆட
அண்மைகொளா நிலையழகு வனத்தில் வாழும்
அன்னைபெரி யக்காண்டி ஆடீரூஞ்சல்!

பாதசரம் சிந்தாக்கு கொலுசு மாட
பனிமுடிமேல் மௌளிபத்ம பதக்கமாட
தாதகன விருதுபம்பை மேள மாட
தத்திதிமி யோகமெனத்தா திகளு மாட
சாதகமாய் வலம்புரியின் சங்கு மாட
சதுர்வேதத் தமிழ்ப் பாடல் மறையோர் பாட
ஆதரவாய்க் கொளா நிலைவில் வனத்தில் வாழும்
அன்னைபெரி யக்காண்டி ஆடீரூஞ்சல்!

நாதசுரம் துத்தாரி வீணை மீட்ட
நாரதரும் கிம்புருவர் நனினம் மீட்ட



யூகமுடன் தம்புருவும் சுதிகள் மீட்ட
உண்மையுடன் கன்னியர்கள் உவகை மீட்ட
வாகையுடன் பேரிகையும் முரசும் சாட
வளமுடனே துடி கொம்பு தாளம் ஒத
ஆகமம்சால் கொளாநிலைச் செம் மடையில் வாழும்
அன்னைபெரி யக்காண்டி ஆடீரூஞ்சல்!

புன்னைபலா செந்நெலுடன் கமுகு வாழை
புனித நெல்லி மஞ்சளுடன் நாக லிங்கம்
தென்னைகொன்றை தேமாவும் அகிலும் சாந்தும்
திருவாத்தி செண்பகமும் செழித்து வாழ்க!
கன்னல் செந்நெல் கதலிஇரு வாட்சி கோங்கு
கதித்துவளர் கொளாநிலையில் சிறப்புற் றோங்கும்
பொன்னர் சங்கர் வில்வவனம் வாழும் தாயார்
புகழ்பெரியக் காண்டி அம்மன் ஆடீரூஞ்சல்!

ஜாதிமலர் மல்லி முல்லை பாரிஜாதம்
சரவிளக்குப் பூச்சரங்கள் வர்ணக் கோலம்
வீதியெல்லாம் தோரணங்கள் தகத்த காயம்
விளங்கிடவே சூரியவானக் குடையும் சூழ
நீதியதாய் டால்விருது கவரி வீச
நிலமதிர வாணவெடி முழங்கி ஆர்க்க
ஆதிசக்தி கொளாநிலையில் வாழும் தாயார்
அன்னைபெரி யக்காண்டி ஆடீரூஞ்சல்!

பாரறிய பூந்துரைசை நாட்டில் மிக்க
பதிஈரோ டருகில்செம்மை வில்வத் தோப்பில்
சீரறிய வளர்தாயார் பெரியக் காண்டி
செயல்கிருபை எந்நாளும் செழித்து வாழ்க!
கூறரிய பாவாணர் மகிழ்ந்தே வாழ்த்தக்
குவலயத்தோர் கொண்டாட வாணி சூழ்ந்த
ஆறணியும் மனோன்மணியாள் வீரசக்தி
அன்னைபெரி யக்காண்டி ஆடீரூஞ்சல்!

## வாழி

முடியுயர்ந்த சென்னியங்கிரி வேலா! தேவா!
மொழிகிருபை ஊஞ்சல்பத்தும் பதிகம் பாடக்
குடிசெழித்துக் குலம்பெருகப் பெரியக் காண்டி
குன்றுடையான் மக்கள் பொன்னர் சங்கரோடு
அடிதவறா நல்லதங்கம் அத்தை பிள்ளை
அழகுமகா முனி சாம்பான் இனிதே வாழ்க!
படியிலிதை நினைப்போர் அச் சிட்டோர் கேட்டோர்
பாடியவர் செல்வமெலாம் பெற்றே வாழ்க!



